ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

# அஸ்வமேதபர்வம்.

இஃது

சிதம்பரம்

கருணாநந்தசுவாமியவர்களால்

பார்வையிடப்பட்டு.

சிந்தாத்திரிப்பேட்டை

வா. சுந்தரமுதலியா

ரவர்களது,

பிரபாகர - அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

மொப்பேர் சாமிநாயகர் வீதியில்.

நெம்பர் - ௫.

துர்ம்மதி௵ - மாசி௴.

உ

ஸ்ரீராமஜெயம்.

# அஸ்வமேத பர்வம்.

## வியாசபகவான் ஸ்தோத்திரம்.

வியாசம்வசிஷ்டநப்தாரம்சக்தேபவுத்ரமகல்மஷம்... ... *
பாராசராத்மஜம்வந்தேசுகதாதம்தபோநிதம்........ ...*
வியாசாயவிஷ்ணுரூபாயவியாசரூபாயவிஷ்ணவே ... ..*
நமோவைபிரமநித்யேவதிஷ்டாயநமோநமோ...........*

இந்தப்படி வேதவியாசரைத் தோத்திரஞ்செய்து ஐந்தாம்வேத
மாகிய ஸ்ரீமத்மகாபாரத சரித்திரத்தைச்சொல்லுகின்றோம்அஃதெப்ப
டியென்றால்,பூர்வத்தில் சந்திரவம்சமகாராஜாவாகியஜெனமேஜெயமகா
ராஜாவானவர் மந்திரிபிரதானிகள் முதலானசேனைகளும் புடைசூழத்த
க்கதாகச் சகலசம்பிரமத்துடன்ரத்தின சிங்காதனத்தில்கொலுமுகமாக
வீற்றிருக்கும்பொழுது அவரிடத்திற்குப்பரமபாகவதசிகாமணியாகிய
வேதவியாசர்சிஷ்யரென்கிற ஜெயமுனீந்திரரென்னு மகாரிஷியானவர்
எழுந்தருளிவந்தார்-அப்போது அவரைக்கண்டு ஜெனமேஜெயமகாரா
ஜாவானவர்சிங்காசனத்தைவிட்டிறங்கிதண்டஞ்செய்து அவருக்குஅர்க்
கியபாத்தியமுதலானசகலஉபசாரங்களுஞ்செய்துபூசைசெய்து ஓராச
னங்கொடுத்து அதன்மேலெழுந்தருளப்பண்ணி அந்தமுனீஸ்வரரைப்
பார்த்துஜெனமேஜெய மகாராசாவானவர் ஓய்சுவாமி, செய முனீந்திர
ரே-பூர்வத்தில் எங்கள்பாட்டனை தர்மராஜாவானவர்அஸ்வமேதயாகஞ்
செய்ததிவ்ய சரித்திரத்தைச்சொல்லி யருளவேண்டுமென்று விண்ண
ப்பஞ்செய்தார் அதுகேட்டு செயமுனீந்திர ரானவர் சந்தோஷிப்பட்
டுச்சொல்லுகின்றார்,ஓய்ஜெனமேஜெயமகாராஜனே நீர்இப்போதுகே
ட்டஅஸ்வமேதயாக சரித்திரமானதுவேதசாரமாகியும்மகாரகசியமாகி
யும் இருக்கிறது அதைபாதாமொருத்தர்திரிகரணசுத்தியா யிருந்துகே
ட்பாராகில்.அவர்கள்முற்பவத்திற் செய்துள்ள கோஹத்தி - பிரம த்
தி-ஸ்திரீஹத்தி-சிசு த்திமுதலானசகல பாவங்களும்நீக்கி இம்மையிற்
சகலபோக பாக்கியங்களையும் அனுபவித்து -கிருதகிருத்தியராய் மறு
மையில்ஸ்ரீமகாவிஷ்ணுவினுடையபாதாரவிந்தங்களையும்.பெறுவார்கள்
அப்படிப்பட்டபுண்ணியசரித்திரத்தைச்சொல்லுகிறோம்நீகேட்பாயா
வென்றுஜெயமுனீந்திரரானவர்தனது ஆசிரியராகிய வேதவியாசரைத்
தியானஞ் செய்துக்கொண்டு ஜெனமேஜெயமகாராஜாவுக்குச் சொல்ல
த்தொடங்கினர்.

அஃதெப்படியென்றால்,கேளுமைய செனமேசெய மகாராசா
வே-முன்னே உங்கள்பாட்டனை தர்மராசனென்வர் கவுரவர்களுடனே

# அஸ்வமேதபார்வம்.

னெட்டுநாள்வரைக்கும் யுத்தஞ்செய்துசெயம்பெற்றுபட்டாபிஷே
கராய் இருபத்தைந்துவருஷம்இராச்சியபரிபாலனஞ்செய்துவருகிறநா
ளில்ஒருநாள் தர்மராசாவானவர்கொலுவாயிருக்கும்பொழுது அவரிட
த்திற்கு வேதவியாசமகாமுனிவர்எழுந்தருளிவந்தார் அவரைக்கண்டுதர்
மராசாவானவர் எழுந்திருந்து அவருக்குப்பூசைநமஸ்கார முதலியசக
லஉபசாரங்களுஞ்செய்து அவரைஒருஆசனத்திலெழுந்தருளச்செய்து
அவரைப்பார்த்து விண்ணப்பஞ் செய்கின்றார், ஓய்சுவாமி, அடியேன்
வெகுபிரஜாட்சயம்பண்ணி அதனால் வெகுபாவங்களைச் சம்பாதித்துக்
கொண்டேன் அதுவுமல்லாமல் கவுரவஸ்திரீக ளெல்லாரும் என்னைர
முங்கூகாவென்று அழுதுகொண்டிருக்கிறார்கள் அந்த அகோரத்தைஎ
ன்னால்கேட்டுச்சகிக்கமுடியவில்லை அல்லாமலும் சத்தியசந்தினராகியு
ம்பரமபாகவதராகியும்பராக்கிரமசாலியாகியும்புண்ணியமூர்த்தியாகியு
ம்எங்களைக்கிருபையுடனேவளர்த்துரட்சித்தவராகியும்விளங்கியபீஷ்மா
சாரியரைரணக்களத்திலேபடுக்கவைத்தேன்அதுவுமல்லாமல் பெரியவ
ராகியும்பூததயவுள்ளவராகியும்அகண்டிதவீரபராக்கிரமமுடையவராகி
யும்வில்லுக்குஆசாரியராகியும்அதிரதசிரேஷ்டராகியும்எங்கள்குருசிகா
மணியாகியும்விளங்கிய துரோணாச்சாரியரைக்கொன்றுவிட்டேன் அது
வுமல்லாமல்பிதாவுக்குப் பிதாவாயிருந்த கர்ன்னனைத் தமையனென்று
எவ்வளவுமெண்ணாமல்இராச்சியபரிபாலனஅபேட்சையினாலே கண்
டித்துவிட்டேன்பின்னும்அண்ணன்-தம்பி-மாமன்-மைத்துனன்-உற்றா
ர்பெற்றார்-சினேகிதர்-முதலானமற்றுமுள்ளராசாக்களையுங்கொன்றுவெ
குபாவங்களை கட்டிக்கொண்டேன் - ஆகையினால்சுவாமி, இந்தராச்சிய
வாஞ்சைமிகவுங்கெட்டது இது என்ன ராச்சியம்என்னசுகம்நான்இனி
மேல்ஒருநிமிஷமாகிலும்இந்தராச்சியத்தைப் பரிபாலனஞ்செய்யமாட்
டேன்ஆனபடியினால் இந்தராச்சியத்தை என்தம்பிமார்கையில் ஒப்பி
வைத்துப்போட்டுநான்பரமபவித்திரனாய்க்காட்டுக்குப்போகிமரவுரியு
டுத்திக்கொண்டுசருகுசலபட்சணஞ்செய்து தபசுபண்ணிசகலபாவங்க
ளையும் போக்கடித்துக்கொண்டுகிருதகிருத்தியனாகின்றேன், அதற்குத்
தேவரீர்அனுட்சைபண்ணவேண்டுமென்று தர்மபுத்திரமகாராசாவான
வர்விண்ணப்பஞ்செய்யஅதுகேட்டு வியாசமுனிவரானவர் புன்னகை
கொண்டுதர்மராசாவைப்பார்த்துச்சொல்லுகின்றார்,

ஓய்தர்மநந்தனா, நாம் உனக்கு எத்தனையாகச் சொன்னாலுந் தெ
ளிவுண்டாகவில்லை துஷ்டநிக்கிரகம் சிஷ்டபரிபாலனஞ்செய்வது ராசத
ர்மமேயல்லாமல்வேறல்ல ஆனாலும் பூர்வத்தில் சூரியவம்சராசாவாகிய
ஸ்ரீராமரானவர் இராவணாதி ராட்சஸசம்ஹாரஞ்செய்து அந்தப் பாவங்
கள்போகத்தக்கதாக அஸ்வமேதயாகஞ்செய்து புண்ணியதேகராய்க்கி
ருதகிருத்தியராய்ப் பூலோகத்திற்கீர்த்திபெற்றிருந்தார்- அவரைப்போ
லநீரும் அஸ்வமேதயாகஞ்செய்து சகலபாவங்களையும் போக்கடித்துக்
கொள்ளும் இனிநீர் சந்தேகப்படவேண்டியதில்லை யென்றுசொல்ல அ

துகேட்டு தர்மபுத்திரர் சந்தோஷித்தராய் ஓய்சுவாமி முனிநாதரே தே
வரீர் திருவாய் மலர்ந்தருளியபடியே அந்தஅஸ்வமேதயாகத்தைச்செ
ய்வோமென்றால் அதற்கு வெகுதிரவியஞ்செல்லுமே அவ்வளவு திரவி
யம் எனக்கு எப்படிகிடைக்கப்போகிறதென்று தர்மராசாவானவர் வி
ண்ணப்பஞ் செய்ய அதுகேட்டுவேதவியாசர் சொல்லுகின்றார். ஓய்த
ர்மநந்தனா நீர்திரவியத்தைக் குறித்து அணுவளவும் விசாரப்படவேண்
டியதில்லை முன்பு சூரியவங்கிஷாதிபரான மருத்துமகாராசாவென்கிறவ
ர் அஸ்வமேதயாகஞ்செய்து அபரிமிதமாய்ப்பிராமணாளுக்கு வெகுதி
ரவியத்தைத் தானங்கொடுத்தார். அப்பொழுது அவர்கள் எடுக்கமாட்
டாமல் அந்ததிரவியத்தைஇமோர்ப்பர்வதத்தண்டையில் போட்டுவிட்
டுப்போனார்கள். அந்ததிரவியத்தை இப்போது நீர் எடுப்பித்துக்கொண்
டுவந்து யாகஞ்செய்துமுடிக்கலாமென்று சொல்ல அதுகேட்டுதர்மரா
சாவானவர் சிந்தாக்கிராந்தராய்க்கிலேசப்பட்டு, வேதவியாசரைப்பார்த்
துச் சொல்லுகின்றார். ஓய்சுவாமி முனிநாதரே தேவரீர் நல்லகாரியஞ்
செயயச்சொன்னீர்இது உமக்கு நன்றாயிருக்கிறதோநாமுன்னையே பிர
ஜாட்சயம்பண்ணி அந்தபாவத்தைப்போக்கடிப்பதற்கு-வழிகாணாமலி
ருக்கிறபோது பின்னையும்பிராமணாள்உடமையை அபகரித்துக்கொண்
டுஅந்த தோஷமுஞ் சம்பாதித்துக்கொள்ளவேண்டுமோ இப்படிக்கொ
த்தகாரியம் நான் சொர்ப்பனத்திலுஞ் செய்யமாட்டேனென்றுதர்ம
புத்திரர்சொல்ல அதுகேட்டு வேதவியாசர் சொல்லுகிறார்.

ஓய் தர்மதயாநிதீ நாம்பாவத்துக்கு அனுகூலமான காரியஞ்சொ
ல்லுவோமோ அப்படிஒருக்காலும் நீர்நினைக்கவேண்டாம் அந்தமருத்
துமகாராசா அஸ்வமேதயாகஞ்செய்துஅநேகமாயிரம் பிராமணர்களு
க்கு- அவ்வவர்கள் ஆசைதணியத்தக்கதாக வெகுதிரவியத்தைத் தானங்
கொடுக்கும்போது அந்தப்பிராமணர்களெல்லாங் வெகுசந்தோஷத்து
டனேதானம் வாங்கிக்கொண்டு எடுக்கமாட்டாமல் மெத்தவுந்தாபந்திரி
யப்பட்டு அவரவர்கள் சுமக்கத்தகுந்த திரவியத்தை எடுத்துக்கொண்டு
மிச்சமான திரவியத்தை இமோர்ப்பர்வதத் தண்டையில் கும்பலாய்ப்
போட்டு இந்த திரவியத்தை எவர்கள்கண்டாலும்அவர்கள்சுகமாய் எடுத்
துக்கொண்டுபோகக் கடவர்களென்று சொல்லிப்போய்விட்டார்கள் அ
துவுமல்லாமல் பூமியிலிருக்கிற பொருள்கள் தர்மராசாக்களுக்கென்று
வேதத்திற்சொல்லி யிருக்கிறது ஆகையினால் நீர் ஒன்றுக்கும் யோசனை
பண்ணாமல்அந்த திரவியத்தை எடுப்பித்துக்கொண்டுவந்து யாகஞ்செ
ய்யுமென்று சொல்ல அதுகேட்டு தர்மராசாவும் அப்படியே-நல்லதெ
ன்று சம்மதித்து ஓய்முனிசிரேஷ்டரே அந்தஅஸ்வமேதயாகஞ்செய்கி
றவிதம்எப்படி அதைநன்றாய் எனக்குத் தெரியச்சொல்ல வேண்டுமெ
ன்று விண்ணப்பஞ்செய்ய அதற்கு வேதவியாச பகவானானவர் தர்மரா
சாவைப்பார்த்துச் சொல்லுகிறார்.

கேளுமையா தர்மநந்தனா அஸ்வமேதயாகஞ்செய்கிற விருத்தா

# அஸ்வமேதபர்வம்.

ச் சொல்லுகிறோம்என்னவென்றால் அந்தயாகத்துக்குத் தகுந்தகு
திரையானது சரீரமுழுதும்வெளுப்பாகவும்- வால்கறுப்பாகவும் - கழு
த்தும்வயிறுங் குங்குமநிறவாகவும்- இடதுகாது பச்சைநிறமாகவும்- வ
லதுகால் மஞ்சள்நிறமாநவும்உதடுபவளம்போலும் இருக்கவேண்டும்இ
ப்படிக்கொத்த ஸ்வலட்சணமுள்ள அஸ்வத்தைக்கொண்டுவந்து ஸ்நான
ம்பண்ணுவித்து பூசைசெய்துமந்திரபூர்வகமாய்த் தோத்திரம்பண்ணி
மந்திர ஆவாகனஞ்செய்து யாக குண்டத்தைப் பிரதட்சணம்பண்ணு
வித்து உம்முடைய பிரதாபசௌரியத்தை ஒருபொற்பட்டத்திலெழுதி
அந்தப்பட்டத்தை அஸ்வத்தினுடைய நெற்றியிலேகட்டி. பிற்பாடு கந்
தபுஷ்ப அட்சதைகளால் மந்திரபூர்வகத்துடன்அந்த அஸ்வத்தைப்பூசி
த்துப் பிராமணர்களுக்கு அநேக தானங்கொடுத்து அதைஒருவருஷப
ரியந்திரம் பூமிபிரதட்சணம்பண்ணுவித்து அங்கங்கே எதிர்த்துவந்த
ராசாக்களையெல்லாஞ்சங்கரித்துஜெயம்பண்ணி குதிரையைநடப்பித்து
க்கொண்டுவந்து யாககுண்டத்தில் மந்திரபூர்வகத்துடன் எக்கியம்பண்
ணி தேவர்களுக்கெல்லாம் அவிர்ப்பாகங்களைக்கொடுத்து அந்தயாகஞ்
செய்விக்கின்ற பிராமணர்களுக்கும் பின்னும் அநேகமாயிரம் பிராம
ணர்களுக்குந் தானங்கொடுக்கவேண்டும்- அதெப்படியென்றால் ஒவ்
வொருத்தருக்கு - ஆனையொன்று - குதிரை - மூன்று, தேர்எழு, காலா
ள் ஒன்பது, ஸ்திரீகள் நாலு, தங்கம் - ஒருபாரம், இந்தப்பிரகாரங்கொ
டுத்து மஹாகீர்த்திப் பிரகாசத்தைப்பொருந்துமென்றுசொல்ல அது
கேட்டு தருமபுத்திரர்சிந்தாக்கிரந்தனாய் விசாரப்பட்டு வேதவியாசரை
ப்பார்த்துச்சொல்லுகின்றார். ஓய்முனிநாதரே நன்றாச்சுது அஸ்வமேத
க்குதிரையைப் பிடித்துக்கொண்டு எந்தவரசர்களாவது எதிர்த்தால்அவ்
வரசர்களுடனே போராடும்படி சொன்னீரே அப்படிப்பட்ட பிரஜாட்
சயமாய்க் கடும்பிரயத்தினமாயிருக்கிறகாரியம் நான்செய்யப்படுவேனா
எனக்குப்பிரஜாட்சயமென்கிற காரியத்தை நினைத்தாலும்சரீரம்நடுங்கிற
து மனதுவிசாரமாயிருக்கின்றது ஆகையால்நான்எந்தவிதமாக இந்த அ
ஸ்வமேதயாகத்தைச்செய்து முடிப்பேன்சொல்லுமையாவென்றுவிண்
ணப்பஞ்செய்ய அதுகேட்டு வேதவியாசர் சொல்லுகின்றார். ஓய், தர்ம
நந்தனரே அடிக்கடி இப்படி சொல்லவேண்டாம்- நாம்கட்டளையிட்டபடி
நீர் அந்தயாகத்தைசெய்துமுடித்தால்,(பிரமஹத்தி)முதலானஎவ்வகை
ப்பட்ட மஹாபாவங்களுஞ்சூரியனைக்கண்டபனிபோலநீங்கிப்போம் இ
துவல்லாமலும்,ஸ்ரீஅகிலாண்டகோடிபிரம்மாண்டநாயகராகிய ஸ்ரீகிருஷ்
ணதேவரிருக்கும்போது;உம்முடையகாரியம்அநுகூலமாகாமற்போகு
மோ அந்தகிருஷ்ணமூர்த்தியேபுண்ணியபாவங்களுக்குக்காரணமானவ
ர் ஆதலால் அவருடைய அனுமதியினாலே இந்தயாகத்தைச்செய்து நி
றைவேற்றுமென்று வேதவியாசர்சொல்ல அதுகேட்டு தர்மபுத்திரரான
வர் அந்தயாகத்திற்குத்தகுந்த குதிரைஎவ்விடத்திற்சம்பாதிக்கப்போகி
றேனென்றுசொல்ல அதுகேட்டுவேதவியாசர்சொல்லுகின்றார்.

# அஸ்வமேதபர்வம்.

ஒய்தர்மநந்தனா அஸ்வமேதயாகத்திற்குத்தகுந்தகுதிரையானதுப
த்திராவதிபட்டணத்தையாளுகின்ற எவ்வர்ணசுவமகாராசாவினிடத்தில்
இருக்கின்றது, அதைஉபாயமாகக்கொண்டுவரவேண்டும் அந்தராசாவு
க்குப்பத்துஅக்ஷோணிசேனைகளிருக்கின்றது-அதுவுமல்லாமல்அந்தரா
சன்மகாவீராதிவீரன்விஷ்ணுபக்தியுடையவன்அப்படிப்பட்ட மகாபு
ருஷனிடத்திலிருக்கின்ற குதிரையெப்படியாவது அழைப்பிக்கவேண்
டுமென்றுசொல்ல அதுகேட்டு தர்மராசாவானவர்சந்தோஷசித்தராய்
இதற்கெப்படியென்று ஆலோசனைசெய்யும்போது அந்தக்கொலுவி
லிருக்கின்ற மகாவீரபராக்கிரமசாலியாகியவீமசேனன்சொல்லுகிறான்
ஓய் அண்ணா தர்மந்தி அடியேன் சொல்லுகின்ற விண்ணப்பத்தைக்
கேளும்ஆமென்றால்அந்தஎவ்வர்ணசுவனுடைய புஜபலபரா
க்கிரமும்அவனுடையசேனைகளின் பிரதாபமும் எம்மாத்திரமென்று
யோசிக்கின்றீர்அவர்களையெல்லாம் என்னுடைய கதாயுதத்துக்கிரையா
க்கும்படி ஒருநொடியில் நுறுக்கடித்து அந்தராசாவை செலித்து அவ
னிடத்திலிருக்கிற அந்த அஸ்வமேதக்குதிரையை நானேபோய் கொ
ண்டுவருகிறேன் என்னுடையபராக்கிரமத்தைப்பாரும் அப்படிசெயம்
பெற்றுஅந்த அஸ்வத்தைக்கொண்டுவராமற்போவேனாகில் மாதாபிதா
க்களைத்தூஷித்தவர்கள் போகின்றபாவத்திலேயும் குருத்துரோகந்தெ
ய்வத்துரோகஞ் செய்தவர்கள் போகின்றபாவத்திலும் போவேனென்
று மகத்தாகியசபதஞ்செய்தான் அதுகேட்டுதர்மபுத்திரர் மனங்கலங்கி
ஒய்வீமசேனா நீகொஞ்சமாகிலும் எதிரியினுடைய பலாபலங்களையோ
சிக்காமல்,இப்படியாகப்பதறி சபதஞ்செய்யலாமோஅந்தராசன்அதிக
பலாஷ்டியன்அதுவுமல்லாமல் (ஜயாபஜயம்)ஒருவரிடத்தல்லவே அப்ப
டியிருக்கநீஇப்படிசபதஞ்சொல்லிவிட்டாயே அதற்கு என்னசெய்ய
லாமென்றுதர்மராசாவானவர் யோசிக்கும்பொழுது அதுதெரிந்து கர்
ணன்குமாரனாகியவிஷ்வகேதுசொல்லுகின்றான்-ஓய்,ஜயாராஜசேகரா
நீங்கள் இப்படியோசிக்கவேண்டுமோ அந்தராசன்பேரில் என்னைஅனு
ப்பிவையுங்கள் என்சிறியதகப்பனாகியவீமசேனமகாராசனை அப்புறம்
வைத்துவிட்டுநான்ஒருவனாகத்தனித்துப்போய்பிரசண்ட யுத்தஞ்செய்
து அந்தராசனையும்அவனுடைய-ரதகசதுரக பதாதிகளையுஞ் சின்னப்
படுத்திவிட்டுசயலட்சுமிசமேதனாய் செயபேரிகைமுழங்கத்தக்கதாக
அந்தஅஸ்வத்தைக்கொண்டுவருகிறேன்என்சாமார்த்தியத்தைச் சற்றே
பாருங்களென்றுசொல்ல,அதுகேட்டு தர்மராசாவானவர் விசாரப்பட்டு
ஒய்குமாரகாபுத்திரரத்நமேநாங்கள்உன்னையுத்தத்துக்கு அனுப்பிவிடு
றது தர்மமல்லவே நீசிறுபிள்ளையாச்சுதேஉன்னைச் சகலபோகபாக்கியன்
சீரையும்அனுபவிக்கச்செய்வதும்நல்ல எவ்வனஸ்திரீகளைக்கூடிலீலாவி
நோதமாயிருக்கச்செய்வதுமல்லாமல்உன்னையுத்தமுகத்திற்கு அனுப்
வதுநியாயமல்லவே இதுவுமல்லாமல், உன்தகப்பனாகிய கர்ணனை
மையனென்று அறிந்துகொள்ளாமல் அர்ச்சுனன்கையில் கொல்லு

டிச்செய்தேன்-அந்ததுக்கமேயின்னமும்பொறுத்துமுடியாமல் உன்னை
ப்பார்த்துப்பொறுத்திருக்கிறேன் நீசண்டைக்குப்போகவேண்டாமெ
ன்றுசொல்ல, அதுகேட்டு விஸ்வகேது சொல்லுகின்றான்.ஓய்ஐயா, நீர்
இப்படிசந்தேகப்படவேண்டாம்,என்னுடையதகப்பனாகியகர்ணன் நடு
வுநிலைமையாகியதர்மத்தைவிட்டுஅதர்மத்திற்குஉட்புகுந்துதுன்மார்க்க
னைதுரியோதனாதிகளுடன் கூடிக்கொண்டுஉங்களுக்குவெகுஆபத்துக
ளுண்டாக்கினபடியால்(இரும்புடனேகூடினநெருப்புக்கும்அடிபடுமெ
ன்பதுபோல)அந்தகர்ணனும்மடிந்துபோனான்அதற்கு நீங்கள்என்விச
னப்படுகிறீர்கள்அப்படிவிசனப்படாமல்எனக்குசண்டைக்குஅனுமதி
பண்ணிஅனுப்பிவையுங்கள்உத்தம க்ஷத்திரியராகப்பிறந்து சண்டைக்
குப் பயப்படுவார்களோ நீங்கள் ஒன்றுக்கும் அஞ்சவேண்டாம் என்
சௌரியபராக்கிரமத்தை நீங்களேசொல்லப்போகிறீர்களென்று சொ
ல்லஅதுகேட்டு தர்மராசாவானவர்சம்மதப்பட்டு இருக்கும்போதுவீ
மசேனன்பேரனும் கடோர்க்கசன்குமாரனுமாகிய மேகவர்ணன்சொ
ல்லுகின்றான்.

ஓய்பாட்டா தர்மசுகிபா என்னுடைய விண்ணப்பத்தைக்கேளும்
எங்கள்பாட்டன் வீமசேனனும் விஸ்வகேதுவும் அந்தராசாவின்சேனை
களுடனேபோராடி யுத்தம்பண்ணுகிறபோது நான்என்னுடையராட்ச
தமாய்கைகளையுண்டாக்கி ஒருவருக்குந்தெரியாமல் பட்டணத்துட்பகு
ந்து அந்தஅசுவத்தைப்பிடித்துக்கொண்டுஇவ்விடத்துக்குவருகிறேன்
ஓய்சுவாமிஎனக்குச்சிலவுகொடுமென்றுஇரண்டுகைகளையுங்கட்டிக்கொ
ண்டு பத்திவினயத்துடன்கேட்க அதுகேட்டுதர்மராசா ஆச்சரியப்ப
ட்டு ஓய்மேகவர்ணாநீசிறுபிள்ளை நீ போர்கவேண்டாம் குதிரைவேண்டு
மானால் வீமசேனனும் விஸ்வகேதுவும் போகிறார்கள் நீ சுகமாய்சகல
சௌக்கியங்களையு மனுபவித்துக்கொண்டிருவென்றுசொல்ல அதற்கு
மேகவர்ணன் நகைத்து பாட்டனாகிய தர்மராசாவுக்கு நமஸ்காரம்ப
ண்ணி எப்படியும்நான்போகவேணுமென்று அனுமதி பெற்றுக்கொ
ண்டான் அப்போது சூரியாஸ்தமானமாச்சுது அதுகண்டு வேதவியா
சர் சந்தியானுஷ்டானக் கிரியைகளைமுடித்துக்கொள்ளவேண்டி தம்மு
டையஆசிரமத்திற்கு எழுந்தருளினார் அப்பொழுதுதர்மராசாவானவர்
வீமன்-அருச்சுனன்-நகுலன் - சகாதேவர்களுடனும் மந்திரி சாமந்திரி
களுடனுங் கொலுவைவிட்டு எழுந்திருந்துபோய் சந்தியானுஷ்டான
சபதபங்களை முடித்துக்கொண்டு மறுபடியும்வந்து சகலசேனைகளும்
புடைசூழத்தக்கதாககொலுவாயிருந்துதர்மராசாவானவர் தன்னை வி
யாசபகவான் அஸ்வமேதயாகம் பண்ணச்சொன்னதும் தான்சம்மதி
த்ததும் எவ்வர்ணசுவன் பட்டணத்துக்கு வீமசேனன்விஸ்வகேதுமே
கவர்ணன் இவர்கள்போகிறோமென்றுசொல்லிய வார்த்தையையும் நி
னைந்துஇதுவெல்லாம் அசாத்தியமான காரியமாகயிருக்கிறது இதற்
கென்னசெய்யலாம்இவைகளுக்கெல்லாம் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி யிருக்கி

ரென்று அவனைமனதிலே தியானித்து ஓய்கிருஷ்ணா துவாரகாபுரிவா
சா - வாசுதேவா-தேவகிநந்தனா- கோவிந்தா-ஹரிஹரி - கோபாலா அ
னாதரட்சகா-ஆபத்பாந்தவா-ஓய்சுவாமியென்று- அநேகவிதமாய்க்கொ
ண்டாடி அர்ச்சுனனைப்பார்த்துச் சொல்லுகிறார். ஓய் அர்ச்சுனா நீகா
லமே துவாராபுரிக்குப்போய்நமது குருசுவாமியாகிய ஸ்ரீகிருஷ்ண
தேவனை அழைத்துக்கொண்டுவா நமக்கு அவனையல்லாமல் ஒருகாரிய
மும் நடவாதென்றுசொல்லஅப்படியே நல்லதென்று அர்ச்சுனராச
னும் சம்மதித்திருக்க அந்தச்சமயத்தில்வாசல்காற்கிறதலையாரிகள் வந்
து தெண்டனிட்டுஓய்ஜயாராஜேந்திரா ராஜமார்த்தாண்டாராஜ கெம்பீ
ராராஜசேகராஇதோ அரமனைவாசலில்லோககர்த்தாவாகிய ஸ்ரீகிருஷ்ண
தேவர்வந்திறங்கி அரண்மனைக்குள்வரலாமென்று கேட்கச்சொன்னார் அ
ந்தசேதிதேவரீர்சித்தமறிய வேண்டுமென்றுவிண்ணப்பஞ்செய்து நி
ற்க அதுகேட்டுதர்மநந்தனர் ஆனந்தசமுத்திரத்தில் மூழ்கின வராய்த்
திடுக்கென்றெழுந்திருந்து தம்பிமாருந்தானுமாகஎதிர் கொண்டுபோ
ய் மிகுந்ததரித்திரனுக்கு திரவியநிட்சேபத்தைக்கண்டால்எவ்வளவுஅ
பேட்சையிருக்குமோ அவ்வளவு அபேட்சையால் அரமனைவாசலில்வந்
து நிற்கிற ஸ்ரீகிருஷ்ணபகவானைக்கண்டு ஓய்புண்டரீகாட்ச ஓய்சுவாமீ
உமக்குக்காவலுண்டோ ஏன்லோகநடனஞ்செய்கிறீரென்றுசொல்ல அ
துகண்டு ஸ்ரீகிருஷ்ணதேவர் தர்மராஜாவுக்குசாஷ்டாங்கமாக தெண்டனி
ட்டார் அப்பொழுது தர்மராஜாவும் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியைஎடுத்துமார்
போடணைத்துக்கொண்டார் வீமசேனனும் ஸ்ரீகிருஷ்ணதேவருந்தழு
விக்கொண்டார்கள் அர்ச்சுனன்-நகுலன்-சகாதேவன் இவர்கள்மூவரும்
ஸ்ரீகிருஷ்ணதேவனைஅழைத்துக்கொண்டுவந்து அரண்மனையிற் புகுந்
துகொலுவில்உட்கார்ந்தார்கள் அப்போது அந்தப்புரத்திலிருந்ததிரௌ
பதையம்மன்வந்து ஸ்ரீகிருஷ்ணதேவருக்குத் தெண்டனிட்டு ஓய் அ
ண்ணா தேவகிநந்தனா வந்தீர்களோ முன்னாலேஎன்னைத் துரியோதனனா
னவன் அந்தராஜசபையில்அவன்தம்பியாகிய துர்ச்சாதனனைவிட்டுமா
னபங்கஞ்செய்யும்போது அட்சயமாகக்காத்துரட்சித்தமஹானுபாவா
சுவாமியென்றுவிண்ணப்பஞ்செய்ய அதுகண்டுகோபால சூடாமணி
யாகியஸ்ரீகிருஷ்ணபகவான் சொல்லுகிறார் - ஓய்அம்மா, புண்ணியவதி
உன்னுடைய பதிவிரதாதர்மத்தினாலும் தர்மநந்தனருடைய சத்தியத்
தினாலும் ஒருகுறைவுமில்லாமல்துவாரகையில் எல்லோருஞ்சுகமேயி
ருக்கிறார்கள்என்னாலொருகாரியமுமில்லை தர்மராஜாவினுடைய அனுக்
கிரகத்தினாலேசகலஆத்மகோடிகளும்ஆநந்த முண்டாச்சுது அம்மா
இனிநீ அந்தப்புரத்துக்குப்போம் இங்கே இருக்கவேண்டாமென்று
சொல்லஅதுகேட்டு துரோபதையும்ஓய்அண்ணா ருக்குமணி மனோக
ராஇவிடத்தில் தமையனாகிய தாமும்என்புருஷர்களுமல்லாமல் வேறே
எவர்களுமில்லையே நானிருந்தால்தான்என்னவென்றுசொல்ல அம்மா

# அஸ்வமேதபர்வம்.

ந்தசபையிலிருக்க வேண்டாமென்று திரும்பவும் ஸ்ரீகிருஷ்ணதே
வர் சொல்லியருளினார். அதுகண்டு துரோபதையும் அப்படியே நல்
லதென்று அந்தப்புரத்திற்குப் போய்விட்டாள் பின்பு தர்மராஜாவா
னவர் ஸ்ரீகிருஷ்ணதேவரைப்பார்த்து ஓய்கபடநாட சூஸ்த்ராவ தாரீ
ஓய்கிருஷ்ணா நான்இப்பொழுது அர்ச்சுனனுக்குத் துவாரகைக்குப்போ
ய்உங்களை அழைத்துக்கொண்டுவரும்படி கட்டளையிட்டேன் அதற்குள்
தேவரீரும்வந்துவிட்டீரென்றுசொல்ல அதுகேட்டுஸ்ரீகிருஷ்ணமூர்த்தி
யும் தர்ம்மராசரைப்பார்த்து ஓய்ராசேந்திரா நம்மைப்பற்றியே தாகி
லுங்காரியமுண்டோ சொல்லுமென்றுகேட்க தர்ம்மபுத்திரர்சொல்லு
கிறார், ஓய்பரமபுருஷா(தேவாதிதேவா)வேதவியாசர்இவிடத்திற்கு எ
ழுந்தருளிவந்து என்னை அஸ்வமேதயாகஞ்செய்து பாவங்களைப் போ
க்கடித்துக்கொள்ளுமென்று அதற்குதிரவியம்வேண்டுமேயென்று நா
ன்சொன்னதற்குமருத்துமஹாராசாயாகம்பண்ணி அந்தயாகத்தில்பி
ராமணர்களுக்குதட்சணைகொடுத்தார் அவர்கள் அந்ததிரவியத்தைச் சு
மந்து கொண்டுபோகமாட்டாமல்இமேர்ப்பர்வதத்தண்டையில்போ
ட்டுவிட்டுப்போனார்கள் அதையெடுத்துக்கொண்டுவந்து செலவுபண்
ணுமென்றும் அஸ்வமேதயாகத்திற்குத்தகுந்தஅஸ்வமானதுஎவ் வர்
ணசுவமஹாராசாவினிடத்திலிருக்கின்றது அதை அழைப்பியு மென்
றுஞ்சொல்லிப்போனார்.

பிற்பாடுவீமசேனன்அந்தஅஸ்வத்தைக் கொண்டுவருகிறேனெ
ன்றுசொல்லிசபதங்கூறினான் ஆகையால்இதுகளுக்கெல்லாம்தேவரீரை
யல்லாமல்ஒருஅணுவாகிலும் அசையமாட்டாதேயென்று நினைத்து உ
ங்களைஅழைத்துக்கொண்டு வரச்சொன்னேன் சுவாமியென்று சொல்
ல, அதுகேட்டுஸ்ரீகிருஷ்ணபகவானும்புன்னகைகொண்டு தலையை ய
சைத்துசற்றுநேரம்யோசனைபண்ணி இந்தயாகத்தினாலேநமதுகாரிய
மெல்லாம்-நிறைவேறவேண்டு மல்லவோவென்றுமனதில் நினைத்துக்
கொண்டுஅந்ததேவனானவர்மேகமானதுகர்சித்தாப்போல ஒருவசன
ஞ்சொல்லுகிறார், ஓய்தர்ம்மநந்தனா நீங்கள்சற்றாகிலும்நமது பலத்தை
யும்மாற்றானுடையபலத்தையும்எண்ணிச்செய்கிறதில்லை அந்தவியாச
ருக்கும்வேலையில்லை தேவர்கள்முதலானவர்க்கும் அசாத்தியமானகா
ரியத்தைச் செய்யும்படிசொல்லிப்போனார், அப்படியானாலும் இந்த
வீமசேனன் முன்னும் பின்னும் யோசிக்காமல்பதறி எவ்வர்ணசுவன்
வசத்திலிருக்கிற குதிரையைக்கொண்டுவருகிறேனென்றுஎப்படிசபத
ங்கூறினான். அந்தஎவ்வர்ணசுவனுக்குப்பத்துஅக்குரோணி சேனைகளி
ருக்கின்றது, அவனோசத்தியவந்தன், வீராதிவீரன்,விஷ்ணுபக்தன் அ
வனைச்செயிக்கஎனக்குக்கூடசக்கியமல்லவேபுலியின்வாயில் அகப்பட்
டமாமிசந்திரும்பவும் ஒருவருக்குக்கிடைக்குமோ நீங்கள்என்றைக்கு
ம்இப்படிதான்முன்பின்எண்ணிப்பாராமல் யோசனைபண்ணுகிறீர்கள்,
முன்னாலேபாரதயுத்தத்திலேஇந்தஅருச்சுனன்சயிந்தவனைக் கொல்லு

இறேனென்று சபதங்கூறி அதனால் எந்தன ஆபத்துவந்தது அதுவுமல்
லாமல் இந்தயாகஞ்செய்வது கொஞ்சத்திலில்லைமுன்பு(ஸ்ரீராமர்) அஸ்
வமேதயாகம்பண்ணவேண்டுமென்று ஆயுத்தப்பட்டுகுதிரையைவிட்
டார்அந்தக்குதிரையைச் சுரதனென்கிறராசன்பிடித்துக்கட்டிவிட்டுஅ
தன்பிறகேவந்தஅனுமார் சுக்கிரீவன்முதலானஇரண்டுவெள்ளஞ்சேனை
களையுஞ்சின்னபின்னப்படுத்தித்துரத்திவிட்டான், அதுகேட்டு (ஸ்ரீரா
மரானவர்) வெகுசேனைசமுத்திரத்துடனே அந்தராசாவை எதிர்த்து
வெகுபிரயாசமடைந்துஅவனைச்செயித்துஅந்தக்குதிரையைக்கொண்
டுவந்துபின்புஅந்தயாகத்தைச்செய்துமுடித்தார், அப்படிப்பட்டம
ஹானுபாவனுக்கேசக்கியமாகாதகாரியம் உங்களுக்குச் சக்கிய மாகு
மோ பூமியில்அநந்தமாயிரம்பலசாலிகளான அரசர்க ளிருக்கிறார்கள்,
அவர்களையொருவராலுஞ்செயிக்கமுடியாது,அதுவுமல்லாமல் பூலோ
கத்திலெந்தராஜன் அஸ்வமேதயாகஞ்செய்கிறானென அந்த குதிரையை
க்கொண்டுபோவோமென்றுநினைத்துதேவேந்திரன்திரிந்துகொண்டே
யிருப்பான்இதுகளினால்யாகஞ்செய்துநிறைவேற்றுகிறதுமெத்தவுங்க
டினம் ஆனாலும்ஓய்தர்மநந்தனா நினைத்தகாரியத்தைமுடியாவிட்டாலு
ம் ஆகாது இதற்கெப்படியென்று ஸ்ரீகிருஷ்ணதேவர் அவ்வவர்கள்ம
னதைச்சோதிக்கும்படி கேட்டருளினார் அதுகேட்டுதர்மபுத்திரர் சொ
ல்லுகிறார்.ஓய்தேவகிநந்தனா தேவரீர்எங்கள்மனதைச்சோதிக்கும் பொ
ருட்டுகேட்டதேயல்லாமல்நிசமாகக்கேட்டவார்த்தையல்ல, தேவரீர்
மேருவைத் துரும்பாகச்செய்வீர் துரும்பைமேருவாகச்செய்வீர் அ
ப்படிப்பட்டநீர்நினைத்தகாரியம் நிறைவேறாமற்போகுமோகபடநாட
கசூஸ்த்ராவதாரியான தேவரீர்கடாக்ஷம்எங்கள்பேரில் பூரணமாயிருக்
கிறபோது அந்தயாகந்தான்எவ்வளவு வீமசேனன்செய்த பிரதிக்கினை
தான்எம்மாத்திரம்ஆகையினால்-இந்தப்பரிகாசவார்த்தைகளைவிட்டுவிட்
டுஎன்கையினால் இந்தஅஸ்வமேதயாகம்பண்ணுவித்துஎன்னைப்பரமபா
வித்திரனாகச்செய்வதுமன்றி அந்தவீமசேனன்பிரதிக்கினை படியேகு
திரையையும் அழைப்பித்துக்கொடும்சுவாமீயென்றுசொல்ல, வீமசே
னனும்ஓய்கிருஷ்ண தேவரீரதுகடாட்சவீட்சண்ய மிருப்பதினாலல்ல
வோஅப்படிசபதஞ்செய்தது நிறைவேறாமற்போகுமோ எங்களை எ
ன்இப்படி மிரட்டுகிறீரென்று பரிகாசமாகச் சொன்னான் அர்ச்சுனனு
ம்ஓய்கிருஷ்ண தேவரீர்மச்சான்வரிசைகொண்டு இப்படி விளையாடுகி
றீரல்லாமல் உண்மையாகச்சொன்ன சொல்லல்லவே ஆகையினால்பிர
ம்மா நினைத்தால்ஆயுசுக்குக்குறைவுண்டோ வென்பதுபோல தர்ம
புத்திரர் நினைத்த காரியத்திற்கு ஒருகுறைவுவருமோ ஒருக்காலும் கு
றைவுவருகிறதில்லை சுவாமியென்றுசொன்னான் நகுலனும்சகாதேவனு
ம் அப்படியேசொன்னார்கள் இதுகளெல்லாம் ஸ்ரீகிருஷ்ணமூர்த்திகே
ட்டு புன்சிரிப்புகொண்டு சந்தோஷித்தவராய் சொல்லுகின்றார் ஓய்த
ர்மநந்தனா நான்உங்கள் மனதையறியவேண்டி இப்படிச் சொன்னேன்

# அஸ்வமேதபர்வம்.

வில்லாமல் நீங்கள்நினைத்தகாரியம் முடியாமற் போகிறதில்லை நீங்கள்
தர்ம்மசொரூபமாயிருக்கிறவர்கள்உங்களுக்கொருநாளுங்குறைவு வருகி
றதில்லைஆதலால் சம்சயப்படாமல்குதிரையைக்கொண்டுவருகிறதற்கு
வீமசேனனையனுப்பும் குதிரையின்பிறகே அர்ச்சுனனையனுப்பும் நீ
ர்சுகமா இந்த யாகத்தைமுடியுமென்று ஸ்ரீகிருஷ்ணதேவர் பரிபூரண
தயவுடன்திருவுளம்பற்றியருளினர் அதுகேட்டுப் பாண்டவர்கள் சந்
தோஷ சமுத்திரத்தில்முழுகினார்கள் அப்போது அந்தப்புரத்திலிரு
ந்து திரௌபதைவந்து போஜனத்துக்கு எழுந்தருளவேண்டுமென்
றழைத்தாள் அப்படியேஸ்ரீகிருஷ்ணமூர்த்தியும் தர்ம்மபுத்திரரும் வீ
மன்-அர்ச்சுனன்- நகுலன் -சகாதேவர்களுடன் எழுந்திருந்துபோய்
ஸ்நாநானுஷ்டான கிரியைகளைமுடித்துக்கொண்டு போஜனஞ்செய்து
கைகால் சுத்திபண்ணிக்கொண்டுவெகுசம்பிரமத்துடன் கந்தபுஷ்பப
ரிமளாதிகளணிந்து கர்ப்பூரமுதலிய பரிமளவஸ்துக்களோடுந் தாம்
பூலந்தரித்துக்கொண்டு தர்ம்மநந்தனரிடத்திற் செலவுபெற்றுக்கொண்
டு ஸ்ரீகிருஷ்ணபகவான் நவரத்நகசிதமாகிய சப்பிர கூடமஞ்சத்தின்
பேரில் நித்திரைசெய்தருளினர். பாண்டவர்களும் அவ்வவர்கள் சப்
பிரமஞ்சத்தின்பேரில் நித்திரைசெய்தார்கள்.

அதன்பின்புசூரியபகவானும்திருடர்களை வெளிப்படுத்தவும்சோ
ரஸ்திரீகளைப்பங்கப்படுத்தவும் சகலஜீவகோடிகளுக்கும்ஆனந்தமுண்
டாகவும் கிழக்குத்திசையில் உதயமாகினர் அப்பொழுது ஆகாயத்திற்
றோன்றுகிறநட்சத்திரங்கள்மறைந்துவிட்டது தடாகங்கள்தோறும்நிறை
ந்துள்ள தாமரைப்புஷ்பங்களெல்லாமலர்ந்தது இப்படிசூரியனுதயமாகு
முன்னமே சங்கீதசாகித்தியவித்துவசனங்கள்முதலானவர்களும்கூட்ட
மாகக்கூடிக்கொண்டு நவரத்நமயமாகிய சப்பிரகூடமஞ்சத்தின்பேரில்
சயனித்திருக்கிற ஸ்ரீகிருஷ்ணதேவரிடத்திற்குவந்து தங்கள்தங்கள் வித்
தைகளை ஏற்பாடுசெய்து தம்புருவீணையாழ்ராவணஹஸ்த முதலியகரு
விகளில்சுருதிகூட்டிக்கொண்டுமுப்பத்திரண்டுராகங்களாலும் அவைக
ளுக்கிசைந்தவர்ணசுரங்களாலும்திருப்பள்ளியெழுச்சியென்னுந்திருப்
பாசுரங்களாலுந்தோத்திரஞ்செய்து நித்திரையெழுப்புகின்றார்கள் அ
ஃதெப்படியென்றால்,ஓய் துவாரகாபுரிவாசாதேவகீநந்தனஎழுந்தருளு
ம். பூதகியென்கிறராட்சசிமுலையையுண்டு அவளுடையபிராணனை உறி
ஞ்சிக்கொண்டுஅவளுக்கு வைகுந்தங்கொடுத்த ஓய்கிருஷ்ணா எழுந்தரு
ளுந் (சகடாசுரனென்கிறராட்சதன்) தம்மைக்கொல்லவந்தானென்றறிந்
தூஅவனைத்திருவடிகளாலுதைத்துச்சங்கரித்தகோவிந்தா எழுந்தருளு
ம், கோபாலர்கள்வருஷத்திற்கொருதரம் தேவேந்திரனைநோக்கிப் பிரு
ந்தாவனத்தில் பொங்கலிட்டுக்கொண்டுவரும்போது அந்தநியமத்தைத்
தவிர்த்துகோவர்த்தனகிரிக்குஇடுவிக்க அதற்குத்தேவேந்திரன்கோபித்
துக்கொண்டுகல்மழைவருஷிக்கஅதுகண்டுகோவர்த்தனகிரியையேந்தி
க்குடையாகப்பிடித்துஅவர்களைக்காத்துரட்சித்தகோபாலசூடாமணி

ழுந்தருளும்தேனுகாசுரன் பகாசுரன்முதலான அநேகவீரர்களைச்சங்க
ரித்த புண்டரீகாட்சா எழுந்தருளும், வாணாசுரனெனவன் தம்மையெதிர்த்
துவர அவனுடனே தேவரீர்போராடிச் (சக்கிராயுதத்தினால்) அவனது
ஆயிரங்கைகளையுந் துண்டந்துண்டமாகக்கண்டிக்கிறபோது ஸ்ரீ கை
லாசபதியான (சாம்பமூர்த்திவந்து) ஓய்கிருஷ்ணா இவன்நம்முடைய பக்த
ன் இவனை இரட்சிக்கவேண்டுமென்றுவேண்டிக்கொண்டபடியினாலே அ
வனை நாலுகைகளும்இரண்டுதலையுமாகவிட்டுஇரட்சித்தகமலநேத்திரா எ
ழுந்தருளுமென்றுதோத்திரஞ்செய்தபொழுது அந்தஸ்ரீகிருஷ்ணபகவா
னானவர் நித்திரைதெளிந்து எழுந்தருளிவெளியேவந்துகாலோசிதமான
நித்தியகருமங்களைமுடித்துக்கொண்டு தர்மபுத்திரருந்தாமுமாகஸ் நா
நா னுஷ்டான கிரியைகளைமுடித்துபோசனஞ் செய்துகைகால்சுத்திசெ
ய்துகொண்டுகந்தபுஷ்பபரிமளாதிகளையணிந்து தாம்பூலந்தரித்துச்சொ
ண்டுதிவ்வியவஸ்திராபரணங்களை யலங்கரித்துக்கொண்டு தர்மராசாவுந்
தாமுமாக ஆஸ்தான மண்டபத்துக்குவந்துகிருஷ்ணபகவான்நவரத்ந கசி
தமானபொற்பீடத்தின்பேரில் உட்கார்ந்தருளினார் தர்மபுத்திரருந்தங்கம
யமானஒருசிங்காதனத்தில்உட்கார்ந்தார் அர்ச்சுனன்-நகுலன் சகா தேவ
ன்சாத்தகிகிருதவர்மன்சஞ்சயன்விதுரன்கிருபாசாரியார்முதலானவர்க
ளும்மந்திரிசாமந்திரிமுதலியசகலமான பேர்களும் வந்து தர்மபுத்திரரு
க்கும் ஸ்ரீகிருஷ்ணமூர்த்திக்கும் நமஸ்காரம்பண்ணிஅவ்வவர்கள்ஸ்தான
த்தில்உட்கார்ந்தார்கள்.

### வீமசேனன்அஸ்வமேதக்குதிரைகொண்டு<br>வரவிடைபெற்றுயேகுதல்.

வீமசேனனும்விஸ்வகேதுவும் மேகவர்ணனும் போஜனம் செய்
து யுத்தசன்னத்தராய்வந்து தர்மபுத்திரருக்கும் கிருஷ்ணமூர்த்திக்கு
ம்நமஸ்காரம்பண்ணிஓய்கிருஷ்ணாஜநார்த்தனா- எங்களுக்குச்செலவுகொ
டும் நாங்கள்குதிரையைக் கொண்டுவரப்போகிறோம் இராத்திரிதானே
தேவரீர் ஆலோசனைபண்ணிஏற்பாடுசெய்தீர்களே மறுபடியும்அதற்கு
ஆலோசனையென்ன இருக்கின்றது நாங்கள்பத்திராவதிபட்டணத்திற்கு
ப்போய்வருகிறோம்தேவரீர் இங்கேதர்மபுத்திரரையும்மற்றுமுண்டான
பேர்களையும் பார்த்துக்கொள்ளும் அங்கேஎங்களுக்கு ஜெயம்பொருந்
தத்தக்கதாக அனுக்கிரகம்பண்ணி ரட்சியுமென்றுசொல்லி கிருஷ்ணப
கவானிடத்தில்விடைபெற்றுக்கொண்டுதாயாராகிய குந்திதேவியாரிடத்
திற்குப்போய் நமஸ்காரஞ்செய்து ஓய் அம்மாநாங்கள் கிருஷ்ணபகவா
னுடைய அனுமதியினால் எவ்வனாசுவன்பட்டணத்திற்குப் போய்குதி
ரைகொண்டுவரப்போகிறோம் எங்களுக்கு ஜெயமுண்டாகத்தக்கதாக
ஆசீர்வாதம்பண்ணுமென்றுசொல்ல அதுகேட்டு குந்திதேவியாருஞ்சந்
தோஷகரமாய்(விஜயபவா வென்று) ஆசீர்வாதஞ்செய்து அனுப்பிவை

ஊதாள் பிற்பாடு வீமசேனன் துரௌபதையண்டைக்குப்போய் எங்க
ளுக்குச்செலவுகொடுநாங்கள்குதிரையைக்கொண்டுவரப்போகிறோமெ
ன்றுசொல்லஅப்படியே அந்தபதிவிரதாசிரோமணியும்போய்வாருங்க
ளென்றுவிடைகொடுத்தனுப்பினாள் அவிடம்விட்டு வீமசேனன்விஷ்வ
கேதுமேகவர்ணன்இவர்கள் மூன்றுபேரும் அர்ச்சுனன்நகுலன்சகாதே
வர்களிடத்திலும் மற்றுமுள்ள பெரியோர்கள் சிறியோர்களிடத்திலுஞ்
சொல்லி செலவுபெற்றுக்கொண்டு அஸ்தினாபுரத்தைவிட்டுப் புறப்ப
ட்டு சிங்காரவனங்கள் பூஞ்சோலைகள் கழிகள் ஆறுகள்மடுவுகள் இதுக
ளைத்தாண்டி காடுகள்மேடுகள் வனங்கள் வனாந்தரங்கள் பர்வதங்கள் கு
ன்றுகள் கடந்துபோய் அப்புறம் பத்திராவதி பட்டணத்திற்குச்சமீப
மாகவந்து திவ்வியபரிமளம்வீசத்தக்கதாகவெண்சாமரைசெந்தாமரை
கள்முதலிய புஷ்பங்கள்புஷ்பித்து ஆமைமுதலைமச்சங்கள் முதலான
சகலஜலஜெந்துக்களும்சஞ்சரிக்கும்படிசமுத்திரம்போலவிஸ்தீரணமா
கவிளங்கப்பட்ட ஒருதடாகத்தைக்கண்டு அதனிடத்திற்போய் தங்கள்
தாகத்தைத்தீர்த்துக்கொண்டு அப்புறம் அந்ததடாகதீரத்திலிருந்துபத்
திராவதிபட்டணத்தைப்பார்த்துவீமசேனன்விஸ்வகேதுவுடனேசொல்
லுகிறான். ஓய்குழந்தாய் விஸ்வகேதா கண்டாயோ இந்தப்பட்டணத்தி
ல்சிவாலயம்பிரம்மாலயமுதலிய கூடகோபுரங்களும்மாடமாளிகைகளு
ம்தங்கமயமாகவிளங்குகின்றது எந்நேரமும் வெகுசம்பிரமமாக பதி
னெட்டுமேளவாத்தியங்களுமுழங்குகின்றது இந்தப்பட்டணத்திலுள்ள
ஜெனங்களெல்லோரும் விஷ்ணுபத்தர்களும்சத்தியசந்தனர்களுமாயிரு
க்கின்றார்கள் இதுவுமல்லாமல் இந்தப்பட்டணத்தை யாளுகின்ற எவ்வ
னாசுவமஹாராஜனும் பத்துஅக்குரோணிசேனைகளும் மந்திரிசாமந்தி
ரிகளும் பிள்ளைகள்பேரன்மார் அண்ணன் தம்பிமார்களும் புடைசூழத்
தக்கதாகச் சுகமாயிருந்து ராச்சியபரிபாலனம் பண்ணிக்கொண்டுவரு
கிறான்நாம் இவிடத்திலிருக்கிற அஸ்வமேதக்குதிரையை எப்படி காண
ப்போகிறோமென்றுசொல்லி அந்தத் தடாகத்தின் விசித்திரங்களை மு
ழுதும்நன்றாகப்பார்த்து அங்கேகாலடிகளைக் கண்டுபிடித்து பின்னுஞ்
சொல்லுகிறான் ஓய்விஷ்வகேதா மேகவர்ணா இதோகண்டீர்களோஇந்த
த்தடாகக்கரையைச் சுற்றிலும் சேனைகளுடைய அடிகளும் ஆனைகுதி
ரைகளுடைய அடிகளுமாக விருக்கின்றது இந்தப்பட்டணத்திற்கு வே
றேதுரவுகிணறுகளில்லையோ இந்தக்குளத்தினுடைய ஜலத்தைத்தானே
சகலசனங்களுங் கொண்டுபோகிறார்கள் அதோகுதிரைகள்வந்து தண்
ணீர்குடித்துப்போனகாலடிகளைப்பார்த்தீர்களோ ஆகையினால் இந்தப்
பட்டணத்து ஜனங்களுக்கும் ஆனைகுதிரைகளுக்கும் இந்தத்தண்ணீரை
யல்லாமல் வேறேதண்ணீரில்லை நாம் இவடத்தில்தானே ஒளித்துக்கொ
ண்டிருந்தால் நாம்நினைத்துவந்த குதிரையும் இந்ததடாகத்தில் தண்ணீ
ர்குடிக்கவரும் அப்பொழுது அதன்பிறகேவந்த ஜனங்களைக்கண்டது
ண்டஞ்செய்து குதிரையைக் கொண்டுபோவோமென்று ஆலோசனை

செய்தார்சொண்டு அங்கே ஒருபர்வதத்தின்பேரில் மூன்றுபேரும் ஒருகுகையிலே ஒளித்துக்கொண்டிருந்தார்கள்.

அப்பொழுதுபத்திராவதி பட்டணத்திலிருந்துஅநேக ஆனைகூட்டங்கள் கும்பல்கும்பல்களாய்வந்து அந்தக்குளத்தில்விழுந்து ஜலக்கிரீடைபண்ணிதண்ணீர்குடித்துப் பட்டணத்துக்குப்போய் விட்டதுகள் பிற்பாடு அநேகமாயிரங்குதிரைகளும் பசுக்களும்வந்து தண்ணீர்குடித்துப்போய் விட்டதுகள் அதுகண்டு வீமசேனனைப்பார்த்து விஷ்வகேதுசொல்லுகிறான் ஒய்ஐயா வீமசேனா இந்தப் பட்டணத்திலிருந்து வேறேஅநேக ஆனைகள் குதிரைகள் பசுக்கள்முதலானதுகளும்வந்து தண்ணீர்குடித்துப் போகின்றதுகளல்லாமல் நாம் நாடிவந்த குதிரைமாத்திரம்வரக்காணோம் ஆகையினால் அவர்கள் அந்தக்குதிரையை அனுப்பாமல் அவ்விடத்தில்தானே கட்டிவைத்து கவளந்தண்ணீர் புல்முதலானதுகளும் கொடுப்பிக்கிறதாகத் தோன்றுகின்றதென்று சொல்லும்பொழுது அந்தக்கோட்டை வாசலைவிட்டு அஸ்வமேதக் குதிரையானது வெண்சாமரைகள் வெள்ளைக்குடைகள் பிடித்துவரத்தக்கதாகவும் ஈட்டிக்காரர் கத்திக்காரர் குதிரைக்காரர் ரதக்காரர்கள் பின்னும் அநேக வீராதிவீரர்களாகியசேவகர்களுடனேவெளிப்பட்டுவருகிறதைக் கண்டு விஷ்வகேது சந்தோஷப்பட்டு ஒய் ஐயாவீமசேனா இதோநாம் நினைத்துவந்த குதிரைவருகிறதுஇனிஎன்னுடைய சாமர்த்தியத்தைப் பாரும்தேவரீர் இந்தமலையின்பேரிலிரும் நான்அந்த அஸ்வத்தைக்கொண்டு வருகிறேனென்றுசொல்ல அதுகேட்டுவீமசேனன்சந்தோஷப்பட்டு ஒய் அப்பா விஷ்வகேதா நீசற்றுநேரம் பொறுத்திருவென்று கையமைத்து மேகவர்ணனைப்பார்த்து ஒய்மேகவர்ணா நீஉன்தகப்பனாகிய கடோர்க்கசனைப்பார்க்கிலும் அதிகமான ராட்சஸமாயையறிந்தமகாசாமர்த்தியனாச்சுதே எதோபார்ப்போம்அந்தக்குதிரையைக் கொண்டுவாவென்றுசொல்ல அதுகேட்டு மேகவர்ணனும் மகா சந்தோஷஉச்சாகத்துடனேஎழுந்திருந்து ஐயாபாட்டாஇன்றைக்குஎன்னுடையவல்லமையைப்பாரும் ஒருவரையு மதிக்காமல்குதிரையைக்கொண்டுவருகிறேன் நீங்கள் இங்கேதானே இருங்கோளென்று சொல்லிவிட்டு தன்தகப்பன் கடோர்க்கஜன்சொன்ன சாம்பரியென்கிற ராட்சஸமந்திரத்தை ஜெபம்பண்ணினன் அப்பொழுது அந்தமந்திரசத்தியினலே காருடமேகங்களுண்டாகி எங்கேபார்த்தாலும் கன்னங்கறேலென்று இருட்டிக்கொண்டது அந்தச் சமையத்தில் மேகவர்ணனும் ஆகாசமார்க்கத்திலெழும்பி குடுகுடுவென்றுசிங்கநாதத்தை அட்டகாசம்பண்ணி சொக்கரித்தான் அந்தச்சத்தத்தினலே திரிலோகத்திலுள்ளவர்களும் பயந்தார்கள்அப்போது தேவேந்திரன் திகிலடைந்து தேவகுருவாகிய பிரகஸ்பதியைஅழைப்பித்துஆலோசனைசெய்து இரண்டுதூதனை யழைப்பித்து ஒய்தூதரேநீங்கள்போய் இந்தசங்கதிகளையெல்லாம் விசாரித்துக்கொண்டு வாருங்களென்றுசொல்லியனுப்ப,அவர்களும்வந்து மேகவர்

# அஸ்வமேதபர்வம்.

னைக்கண்டுஓய் வீராதிவீரா நீயார்உன்பெயரென்ன இப்படிப் பட்ட
உற்பாதகாரியங்களை ஏன்செய்கிறாய் எங்களையெல்லாம் ஏன்வாதைப்
படுத்துகிறாய் உன்னுடைய ஆரவாரத்தை எங்கள்ராசாவாகிய தேவே
ந்திரன்கேட்டு விசாரித்துவச்சொன்னார் நீர்இப்படிசெய்ய வேண்டா
மென்றுசொல்ல அதுகேட்டு அந்த தூதர்களைப்பார்த்து மேகவர்ண
ன்சொல்லுகிறான்.

ஓய்தூதர்களே நான்லோகங்களை வாதைபடுத்தவில்லை பூலோகத்
தில் தர்மராசாவானவர் அஸ்வமேதயாகஞ்செய்யவேண்டி ஸ்ரீகிருஷ்ண
பகவானுடைய அனுமதியினால் எவ்வர்ணசுவன் வசத்திலிருக்கிற குதி
ரையைக்கொண்டுபோகும்படி வந்திருக்கிறதே யல்லாமல் உலகத்திலு
ள்ளவர்களைவருத்துகிறதற்குவரவில்லை யென்றுசொன்னான், அதுகேட்டு
தேவதூதர்களும்தேவேந்திரனிடத்திற்குவந்து நமஸ்காரஞ் செய்து
அஞ்சலியஸ்தராய்நின்றுகொண்டு அந்தச்சேதியைச்சொன்னார்கள், அ
துகேட்டுதேவேந்திரனும் சந்தோஷகரமாய் நமக்குச்சகாயமாய் நாம்
செய்யப்போகிற காரியம் அவனேசெய்தால்நமக்குநன்மைதானே அ
ப்படியேஆகட்டுமென்று சொல்லிதூதர்களையனுப்பிவிட்டு தேவேந்
திரனானவன் தர்ம்மராசாயாகம்பண்ணுகிறத்தைக்குறித்து சந்தோஷப்
பட்டுக்கொண்டிருந்தான், இவிடத்தில்மேகவர்ணனும் தனதுராட்சஸ
மாய்கைகளை வந்தசேனைகள்பேரில் நிறைத்து அவர்கள்கண்ணுக்கு ஒ
ன்றுந்தோன்றவொட்டாமற்செய்து பூமியிலிரங்கி அந்தக் குதிரையை
மாத்திரம் அவதானலீலைபார்கத்தூக்கி இடையனானவன் ஆட்டுக்குட்டி
யைத் தோளின்பேரில்பொட்டுக்கொண்டதுபோல தோளின் பேரில்
போட்டுக்கொண்டு ஆகாசவீதியில்சரேலென்றெழும்பினான், அப்போ
து அங்கிருந்தசேவர்களெல்லாரும் திகிலடைந்து குதிரையைக்காணாமை
ல் ஆகாசத்தில்பார்த்து ராட்சதனைக்கண்டு அந்தசேவர்கள் ஓடிவந்து
பட்டணத்துப்புகுந்து எவ்வர்ணசுவ மகாராசனிடத்தில் முறையிட்டு
ஐயாராசேந்திரா நாங்கள் அஸ்வமேதக்குதிரையைத் தண்ணீற்குடிப்பி
க்கும்படிபட்டணத்திற்கு வெளியேகொண்டுபோகும் போது ஆரோ
ஒருராட்சதன்மாய்கையாய் வந்துஎங்களுக்குத் தெரியாமல்குதிரையை
த்தூக்கித்தோளின்பேரில்போட்டுக்கொண்டு ஆகாசமார்க்கமாயெழும்
பிப்போனானென்றுசொல்ல, அதுகேட்டு எவ்வர்ணசுவ மஹாராசனும்
வெகு கோபங்கொண்டு ஓய்சேவர்களே நீங்கள்ஒருநாளுமில்லாத விந்
தையானவார்த்தைஇன்றைக்குச்சொன்னீர்கள், ஆ-ஆ-ஆச்சரியகரமாயி
ருக்கின்றது ராட்சதனாவது நம்முடையகுதிரையைப்பிடிக்கிறதாவது
அப்படிப்பட்டகாரியம் இன்றைக்குநடந்ததல்லவா, நல்லது ஆகட்டு
மென்றுசொல்லி எவ்வர்ணசுவன் தன்னிடத்திலிருக்கிற (கந்தர்வராசாக்
களில்) நாலாயிரம்ரதக்காரரை அழைப்பித்துநீங்கள்போய் அந்தராட்
சதனைக்கொன்று குதிரையைக்கொண்டுவாருங்களென்றுளென்று செ
வுகொடுத்தனுப்பினான்;

அப்படியே நல்லதென்று அவர்களும் யுத்தசன்னத்தராய் மகா
ரோஷத்துடன்புறப்பட்டுவந்து ஆகாசத்திலிருக்கிற மேகவர்ணனைக்க
ண்டுதங்கள் தங்கள் ரதங்களை ஆகாசத்தில்நிறுத்தி பிரசண்டமாகியவில்
லுகளை யெடுத்துகுணத்தொனிசெய்துசகலலோகங்களுஞ் செவிடுபட
த்தக்கதாக மேகவர்ணன்பேரில்அநேகமாயிரம்பாணங்களைப்பிரயோ
கஞ்செய்தார்கள் அதுகண்டு மேகவர்ணனுங்கலீலென்று நகைத்துஅ
ணுவளவாகிலுஞ் சஞ்சலிப்படாமல் மஹாஉக்கிராகாரத்துடனேபு
ஜத்தின் பேரிலிருக்கிறகுதிரையிடதுபக்கத்திலிடுக்கிக்கொண்டு வலது
கையினால் ஒருமலையைப்பிடுங்கிக்கொண்டு அந்தமலையினால்அவர்கள்வி
ட்டபாணங்களையும் ஆயுதங்களையுந் தடுத்துமுறித்துவிட்டு சக்கிராகார
மாய்த்திரிந்துகொண்டு அவர்களுடையரதகஜதுரகபதாதிகளை யெல்லா
ம்பொடிபொடியாகச் சின்னாபின்னப் படுத்தி ஒருட்சணப்பொழுதி
ல்அந்தநாலாயிரம்ரதகாரரையுஞ்சுவர்க்கத்திற்கனுப்பிவிட்டுஜெயம்ஜெ
யமென்று சிங்கநாதஞ் செய்தான்அந்தசேதியை எவ்வனாசுவன்கேள்
விப்பட்டு மஹாகோபங்கொண்டுமறுபடியும்ஆயிரம்ஆனைகளையும்மூ
வாயிரம் ரதங்களையும்பதினாயிரங்குதிரைகளையும்பத்துலட்சங்காலாள்க
ளையுங்கூட்டியனுப்பிவித்தான்,

அவர்களும்வந்து மேகவர்ணனைச்சூழ்ந்து கொண்டார்கள்அதுக
ண்டுமேகவர்ணனும் நகைத்து அந்தஅஸ்வத்தைக்கொண்டுவந்துமலை
யின்பேரிலிருக்கிறவீமசேனன்கையில்ஒப்புவித்துபிறகு ஒருமரத்தை
ப்பிடுங்கிக்கொண்டு அந்தசேனைகளையெல்லாங்கண்ட துண்டங்களாக்கி
ஒருத்தரையாகிலுந் தப்பிப்பிழைத்துபோகவொட்டாமல்துவம்சப்படுத்
திவிட்டான்அதிலுந் தப்பிப்பிழைத்துப்போனசிலசேவகர்கள் ஓடிப்
போய்எவ்வனாசுவனுடைய பாதத்தில் விழுந்துஐய்சுவாமி எங்களால்
அந்தராட்சதனைஎவ்வளவும் செயிக்கமுடியாதென்று முறையிட அதை
கேட்டு அவ்வனாசுவனும் கோபமிகுந்து தன்னுடையசேனைகளையெல்
லாம் புறப்படச்சொல்லி தானும்யுத்தசன்னத்தனாய் தம்பிமார்பிள்ளை
கள்மந்திரி சாமந்திரிகள் மகுடவர்த்தனர்கள் முதலானசதுரங்கசேனை
களுடனேபுறப்பட்டுபட்டணத்திற்குவெளியேவந்துரணபேரிகையா
றைவித்து தன்னுடையசேனைகளையெல்லாம்மேகவர்ணன்பேரில்ஏவி
னன்-அவர்கள் மேகவர்ணனைச் சுற்றிக்கொண்டு அநேக அஸ்திரங்க
ளையும் ஆயுதங்களையும் எய்தார்கள் அதுகளுக்கு மேகவர்ணன் சகி
யாமல் எதிர்த்துப் போருடுகிறபோது வீமசேனனைப்பார்த்து விஷ்
வகேது சொல்லுகிறான் ஓஐயா,நீங்கள் இங்கேதானே குதிரையைக்கா
த்துக்கொண்டிருங்கள்-மேகவர்ணன் இளைப்படைந் திருக்கிறான் நா
ன்போய் வருகிறேனென்று செலவுபெற்றுக் கொண்டுவந்து தன்கை
யிலிருந்தவில்லை குணத்தொனி செய்துதான்வந்த சேதிமேகவர்ண
னுக்குத் தெரியப்படுத்தி தனது வில்லினிடமாக மகாதீட்சண்யமான

# அஸ்வமேதபர்வம்.

பாணங்களைத்தொடுத்து பிரயோகஞ்செய்து அந்தராசன் அனுப்பின
சேனைகளையெல்லாம் கால்வேறு கைவேறு தலைவேறாகக் கண்டித்துவ
யிற்றைப்பீறிரத்தவெள்ளம் பெருகும்படி செய்துகழுகு கூளிகளுக்
குவிருந்தாக்கிவைத்தான் அதில்சிலசேனைகள் தப்பியோடிப் போய்விட்ட
து,மேகவர்ணனும் மலையின் மேலேறி குதிரையைப்பிடித்துக் கொ
ண்டுபோய் குகையிலொளித்துவைத்துக்கொண்டு இனிமேல் திருநேத்
திரதாரியாகிய (பரமசிவன்)வந்தாலும்குதிரையை விடவேண்டியதில்
லையென்று சொல்லியிருந்தான் இங்கேதன்னுடைய சேனைகளை யெல்
லாம்முறிந்துபோனதுகண்டுஎவ்வனாசுவன்பின்னும்அனேகஞ்சேனை
களைஏவினான் அவர்களும்யுத்தமுகத்தில் நெருங்கிமகாவேகத்துடனே
எதிர்த்துநின்றார்கள் அதுகண்டுவீமசேனன்சிந்தாக்கிராந்தனாய்சிறுபிள்
ளைபேரில்எத்தனைதளவம்வந்தெதிர்த்த தென்றுதனதுகதா யுதத்தைக்
கையிலெடுத்துக்கொண்டு பூமியில்குதித்துஓடிவருகிறபோது அதுகண்
டுவிஷ்வகேதுசிறியதகப்பனுக்குதெண்டனிட்டு ஐயாநான்இந்தசேனை
யாகிறஸ்திரீயின்பேரில்அபேக்ஷித்தேன் ஆகையால்நானே யனுபவிக்க
வேண்டும்உங்களுக்கு மரியாதையல்லமருமகளைமாமனார் தீண்டுவாரோ
ஐயாவென்று சொல்ல அதுகேட்டு வீமசேனனும்ஓய்விஸ்வகேதாபுரு
ஷனுக்கு அடங்காதஸ்திரீயைமாமனார்தெண்டிக்கவேண்டாமோ வென்
றான்,அதற்குவிஸ்வகேதுவும் ஐயா-புருஷன்கையில் ஸ்திரீ அடங்காமற்
போனால் பிறகுமாமனார் விசாரிக்கவேண்டும்-ஆதலால் நீங்கள்மலையின்
மேலில்தானே யிருந்துவேடிக்கைபார்த்துக்கொண்டிருங்கள்இந்த அற்
பமானசேனைகளைக்குறித்துநீங்கள்வரவேண்டுமோவென்று சொல்லிய
னுப்பிவிட்டு பிற்பாடு வில்லைக்குணத்தொனிசெய்து அந்தவில்லினிட
மாகதிவ்யபாணங்களைத்தொடுத்துபிரயோகம்பண்ணிஅந்த சேனைகளை
யெல்லாங்கொன்றுரத்தப்பிரவாகமுண்டாக்கி ஆ-ஆவென்றுசிங்கநாதஞ்
செய்துவில்லைப்பூமியிலூன்றிக்கொண்டுபார்க்கப்பயங்கரமாக விருந்
தான்அப்பொழுது அவ்வனாசுவனானவன்தனதுசேனைவெள்ளங்கள் ம
டிந்துகிடப்பதையும்விஷ்வகேதுவையும்பார்த்துஆச்சரியப்பட்டுசொ
ல்லுகிறான்-ஓய்மந்திரிமார்களேகேட்டீர்களோ நான்அன்னூறுவருஷமா
ய்ராச்சியபரிபாலனம்பண்ணினேன்-இதுவரையில் இப்படிப்பட்டசே
வகனை எவ்விடத்திலுங்கண்டதில்லை,இந்தராசகுமாரனைக்கண்ணாலேபா
ர்க்கப்பயங்கரமாயிருக்கின்றது. வில்வித்தையோவென்றால், இவன்கற்
றதேவில்வித்தைஇவன்மகாவீராதிவீரன்அதோபார்த்தீர்களா இந்தமலை
யின்பேரில் ஒருதிவ்வியபுருஷன் பெரியவில்லையூன்றிக்கொண்டு நமது
பட்டணத்தையும்-நமதுசேனாசமுத்திரங்களையும்-ஒருமசகமாத்திரமா
கநினைந்து வேடிக்கைப்பார்த்துக்கொண்டிருக்கிறான் ஆகையினால்என்
னஅனர்த்தகாலம்வருகிறதோ தெரியவராது இதைஆலோசிக்குமிடத்து
மும்மூர்த்திகளும் ஒருமுகமாகக்கூடிநம்முடையபேரில் துஜமெடுத்து
வந்தவர்களாகவேணும் இல்லாவிட்டால்பூலோகத்திலுள்ளவர்களில் எம்

படிப்பட்டவர்களானாலும் நமது பட்டணத்தைக் கண்டெடுத்துப் பார்க்கமாட்டார்கள்-நல்லது ஆகட்டுமென்று சொல்லி தன்சேனைகளை யெல்லாம் ஒரிடமாகக் கூட்டி விஷ்வகேதுவின் பேரிலேவினான்- அவர்களும் மகாக்ரோஷத்துடனே அவ்வவர்கள் கையிலிருக்கிற ஆயுதங்களையும் பாணங்களையும் பிரயோகம் பண்ணி கொக்கரித்து நின்றார்கள்-அதுகண்டு விஷ்வகேதுவும் நகைத்து தன்னுடைய வில்லிலே ஒரு திட்சண்யமான பாணத்தைத் தொடுத்து அந்த சேனைகளையெல்லாஞ் சிந்துசிந்தாக்கி எங்கேபார்த்தாலும் பிணமலைகளும் மாம்சக்குப்பைகளும் எலும்புராசிகளும் ரத்தமடுக்களுமாகச் செய்தான், அதுகண்டு தேவர்களெல்லாஞ் சபாசென்று மெச்சினார்கள்-வீமசேனனும் ஆனந்தப்ரவசனாகினான்-அப்பொழுது எவ்வர்ணசுவனும் சிந்தாக்கிரந்தனாய் ஆலோசித்து நாம்பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே இவன் எவ்வளவு சேனைகளைக் கண்டித்துவிட்டான்-இவனுடைய மகிமைதான் என்னமோ தெரியாது ஆகையினால் இவனது ஊரையும் பேரையுந் தெரிந்து பிற்பாடு சண்டைபண்ணுவோமென்று மனதில் நிச்சயம்பண்ணிக்கொண்டு தன்டிகைவிட்டிறங்கி ஒருபெரிய ஆனையின்மேலேறிக்கொண்டுவந்து விஷ்வகேதுவைப் பார்த்து ஓய்ராசகுமாரகா-உன்னைப்பார்த்தால் எனக்குச் சண்டைசெய்கிறதற்கு மனமில்லை நீசிறுபிள்ளையாயிருக்கிறாய் நீயாருடைய குமாரகன் உன்பெயரென்ன உன்ஊரென்ன நீங்களேன் என்குதிரையைபிடித்தீர்கள் அந்தமலையின்பேரிலிருக்கின்றவன் யாவன்-இதுகளையெல்லாம் எனக்கு நன்றாய்த் தெரியச் சொல்லும் பிற்பாடு யுத்தம்பண்ணுவோமென்று எவ்வர்ணசுவன் கேட்க விஷ்வகேது சொல்லுகிறான்,

ஓய்ராசனே- எங்களுடைய குலங்கோத்திரங் கேட்கிறீரோ ஆனால் சொல்லுகிறேன் கேள் நான்முப்பத்துமுக்கோடி தேவர்களுக்கும் அதிபதியாகிய தேவேந்திரனுக்குக் கவசகுண்டலத்தைக் கொடுத்து கீர்த்திப்பெற்ற மஹாதானபரனாகிய கர்ணமஹாராசனுடைய புத்திரன் என்பெயர் விஷ்வகேதுவென்று சொல்லுவார்கள், தர்மசொரூபியாகிய தர்மராசாவானவர் அஸ்வமேதயாகம்பண்ணுகிற நிமித்தம் ஸ்ரீகிருஷ்ணதேவருடனே ஆலோசனைசெய்து அவருடைய அனுமதியின்பேரில் உன்வசத்திருக்கிற அஸ்வமேதக்குதிரையைக் கொண்டுவரும்படி எங்களை அனுப்பிவைத்தார் ஆகையால் நான் இவிடத்தில் வந்தேன் அதோமலையின்பேரிலிருக்கிறவனைப்பார்த்தாயோ-அவனைத் தர்மபுத்திரனுடைய தம்பியாகிய வீமசேனனென்றறிந்துகொள் அதுவுமல்லாமல் உன்குதிரையைத் தூக்கிக்கொண்டுபோனவன் வீமசேனன் பேரனாகிய மேகவர்ணனென்றறிந்துகொள் ஆதலால் என்பெயரையுஞ் சொன்னேனல்லவோ இன்னமும் என்னுடையவார்த்தையைக் கேளும் அதேதென்னவென்றால் அகிலாண்டகோடி பிரம்மாண்டநாயகராகிய ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியினுடைய பரிபூரணகடாட்சத்தினாலும் அவரது சகாயத்தினாலும் நான் சண்டைசெய்கிறன் நான் தெய்வசகாயமுள்ளவன்- நீமனுஷசகாயமுள்ளவன்- இன்னமுஞ்சு

உன்னுடைய சேனைகளும் - அண்ணன் - தம்பி - மாமன் - மைத்துனன் - உற்றார் - பெறறோர் - பிள்ளைகள் - பேரமார் - மந்திரி பிரதானிகள் - முதலிய சகலரையுங் கொன்று உன் கெர்வத்தையுமடக்கி - உன் பத்திராவதிப்பட்டணத்தையுங் கொள்ளைகொண்டு போகிறமென்றுசொல்ல, அந்தவசனத்தை எவ்வர்ணசுவனுங் கேட்டு கோபிக்காமல் குலங்கோத்திரத்துக்காக சந்தோஷப்பட்டு விஷ்வகேதுவைப்பார்த்து ஓய் விஷ்வகேதா, நல்லது நீ அப்படியே செய்வாய் இப்பொழுது நீ பூமியில் நின்றுகொண்டிருக்கிறாய் நான் ஆனையின்பேரி லிருக்கிறேன் இப்படி இருக்கிற உன்னுடனே யெதிர்ப்பது என்னைப்போன்ற ராஜாக்களுக்கு நியாயமல்லவே ஆனபடியினாலே உனக்கு வேண்டிய சகலஆயுதங்களும் நிறைந்திருப்பதாகவும் நல்லகுதிரைகளைக்கட்டியிருப்பதாகவும் விளங்குகின்ற ஒருரதத்தைச்சாரதியுடனே அழைப்பித்துக்கொடுக்கிறேன் நீ அதன்மேலேறிக்கொண்டு பிரமுகனாயிருந்து கொடியயுத்தஞ்செய்வாயென்று சொல்ல, அதை கேட்டு விஷ்வகேதுவும் ஐயா, எவ்வர்ணசுவபூபாலகா என்னை உம்மிடத்தில் ரதம்வாங்கி அதன்பேர் லேறிக்கொண்டு யுத்தம்பண்ணச் சொன்னீரல்லவா அப்படி நான் செய்யமாட்டேன் தேவேந்திரனுக்கே கவசகுண்டலத்தைத்தானமாகக்கொடுத்து கீர்த்திபெற்ற மஹாதியாகியினுடைய புத்திரனாகிய நானே உம்மிடத்தில் ரதம்வாங்கியேறுகிறவன் அது கூடாது நீர் தேரின்பேரில் தானேயிருந்து யுத்தம்பண்ணும் உம்முடையவல்லபத்தைப் பார்ப்போமென்று சொன்னான்.

அதுகேட்டு எவ்வர்ணசுவனும் நீ போசிறுபிள்ளை நானேபெரியவன் ஆகையினாலே நான் உன்பேரில் முந்தபாணந் தொடுக்கிறதில்லை யென்றுசொல்லி ஆனையைவிட்டிறங்கி ரதத்தின்பேரி லேறிக்கொண்டு வில்லைக்குணத்தொனிபண்ணி சிங்கநாதஞ்செய்து அட்டகாசம் பண்ணினான் அதுகண்டு விஷ்வகேதுவும் சிரித்து என்சிறுபிள்ளைத் தன்மையைச் சற்றுநேரத்தில் காண்பிக்கிறேன் பாருமென்று சொல்லிபாதசாரியாய் வில்லைக்குணத்தொனிபண்ணி சிங்கநாதஞ்செய்து - துவேஷத்துடனே காலாக்கினிருத்திரனைப்போல கண்களில் நெருப்புப்பொறிபறக்கவும் மீசைபடபடவென்று துடிக்கவும், பற்களைநெறநெறவென்று கடித்து தன்னுடையவில்லினிடமாக அதிகதீக்ஷண்யமான அஸ்திரங்களைத்தொடுத்து எவ்வர்ணசுவனுடையமார் பிளக்கும்படியாகப்பிரயோகஞ்செய்தான் அதுகண்டு - எவ்வர்ணசுவனுங் கோபதீப்தனாய்மிஞ்சிவிட்டதென்று சீக்கிரமாகத் தன்னுடையவில்லிலே அதிகதீக்ஷண்யமாயிருக்கிற சர்ப்பம்போ லிருக்கப்பட்ட எழுபதுபாணங்களைத் தொடுத்துப்பிரயோகஞ் செய்தான்.

அதுகள் ஒன்றேடொன்றுஉராய்ந்து விஷங்களைக்சுழீல்சுழீலென்று கக்கிக்கொண்டு நெருப்புப்பொறிகள்பறக்க அதிகவேகமாய்வருகிறபோது விஷ்வகேதுவும் அதிசீக்கிரமாய் தன்னுடையவில்லிலே அனேகமாயிரம்பாணங்களைத்தொடுத்துவிட்டு எவ்வர்ணசுவன்விட்டபாணங்

களையெல்லாம்பொடிப்பொடியாகச் செய்து அவன்கையிலிருந்தவில்லை
யுங்கண்டித்து அவன்மேற்கட்டிக்குடைகளையும் கொடிகளையும்விழு
ம்படியறுத்து அவனுடைதேரின்பேரிலும் அனேகபாணங்களை நிர
ப்பினான்- அப்போது அவனுடையசேனைகளெல்லாம் நடுநடுங்கி இனி
மேநம்டராஜாவுக்குமுடிவுகாலம்வந்துசம்பவித்ததென்று ஒருவர்க்கொ
ருவர்பேசிக்கொண்டார்கள்-அந்தச்சமயத்தில் எவ்வனாசுவன்எவ்வளவு
ம்பயங்கொள்ளாமல்மறொருவில்லையெடுத்து அக்கினியாஸ்திரத்தைத்
தொடுத்துப்பிரயோகஞ்செய்தான்,

அந்தஅஸ்திரமானது நெருப்புப்பொறிகள்பறக்கும்படி காளகூ
டவிஷத்துக்குச்சமானமாய்இரைச்சலிட்டுக்கொண்டு விஷ்வகேதுவிட்
டபாணங்களையெல்லாங்கண்டித்துவருகிறதைக்கண்டுவிஷ்வ கேதுவும்
பயப்படாமல்நின்றுதன்னுடையவில்லிலே ஒருவருணாஸ்திரத்தைத்தொ
டுத்துவிட அந்தவருணாஸ்திரம்வந்து அக்கினியாஸ்திரத்துடன்போராடி
விழுந்துபோய்விட்டது அதுகண்டு விஷ்வகேதுவும் தன்னுடையவில்
லிலேஅதிசீக்கிரமாகமறுபடியும்ஒருவாய் வாஸ்திரத்தைத் தொடுத்துப்
பிரயோகஞ்செய்தான்-அதிலுண்டானபெருங்காற்றினால் எவ்வனாசுவ
னுடைய சேனைகளெல்லாம்-மின்மினிப்பூச்சிகள்போல சிதறிப்போய்
விட்டதுகள் - அப்பொழுது எவ்வனாசுவன்பயப்படாமல்தன்னுடை
யவில்லைக்குணத்தொனி ண்ணிஇறுக்கிப்பிடித்துப்பர்வதாஸ்திர மென்
கிறஒருபாணத்தைத்தொடுத்துப்பிரயோகஞ்செய்தான்- அதில்அநேக
மாயிரம்எண்ணிக்கையில்லாதபர்வதங்கள் குன்றுகள் பிறந்துஅந்தப்
பெருங்காற்றைத்தணித்துவிட்டது- அதுகண்டுவிஷ்வகேது வும்கோ
பாக்கினிருத்திரனாய்எரிந்துவிழுந்துதேவேந்திரனுடையவச்ராயுதத்தி
லும் கொடுமையுள்ளஒரு அஸ்திரத்தைத் தொடுத்துப் பிரயோகஞ்
செய்தான்,

அதில்அளவிறந்த வச்ராயுதங்கள்பிறந்து கிறுகிறுவென்று சுழன்
றுவந்து அந்தபர்வதங்களையும் குன்றுகளையும் தூளாக்கிவிட்டது-அது
கண்டுஎவ்வனாசுவனும் மகாகோபதீப்தனாய்தன்னுடையவில்லிலேஅ
நேகமாயிரந்திவ்யபாணங்களைத்தொடுத்துப்பிரயோகம் பண்ணினான்-
அதுகள்வந்துவிஷ்வகேதுவினுடையசரீரமெல்லாம்ரத்தப் பிரவாகமா
கும்படிதைக்கிறபோது அதனால்விஷ்வகேதுவும் மிகவும் நொந்துஆ
யாசத்துடனே பூமியில்சாய்ந்து விழுந்துமூர்ச்சையடைந்தான் அதுக
ண்டுஎவ்வனாசுவனுடையசேனைகளெல்லாஞ்சந்தோஷித்துடனே சிங்க
நாதஞ்செய்துஅட்டகாசம்பண்ணினார்கள்.

அப்போதுமலையின்பேரிலிருந்தவீமசேனன்கண்டு அதிகோப
தீப்தனாய்கதாயுதத்துடனேமலையைவிட்டுக்குதித்துஆனைக்கூட்டங்களி
ன்மேல்பாய்கிறசிங்கத்தைப்போலஓடிவருகிறபோது எவ்வனாசுவன்கு
மாரனானசுவேகனென்கிறவன்எதிர்த்துகுறுக்கேவிழுந்து தடுத்துவீம
சேனனுடனே போராடிக்கொண்டிருந்தான்-அப்போதுவிஷ்வகேதுவு

ய்மூர்ச்சைதெளிந்துயெழுந்திருந்துகண்ணைவிழித்துப்பார்த்து குகை
யில்படுத்துக்கொண்டிருக்கிறபுலியின்பேரில்ஒருகல்லைப் போட்டால்
அதெப்படிசீறிஎழுந்திருக்குமோ அப்படிகோப தீப்தனாய்காளகூட
விஷம்போலபகபகவென்றெறிந்துவிழுந்துதன்னுடைய வில்லிலேஅ
நேகமானபாணங்களைத்தொடுத்துப்பிரயோகஞ்செய்து எவ்வனாசு
வனுடைய கைவில்லைக்கண்டித்து அவனதுரததசாரதியைக்கொன்றுவி
ட்டெட்டுக்குதிரைகளையுங்கண்டதுண்டமாக்கி ரதத்தையுஞ் சக்கைசக்கை
யாய்ப்பேர்த்தெறிந்து அவனுடையநெற்றியையுமுடைத்தான்அதனா
லெவ்வனாசுவன் மிகவும்நொந்துரத்தங்கக்கிக்கொண்டு கண்கள்சுழல
வாயை ஆவென்று திறந்துகொண்டு பூவுங்காய்களுநிறைந்திருக்கிறஒரி
ளவாழைமரமானது காற்றினாலடிபட்டுவிழுந்தால்எப்படி சாய்ந்துவிழு
மோஅப்படிபோலரதத்தினுடையகுத்துக்காலின்பேரில்சாய்ந்துவிழு
ந்துமரணத்துக்குச்சரியானமூர்ச்சையடைந்தான்.

அதுகண்டு விஷ்வகேதுவும்எவ்வனாசுவன்இறந்துபோனானோஎ
ன்னமோபார்ப்போமென்றுஓடிவந்துஎவ்வனாசுவனைப்பார்த்துதத்த
ளித்துதலையண்டையில்உட்கார்ந்துதன்வஸ்திரத்தொங்கலினால் அவனு
டையமுகத்தைத்துடைத்துசற்றுநேரம்விசிறிபிறகு விசாரத்துடனே
சொல்லுகிறான் ஐயோநானறியாமல்பாணங்களைவிட்டு இந்தராஜனைக்
கொன்றுவிட்டேன் என்பேரில்நிந்தைவந்ததே ஓய்துவாரகாபுரிவாசா
ஓய்கிருஷ்ணமூர்த்தி ஓய்பக்தர்களைரக்ஷிக்கிற சுவாமி இந்தராசனைப் பி
ழைக்கப்பாரும் நீர்பக்தஜனங்களை ரக்ஷிக்கிறது உண்மையானால் இப்
போதுஎன்முறையைக்கேட்டு இந்தராசனைப் பிழைக்கப்பாரும் ஓய்
சக்கிரதாராஓய்கெஜேந்திரரட்சகாஓய்தேவாதி தேவாஓய்சுவாமிஎன்று
தோத்திரஞ்செய்கிற விஷ்வ கேதுவினுடைய அஸ்தினாபுரத்திலிருக்
கிறஸ்ரீகிருஷ்ணபகவான்கேட்டு விஷ்வகேது நினைத்தபடியே எவ்வனா
சுவன் பிழைக்கக்கடவதென்றுதிருவுளஞ்செய்தருளினார். அதனால் அந்
தஎவ்வனாசுவனும்பிழைத்துகண்ணைவிழித்துப்பார்த்து நித்திரைசெ
ய்தவன் விழித்தெழுந்ததுபோலஅவனும்எழுந்திருந்துஉட்கார்ந்தான்
அதுகண்டுவிஷ்வகேதுவும்-ஓய்ஐயா, ராஜேந்திராசுகமா யிருக்கிறதோ
சரீரம்மெத்தவும் நொந்ததோ-உமது ஆயாசந் தீர்ந்ததோவென்றுகே
ட்க அவனும் ஆயாசமொன்றுமில்லை சுகமாயிருக்கிறதென்று சொல்ல
அதுகேட்டுவிஷ்வகேதுவும் நீர்தேரைவிட்டிழிந்து அப்புரத்தில் நின்
றுகொண்டு வில்லைக்குணத்தொனிசெய்துசண்டைபண்ண வாருமென்
றழைக்க எவ்வனாசுவனுஞ்சிரித்து தலையையசைத்து ஆ! ஆ! இதேது
இந்தராஜகுமாரனைப்போலெங்குங்கண்டதில்லை பகையாளியுடன்போ
ராடுகிறபோது தன்கையாயுதத்தினால் விழுந்துவிட்டால் அவனைக்கொ
ன்றுஜெயம் பெறுகிறதேயல்லாமல் மறுபடியும்அவனுக்குபசாரஞ்
செய்துபிழைப்பிக்கிறவர்களுமுண்டோவென்று தனக்குத்தானேயோ
சனைசெய்துதேரைவிட்டிறங்கிவந்து விஷ்வகேதுவைக் கட்டியணைத்து

க்கொண்டுஐயா, ராஜகுமாரா உன்னைப்போன்ற சற்புத்திரனை நானெங்
குங்கண்டதில்லை இனிஉனக்குமெனக்குஞ் சண்டைவேண்டியதில்லை நா
னும்எனதுநாம்நகரமும் உங்களுடைய ஆதீனம் இனிசுகமாய் தர்மரா
ஜாவை அஸ்வமேதயாகம் பண்ணச்சொல்லும்உன்கையிலிருக்கிறபாண
ங்களை அம்புராத்தூணியில்வையும்வில்லைத்தளர்த்துமென்று வெகுவாய்ச
மாதான வார்த்தைகள்சொல்ல அதுகேட்டுவிஷ்வகேதுவும்ஐயா, ராசே
ந்திரர் சமாதானப்படுவது என்னிச்சையல்ல என்சிறியதகப்பனாகியவீ
மசேனன்அந்தமலையின்மேலிருக்கிறார் அவரண்டைக்குப்போகலாம்
வாருமென்றுசொல்லி எவ்வனாசுவனை அழைத்துக்கொண்டுபோய் வீ
மசேனன்முன்னேவிட்டு ஐயா,இந்தராஜாவானவர் சமாதானமாய் நம
துஅடிமையாய் வருகிறேனென்று சொல்லிச்சொல்லிவேண்டிக்கொள்
ளுகிறார் தேவரீர் தயவுசெய்யு மென்றுசொல்ல அதற்கு வீமசேனனும்
அதுகூடாது எனக்கு எஜமானாகியதர்மராஜாவிருக்கின்றார் அவரிடத்தி
ற்சொல்லவேண்டு மென்றுசொல்ல அதுகேட்டுஎவ்வனாசுவனும் வீ
மசேனனுக்குப் பிரியவசனஞ்சொல்லி தழுவிக்கொண்டு தர்மராஜாவுக்
குப்பதினாயிரம்ஆனைகளும்லட்சங்குதிரைகளும் வெகுமதிபண்ணினே
ன்றுகிருஷ்ணபகவானுக்கும் பதினாயிரந்தெண்டனிட்டேனென்று இர
க்கமாகச்சொல்ல அதுகேட்டு வீமசேனனுக்குக் கிருபைவந்து சரணம
டைந்தவர்களைக் காக்கிறதே தர்மமென்றுசொல்லி சமாதானமாய்ஒருவ
ருக்கொருவர் தழுவிக்கொண்டு சந்தோஷப்பட்டார்கள்-அப்போதுமே
கவர்ணனும் அஸ்வமேதக்குதிரையுடனேவெளிப்பட்டு வீமசேனனிட
த்தில்வந்துசேர்ந்தான்.

அவனையும் எவ்வனாசுவன் தழுவிக்கொண்டுஇந்த மூன்றுபேரை
யும் ஆனையின்மேரி லேற்றிக்கொண்டு இறந்தவர்கள்போக மற்றசே
னைகளுடனும் பந்துவர்க்கங்கள் குமாரவர்க்கங்கள் மந்திரி பிரதானி
களுடனும் நடந்துபோய் பத்திராவதி பட்டணத்துட் புகுந்து அங்
குள்ளஸ்திரீஜனங்கள் அட்சதைகளிறைக்கவும் முத்தாலாத்திபவளாலாத்
திமுதலான அநேகஆலாத்திகளெடுக்கவும் மகாவைபவத்துடனேபோ
ய்எவ்வனாசுவபூபாலனும்ஆனந்தசமுத்திரத்தில் முழுகினவனாய்சேனை
களையெல்லாம்வெளியேநிறுத்தி விட்டுவீமசேனன் விஸ்வகேதுமேகவ
ர்ணன்இவர்கள் மூன்றுபேருக்கும்தனதுபட்டதேவியாகியபிரபாவதி
கையினால் ஆலாத்திஎடுப்பிவித்துஅந்தப்புரத்துக்குள் அழைத்துக்கொ
ண்டுபோய் அவர்களை ஸ்நானம்பண்ணி போசனசாலையிற்புகுந்துசகல
சம்பிரமத்துடன் போஜனஞ்செய்து கைகால்சுத்திபண்ணிக்கொண்டு ஆ
ஸ்தானமண்டபத்திற்குவந்துசகலராஜாக்களுடனுங் கொலுவாய்தன்னு
டைய(நவரத்ந)பீடத்திலேவீமசேனனை உட்காரவைத்துக்கொண்டுமற்
றஇரண்டுபேருக்கும்வேறே நவரத்நபீடம்போடுவித்துச்சங்கீதமேள
ம்நாகசுரமுதலான மேளவாத்தியக்காரரையும்,ஊர்வசிரம்பைதிலோத்
தமைக்குச்சரியானநாடகப் பெண்களையும்அழைப்பித்துஅந்தமூன்று

பெருக்கும் பொழுதுபோக்கிவைக்கும்படி திட்டஞ்செய்துஎவ்வனாசு
வமஹாராஜனும் தனது சேனாதிபதியாகிய சும்வதனென்கின்றவனை அழை
த்துச்சொல்லுகிறான்.

ஓய்சும்வதா, நாளையதினம் தர்மராசாவானவர்செய்கிற அஸ்வமேத
யாகத்திற்குநாமெல்லோரும் போகவேண்டும் ஆதலால்நமது சேனைக
ளையும்பட்டணத்துஜனங்களெல்லோரையும்சீக்கிரமாய்ப்பிரயாணப்ப
டுத்துஅதுவுமல்லாமல் தர்மநந்தனருக்கு காணிக்கையாகக் கொண்டு
போகிற வஸ்துக்களையு முஸ்திதுபண்ணென்றுகட்டளையிட்டபிற்பாடு
தன்னுடைய ஸ்திரீகள் பிள்ளைகள்சகலமானவர்களுக்கும்உத்தரவுசெய்
துபிரயாணப்படச்சொன்னான்அப்படியேஅவர்களெல்லோரும்பிரயா
ணப்பட்டார்கள்சுவேதனும்எவ்வனாசுவனுடைய உத்தாரப்படி இந்த
சேதி சகலமானபேர்களுக்குந் தெரியும்படி பறையறைவித்து தன்னு
டையவளவுக்குப்போய்தன்பெண்சாதி பிள்ளைகளுக்கும்பிரயாணசேதி
யைச்சொல்லிவிட்டுதன்மாதாவாகிய துன்மார்க்கியென்றவளண்டைக்கு
ப்போய்தெண்டனிட்டுஓய் அம்மாதாயே, எவ்வனாசுவமஹாராஜாவான
வர்சகலசேனைகளுடனேபிரயாணப்பட்டுதர்மராசாசெய்கிறயாகத்தை
ப்பார்க்கப்போகிறார்நாமும்போய்க் கண்குளிரப்பார்த்து ஸ்ரீகிருஷ்ண
பகவானையுஞ்சேவித்துநாம்செய்தபாவங்கள்போகத்தக்கதாகக் கங்கை
முதலியபுண்ணியதீர்த்தங்களிலும்ஸ்நானஞ்செய்துசுகமாய்வரலாம் வா
ருந்தாயேயென்றுஅழைக்கஅதுகேட்டுஅந்ததுன்மார்க்கியும்தன்குமா
ரனாகியசுவேதனைப்பார்த்துஅடாபயலேநீஎன்னசொன்னாய்என்னசொ
ன்னாய்தர்மராஜாயாகம்பண்ணுகிறான்எவ்வனாசுவன்போகிறான்நானும்
போகிறேன்நீயும்வாவென்றுஎன்னை அழைக்கிறாயல்லவா அடாபிள்ளா
ய் நீ ஒருபயித்தியகாரன் அந்தஎவ்வனாசுவனும் ஒருபயித்தியகாரன்
யாகஞ்செய்கிற தர்மராஜாவோ உங்களிலும் பெரியபயித்தியக்காரன்
அஃதெப்படியென்று கேட்பாயாகில் அந்ததர்மராஜா இதுபரியந்தம்
வனவாசஞ்செய்து அலைச்சல்பட்டு முடிவிலேதுரியோதனாதிகளைச்செ
யித்து முந்தாநாளல்லவோ பட்டங்கட்டிக்கொண்டான் இனியாகிலும்
பெண்சாதிபிள்ளைகளுடனே சுகமாய்வேளைக்குச் சாப்பிட்டுக்கொண்டு
மூலைவீட்டில் சும்மாயிராமல்பயித்தியம்பிடித்து விருதாவாகயாகஞ்செ
ய்கிறதென்று பார்ப்பார்பேச்சைக்கேட்டுவீணாக திரவியத்தையெல்லா
ஞ்செலவழித்துவிடுகிறான்ஐயையோ, தர்மராஜாவையிதுவரையில்மெ
த்தபுத்தியுள்ளவனென் றெண்ணியிருந்தேன் இதனால் அவன்புத்திதெ
ரியவந்தது இந்தப்பயித்தியங்கொண்டு பணத்தையெல்லாஞ் செலவி
டுகிறானல்லவோ ஆனாலவன்பிழைக்கமாட்டான்அந்தகிருஷ்ணனைப்பார்
த்தாகிலும்பிழைக்கவேண்டாமோ அந்தகிருஷ்ணன் அனேகம்பணத்
தைச்சம்பாதித்துபெண்சாதிக்குஉடைமையிட்டு ஒருத்தருக்கும்ஒருகாசு
கொடாமல்ஒருயாகமும்பண்ணாமல் பிச்சையிடாமல்திரவியத்தையெல்
லாம்பத்திரப்படுத்திவிட்டு ஒருநாளாகிலும்வீட்டில்சாப்பிடாமல்ஊரூ

னாய்த்திரித்து வயிறு வளர்த்துக்கொண்டு காலங்கழிக்கிறான் பார்த்தாயோ
அவனே யெனக்குப் பிரியமானவன் அவனை மெச்சினேன் அவனைப் பார்த்
தாகிலும் தர்மராஜா பிழையாமல் விருதாவாகக் கெட்டுப் போகிறான் ஆன
லுமாகட்டும் நான் வருகிறதில்லை அந்தப் பயித்தியக்காரன் செய்கிற யாகத்
தை நான் பார்க்கலாகாது என்னைத் தண்ணீரில் விழுந்து சாகச்சொன்னா
யோ, எனக்கு வரக்கூடாது அப்படியல்லவென்று நான் வந்துவிட்டால்
இங்கே வீட்டில் மருமக்கள்மார் மிஞ்சினவர்கள் பணங்காசுகளை அபாரியா
கச் செலவு பண்ணிவிடுவார்கள். ஆகையால் அப்படிச் செய்யவொட்டாம
ல் தண்டிப்பதை விட்டும் பிள்ளைகளையும் பெண்களையும் வேளைக்குவேளை
சோறு தின்னவொட்டாமல் அதட்டி அரைவயிறுங் கால்வயிறுமாய் ஒரு
வேளை சோறு தின்னச் சொல்லிக் கட்டுப்பண்ணுகிறதை விட்டும் பிட்சைக்கார
ரை ஊர்வழி தெருவழி வரவொட்டாமல் காலொடியும்படி அடிக்கிறதை
விட்டும் அண்டை அசலுடனுலக்கைத்தடியையெடுத்துக்கொண்டு ச
ண்டைக்குப் போகிறதை விட்டும் என் புருஷனை நித்தநித்தங் கண்டனை த
ண்டனை பண்ணுகிறதை விட்டும் உன் பிறகே வரச் சொல்லுகிறாயோ, நல்ல
வேலை செய்தாய் பிள்ளாய் நான் வந்துவிட்டால் என் வீடெல்லாஞ் சொள்
ளையாய்ப் போம் அப்போதே என் ஜீவனம் போம் நான் வருகிறதில்லை நீ
வேணுமானால் பயித்தியம் பிடித்துப் போகிறாயென்று சொல்லியனுப்ப
அவனுஞ் சிரித்துக்கொண்டு வந்து அவள் சொன்ன வசனங்களெல்லாம் எவ்
வர்ணசுவனிடத்திலும் வீமசேனன் முதலானவர்களிடத்திலுஞ் சொன்னா
ன், அதுகேட்டு அவர்களெல்லோருங் கலீலென்று நகைத்து இப்படிக்
கொத்தவள் தர்மராஜா ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி இவர்களிடத்தில் வந்திருந்தா
ல் பொழுதும் பாக்கிக்கொண்டிருப்பாள் ஆகையினால் அவளையுங் கூட
வே அழைத்துக்கொண்டு வாவென்று வீமசேனன் சொல்ல சுவேதனும்
ஐயா, நான் என்னால் கூடியமட்டுஞ் சொல்லிப்பார்த்தேன் அவள் வருகிற
தில்லையென்று சொன்னான். அதுகேட்டு எவ்வர்ணசுவனும் அப்படியானா
ல் அவளைக் கையுங் காலுங் கட்டி டோலியில் போட்டுக்கொண்டு வாவென்
றான், அதுகேட்டு சுவேதனும் அப்படியே தாயாரிடத்திற் போயழைக்க
அவள் வரமாட்டேனென்று சொல்ல, அவளைப் பலவத்காரமாய்ப் பிடித்து
க் காலுங் கையுங் கட்டி எடுத்துக்கொண்டுவந்து டோலியில் போட்டுக்கொ
ண்டு அவள் கூகாவென்று கூச்சலிடும்படி கொண்டுவந்து எவ்வர்ணசுவ
ன் முன்னே நிறுத்தினான், அதுகண்டு எவ்வர்ணசுவனுஞ் சிரித்து சகலஜன
ங்களையும் பிரயாணப்படுத்தி தானும் ரதகெஜதுரகபதாதிகளும் ஸ்திரீஜனங்
களும் வீமசேனன் விஷ்வகேதுமேகவர்ணனும் தன்குமாரனான சுவேத
னும் தளபதியான சுவேதனும் புடைசூழத் தக்கதாக அஸ்வமேதக்குதிரை
யைக் கூட்டிக்கொண்டு பிரயாணப்பட்டு பதினெட்டு மேள வாத்தியங்க
ளு முழங்கும்படியாகப் பத்திராவதிபட்டணத்தை விட்டுப் புறப்பட்டு
வெளிக்கூடாரம் போட்டு சேனைகளையெல்லாங் கும்பலாகக் கூட்டிப்பிர

யாணைப்படுத்தி அஸ்திநாபுரத்திற்குச்சமீபமாகவந்துஎவ்வர்ணசுவனும்
வீமசேனமகாராசாவினுடைய அனுமதியின்பேரில்தன்சேனைகளையெ
ல்லாம்அங்கேஒருசிங்காரவனத்தில்இறங்கும்படிசெய்தான்அப்பொழு
துவீமசேனனும்தான்முன்னாகநடந்துவந்துஅஸ்திநாபுரத்திற்புகுந்து
தர்மராசாவைக்கண்டுநமஸ்காரம்பண்ணினான்அவரும்தம்பியையெடுத்
துமார்போடணைத்துக்கொண்டுஆசிர்வாதம்பண்ணினார் அப்போதுவீ
மசேனனும்தான்போய்வந்தசகலசேதிகளையெல்லாஞ் சொல்லிஎவ்வர்
ணசுவமஹாராஜனும்அஸ்வமேதக்குதிரையுடனே தண்டுவிட்டு நம்மு
டையவூருக்குச்சமீபத்தில்வந்திறங்கியிருக்கிறான்-நான் முன்னுதாகவந்
தேனென்றுசொல்லிவிட்டுஅந்தப்புரத்திற்குப்போய் குந்தாதேவிக்கு
நமஸ்காரஞ்செய்து அந்தஅம்மாளுடனேசகலசேதிகளையுஞ்சொல்லிவி
ட்டுபிற்பாடுஸ்ரீகிருஷ்ணதேவர்எங்கிருக்கிறாரென்றுவிசாரித்து உப்பரி
கையின்பேரிலிருக்கிறதாகக்கேள்விப்பட்டுஅவரிடத்திற்போய்நமஸ்கா
ரஞ்செய்யஅவரும்வீமசேனனையெடுத்துமார்புடனேதழுவிக் கொண்
டுஓய்வீமசேனா நீஅசுவமேதக்குதிரையைக்கொண்டுவந்தாயோ வென்
றுகேட்கஅதற்குவாய்வுகுமாரனாகியவீமசேனன் சொல்லுகிறான்,

ஐயா-கிருஷ்ணமூர்த்திஉம்முடைய அனுக்கிரகத்தி னாலேநானும்
விஷ்வகேதுவும்மேகவர்ணனும்பத்திராவதிபட்டணத்திற்குப்போய்கு
திரையைப்பிடித்துக்கொண்டுஎவ்வர்ணசுவனிடத்தில் சண்டை சமாதா
னஞ்செய்துஅந்தராசனையும்உடன்படுத்திகுதிரையுடனே யழைத்துக்
கொண்டுவந்தோம்அந்தா அவர்களும்வருகிறார்கள்நான் உங்களுக்குச்
சேதிசொல்லும்படிமுன்பாகவந்தேனென்று சொல்லி அவருக்குச்சந்
தோஷமுண்டாக்கிவிட்டுஅங்கிருந்து திரௌபதையினிடத்திற்குவந்து
அவளுடனேயுஞ்சொல்லிவிட்டு அர்ச்சுனன்-நகுலன் சகாதேவன் - முத
லானவர்களுக்குந்தெரிவித்துவிட்டுபிற்பாடு போசனசாலைக்குப்போய்
சகலசம்பிரமத்துடன்போசனம்பண்ணிகைகால்சுத்திசெய்துக்கொண்
டுமறுபடியும்தன்தமையனாராகியதர்மராசாவினோடும் ஸ்ரீகிருஷ்ணபக
வானோடும்ஆலோசனைசெய்துநாமனைவரும்எதிர்கொண்டுபோய்எவ்வர்
ணசுவமகாராசனை அழைத்துவரவேண்டுமென்றுவீமசேனன் சொல்ல
அதுகேட்டுதர்மபுத்திரரும்ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியாருடைய அனுமதியி
ன்பேரில்மந்திரிபிரதானிகளுடனேதம்பிமார்களும்புடைசூழத்தக்கதா
கபுறப்பட்டுவருகிறபோதுஎவ்வர்ணசுவனும்சேர்ந்துவந்துதனக்கெதி
ராகவந்ததர்மனந்தனருக்குதான்கொண்டுவந்தகாணிக்கைகளைவைத்து
ச்சாஷ்டாங்கமாகநமஸ்காரம்பண்ணினான்-அதுகண்டுதர்மபுத்திரரும்ச
ந்தோஷகரமாய்எவ்வர்ணசுவனையெடுத்துமார்போடே தழுவிக்கொண்
டுஓய்ராஜேந்திரா-உன்னுடையசிநேகத்தைவிரும்பியே வீமசேனனை
யனுப்பிக்குதிரையைப்பிடிக்கும்படி சொன்னேம் இனிமேல் நாம்செ
ய்கிறயாகமானதுஒருவிக்கினமும்வராமல்நிறைவேறுமென்று சொல்ல

அதற்குளெவ்வர்ணசுவனும்ஜயா-தர்மனந்தன உங்களுடைய தரிசனமு
ம்கிடைகமும்வேண்டி. அடியேனும் இவ்விடம்வந்தேனென்று சொல்
லிபிற்பாடுதேவாதிதேவனான க்ருஷ்ணமூர்த்தியைக்கண்டு நமஸ்கார
ஞ்செய்தான்-அவரும்எவ்வர்ணசுவனையெடுத்து மார்போ டணைத்துக்
கொண்டுஆசீர்வாதஞ்செய்தருளினர்.

பிற்பாடெவ்வர்ணசுவனை-அர்ச்சுனனையும்-நகுலனையும்- சகாதேவ
னையுந்தழுவிக்கொண்டுஒருவர்க்கொருவர்சந்தோஷவார்த்தைகளைப்பே
சிக்கொண்டு-சகலஜனங்களுடனேயும் அஸ்த்தினபுரத்திலிருந்தான்-தர்ம
ராசாவும்அந்தஅஸ்வமேதக்குதிரையைத்தன்னரண்மனையிற்கட்டிவைத்
து சகலராசகூட்டங்களுடனேயும் நவரத்நமண்டபத்தில் கொலுவாயிரு
ந்தார்-பின்புஎவ்வர்ணசுவன்பெண்சாதியாகியபிரபாவதியானவள் குந்தி
தேவிக்குந்துரௌபதைக்கும்நமஸ்காரஞ் செய்து அவர்கள் ஆதரணை
செய்ய அந்தப்புரத்திலேயிருந்தாள் - மற்றசேனைகளும் அவர்களுக்
குவிட்ட விடுதியிலிறங்கியிருந்தார்கள் அந்தச்சமயத்தில் க்ருஷ்ணமூ
ர்த்தியானவர் தர்மராசாவைப்பார்த்துஓய்தர்மநந்தனசித்திரா பர்வதத்தி
லல்லவோநாம்குதிரைவிடப்போகிறதுஅப்பொழுது துவாரகைக்குப்
போகிறேனென்றுதர்மநந்தனரிடத்திலும் வீமன்- அர்ச்சுனன்- நகுல
ன் - சகாதேவன் - இவர்களிடத்திலும்- குந்திதேவி - சுபமித்திரை து
ரௌபதை - இவர்களிடத்திலும் செலவு பெற்றுக்கொண்டு சாத்தகி-
கிருதவர்ம்மன் - இவர்களோடும் ஒருதிவ்ய ரதத்திலேறிக் கொண்டும
ஹா சந்தோஷத்துடனே துவாரகைக்குளெழுந்தருளினர் - பின்புதர்ம
ராஜாவானவர்இரண்டுமாதவரைக்கும் மஹாவைபவத்துடனேராச்யபரி
பாலனம் பண்ணிக்கொண்டிருக்குங்காலத்தில்தர்மராசா கொலுமண்ட
பத்திலிருக்கிறவேளையில்அவரிடத்திற்குமறுபடியும்வேதவியாசர் எழு
ந்தருளிவந்தார், அதுகேட்டுதர்ம புத்திரரும்கொலுவைவிட் டெழுந்தி
ருந்து எதிர்கொண்டுபோய் சாஷ்டாங்கநமஸ்காரஞ்செய்து அந்தமுனி
சிகாமணியைஅழைத்துவந்துஒருபொற்பீடத்தின்பேரில் எழுந்தருள
ச்செய்துசந்தபுஷ்ப அக்ஷதைகளால் பூசைசெய்துயோக க்ஷேமங்களை
யொருவர்க்கொருவர்வினவின பின்புதர்மராஜாவானவர் அந்தமுனிநா
தனைப்பார்த்துஓய்வியாசமுனீந்திராதேவரீர் கட்டளையிட்டபடி யேஅ
ஸ்வமேதக்குதிரையையழைப்பித்தேன்இமோர்ப்பர்வதத்தண்டையிலி
ருக்கிறதிரவியத்தையுமெடுப்பித்துக்கொள்ளுகிறேன்,

அதுஇருக்கட்டும்முன்புஅஸ்வமேதயாகத்தைமருத்துவமஹாரா
ஜாசெய்துமுடித்தாரென்று திருவுளம்பற்றியருளினீரோஅந்த மருத்து
வமஹாராஜாஎந்தவிதமாகஅந்தயாகத்தைநிறைவேற்றினர் அந்தவிவர
த்தைஅடியேனுக்குத்தெரியப்படுத்தவேண்டுமென்று விண்ணப்பஞ்
செய்யஅதற்குவியாசபகவான்திருவுளம்பற்றியருளுகின்றார்,

## வியாசபகவான் தர்மனந்தனருக்கு அஸ்வமேதயாகத்தின்முறைமைகூறல்,

ஓய் தர்மநந்தனா, அந்தமருத்துவமஹாராஜா யாகஞ்செய்து முடித்த விவரத்தைச் சொல்லுகிறோம் நீர் கேட்பீராக அஃதெப்படி யென்றால் பூர்வத்திலந்தமருத்துவமகாராஜன் ராச்சியபரிபாலனம் பண்ணிக்கொண்டிருக்கும்போது தான் சுவர்க்கபோகம் அனுபவிக்கவேண்டி அஸ்வமேதயாகம் செய்யும்படி நினைத்து தெய்வலோகத்திற்குப்போய் (பிரகஸ்பதிபகவானைக்கண்டு) நமஸ்காரஞ்செய்து அவரைத்தான் செய்கிறயாகத்திற்குப்புரோகிதராயிருக்கும்படி அழைக்க அவரும் அப்படியே வருகிறேனென்றுசம்மதித்துபின்பு தேவேந்திரனிடத்திற்குப்போய்ச்சொல்லுகேட்க அந்ததேவேந்திரனும் ஆலோசனைசெய்து அந்தயாகத்தை நீரிருந்து நிறைவேற்றிவைத்தால் அவன் நம்முடையபதவிக்குவருவான் ஆதலால் நீர்போகவேண்டாமென்றுசொல்லிவிட்டான் - ஆகையினால் பிரகஸ்பதிபகவானும் வரமாட்டோமென்றுசொன்னார் - அதுகேட்டு மருத்துவமஹாராசனுமிகுந்தவிசாரத்துடன் பூலோகத்திற்குவந்து துக்கித்துக்கொண்டிருக்கிறபோது அவரிடத்திற்கு நாரதர்வந்து சொல்லுகின்றார்-ஓய்மருத்துவமஹாராஜாவே! நீரேன்விசனப்படுகிறீர் (பிரகஸ்பதி) வாராமற்போனால் போகட்டும் அவர் தம்பியானசங்கவர்னர் யோகீஸ்வரராய்க்காசியிலிருக்கிறார் நீர் அவரிடத்திற்குப்போய் அவரை அழைத்துவந்து புரோகிதராக வைத்துக்கொண்டு யாகஞ்செய்யும் அவர் எத்தனை கோபித்துக்கொண்டாலும் நீர்பொறுத்திரும் என்சேதி உனக்குச்சொன்னவனொன்று கேட்டால் நாரதர்சொல்லிவிட்டு அக்கினியில்விழுந்தாரென்றுசொல்லும்போய்வாருமென்றுசொல்லி நாரதர்போய்விட்டார்.

அதுகேட்டுமருத்துவமகாராஜனும்அப்படியே காசிக்குப்போய் பேய்பிடித்தவனைப்போல்திரிந்துகொண்டிருக்கிற சங்கவர்ணரைக்கண்டு தெண்டனிட்டு எதிரேநிற்க அதுகண்டு அந்தசங்கவர்ணரும் ராஜாவின்பேரில் காறியுமிழ்ந்துவிட்டுப்பேய்நினைவாயோடிப்போனார், அதுகண்டு மருத்துவமகாராஜனும்பின்னிடாமல் தொடர்ந்துபோக அப்போது சங்கவர்ணரும் நீயாரென்றுகேட்க மருத்துவமகாராஜனும்அவரைப்பார்த்து ஓய்சுவாமி அடியேனும்அஸ்வமேதயாகஞ்செய்யவேண்டி சுவர்க்கபூமிக்குப்போய் பிரகஸ்பதியைப் புரோகிதராகஇருக்கும்படி அழைத்தேன் அவரும்தேவேந்திரன்பேச்சைக்கேட்டுக்கொண்டு வரமாட்டோமென்று சொல்லிவிட்டார், அதுகேட்டு பூலோகத்திற்குவந்து நான்விசாரப்பட்டுக்கொண்டிருக்கும்போது நாரதர்வந்து, தேவரீரை அழைத்துக்கொண்டுவந்து நிறைவேற்றும்படி சொல்லிவிட்டு அக்கினியில்விழுந்துவிட்டாரென்றும் நடந்தசவிஸ்தாரங்களைச்சொல்ல, அதுகேட்டுசங்கவர்ணருஞ்சிரித்து ஓய்மருத்துவமஹாராஜாவே, நீ அழைப்பித்தபடியே நான்வந்துஉன்கையினால் அந்தயாகத்தைச்செய்துமுடிக்கிறேன் நீ ஏன்று

க்கும்அஞ்சவேண்டாம் அப்படிசெய்யும்போது மத்தியில் பிரகஸ்பதி
வந்தால் அவனைவைத்துங்கொண்டுசெய்கிறதில்லையென்று நீஉறுதியாக
ச்சொல்வாயாகில் நானே அந்தயாகத்தைநிறைவேற்றிஉன்னைமோட்சாதி
க்யனுகச்செய்கிறேனென்றுசொல்ல, அதுகேட்டுமருத்துவமகாராஜனு
ம்அப்படியேநல்லதென்று சத்தியவசனமாகச்சொல்ல அதற்குசங்கவர்
ணரும் சம்மதப்பட்டுஅந்தராஜாவின் பின்னேவந்துயாகமுஸ்தீதுபண்
ணிவைத்து அந்தயாககுண்டத்தில் அக்கினியைவளர்க்கஅந்தஅக்கினியு
ம்இந்திரனிடத்தல் கட்டுப்பட்டிருந்தபடியினால்தணிந்துவிட்டது.அத
ற்குச்சங்கவர்ணருங் கோபங்கொண்டுஅக்கினியைச்சபிக்கும்படிநினைக்
கும்போதுஅதுகண்டு அக்கினிதேவருங் கிடுகிடுவென்று நடுங்கிப்பயந்
துவந்து அந்தயாககுண்டத்தில் பிரகாசமாயெரிந்தார்.

அப்போது சங்கவர்ணரும் மந்திரங்களைச் சொல்லி அந்தராஜன்
கையினால்யாகஞ்செய்விக்கும்போது அந்த ஓமப்புகையானது தெய்வ
லோகமட்டா யெழும்பியது அதுகண்டு தேவேந்திரன் ஆலோசித்துபி
ரகஸ்பதியை வைத்துக்கொண்டு யாகம்பண்ணச் சொல்லி ஒருதூதனுட
னேசொல்லி யனுப்பினான். அந்ததூதனும் வந்து சங்கவர்ணருடைய
கோபாக்கினிக்குப்பயந்து திரும்பிப்போய்தேவேந்திரனுடனேகூடா
தென்றுசொல்ல அதுகேட்டு தேவேந்திரன் கோபங்கொண்டுவச்சிரா
யுதத்தையெடுத்துவருகிறபோது அதுதெரிந்துசங்கவர்ணருஞ்சிரித்து
வச்சிராயுதத்தைப் பிரயோகஞ்செய்யாமலும்அவனைநடந்துவரவொட்
டாமலும் ஸ்தம்பித்துவிட்டார்-அதுகண்டு தேவேந்திரன்பயந்துகெர்
வமடங்கினவனாய்மெத்தவும்பரிதாபப்பட அப்போதுசங்கவர்ணருக்கு
த்தயவுவந்து எப்போதும்போ லிருக்கப்பண்ணி அந்த இந்திரன்முத
லான திக்குபலாகர்கள்கையினால் யாகத்துக்குவேண்டிய வஸ்துக்களை
டுத்து தரச்செல்லி சகலகம்பிரமத்துடனே மருத்துவமஹாராஜன்கை
யினால்யாகத்தைச்சாங்கமாய்நடப்பித்து இந்திரன்முதலானதேவர்களு
க்கெல்லாம்அந்தராஜன்கையினால் அவிர்ப்பாகங்களைக்கொடுப்பித்துசந்
தோஷம்பண்ணுவித்தான் அந்தமருத்துவமஹாராஜனும் சந்தோஷமா
ய் அந்தயாகத்தைநிறைவேற்றிவிட்டுசங்வர்ணருக்குக் கணக்கில்லாததி
ரவியத்தை தக்ஷிணையாகக்கொடுத்துஇன்னம் அநேகமாயிரம்பிராமண
ர்களுக்குந்திரவியத்தைப் பர்வதாகாரமாய்க்குவித்துதக்ஷிணையாகக்கொ
டுத்து கீர்த்திபெற்றான்- இந்தப்பிராமணர்களும்அவரவர்கள் சுமக்கத்த
குந்த திரவியத்தைஎடுத்துக்கொண்டுமிச்சமான திரவியத்தைஇமோர்
ப்பர்வதத்தண்டையில் கும்பலாகக்குவித்துவிட்டு இந்ததிரவியத்தைக்
கண்டபேர்கள் சுகமாய் எடுத்துக்கொள்ளக்கடவர்களென்று சொல்லிப்
போனார்கள்-ஆகையினால் ஓய்தர்மராஜாவே நீர்அந்ததிரவியத்தை யெ
டுத்துக்கொண்டு யாகம்பண்ணுமென்று சொன்னார்.

அதுகேட்டு தர்மநந்தனருஞ் சந்தோஷப்பட்டு ஐயா, முனிநாத
ரே பூலோகத்தில் பிர்மக்ஷத்திரிய வைசிய சூத்திரர்களாகிய இந்ததான்

குவீர்ணத்தாரும் அவரவர்கள் நடந்துகொள்ளவேண்டிய முறைமையைக்கிரமப்படிஅடியேனுக்குத்தெரியப்படுத்தவேண்டுமென்றுகேட்க அதற்கு வேதவியாசர்சொல்லுகிறார், ஓய்தர்மநந்தனே கேளும், பிராமணனுக்கிருக்கவேண்டியது ஸ்நானம்சந்தியாவந்தனம்ஜபதபவேதபாராயணம் ஹோமம்பொறுமைசத்தியம்இந்தநற்குணங்களையுடைத்தாயிருக்கின்றவனே பிராமணன்-அவன்அந்தத்தில் பிர்மலோகத்தை யடைவான்க்ஷத்திரியனுக்கிருக்கவேண்டியது துஷ்ட நிக்கிரகம்சிஷ்டபரிபாலனம்சத்தியம் பூததயாளம்சத்துருஜெயம்பிராமணசேவை இந்தநற்குணங்களையுடைத்தாயிருக்கின்றவனே உத்தமக்ஷத்திரியன் அவன் அந்தத்தில் புண்ணியலோகத்தையடைவான். வைசியனுக்கிருக்கவேண்டியது ஒருவஸ்துவைக்கொள்ளல் விற்றல் அதில்சமமானஆதாயம், வைத்துக்கொண்டுதராசுநிலையாக நிற்றல்இந்தநற்குணங்களை யுடைத்தாயிருக்கின்றவனேஉத்தமவைசியன் அவன்அந்தத்தில் இந்திரலோகத்தை யடைவான்சூத்திரனுக்கிருக்கவேண்டியது தனது நடைபிறழாமைபொய்சொல்லாமைபூததயாளம்பெரியோர்கள்பத்தி பிராமணசேவை இந்தநற்குணங்களை யுடைத்தாயிருக்கின்றவனேஉத்தசூத்திரன் அவனும்அந்தத்தில்புண்ணியலோகத்தை யடைவான்.

கேட்டீரோதர்மராஜாவே இதுகளுக்கெல்லாம் ஒருசூக்ஷமமான ரஹசியஞ்சொல்லுகிறோம் அஃதென்னவென்றால்- எந்தசாதியிற்பிறந்தவனானாலுஞ்சரியே அவனிடத்திற்பரஸ்திரி சமரமில்லாமையும், இரந்தவர்களுக்குஇல்லையென்னாமல்தன்னாலியன்றமாத்திரங்கொடுக்கிறஜீவகாருண்யமும், தேவதாபக்தியும்பிராமணவிசுவாசமும் பிதிர்க்கள்பக்தியும் வேதாகமசாஸ்திரங்களிடத்தில் நம்பிக்கையுமாகியஇந்தநற்குணங்கள்உண்டாயிருக்கவேண்டும் மேலும் ஜென்மவாரம்ஜென்மநக்ஷத்திரம் மாசப்பிரவேசம் ஏகாதசி அமாவாசை பௌர்ணமிஇதுமுதலான சுபதினங்களில்ஸ்திரீசையோகஞ்செய்யாமல்ஸ்ரீமந்நாராயண மூர்த்தியினிடத்தில்பாதி விசுவாசமாயிருந்தவன்எவனோ? அவன்சம்சயமில்லாமல் புண்ணியலோகத்தைச் சேருவானென்றுவேதவியாசர்திருவுளம்பற்றியருளி. தர்மராஜாவினிடத்திற் செலவுபெற்றுக்கொண்டு தம்முடைய ஆசிரமத்துக் கெழுந்தருளினர். அதன்பின்பு தர்மராஜாவும் ஏகாந்த ஸ்தானத்திலிருந்து ஆலோசனைசெய்து (சித்திராபர்வமும்) சமீபித்திருக்கிறதாகையால் இனி நாம்சும்மாயிராமல் யாகத்திற்கு வேண்டியமுஸ்தீது பண்ணவேண்டுமே இதுகளுக் கெல்லாம் கிஷ்ணபகவானிருக்க வேண்டும் அவனையல்லாமல் ஒருகாரியமும் நடவாதே யென்று நிச்சயித்துக்கொண்டு தம்பியாகிய வீமசேனனை யழைத்து ஓய் வீமசேனா நீ சீக்கிரமாய் ரதமேறிக்கொண்டு துவாரகாபுரிக்குப்போய் கிருஷ்ணமூர்த்தியைக்கண்டு சித்திராபர்வம் சமீபித்துவிட்டதென்று சொல்லி அவனையும் அவர் பெண்சாதிபிள்ளைகள் முதலான பட்டணத்தி லுள்ள சகலசனங்களையும் அழைத்துக்கொண்டு வாவென்று கட்டளையிட்டார்- அ

ப்படியே நல்லதென்று வீமசேனனும் ரதமேறிக்கொண்டு அதிகவே
கமாய் துவாரகைக்குப்போய் கிருஷ்ணபகவானுடைய அரண்மனைவாச
ற்படியில்தேரைவிட்டிறங்கி வாசல்காக்கிற சேவகர்களுடனே அஸ்தினாபு
ரத்திலிருந்து வீமசேனன்வந்திருக்கிறான் அவன் அரண்மனைக்கு வருகிற
தற்குச்சமயமாவென்று கேட்டுவரச்சொன்னானென்று அறியப்படுத்து
ங்கோளென்றுசொல்லி யனுப்ப அந்தசேவகர்களும் அப்படியே நல்ல
தென்று அரண்மனைக்குள்ளேபோக அங்கே அந்தப்புரத்தில்கிருஷ்ணப
கவானானவர் ஒருநவரத்நபீடத்தில்உட்கார்ந்துக்கொண்டு தங்கப்பள்ளய
த்தில்தேவகிதேவியார் இஷ்டான்னம்பரிமாற ருக்குமணிசத்தியபாமை
யிருவரும் மயில்விசிறிகொண்டு விசிறமஹாசந்தோஷத்துடனே தும்
பைமலர் போன்றசாதத்தில் தங்கக்கட்டிபோல் பருப்பைப்போட்டுக்
கொண்டுபுத்துருக்குநெய்விட்டுஐந்துவிரலாலும்பிசைந்து கையிலெடு
த்துசாப்பிடப்போகிறசமயத்திலேசேவகர்கள் வந்துதண்டனிட்டுஐயா,கி
ருஷ்ணமூர்த்திஉம்முடையமச்சினனாகியவீமசேனமஹாராசா அரண்மனை
வாசலிலேவந்துநிற்கிறார் அரண்மனைக்குள்ளே வருகிறதற்குச்சமயமா
வென்றுகேட்டுவரச்சொன்னாரென்றுசொல்ல அதுகேட்டுஅந்தபகவான்
சிரித்துஓய்சேவகர்களே அப்படியானால்வீமசேனனைச்சனுதியில்வரச்
சொல்லுங்கோளென்றுசொல்லி அனுப்பிவிட்டு தன்கையில் அள்ளின
அமுதைச் சாப்பிடாமல்அப்படியேபிடித்துக்கொண்டிருக்க அதில்அ
ந்த சேவகர்கள்சொன்னவார்த்தையைக்கேட்டு வீமசேனனும்அரண்ம
னைக்குள்ளே வருவதுகண்டு கிருஷ்ணமூர்த்தியும்நகைத்துவாவாவீமசே
னா நீயும்நல்லவேளைக்குவந்தாய் நீ மஹாஆயாசத்துடனே யிருக்கிறாய்
ஆதலால்நாமிருவரும் போஜனம்பண்ணுவோம்வாவென்றழைக்க அது
கேட்டுவீமசேனனும்நல்லதென்றுசமீபத்தில்வரவே அதற்கு ஸ்ரீ கிருஷ்ண
மூர்த்தியும் நகைத்து ஓய்வீமசேனா நான்விளையாட்டுக்காகச்சாப்பிடவா
வென்றுஅழைத்தால் நீ மெய்யென்றுவெட்கமில்லாமல்வந்துவிட்டாயே
அப்படிவரலாகுமா உலகத்தில்ஒருவன்சாப்பிடும்போது ஒருவன்வந்தால்
அவனைஉபசாரமாகச் சாப்பிடுவோம்வாருமென்றழைத்தால் அவன்நான்
சாப்பிட்டேன் நீர்சாப்பிடுமென்று சொல்லுவானேயல்லாமல் சாப்பிட
வரமாட்டான் அப்படியல்லவென்று உனக்கு இந்தச்சாதத்தைக் கொடுத்
தாலும்போதுமோ முன்னாலே ஏகசக்கிர மென்கிற அக்கிராரத்தில்
(பகாசுரனுக்கு)ஒருபண்டி நிறையவந்தசாதமும்கறிகளும்கொண்டுபோ
கச்சொல்லி உன்னையனுப்பினால் அதுகளையெல்லாம்புசித்து அதிலும்
உதராக்கினி யடங்காமல் யமுனாநதியிலிருந்த சலத்தையெல்லாங்குடித்
தும்போதாத உனக்கு இந்தப் பள்ளயச்சாதந்தான் போதுமோ வென்
றுகேட்க அதற்கு வீமசேனனும்சிரித்து ஐயா, கிருஷ்ணமூர்த்தியே நல்ல
வார்த்தை சொன்னீர்உம்முடைய தலையின்பேரில்-பூசினிக்காயளவுகுற்ற
த்தைவைத்துக்கொண்டு என்பேரில் குற்றஞ் சொல்லிமிரட்டுகிறீரோ நா
ன்சாப்பாட்டை தள்ளப்போகாதென்றுநினைத்துவந்தால் என்னை இப்ப

டிசொல்லலாமோ ஆனால் நான் சொல்லுகிறேன் கேளும் மூன்றுலோ
கேழுபதினாலுலோகங்களையும் சத்தசாகரங்களையும் வயிற்றிலடக்கிக்கொ
ண்டு அதுவும் போதாமல் இடைச்சிகள் வீட்டிலுள்ள தயிர்வெண்ணெ
ய்களைத் திருடியுண்டும் கோபாலர்களெல்லாம் இந்திரனுக்குப் பொங்
களிட்டால் அதைவேண்டாமென்று தடுத்துகோவர்த்தன கிரிக்குப்பொ
ங்கலிடுகிறதும்பால்பேர்வைத்து பொங்கலிடுவித்து அந்தசாதத்தையெ
ல்லாந்தின்றும் வயிறுநிறப்பிக்கொண்டவர்நீரல்லவோ,அப்படிப்பட்ட
உம்முடையவயிறுக்குமுன் என்வயிறு எம்மாத்திரங் கிருஷ்ணாவென்று
பரிகாசம்பண்ணினான். அதுகேட்டுஸ்ரீகிருஷ்ணமூர்த்தியும் நகைத்தருளி
னார் அங்கிருந்தருக்குமணிசத்யபாமை. முதலான ஸ்திரீஜனங்களெல்லோ
ரும்கலீலென்று நகைத்தார்கள்- அப்போது ஸ்ரீகிருஷ்ண பகவானும்வீ
மசேனனைவாவென்றழைத்துதம்முடனேகூடஉட்காரவைத்துக் கொண்
டு இரண்டுபேருமாக ஒருபள்ளயத்தில்சாப்பிட அப்போது தேவகிதே
வியாசர்சாதமுங்கறிளும் பால்மோர்நெய்களும்வேண்டிய மட்டுக்கும்ப
ரிமாற கிருஷ்ணமூர்த்தியும் வீமசேனனும் திருப்தியாகப் போஜனம்ப
ண்ணிகைசால்சுத்திசெய்துக்கொண்டுநவரத்தினகசிதமானமண்டபத்தில்
உட்கார்ந்தார்கள்,

அதிலேருக்குமணிதேவியாரும்நல்லசுகந்தமாகியசந்தனமும்
பனிநீரும்தாம்பூலமும் பரிமளத்திரவியமும் பாரிசாதபுஷ்பமுங்கொண்
டுவந்துவைக்க அதுகளைஇருவருஞ் சந்தோஷமாகத் தரித்துக்கொண்டு
ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியானவர் வீமசேனனைப்பார்த்து நீ வந்தகாரியமென்
னவென்றுகேட்க வீமசேனனும்ஜயா, நான்வந்தகாரியம் உமக்குத்தெரி
யாதோ ஆனாலுஞ்சொல்கிறேன்கேளும் -அஃதென்னவென்றால் தர்மரா
ஜாவானவர்யாகஞ்செய்கிறநாள்சமீபித்திருக்கின்றதென்று தங்களையும்தங்
கள்புத்திரமித்திரகளத்திராதிகளையும் பட்டணத்திலுள்ள சகலஜனங்களை
யும்அழைத்துக்கொண்டுவரச் சொன்னாரென்று சொல்லஅதுகேட்டுஸ்ரீகி
ருஷ்ணபகவானும் நல்லதென்றுசாத்தகியையும் கிருதவர்மனையும்அழை
ப்பித்துஓய்தம்பிமார்களே தர்மராஜாவானவர் நம்மையாகத்திர்க்கு அழை
த்துவரச்சொன்னாரென்று வீமசேனன் வந்திருக்கிறான் ஆதலால்,நீங்கள்
நமதுசேனைகளையும் துராதுலாகளையும் பிரத்தியுமன்னன் - அனிருத்திர
ன்- சாம்பன்-சாருகன் - சாருதக்ஷணன் தேதன்முதலான குமாரவர்க்கங்க
ளையும்யதுவிஷ்டிபோசனையும்அர்தகன்முதலான தாபாதிவர்க்கங்களையும்ளை
அவரவர்கள் ஸ்திரீகளையும் பிரயாணப் படுத்துங்கோ ளென்றுசொல்லி
தன்னுடையபட்ட புஸ்திரீகள் எட்டுப்பேரையும் பதினாயிரத்தொருநூ
று ராஜகுமாரத்திகளையும் பிரயாணப்படச் சொல்லிதாம் வசுதேவரண்
டைக்குப்போய் தெண்டனிட்டு, அவரிடத்திற் செலவுகேட்க அவரு
ம்கிருஷ்ணா உன்னைவிட்டுஎப்படியிருப்பேனென்றுசொல்ல அதற்குத்
தகுந்தசம் மதிவசனஞ்சொல்லி அவரிடத்திலும்செலவுபெற்றுக்கொண்
டுவீமசேனனுடனே தாமும் ஒருவெள்ளைக் குதிரையின்பேரி லேறிக்

கொண்டு துவாரகையைவிட்டுவெளியிலேவந்துநின்றார் அப்போதுதேவகிதேவியார்முதலான அந்தப்புரத்துஸ்திரீகளெல்லோரும்ரதங்களேறி நடந்தார்கள் சாத்தகி கிருதவர்மன்- இவர்களுத்தாரப்படிக்குபிரத்தியுமன்னன் முதலானராஜகுமாரர்களும் பின்னுமுண்டானஉத்தவன் அக்குரூரன் முதலானவர்களும்தங்கள்தங்கள் ரதங்களிலேறிநடந்தார்கள்,இன்னமும்பலராமன்முதலாக துவாரகையிலுள்ளஜனங்களெல்லோரும்நடந்துவந்துகிருஷ்ணபகவானிடத்திற்சேர்ந்தார்கள்,அப்போதுபதினெட்டுவகை மேளவாத்தியங்களும்தாம்தாமென்றுமுழங்கவும் சங்கீதமேளம் வசந்தரிமேளம்- நாகசுரமேளங்கள் சப்திக்கவும் பாடகர்கள்கொண்டாடவும் ரம்பை யூர்வசிக்குச்சரியான நாடகப்பெண்கள் நாட்டியம்பண்ணவும்இதுமுதலானசகலசம்பிரமத்துடனேயும்நடந்துவருகிறபோது-ஸ்ரீகிருஷ்ணபகவான் வீமசேனனைப்பார்த்துச்சொல்லுகிறார்.

ஓய்வீமசேனா, நீஅந்தநாட்டியஞ்செய்கிறப் பெண்களைப்பார்க்கிறாயே அவர்களுனக்கு ஈடா அவர்களை நீ ஏன்பார்க்கிறாய்உன் ஆகாரத்துக்கும் உன்பெரிய சரீரத்திற்கும் அவர்கள் ஈடுசெய்யமாட்டார்கள்-உன்னைப்பார்த்துஅவர்கள்பயப்படுவார்கள்எனக்குமுதலாய்ப்பயமாயிருக்கிறது,ஆகையினால் உனக்குத்தகுந்தவர்களாமென்றால்,அதோயார்க்காயோ நூற்றிருபதுவயதுசென்று பற்கள்விழுந்துதலையும்உடம்புந்திரைந்துஸ்தனங்களுஞ்சரிந்து பழுத்தபழமாய் கெட்டிசரீரமாய்நல்லஸ்திரிகள் வருகிறார்கள் அவர்களிடத்திற்போய் அவர்கள்முகத்தைப்பார் உனக்குத்தகுந்தவர்கள் அவர்களேயொழியஇவர்கள்ஈடுசெய்யமாட்டார்கள் இதுவல்லாமலும் உனக்குராக்ஷஸஸ்திரீகளைச்சேருகிறதேபிரியம்அப்படிராக்ஷஸஸ்திரீகளைச் சேருகிறவன்பின்னும்ஒருத்தனைச்சேரக்கூடுமோவென்று பரிகாசமாகச்சொல்ல,அதுகேட்டு-வீமசேனன் சொல்லுகிறான், ஓய்கிருஷ்ணா,என்னை இப்படிசொல்லுகிறீரோ நீர்மகாசுத்தமோ முன்புதிருவிக்கிரமஅவதாரமெடுத்தபோதுஉம்முடையசரீரத்தையும்உம்முடையஆகாரத்தையும் சகலஜனங்களும் அறிந்திருப்பார்கள்அப்படிப்பட்ட உம்முடையஆகாரத்திற்கும் பலத்திற்கும் தகுந்தாற்போலபூதகியென்கிற ராக்ஷசிமேல்விழுந்து விளையாடி அவள்முலையை வாயிலே வைத்துண்டுஅவளைக்கொன்றவர்நீரல்லவோ! அப்படியெல்லாம் உம்மிடத்தில்அநேகம்பிழைகளைவைத்துக்கொண்டுயென்னைப்பரிகாசம்பண்ணலாமோவென்றுசொல்ல, அதற்கு ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியும் சிரித்துஇன்னம் இப்படிப்பட்டபரிகாசவார்த்தைகளை ஒருவர்க்கொருவர்வேடிக்கையாகப் பேசிக்கொண்டு கேளிக்கைபார்த்துக்கொண்டுவந்து ஒரு தடாகத்தைக்கண்டு அவிடத்தில் தண்டுவிட்டுகூடாரங்களடித்துக்கொண்டு அந்ததடாகத்தைச்சுற்றிலுமிறங்கினார்கள், அப்போது பிருந்தாவனத்திலிருக்கின்ற கோபாலர்கள் இந்தவிசேஷத்தையெல்லாங் கேள்விப்பட்டு நாம்கிருஷ்ணனைக்கண்டுவெகுநாளாச்சுதுநம்முடைய தோழனன்

கிருஷ்ணனைக்கண்டு பேசிவருவோம்வாருங்கோளென்றுஒருவர்க்கொரு
வர் அழைத்துக்கொண்டு பால்மோர் தயிர்க்குடங்களைக் காவடிகளில்சா
ணிக்கைகளாக எடுப்பித்துக்கொண்டு தலைசிகைகளைமுடிந்துவிட்டு தலை
யிலேகறுப்புகம்பளிகளைப் போட்டுக்கொண்டு கையிலேகோலுங்கயி
றும் பிடித்துக்கொண்டுவந்து ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியைக்கண்டு தாங்கள்
கொண்டுவந்தகாணிக்கைகளைக்கொடுத்துகிருஷ்ணமூர்த்தியினுடையதி
ருமேனிமுழுதும்நன்றாகப்பார்த்து தலையையசைத்துஆச்சரியப்பட்டு
ச்சொல்லுகிறார்கள்ஓய்கிருஷ்ணமுன்னேநீ எங்களிடத்திலிருந்தாற்போ
லிருக்கவில்லையேஇதுவென்னதலையிலேகல்லுங்கறடும்போலிருக்கின்ற
து,இதுவென்ன காதிலேபச்சையும் வெள்ளையுமா யிருக்கிறதுஇதுவெ
ன்னகழுத்திலேகயிறுபோலேபோட்டுக்கொண்டிருக்கிறாய்இதுகளினா
லேஉனக்குத்தலைநோகாதோ,காதறிந்துபோகாதோ கழுத்துநோகாதோ
இதுஏதுநீ வேறுவேஷம் போட்டுக்கொண்டிருக்கிறாய் நம்முடையவ
ம்சம்போலிருக்கவில்லையேராஜாக்கள்போலிருக்கிறாயே யென்றுகேட்
கஅதுகேட்டுஸ்ரீகிருஷ்ணமூர்த்தியும்சிரித்துக்கொண்டு சும்மாயிருக்க
பின்னும்அந்தகோபாலர்கள்அங்கிருக்கிறஆனைகுதிரை ஒட்டகங்களைப்
பார்த்துஇதேதுகிருஷ்ண,நம்முடையமாடுகன்றுகள் போலிருக்கவில்
லையேயென்றுசொல்ல-அதற்கு கிருஷ்ணமூர்த்திஒன்றுஞ்சொல்லாமல்
சும்மா யிருந்துவிட்டுசற்றுநேரம்பொருத்துஅவர்களுக்கும் அவர்கள்
ஸ்திரீகளுக்கும் வேண்டிய வஸ்திராபரணங்களை வெகுமானமாகக்கொ
டுத்து அவர்களையனுப்பிவிட்டு பின்புஸ்ரீகிருஷ்ணபகவான் வீமசேன
னுடனேஆலோசனைசெய்து நான் முன்னேபோகிறேன் நீ இங்கேயி
ருவென்று சேனைகளுடனே மெள்ளவாவென்றுசொல்லி ஸ்ரீ கிருஷ்ணபக
வான்முன்னுதாக அஸ்தினா புரத்திற்கு வந்து தர்மராசாவுக்கும் குந்தி
தேவிக்கும் தெண்டனிட்டார் அதுகண்டு அவர்களும் ஸ்ரீகிருஷ்ணபக
வானையெடுத்துமார்போடணைத்துக்கொண்டுயோகக்ஷேமங்களைவிசாரி
க்கஸ்ரீகிருஷ்ணபகவானும்தமதுயோகக்ஷேமங்களைசொல்ல,அதற்குதர்
மராசாவும்சந்தோஷப்பட்டுஜயாகிருஷ்ண, நமதுகுமாரவர்க்கங்களும்
ஸ்திரீசனங்களும் எங்கேயென்றுகேட்க அதற்குஸ்ரீகிருஷ்ணதேவரும்
ஐயா, தர்மநந்தனா நமதுசேனைகள் தாயார் ஸ்திரீசெனங்கள் பந்துவர்க்
கங்கள்குமாரவர்க்கங்கள் முதலான்சகலமானபேரையும் யமுனாநதிக்க
ரையில்விட்டுவிட்டுநான்மாத்திரம்முன்னுதாகவந்தேன்அவர்களும் இந்
நேரம்வந்துசேருவார்களென்றுசொல்லஅதுகேட்டு தர்மராசாவானவர்
தம்பிமார்களுடனும்குந்திதேவி துரௌபதைசுபத்திரைமுதலான ஸ்திரீ
செனங்களுடனும்புறப்பட்டுஅவர்களை எதிர்கொண்டுபோய்தர்மராசா
வானவர்தேவகிதேவியாருக்கும்பலராமருக்கும் நமஸ்காரம்பண்ணிம
ற்றவர்களையும்ஆதரணைசெய்து ஸ்திரீஜனங்களுக் கெல்லாம் வெகுமதி
செய்துஉபசாரவார்த்தைகள்சொல்லிபின்பு கிருஷ்ண பகவானுடனேச
கலமானபேருங்கலந்துபேசிக்கொண்டுசகலசம்பிரமத்துடனேதிரும்

பட்டணத்திற்குவருகிறபோது அதற்குமுன்னமே அந்த அஸ்வமேத க்குதிரையுந்தண்டுடனேகூடத்திரிந்துகொண்டுவெளியேபுறப்பட்டுவ ந்தது அதையாரும்பிடித்துக்கட்டாமலிருந்துவிட்டார்கள்,

தர்மபுத்திரருங்கிருஷ்ணபகவானுடனேகூட சகலசேனைகளையும் நடப்பித்துக்கொண்டுபட்டணமேபோய் சேர்ந்தார்அந்தச்சமயத்தில் அந்தஅஸ்வமேதக்குதிரையுங் கடைசியில் கொஞ்சஞ் சேனைகளுடன் போகையில்அதுசேதி(அனுசாளுவனென்கிறராசன்) தெரிந்துஆலோ சனைசெய்துநாம்இந்தக்குதிரையைப்பிடித்துக்கட்டினால் கிருஷ்ணதே வன்சண்டைக்குவருவான் அப்போது அவன்நமதுதமையனைக்கொன்ற பகையெல்லாந்தீரத்தக்கதாகஅவனுடனேபோராடி பகையைமுடிக்க லாமென்றுநினைத்துக்கொண்டு அந்தஅனுசாளுவனும் மெள்ளமெள்ள வந்துகுதிரையின்பிறகேபோகிறஜனங்களையெல்லாம்அதட்டித் துரத் திவிட்டுஅந்தக்குதிரையைப்பிடித்துக்கொண்டுபோய்ஓரிடத்திற்கட்டி வைத்துபின்புதன்சேனைகளை யெல்லாம் முஸ்தீது பண்ணிக்கொண்டு தானும்யுத்தசன்னுத்தனாய்ஆயுத்தப்பட்டிருந்தான்.

## அனுசாளுவராஜன்யுத்தம்

அந்தசேதியைகுதிரையின் பிறகேவந்தசேனைகளெல்லாம் ஓடி வந்துதர்மராசாவையும் கிருஷ்ணபகவானையும் பார்த்து நமஸ்காரம்ப ண்ணிஓய்சுவாமிநாங்கள் அஸ்வமேதக்குதிரையைப்பத்திரமாகக் காத் துக்கொண்டேயிருந்தோம்அங்ஙனமிருக்கநமது பட்டணத் திற்குச்ச மீபத்தில்அனுசாளுவனென்கிறராசன்வந்து அந்தக் குதிரையைப்பிடி த்துக்கொண்டுஎங்களையும்ரோகவெய்து துரத்திவிட்டுப்போனு னென் றுசொல்லஅதுகேட்டுதர்மராசாவும்சிந்தாக்கிராந்தராய்விசாரப்பட்டுக் கொண்டிருந்தார்,அதுகேட்டுகிருஷ்ணமூர்த்தியுந்தலையை யசைத்துஇ தற்குநாம்என்னசெய்கிறது அந்தஅனுசாளுவன்மகாபலவந்தன்வீராதி வீரன்அப்படிப்பட்டவனைஒருவராலுஞ்செயிக்க முடியாதே யென்று சொல்லிக் கொண்டிருக்க அதுகேட்டு விஷ்வகேதுவும் கிருஷ்ண மூ ர்த்தியைப்பார்த்துஐயா,தேவகிநந்தனதேவரீர்இப்படிசொல்லலாமோ அந்த அனுசாளுவன் பலத்தை எம்மாத்திரமென்று ஆலோசிக்கிறீ ர்இதோஎன்னைஅனுப்பினவயும் நான்போய்அவனுடைய கெர்வத்தை யடக்கிகுதிரையையும்விடுவித்துக்கொண்டு அவனையும் பின்கட்டாய்க் க்கட்டிக்கொண்டுவருகிறேன் அப்படிசெய்யாமற் போனேனாகில் பிரா மணஸ்திரீகளைச்சேர்ந்தவன்போகிறகதியிலும்ருதுகாலமறிந்து போகி யாதவன்போகிறகதியிலும்போவேனென்றுசபதம்பண்ணினன்,

அதுகேட்டுகிருஷ்ணபகவானுஞ்சிரித்து ஓய்விஷ்வகேதாநீகொஞ் சமாகிலும்எண்ணிப்பாராமல்இப்படிப்பட்டபிரதிக்கினை செய்துவிட் டாயேஅந்தஅனுசாளுவனும்மகாபலசாலீவீராதிவீரன் சத்துருபயங்

கரன் துன்மார்க்கன் அப்படிப்பட்டவனை நீயெப்படி செயிக்கப்போகி
றாயென்றுகேட்க-அதற்குவிஷ்வகேதுவும்ஆலோசனைசெய்துஓய்ஐயா
ருக்மணிமனோஹராகபடநாடகசூஸ்தராவதாரீதேவரீர துகிருபாகடாக்ஷ
ம்என்பேரில்பூரணமாயிருக்கும்போதுஎனக்குச்சக்கியமகாதகாரியம்
என்ன இருக்கிறது ஆகையினால்தேவரீர ஆசீர் வாதம்பண்ணி அனுப்பி
வைத்தால்செயங்கொண்டுவருகிறேனென்றுசொல்ல, அந்தவயிரியவார்
த்தைக்குச் சபாசென்றுமெச்சி கிருஷ்ணபகவானும்மஹாசந்தோஷத்
துடனே விஷ்வகேதுவைப்பார்த்துஓய்விஷ்வகேதா நீதேவர்களுக்கெ
ல்லாமிஞ்சினபலாட்டியனாய்அந்த அனுசாளுவனையும்ஜெயித்துவரக்க
டவாவென்றுதம்முடையபலத்தைநிறுத்திஆசீர்வாதஞ்செய்து பிரத்தி
யுமன்னனையுங்கூடக்கூட்டிஅனுப்பிவிட்டுநாமும்வீமசேனனுமாசரத
மேறிக்கொண்டுபின்னேநடந்தார்கள்-விஷ்வகேதுவும்பிரதியுமன்னனு
ம்சிறிதுசேனைகளுடனேயுத்தசன்னத்தராய்புறப்பட்டுபோய்அனுசா
ளுவனுடையசேனைகளுடனேஎதிர்த்தார்கள்.

அப்போதுபிரத்தியுமன்னனும்ரோஷித்துடனேதன்னுடைய
வில்லிலேஅனேகமாயிரந் திவ்வியபாணங்களைப் பிரயோகஞ்செய்து
அனுசாளுவனுடைய சேனைகளையெல்லாங் கண்டித்துச்சின்னாபின்
னப்படுத்துகிறபோது அதுகண்டு அனுசாளுவனும் கோபதீப்தனாய்
எரிந்துவிழுந்து தன்னுடைய ரதத்தை தூண்டிப் பிரதியுமன்னனை
ப்பார்த்துநில்லுநில்லென்று அதட்டி அடாபிரத்தியுமன்னா- உன்னை
ப்பார், உன்பலத்தைப்பார், உன்சவுரியத்தைப்பார், நீயாஎன்னுடனே
போராடுகிறவன்-பெண்டுகளுடனேஎதிர்த்துநிற்கிற,நீயாஎன்னுடனே
எதிர்த்துப் போராடமாட்டுவாயோவென்று மேகத்தொனிபோலகெ
ர்சித்து அனேகபாணங்களைத்தொடுத்துப்பிரயோகம்பண்ணி பிரத்தி
யுமன்னனைநோகச்செய்தான்-அதர்க்கு அவன்பயப்படாமல் ஓய்அனு
சாளுவா, நீயிஞ்சவேண்டாம் என்னைக் கையிலாகாதவனென்றுநினைத்
தாயோநான்கருப்புவில்லினாலும்புஷ்பபாணத்தினாலும் பதினாலுலோ
கங்களையுஞ்செயித்தாலும்இப்பொழுது என்கைபாணத்தினால்உன்னை
கண்டதுண்டம்பண்ணுகிறேனென்றுசொல்லி ஒருதீக்ஷண்யமானபா
ணத்தையெடுத்துத் தன்கைவில்லினிடமாத்தொடுத்துப் பிரயோகஞ்
செய்து அனுசாளுவன்பேரிலெய்தான்- அதர்க்கு அனுசாளுவனெவ்வ
ளவுஞ்சட்டைபண்ணாமல் மஹாரோஷித்துடனே அதிசீக்கிரத்தில்ஐந்
துகுரூரபாணங்களைத் தொடுத்துப்பிரயோகஞ் செய்தான். அதுகளு
ந்தகதகவென் றெறிந்துக்கொண்டுவந்துபிரத்தியுமன்னனுடைய மார்
பிலேல்லைதைத்துமுதுகிலுரிகிப்போய்விட்டதுகள்-அதனால்பிரத்தியுமன்ன
னும்ஆடாசத்துடனேரதத்தின்பேரில்விழுந்துமூர்ச்சையடைந்தான்.

அதுகண்டுவிஷ்வகேதுவுங்கோபங்கொண்டுதன்னுடையரதத்தை
த்தூண்டிவில்லைக்குணத்தொனிபண்ணிஅனேசமாயிரம் பாணங்களைப்
பிரயோகஞ்செய்துஅனுசாளுவனைநோகவெய்தான் - அந்தச்சமயத்தி

வீமசேனனும்வந்துகலந்துகொண்டுஉக்கிராகாரனாய்எரிந்துவிழுந்து
தன்னுடைய ரதத்தைத்தூண்டி விஷ்வகேதுவை ப்பின்னுக்குத் த
ள்ளிவிட்டுதன்கைவில்லிலேதீக்ஷண்யமான பாணங்களைத்தொடுத்து அ
ந்தஅனுசாலுவின்பேரில்பிரயோகஞ்செய்தான் - அதுகண்டு அனுசா
லுவன்சிரித்துவீமசேனனைப்பார்த்து அடாவீமா நீசையிலசாதசிறி
துபேர்களை செயித்தோமென்று கெர்வங்கொண்டிருக்கிறா யல்லவோ,
அந்தகெர்வத்தைஇப்போதுவெளிப் டுத்திவைக்கிறேன் பாரென்று
சொல்லிமகாஉக்கிரகாரத்துடனே அக்கினிக்குச்சமானமான மூன்றுதி
வ்யாஸ்திரங்களைத்தொடுத்துப் பிரயோகஞ் செய்தான் அந்த அஸ்
திரங்களானதுகறகறவென்றுசுண்டிறுக்கொண்டுவந்துவீமசேனன்மார்
பிலேபட்டுமுதுகிலுருகிப்போய்விட்டது-அதனால்வீமசேனனும்சுழ
ல்காற்றடித்துமரம்விழுந்ததுபோலரதத்தின்பேரில்விழுந்து மூர்ச்சை
யடைந்தான்,

அதுகண்டுகிருஷ்ணபகவானும்தன்னுடையரதசாரதி யாகியதார
கனைஎச்சரிக்கைசெய்துதன்கையிலிருக்கின்றசார்ங்க மென்கிறவில்லைவ
ளைத்துகுணத்தொனிசெய்துஅநேகமாயிரம் பாணங்களைத் தொடுத்து
அனுசாலுவன் பேரில் பிரயோகஞ் செய்யும்போதுஅனுசாலு வனும்
மகாவீரத்துடனே தன்னுடையவில்லிலே அநேக பாணங் களைத்
தொடுத்து கிருஷ்ணபகவான்பிரயோகித்த பாணங்களை யெல்லாம்பொ
டிபொடியாகத்தும்சப்படுத்திவிட்டு கிருஷ்ணமூர்த்தியைப்பார்த்துஓ
ய்கிருஷ்ணா,நீமுந்திலேஎன்தமையனைக்கொன்று விட்டாயல்லவோ,அ
ந்தகெர்வத்தைஇப்போது அடக்கிவிடுகிறேன் உனக்கும் சண்டைக்கு
ம்எத்தனைதூரம் நீயோ என்னைஜெயிக்கிறவன் - காட்டிலே சஞ்சரித்
துக்கொண்டு காய்கனிகளைத்தின்று தபசுசெய்கிற யோகீஸ்வரர்களண்
டைக்குப்போகாமல் என்முன்னேவந்தாயல்லவோ;ஆனால் இனிஎன்னு
டையவல்லபத்தைப்பாரென்று சொல்லிமஹா உக்கிராகாரத் துடனே
அளவிறந்தசஸ்திரஅஸ்திரங்களைப் பிர யோகஞ் செய்து கிருஷ்ணபக
வான்விடுகிறபாணங்களையெல்லாம்நடுபாதியில்கண்டித்துவிட்டு மேலு
மேலும் அநேகபாணங்களைப்பிர யோகஞ்செய்து கிருஷ்ணபகவானு
டையரதசாரதியாகியதாரகனையும்உதிரமயமாக் கிகருடக் கொடியையு
ங்குதிரைகளையுஞ் சல்லடைக் கண்களாகத் துளைத்து அந்தகிருஷ்ண
தேவனுடையமார்பையுங்கிழித்தான் அதனால் குதிரைகள் மெத்தவுஞ்
சஞ்சிப்பட்டுதலையைவளைத்துக்கொண்டதுகள் - அதுகண்டுதாரகனும்
கிருஷ்ணமூர்த்தியைப்பார்த்துஐயா சோபிகாரமணா எப்படிப்பட்ட
சண்டையிலும்நம்முடையகுதிரைக்குஇப்படிப்பட்ட ஆயாசம் வந்த
தில்லையேயிப்பொழுதுபூமியில்நிற்கமாட்டாமல் தத்தளிக்கின்றதே ஓ
ய்சுவாமிஇதுயென்னபுதுமையாயிருக்கின்றதென்றுசொல்ல அதுகே
ட்டுகிருஷ்ணதேவருக்குக்கோபமிகுந்துநான்அந்ததுன் மார்க்கனைஇந்
தக்ஷணமேகொல்லுகிறேனென்று அட்டகாசம் பண்ணி தமதுதிவ்விய

அஸ்தத்தில்விளங்குகின்றசார்ங்கத்தினிடமாகஅநேக.அஸ்திரங்களைத்தொ
டுத்துப்பிரயோகஞ்செய்தார். அதுகண்டுஅனுசாளுவனும் அந்தபாண
ங்களையெல்லாங்கண்டித்துசீக்கிர மாகத்தன்னுடையவில்லிலே ஏழுநா
ராசந்தொடுத்துப்பிரயோகம்பண்ணினான்அதுகள் - ஒன்றோடொன்று
உராய்ந்துக்கொண்டெரிகள் புகைகளுடனே வந்துகிருஷ்ணபகவானு
டையமார்பிலேபட்டுமுதுகிலுருகிப்போய்விட்டதுகள்,அதனால்அந்த
பகவானும்மெத்தஆயாசத்துடனே கையிலிருந்தசார்ங்கத்தைநழுவவி
ட்டு கொடிக்கம்பத்துடனே சாய்ந்துமூர்ச்சையடைந்தார்.

அதுகண்டுஅனுசாளுவனுடைய சேனைகளெல்லாரும்சிங்கநாதங்
கள் அட்டகாசங்கள்செய்தார்கள்,அதுகண்டு விஷ்வகேதுவும் மஹாகு
வேஷத்துடனே எரிந்துவிழுந்து பற்களை நெறநெறவென்று கடித்து
மீசைபடபட வென்றுதுடிக்கும்படி உக்கிராகாரனாய்த் தன்னுடைய ர
தத்தைத்தூண்டி என்னுடையஆண்டவனுக்கு இப்படிப்பட்ட ஆயாச
ம்வரலாகுமாவென்று கெர்சித்து தன்னுடைய வில்லிலே அதிகோரமா
யிருக்கிற பாணங்களைத்தொடுத்துப்பிரயோகஞ்செய்துஅனுசாளுவன்
சரீரமுழுதுந் துளைத்துசாரதியையும் குதிரைகளையும்ரத்தமய மாக்கின
ன்,அதையெல்லாம் அனுசாளுவன் நிக்கிரகித்து நின்று அநேகசஸ்திர
அஸ்திரங்களைப்பிரயோகஞ்செய்துவிஷ்வகேதுவை ரோசப்பண்ணின
ன், இப்படிவிஷ்வகேதுவும் அனுசாளுவனும்எதிரிட்டு மாஹாரோஷத்
துவேஷத்துடனே சிங்கத்தோடுசிங்கமும்சர்ப்பத்தோடு சர்ப்பமும்வி
யாக்கிரமத்தோடுவியாக்கிரமும் எதிர்த்தாற்போலும் (ஸ்ரீராமமூர்த்தியு
ம்) ராவணனும்எதிர்த்தாற்போலும், தேவேந்திரனும்விருத்திராசுரனு
ம் எதிர்த்தாற்போலும் எதிர்த்து திக்குகள்தோறும்பாணங்களைநிறைத்
து ஒருஜாமமட்டும் போராடுகிறபோதுஅதிலேவிஷ்வகேதுமிஞ்சிஅ
னுசாளுவன் கையிலிருக்கிற வில்லைக்கண்டித்துவிட்டு சாரதியையுங் கு
திரைகளையுங்கொன்றுதேரையும் பிளந்து அனுசாளுவனுடைய சரீரத்
தையுஞ் சல்லடைக்கண்களாகத் துளைத்துவிட்டு சியாவென்று சிங்கநாத
ம்பண்ணினான்.

அதற்குஅனுசாளுவன் பயப்படாமல் கத்தியும்கேடகமும் எடு
த்துக்கொண்டு ஓடிவந்து விஷ்வகேதுவினுடைய தேரின்பேரிலேறிவி
ஷ்வகேதுவைக்காலினாலுதைத்தான் - அதுகண்டு விஷ்வகேதுவும் எரி
ந்துவிழுந்து இரண்டுபாணத்தைப் பிரயோகித்து அவன்கையிற்பிடித்
திருக்கின்றகத்தியுங்கேடகமும் பொடியாகும்படிசெய்துஜரோலென்று
தேரைவிட்டுக்குதித்து அனுசாளுவனுடைய சிகையைப்பிடித்துக்கொ
ண்டு அதிசீக்கிரமாகத்தன்னுடைய வில்நாணியிற்சுருக்குப்போட்டுஅ
வனதுகைகளைப்பின்கட்டாய்ச் சேர்த்துக்கட்டி அங்கேயிருந்து இழுத்
துக்கொண்டுவந்து கிருஷ்ணமூர்த்தியினுடைய பாதத்திற்போட்டான்,
அப்பொழுது அந்தபகவானும் மூர்ச்சைதெளிந் தெழுந்திருந்து சமீ
பத்தில்நிற்கிற விஸ்வகேதுவையும் பாதத்தின்கீழ் விழுந்துகிடக்கிற அ

னுசாளுவனையும்பார்த்து சந்தோஷிப்பட்டு விஷ்வகேதுவையுங்கொண்டாடி அனுசாளுவன் செய்கிறஸ்தோத்திரத்துக்குங் கிருபைகூர்ந்துதிருவுளமிரங்கி அவன்கட்டையும் விஷ்வகேதுவினுடைய கையினால்விடுவித்து அவன்செய்த பிழைகளையுமன்னித்தருளினார். அதிலேவீமசேனனும்பிரத்தியுமன்னனும் மூர்ச்சைதெளிந் தெழுந்திருந்தார்கள். அதுகண்டுஅனுசாளுவன் அவர்களுக்கும் நமஸ்காரம்பண்ணி வெகுபிரியவசனங்களைச்சொல்லி அவர்களிடத்திலும் விடைபெற்றுக்கொண்டு மறுபடியும்மூன்றக்குரோணி சேனைகளுடனும் சிறிதுகாணிக்கைகப்பணங்களுடனும் அஸ்வமேதக்குதிரையுடனும் கூடவந்து கிருஷ்ணமூர்த்திவீமசேனன்விஷ்வகேதுபிரத்தியுமன்னன் இவர்களுடனேகலந்துகொண்டுபதினெட்டுவகை மோவாத்தியங்களும்தாம்தாமென்று முழங்கத்தக்கதாக சர்வாடம்பரத்துடனே அஸ்தினாபுரத்திற்குவந்து தர்மபுத்திரனைக்கண்டுஅனுசாளுவனென்பவன்தான் தர்மராசாவுக்குக் கொண்டுவந்தகாணிக்கை கப்பங்களுடனே அந்தஅஸ்வமேதக் குதிரையையும்ஒப்பிவித்து அவருடைய பாதத்தில்விழுந்து சாஷ்டாங்கமாக தெண்டனிட்டான் அதுகண்டு தர்மராசாவுங் கிருபைகூர்ந்து தன்னுடைய தம்பிமார்களைப்போலஅவனையும்பார்த்து ஆதரணைசெய்தார்.

## (அஸ்வமேதக்குதிரையைஅனுப்புதல்.)

இப்படியிருக்கின்றகாலத்தில் அஸ்வமேதக்குதிரையைவிடுகிறதற்குநினைத்திருந்தசித்திராபர்வமும்வந்தது அப்போதுஸ்ரீவேதவியாசரும்அவ்விடத்திற்குஎழுந்தருளிவந்தார், அதுதெரிந்துதர்மராஜாவும்எதிர்கொண்டுபோய்நமஸ்காரஞ்செய்துஅந்தமுனீஸ்வரனைஅழைத்துவந்துஓர்ஆசனத்தில்எழுந்தருளச்செய்து அவருக்குஅர்க்கியபாத்திய ஆசனமுதலிய சோடசஉபசாரங்கள்செய்துதோத்திரம்பண்ணிஅந்தவியாசபகவானுடையஅனுமதியினாலேஇமோர்ப்பர்வதத்தண்டையிலிருக்கிறதிரவியத்தைப்பொதிகளிலும் எடுப்பித்துக்கொண்டுவந்துஉக்கிராணத்தில்நிறைத்துவைத்துஅதன்பிறகுஸ்ரீகிருஷ்ணமூர்த்திவேதவியாசர்இவர்களனுமதியின்பேரில்யாககுண்டம் வெட்டிவைத்துஅந்தயாகத்திற்குத்தகுந்தவஸ்துக்களையுங்குறைவில்லாமல்அழைப்பித்துக்கொண்டுஅந்தஅஸ்வமேதக்குதிரையையும் கங்கைமுதலியதீர்த்தங்களினால்ஸ்நானம்பண்ணுவித்து தர்மபுத்திரருந்திரௌபதைசமேதராய்ஸ்நானஞ்செய்துஜபதபங்களை முடித்துக்கொண்டுவந்து அந்தயாககுண்டத்தில் அக்கினிபகவானை நிறுத்தி அந்தஅக்கினிசாக்ஷியாக வியாசபகவான்மந்திரஞ்சொல்ல தர்மபுத்திரரானவர்அந்தயாகதீக்ஷையைக்கைக்கொண்டு அஸ்வமேதக்குதிரையைக்கொண்டுவந்து நிறுத்திஅதற்கு (நவரத்னமயமான) ஆபரணங்களைத்தரித்து கந்தபுஷ்ப அக்ஷதைகளால் மந்திரபூர்வகமாய் அந்தக்குதிரையைப்பூசித்துதன்னுடையவிருதாகியகீர்த்திப்பிரகாசத்தை

ஒருதங்கப் பட்டத்திலெழுதி அந்தப்பட்டத்தை அஸ்வமேதக்குதிரையி
னுடையலலாடஸ்தானத்திற்கட்டி மற்றஜப்பத்தாறு தேசத்துராசாக்க
ளுடையவிருதுகளை யெல்லாம் தண்டைகளி லெழுதி அந்தக்குதிரை
யினுடையநாலுகால்களுக்கும் போடுவித்துயாக குண்டத்தையும் பிர
தக்ஷணஞ்செய்வித்து சகலதேவாதா மந்த்ர ஆவாகனமும் பண்ணி
பதினெட்டு வகை மேளவாத்தியங்களுடனே அஸ்தினபுரத்தைப்
பிரதக்ஷணம்பண்ணிவித்துக்குதிரையைவிட்டு அதன்பிறகே - அர்ச்சு
னனையும்விஷ்வகேதுவையும்-பிறத்தியுமன்னையும்மேகவர்ணனையும்அ
னுசாளுவனையும்-எவ்வர்ணசுவனையும் மூன்று அக்குரோணிசேனைகளை
யுங்கூட்டிதர்மராசாவானவர் அர்ச்சுனனைப்பார்த்து ஒய்அர்ச்சுனபிர
ஜாஷயம்மெத்தவும்ஆகவொட்டாமல் அதிசீக்கிரத்தில் குதிரையைநட
ப்பித்துக்கொண்டுவாமென்றுஉத்திரவுபண்ணி அந்தச் சமயத்திலொவ்
வொருபிராமணனுக்கு-ஆனை-ஒன்று-குதிரை - மூன்று-தேர்-எழு-சேவ
கர்-ஐம்பதுஸ்திரீகள்-நாலு-ஒருபாரந்தங்கம் இந்தவிமாகஇருபதினாயிர
ம்பிராமணர்களுக்குத்தானம்பண்ணினார்,

அப்பொழுதுகிருஷ்ணபகவானும் அர்ச்சுனனைப்பார்த்துஒய் அ
ர்ச்சுனநானுங்கூடவரம்வண்டுமோ வென்றுகேட்க, அர்ச்சுனனும்ஒய்
கோபாலகிருஷ்ணதேவரீர்வரவேண்டுவதில்லை இவடத்தில்தானேயிருந்
து ஆசீர்வாதம்பண்ணிக்கொண்டிருந்தால் அதுபோது மென்றுசொ
ல்லிஅந்ததேவனுக்கு தெண்டனிட்டு அவருடையஅனுமதிபெற்றுக்
கொண்டுதர்மபுத்திரர்வீமசேனன்இவர்களுக்கும்நமஸ்காரம் பண்ணிஅ
வர்களிடத்திலும் விடைபெற்றுக்கொண்டு தேவகிதேவியாருக்கும்குந்
திதேவிக்கும் தெண்டனிட்டுஅவர்களிடத்திலும் செலவுவாங்கிக்கொண்
டுநகுலசகாதேவர்களைப்பார்த்து அவர்களையும் தமையனாரிடத்தில்தா
னேபத்திரமாயிருக்கும்படிகட்டளையிட்டுவியாசபகவான்செய்த ஆசீர்
வாதமுங்கைக்கொண்டுஅர்ச்சுனராசனும்காண்டீபபாணியாய்ரதாரூட
னாய் சகலசேனைகளுடனேயும்புறப்பட்டுசிங்கநாதம்சங்கநாதம்வேணு
நாதமுதலானபலவிதவாத்தியங்களுமுழங்கத்தக்கதாக அண்டகடாசங்க
ளும்அதிரும்படிசெயபேரிகையடித்துக் கொண்டுமகா வைபவத்துட
னேநடக்கும்போதுஅந்தஅஸ்வமேதக்குதிரையும்தண்டுவிட்டு தன்னி
ச்சையாகமேற்குமுகமாய்த்திரும்பிப்போகையில் அந்தக்குதிரையான
துமலஜலாதிகளைவிஷ்டித்தவிடத்திலும்அடிகள்வைத்தஇடத்திலும்ஓம
சாந்திகள்பண்ணி வித்தும்தானதர்மங்களைச்செய்துக்கொண்டும் அந்த
க்குதிரையானதுதன்னிச்சையாக நடந்து வேசாறி படுத்துக்கொண்ட
இடங்களில் தண்டுவிட்டிறங்கிஅந்தஇடங்கள்தோறும்கோயில் குணங்க
ள் உண்டாக்கிவைத்தும்இந்தப்பிரகாரம் அர்ச்சுனராஜனும் யுத்தசன்
னத்தனாய்சகலசேனாசமேதனாய் அந்தக்குதிரையின் பின்னேபதினாயி
ரஞ்சேவகர்களைநிறுத்திதன்னுடைய ரதத்தைப்பிரகேநடத்திக் கொண்
டுபோனான்,

அப்படிபோகிறபோதுஅந்தக்குதிரையும்மா:கிருஷ்ணப்திபட்டண
த்துக்கோட்டைவாசலுக்குச் சமீபத்தில் ஒரு மரத்தோரத்தில் பச்செ
ன்றபுல்லைக்கண்டுஅந்தப்புல்லை மேய்ந்துக் கொண்டிருந்தது அங்ஙன
மிருக்கையில்அந்தப்பட்டணத்தையரசாட்சி செய்கின்ற நீலத்துவசம
காராசாவினுடையகுமாரனான பிரவீர னென்கிறவன் தன்னுடையப
ட்டபுஸ்திரீயாகிய மதனமஞ்சரி யுடனே கூடிவந்து மகாகோலாகலத்
துடனேஅவடத்தில்ஒருமடுவில்ஜலக்கிரீடைசெய்துவிளையாடிக்கொண்
டிருக்கும்போதுமதனமஞ்சரியானவள்அந்தக் குதிரையைக்கண்டு ஆ
ச்சரியப்பட்டுதன்புருஷனாகிய பிரவீரனுக்குக் காண்பித்தாள். அந்தப்
பிரவீரனும்குதிரையைப்பார்த்துஆச்சரியப்பட்டுமடுவை விட்டுவெளி
யேவந்துவஸ்திராபரணங்களைஎடுத்துத்தரித்துக் கொண்டு அந்தக்குதி
ரையினிடத்திற்குப் போய் அதினுடைய நெற்றியில் கட்டியிருக்கிற
பொற்பட்டத்தைவாசித்துப்பார்க்க அதில்எப்படி எழுதி யிருந்ததெ
ன்றால்பரதவம்சமென்கிறதிருப்பாற்கடலுக்குச் சந்திரனைப் போலவு
ம்சத்துருக்களென்கிற ராசவம்சஅந்தகாரத்திற்குச் சூரியனைப்போலவு
ம்விளங்குகின்றமகாகீர்த்திப்பிரதாபசௌரியமுள்ள தர்மராசாவானவர்
அஸ்வமேதயாகஞ் செய்யும்படிவிட்ட குதிரையென்றும் இந்தக் குதி
ரையின்பின்னேவருகிறவன் ஸ்ரீ கயிலாசபதியாகியபரம சிவனோடு எதிர்
த்துயுத்தஞ்செய்து ஜெயமடைந்து அவரிடத்திற் பாசுபதாஸ்திரத்தை
ப்பெற்றுக்கொண்ட மகானுபாவன் பின்னுந் தேவலோகத்துக் காண்
டாவனத்தைஅக்கினிதேவனுக்குத் தத்தம்பண்ணி தேவேந்திரனைச்செ
யித்து-தேவர்-கந்தர்வர்கள்-யக்ஷாள்,பன்னகாள் - உரகாள் - தயித்தியாள்
இப்படிப்பட்டவர்களையுமுறியஅடித்து அந்த அக்கினிபகவானுக்குத்
திருப்திபண்ணுவித்துஅவரிடத்திற்காண்டீபமும் அக்ஷய தூணிரதமு
ம்பெற்றுக்கொண்ட வீராதிவீரன்பின்னும் தேவலோகத்துநாடகசா
லையில்அஸ்திரவித்தைபழகி தேவர்களுக்குப் பயங்கரமான காலகேய
நிவாதகவசாளென்கிறஒன்பதுகோடிராக்ஷதவீரர்களையும்அதம்பண்ணி
தேவர்களுக் கெல்லாம் நிர்ப்பய முண்டாக்கி வைத்து தேவேந்திரன்
கையில்தேவகிரீடமும் தேவசங்கும் பெற்ற சூராதி சூரன் இன்னும்
இவ்வகைப்பட்டஅதிவீரபராக்கிரமசவுரியமுடைய அர்ச்சுனமகாராச
னென்றும்எழுதிஅந்தஅர்ச்சுனமகாராசனைசெயிக்கத்தக்க சாமர்த்திய
முள்ளவனும் க்ஷத்திரியவம்சத்திற்பிறந்தவனும் முகத்திலே மீசைவை
த்துக்கொண்டிருக்கிறவனும் ரணக்களத்தில் முன்வைத்தகாலைப் பின்
வாங்காமல்நின்றுஉண்மையாஎதிரிட்டுயுத்தம் பண்ணுகிறவனு மானால்
இந்தஅஸ்வமேதக்குதிரையைப்பிடித்துக்கட்டக்கடவனென்றுஎழுதியி
ருந்தது அதையெல்லாம் அந்தப்பிர வீரனானவன் நன்றாக வாசித்துப்
பார்த்துபுன்சிரிப்பாகச் சிரித்து தலையையசைத்து ஐயையோ அந்தத
ர்மராசாவானவன் கொஞ்சமாகிலும் புத்தியில்லாமல்தானே வீரனென்

றும் இந்தக்குதிரையின்பின்னேவருகிற அர்ச்சுனனேமஹாவீரியப்பிர
தாபசவுரியமுள்ளவனென்றும் எவ்வளவும்பயமில்லாமல் எழுதினனல்
லவா ஆனாலும் அவனுடைய சவுரியத்தை சற்றேபார்ப்போமென்று
சொல்லி அங்கேயிருந்தசேவகர்கள்கையில் அந்தக்குதிரையைப் பிடித்
துக்கொடுத்து பட்டணத்திற்குள்ளேகொண்டுபோய் கட்டிவைக்கும்ப
டி அவர்களுக்குத்திட்டஞ்செய்து தன்னுடையஸ்திரீயையயுங்கூட்டியனு
ப்பிவிட்டுபிறகுதானும் பட்டணத்திற்குப்போய் தன்னுடையரதகஜது
ரகபதாதிகளையுங் கூட்டிக்கொண்டு யுத்தசன்னத்தனாய் ரதாரூடனாய்வி
ல்லைக் குணத்தொனிபண்ணி அட்டகாசஞ்செய்து எதிரிட்டுக்கொண்டு
நின்றான்.

---

## நீலத்துவசமகாராஜன்யுத்தம்.

இந்தவிசேஷமெல்லாம் அந்த அஸ்வத்தின்பிறகே நடந்து வந்த
சேவர்களால்-பிறத்தியுமனன் விஸ்வகேதுஅர்ச்சுனன் முதலானவர்களு
ம்கேள்விப்பட்டு ஆக்கிர வியாக்கிரமநிக்குரோதராய் எரிந்து விழுந்து
மகாரோஷித்து வேஷங்களுடனே வந்து பிரவீரனைக்கண்டு ஓய்ராச
குமாரகாநீஎன்விருதாவாகஎங்களுடையஅஸ்வமேதக்குதிரையைப்பிடி
த்துக் கொண்டுபோனாய்நீயோ எங்களோடெதிர்த்துச்சண்டைசெய்கிற
வன் உன்னால் ஆகமாட்டாது வேண்டாம்வேண்டாம் இன்னம் சிறிது
காலம் இந்தப்பூமண்டலத்தில்நீபிழைத்திருக்க வேண்டுமானால் எங்கள்கு
திரையைகொண்டு ஒப்புவித்துபோவென்றுசொல்லஅதுகேட்டுபிரவீ
ரனும்மஹா உக்கிராகாரத் துடனே தன்னுடைய கையிலிருக்கின்ற வி
ல்லிலே அநேகமாயிரம் பாணங்களைத்தொடுத்து விஷ்வகேது முத
லான பிரமுகாள்பேரில்பிரயோகஞ்செய்துநோகவெய்கிறபோது பிர
த்தியுமனனும் மஹாரோஷித்துடனே தன்னுடையரதத்தை தூண்டி
ப்பிரவீரன்பேரில் எதிர்த்து அநேகமாயிரம் திவ்யாஸ்திரங்களைப் பி
ரயோகம்பண்ணினான் அதுகண்டு பிரவீரனும் பயங்கொள்ளாமல் வீ
ரசிங்கம்போல ஆக்கிரகித்து தன்னுடையவில்லிலே கோடையிடிகளு
க்குச்சமானமான அகோரபாணங்களைத் தொடுத்துப் பிரயோகஞ்செ
ய்து பிரத்தியுமனனுடைய சாரதியையுங் குதிரைகளையுங்கொன்றுஅவ
னேறிக்கொண்டிருந்த ரதத்தையும் பொடிபொடியாக்கி அவனையும்ர
த்தமயமாக்கினான் அதுகண்டு விஷ்வகேதுவும் கோபதீப்தனாய் எரிந்
துவிழுந்து பிரவீரன்பேரில் சிங்கத்தைப்போல எதிர்த்துப் போராடு
கிற போது பிரவீரனனவன்மிஞ்சி விஷ்வகேதுவின்பேரிலும் அனு
சாளுவன்பேரிலும் எவ்வர்ஜுசுவன் பேரிலும்-மேகவர்னன் பேரிலும்
அநேகமாயிரம் எண்ணிக்கையில்லாத சஸ்திரஅஸ்திரங்களைப் பிரயோ
கஞ்செய்து அவர்களுடைய சரீரமெல்லாம் ரத்தமயமாகும்படி சல்ல
டைக்கண்களாகத் துளைத்துவிட்டான் இப்படியிருக்க இந்தசவிஸ்தார

மெல்லாம்நீலத்துவசமகாராஜன் கேள்விப்பட்டு மகாகோபங்கொண்டு யுத்தசன்னத்தனாய் ரதாரூடனாயனேகசேனை களுடனேபுறப்பட்டு பட்டணத்தைவிட்டு வெளிப்பவந்து அர்ச்சுனனுடனே எதிர்த்து அனேக விதமான திவ்வியாஸ்திரங்களைப்பிரயோகஞ்செய்து அந்தஅர்ச்சுனனையும் அவனுடைய சேனைகளையும்நோகப்படுத்திதானும் அந்தஅர்ச்சுனனுடைய பாணாக்கினியினால் வருத்தப்பட்டு தன்னுடைய மருமகனாகிய அக்கினிதேவனை நினைத்து அவனைஅழைப்பித்து அந்த அர்ச்சுனனையும்அவனுடையசேனைகளையும் பஸ்மீகரப்படுத்திவிட்டுவாவென்று உத்தரவுசெய்து அந்தநீலத்துவச மஹாராஜனென்னவன் தன்குமாரனாகிய பிரவீரனையும் கூடவேஅழைத்துக்கொண்டுதன் பட்டணத்திற்குப்போய்சேர்ந்தான்பிற்பாடுஅக்கினிதேவனும்தன்னுடைய மாமனார் சொல்லிப்போனகட்டளைப்படியே மஹாகோபதீப்தனாய்பிரபலாகாரமாய் விஸ்தீரணமான புகைகளுடனும் எரிகளுடனும் பிரகாசித்தெழும்பிஜடஜடவென்கிற தொனியுடனே பரவிவந்து அர்ச்சுனமஹாராஜனுடைய ரதகஜதுரகபதாதிகளை யெல்லாம் எரித்துச் சாம்பலாக்கிக்கொண்டுவருகிறபோது அர்ச்சுனமஹாராஜனுங்கண்டு விசாரப்பட்டு தன்னுடையகையிற் பிடித்திராநின்ற காண்டீபத்தை ரதத்தின்பேரில் ஊன்றிவிட்டு தன்னுடையகைகளைக்கட்டிக்கொண்டு அந்தஅக்கினிதேவனைப்பார்த்துஓய் அக்கினிபுருஷா உமக்குபதினாயிரஞ்சரணம்சரணம் தேவரீர்பூர்வசிநேகத்தைக்கொஞ்சமாகிலும்எண்ணிப்பாராமல்என்னுடையசேனைகளை யெல்லாம்இப்படிசாம்பலாக்கிவிடலாமா முன்னாலே உமக்குண்டான அசீர்ண ரோகத்தைக்குறித்து தேவலோகத்துக் காண்டாவனத்தைத் தகனம்பண்ணுவித்து அந்தமுப்பத்துமுக்கோடிதேவர்களுடனும் எதிர்த்துப்போராடின என்னைஉம்முடைய சிநேகனென்றெண்ணிப்பாராமற் போனீரோநான்செய்தநன்றியையுமறந்துவிட்டீரோ, அதுவுமல்லாமல் தேவரீர் அடியேனுக்குக் காண்டீபமும்அக்ஷய தூணிரதமுங்கொடுத்து பாரதயுத்தத்தில் துரியோதனாதிகளைஜெயித்து செயம்பொருந்தும்படி செய்வித்த மஹானுபாவர்நீரல்லவா, அப்படிப்பட்ட மகாபுருஷராகிய உமக்குஅநேகம் சரணம்சரணம் மேலும் என்னுடைய நாமமாகிய தனஞ்செய னென்கிறதிருநாமத்தைப்படைத்து கீர்த்திபெற்றமகோத்மனே, உமக்கு அநேகம்சரணம் சரணம் இந்தவேளையில் என்னையும் என்னுடையசேனைகளையும் வருத்தப்படுத்தாமல் பாதுகாத்தருளி ரக்ஷியும் ரக்ஷியுமென்று அர்சுன மகாராஜன்ஸ்தோத்திரஞ்செய்யஅந்தத்தோத்திரவசனங்களை அணுவளவுஞ் சட்டைபண்ணாமல்அக்கினிதேவன்பின்னும் விஸ்தீரணமாய்ப் பிரகாசித்தெரிந்துவிழுந்துசேனைகளை யெல்லாம்பஸ்மீகரப் படுத்திக் கொண்டுவருகையில் அதை அர்ச்சுன மஹாராசன்கண்டு மகாகோப தீப்தனாய் எரிந்துவிழுந்துதன்னுடையதேரின்பேரில் ஊன்றிவைத்த காண்டீபத்தைக்கையிலெடுத்துக்கொண்டுவருணாஸ்திரத்தைத் தொடுத்துப் பிர

யோகஞ்செய்து சப்தமேகங்களும் ஒன்றாகக்கூடி ஏக காலத்தில்வருஷித்ததுபோலமழைபொழிவித்தான்அதையுஞ் சட்டைபண்ணமல்விழுங்கிக்கொண்டு அக்கினிதேவன் வருகிறபோது அந்த அர்ச்சுன ராஜனும்மகாரோஷித்து வேஷித் துடனே தன்னுடைய காண்டீபத்தில் நாராயணாஸ்திரத்தைத்தொடுக்கவேண்டுமென்று நினைத்து அம்புறாத்தூணிலிருந்தநாராயணாஸ்திரத்தைக் கையிலெடுத்தவுடனே அதுகண்டுஅக்கினி தேவனும்பயமடைந்தவனாய் நடுநடுங்கி நின்று தன்னுடைய ஜுவாலையெல்லாம் தனக்குள்ளே யடைக்கிக் கொண்டு கெர்வமடங்கி ஒருபிராமணனைப் போலவந்துநின்று அர்ச்சுன மகாரசனைப்பார்த்து ஓய்அர்ச்சுனமகாராசனே நீர்தயவுசெய்து என்னை ரட்சியும்அந்தஅஸ்திரத்தைமாத்திரந் தொடுக்கவேண்டாம் நான் என்னுடையதீக்ஷண்ணியத்தினால்சகல சராசரங் களையும் பஸ்மீகரப் படுத்துகிறவனானாலும்இந்தநாராயணாஸ்திரத்திற் புறந்த அக்கினி ஜுவாலையானது என்னைப்பஸ்மீகரப்படுத்திவிடும்ஆதலால் அந்த அஸ்திரத்தை நீர்பிரயோகஞ்செய்யாமல் என்னைக்காப்பாற்றி யருளவேண்டும் நான்உம்முடையவிஸ்வரூபத்தைஎண்ணிப்பாராமல் என்னுடைய அஞ்ஞானத்தினால்இப்படிச்செய்தேன் இனிமேல்உம்முடைய சிநேகத்தை வேண்டிஉம்மிடத்தில் சரணாகதியென்று வந்தடைந்தேன் ஆகையால் நான்செய்தகுற்றங்களை யெல்லாமன்னித்து நீர்என்னைக்காப்பாற்றி ரக்ஷிக்கவேண்டும்மேலும்நீர்கிருஷ்ணபகவானுடைய சார்பிலே யிருக்கிறீர் அப்படிப்பட்டஉம்மைசெயிக்கிறதற்குஎவர்களாலுமுடியாது அந்தகிருஷ்ணமூர்த்தியினுடையஹரியென்னுந்திருநாமத்தின் பிரபாவத்தை அளவிட்டுபிர்மதேவர்முதலியதேவர்களாலும்வர்ணிக்கக்கூடாது அஃதெப்படியென்றால் அந்தஹரியென்னும்மகாவாக்கியமானது சத்தியமாகவும் வேதசாரமாகவும்மகாஅந்தரங்கரகசியமாகவும் சகலசீவராசிகளுக்கும் ஆதாரமாகவும்விளங்கப்பட்டது அப்படிப்பட்டவாக்கியத்தைஎத்தனை இழிந்தகுலத்திற்பிறந்தவனானாலும்திரிகரணசுத்தியாய்ஒருதிரந்தியானஞ்செய்வானாகில் அந்தப்புண்ணிய புருஷன் பூலோகத்தில்அஸ்வமேதயாகமுதலானஅனேகயாகங்களைச் செய்தபலனும் கோதானமுதலான சோடசமகாதானங்களைச் செய்தபலனும்பெற்றுஅந்தத்தில் அந்தஹரியென்னுந்திருநாமத்தையுடைய ஸ்ரீமந் நாராயணமூர்த்தி திருவடிகளிலுஞ்சேர்ந்து பரமபவித்திரனாகுவான் மேலும் ஸ்ரீகிருஷ்ணவதாரமாகவந்துபாரதயுத்தத்தில்உமக்கு ரதசாரத்தியஞ் செய்தருளிய மஹானுபாவனுடையஅந்ததிவ்யநாமத்தைப்பயபத்தியுடன் ஒருதிரம் நினைத்தாலும்முற்கூறியஅந்தமகாபலன்களேயுண்டாகும் அல்லாமலும்அந்தஹரிபக்தியுண்டாகியசண்டாளனுக்குஹரிபக்தியில்லாத பிராமணனும்ஈடல்ல- அப்படிப்பட்டஹரியைச் சேவிக்கிறதை விட்டுவேறு தேவதைகளைச்சேவிக்கிறவன்பிழைப்பு எப்படிப்பட்ட தென்றால் தாகமெடுத்தவன்சங்காநதியண்டைக்குவந்தும்அந்தத்தீர்த்தத்தைச்சாப்பி

ட்டுதாகநிவர்த்திசெய்யாமல் அந்தத்தீர்த்தத்தை விட்டுஅப்பால் கிரு
ஷ்ணவேணிதீர்த்தத்தைதச்சாப்பிட்டது போலாகும் இந்ததிருஷ்டாந்த
த்தினால்நாம்பிறந்தபயனைப்பெறும்படிஅந்த அரியையே சதாகாலமு
மிருதயகமலத்தில்வைத்துச்சேவிக்கவேண்டும் அவருடையதிருவடிக
ளையேகைகால்பரிசித்துபூசிக்கவேண்டும்அவருடையதிருவுருவத்தைக
ண்களாற்பார்த்துசந்தோஷிக்கவேண்டும்அவருடையபிரபாவ சரித்திர
ங்களையேகாதுளாற்கேள்விப்பட்டுமகிழவேண்டும் அவருடைய பாத
கமலங்களின்திவ்யபரிமளத்தையேநாசியினால் ஆக்கிராணித்து ஆனந்
திக்கவேண்டும்அவருடையதிருநாமஸ்மரணையே நாவினால்ரசித்துசுகி
த்துநித்தியதிருப்தியைப்பெறவேண்டும்அப்படிப்பட்டமகானு பாவ
னையேதொழுமையாகப்பெற்றிருக்கின்றஉமக்குஒருநாளுங்குறைவுவரு
கிறதில்லைஆதலால்ஓய் அர்ச்சுனம்காராசனே நான்இப்போதுபஸ்மீகர
ப்படுத்திவிட்டஉம்முடையசேனைகளை யெல்லாம்எழுப்பி விடுகிறேன்
அதல்லாமலும்என்மாமனாராகியநீலத்துவசமகாராசனுக்கும் உமக்கும்
சமாதானம்பண்ணிவித்துஅவனையும்உமக்குப்படைத்துணையாக்கிஉம்
முடையபிறகேவரும்படிசெய்விக்கிறேன்இப்பொழுது நீர்தயவுசெய்
துஎன்னைரட்சிக்கவேண்டுமென்றுவேண்டிக் கொள்ளுகிற அக்கினிதே
வனைப்பார்த்துஓய்அக்கினிபுருஷாநான் இந்நேரம் உன்னை வெகுவாய்
வேண்டிக்கொண்டுஅநேகமாயிரம்சமாதானவார்த்தைகள் சொன்னாலு
ம்அதுகளைச்சற்றாகிலும் எண்ணிப்பாராமல் நிக்கிரகஞ் செய்துவிட்டு
இப்போதுஉனக்குஆபத்துநேரிட்டவிடத்தில் என்னைவேண்டிக்கொள்
ளுகிறாய்இதுஎப்படியிருக்கிறதென்றால் ஒருதிருடனானவன் வழியேந
டந்துபோகின்றவர்களைஅடித்துப்பறிக்கவேண்டுமென்றுநினைத்துஒ
ருதடியைக்கையிலெடுத்துக்கொண்டு அவர்கள்சமீபத்திற் போய்உட
னேசமயமில்லாவிட்டால்கையிலிருந்த தடியைக் கக்கத்தில்வைத்துக்
கொண்டுஅவர்களுக்குத்தெண்டனிட்டுகொஞ்சம் வெற்றிலைபாக்குகொ
டுங்கோளென்றுகேட்டதுபோலிருக்கின்றதென்றுஅர்ச்சுனராசன்சொ
ல்லஅதுகேட்டுஅக்கினிதேவனும்அனேகபிரியவசனஞ் சொல்லிஅர்ச்சு
னனிடத்திற்சம்மதிபெற்றுக்கொண்டுதன்னால்பஸ்மீகரணமாய்இறந்துவி
ட்டரதகஜதுரகபதாதிகளையெல்லாம் பிழைக்கப்பண்ணுவித்து அர்ச்சு
னராஜனை அவரிடத்தில்தானேநிறுத்திவிட்டுதன்மாமனாராகியநீலத்துவ
ச மகாராஜனிடத்திற்குபோனானென்றுஜெயமுனீந்திரர்சொல்ல அது
கேட்டுசெனமேஜெயமகாராஜாவும் ஆச்சரியப்பட்டுஜெயமுனீந்திரரு
க்குநமகாரஞ்செய்துஓய்ஐயா,முனிநாதரே அந்தநீலத்துவச மகாராஜ
னுக்குஅக்கினிதேவன்மருமகனானவிதம்எப்படி, அதை அடியேன் அ
றிந்துக் கொள்ளும்படி திருவுளம் பற்றி யருளவேண்டு மென்றுவி
ண்ணப்பஞ்செய்ய அதுகேட்டுரிஷிசிரேஷ்டராகிய ஜெயமுனீந்திரர்
சொல்லுகிறார்.

(அக்கினிதேவன்வரலாறுகூறுதல்)

கேளுமையாஜெனமேஜெயமகாராஜாவே,அந்த மாகிருஷ்ணபதி
யென்னும் பட்டணத்தையாளுகிற நீலத்துவசமகாராஜனுக்கு சுவா
காதேவியென்கிறவளிடத்தில் சுவாகாதேவியென்கிற ஒருபெண்பிற
ந்தது அந்தப் பெண்ணைத்தாயுந்தகப்பனும்சந்தோஷத் துடனேம
கா செல்வமாகப்போஷித்துக்கொண்டு வருகையில் அந்தப்பெண்ணு
னவர் பூர்வபக்ஷசந்திரனைப்போல நாளொருமேனியாய் பொழு
தொருவர்ணமாய் வளர்ந்து பன்னிரண்டுவயதுள்ள பாலகுமாரியாய்எ
வ்வர்ணத்தையடைந்தாள்- அதுதெரிந்து நீலத்துவசமகாராஜனும்தன்
குமாரத்தியாகியசுவாகாதேவியைப்பார்த்து ஒய்அம்மா, புண்ணியவதீ
நான் உனக்குத்தகுந்ததிவ்வியபுருஷனை அழைப்பித்துவந்து உனக்குக்
கலியாணஞ் செய்துவைக்கிறேன் இப்பொழுது எந்தராஜன்பேரில் உ
னக்கு அபேக்ஷயிருக்கின்றது அதைச்சொல்லுமம்மா வென்றுகே
ட்க, அதுகேட்டுஅந்தசுவாகாதேவியுந்தன்பிதாவாகியநீலத்துவச ம
காராஜனைப்பார்த்து ஒய்ஐயா, எனக்குபூலோகத்திலுள்ள ராஜாக்களும்
வேண்டாம்-தெய்வலோகத்திலுள்ள-தேவர்களும்வேண்டாம்- அந்ததே
வர்களுக்குமுதன்மையாயிருக்கப்பட்ட அக்கினிதேவனை எனக்குப்புரு
ஷனாகப்பண்ணுமென்றுசொல்ல,அதுகேட்டுநீலத்துவசமகாராஜனும்ஒ
ய்அம்மாபாக்கியவதி உனக்குப்பயித்தியங்கொண்டோஅந்த அக்கினி
தேவனைக்கோரினாய்அவன்மூன்றுகாலும் ஏழுநாக்குமாய்சர்வபக்ஷணீக
ராய்மகாகுரோதியாய்எந்தவேளையும் எரிந்துக்கொண்டே யிருப்பான்
அப்படிப்பட்டபுருஷனை நீவிரும்பினாய் அவனைக்கனவிலும் நீவிரும்
பவேண்டாமென்று வெகுவாய்ச் சொல்லஅதுகேளாமல் அந்தசுவாகா
தேவியும்நான் அக்கினிபுருஷனைத்தவிர வேறொருபுருஷனை விரும்புகி
றதில்லை யென்று உறுதி வாத்தை யாகச் சொல்ல அதுகேட்டுநீலத்து
வச மகாராஜனும் அப்படியே நல்ல தென்று சம்மதப்பட்டிருந்தான்
அதன்பின்பு சுவாகாதேவியுங் காட்டுக்குப்போய் அக்கினி தேவனை
நோக்கித்தபசுசெய்தாள்-அதுதெரிந்து அக்கினிதேவனும் பிரத்தியக்ஷ
மாகவந்து நீஎன்னையழைப்பித்தகாரியம்என்னவென்றுகேட்க,அதற்கு
ச்சுவாகாதேவியும்ஒய் அக்கினிபுருஷா நீர்என்னைகலியாணஞ் செய்துக்
ள்ளவேண்டுமென்றுசொன்னாள்- அதற்குஅக்கினிதேவனுஞ் சந்தோஷ
கரமாய்அப்படியேநல்லதென்றுசம்மதித்துஅவள்பிறகேவந்துநீலத்து
வசமகாராஜனைக்கண்டு அந்தராஜன்செய்த பூசையைக்கைக்கொண்டுஅ
ந்தநீலத்துவசமகாராஜனைப்பார்த்து ஒய்ராஜேந்திராஉன்குமாரத்தியாகி
யசுவாகாதேவியைஎனக்குப் (பாணிக்கிராணஞ்)செய்துகொடுப்பாயா
கில் நான்இன்றுமுதலாக உன்னுடையமாகிருஷ்ணபதிபட்டணத்தில்தா
னேயிருந்துக்கொண்டுஉனக்குஎதிராளியாய்ச் சத்துருக்களாய் வருகிற
ராஜகூட்டங்களையெல்லாம்பஸ்மீகரப்படுத்தி உன்னைச்செயம்பொருந்து
ம்படி செய்கிறேனென்று உறுதியாகச் சொல்லிஅந்தப்பெண்ணை அப்

போதுதானே பாணிக்கிரகணஞ் செய்துக் கொண்டு அதுமுதல் அந்த
மாகிருஷ்ணபதி பட்டணத்தில் நீலத்துவசமகாராஜனுடைய அரண்ம
னையில்தானேவாசமாயிருந்தான்- கேட்டீரோ ஜெனமேஜெயமகாராஜா
வேயென்று சொல்லிப்பின்னையும் செயமுனீந்திரரானவர் பூர்வசரித்தி
ரத்தைச்சொல்லுகிறார்.

கேளுமையா ஜெனமேஜெயமகாராசாவே இந்தப்பிரகாரம்அந்த
அக்கினிதேவனும் அர்ச்சுனமகா ராசாவுக்குச் சமாதான வார்த்தைகள்
சொல்லி சிநேகம்பண்ணிக்கொண்டு பிற்பாடு தன்மாமனாராகிய நீலத்
துவசமகாராசனிடத்திற்குப்போய்அவரைக்கண்டுஜெயா,நீலத்துவசமகா
ராசாவே முன்னால் அந்தஅர்ச்சுனராசனைச் செயிக்கமுடியாது உம்மு
டைய உத்தாரப்படிக்கு அந்த வர்ச்சுனராசனுடைய சேனைகளையெல்
லாம் எரித்துப்பஸ்மீகரப் படுத்துகிறபோது அந்தவர்ச்சுன ராசனு
ம் கோபித்து அவன்கையிற் பிடித்திராநின்ற காண்டீபத்தில் நாராய
ணாஸ்திரத்தைத்தொடுத்துப் பிரயோகிக்கும்படி பிரயத்தனஞ் செய்
தான்அதுகண்டுநான் பயமடைந்து அந்தவர்ச்சுனராசனுடனே சிநே
கம்பண்ணிக்கொண்டு என்னுடைய ஜுவாலையில்எரிந்துபோய் விட்
டவனுடைய சேனைகளை யெல்லாம் பிழைக்கச்செய்து நான்மாத்திர
ம் சாகாமல் தப்பிப்பிழைத்துவந்தேனென்றேன் அந்தவர்ச்சுனராசன்
வீராதிவீரன் அவனுடனேஎதிர்த்துப் போராடுகிறது (ஸ்ரீகயிலாசப
தியாகிய பரமசிவனுக்கும்) சக்கியமல்லவதுவல்லாமல் தேவேந்திராதி
தேவர்களையுங்செலித்தவன் என்னுடையஅசீர்ணரோகத்தையு நிவிர்த்தி
செய்தவன் அப்படிப்பட்ட மகானுபாவனுடனே நீர்துவேஷம் பண்
ணுமலவனைச்சிநேகம்பண்ணிக்கொண்டவனுடைய அஸ்வமேதக்குதி
ரையையும் காணிக்கைகப்பங்களையுங் கொண்டுபோய்ச் செலுத்திசமா
தானம்பண்ணிக் கொள்ளுமென்றுசொன்னனந்தவார்த்தைகளை யெல்
லாம் நீலத்துவசமகாராசன் கேள்விப்பட்டு மெய்தானென்று சம்ம
தித்துவனேகமாயிரந்தங்கத்தட்டுகளில் நவரத்தினங்களையும்பழவகை
களையும் எடுப்பித்துக்கொண்டுவந்த அஸ்வமேதக்குதிரையையுங்கூட்
டிக்கொண்டுசிலசேனைகளுடனே பட்டணத்தைவிட்டுப் புறப்பட்டா
னதுகேட்டுநீலத்துவசமகாராசன் பெண்சாதியாகிய சுவாகாதேவியும்
குறுக்கேவந்துமறித்துக் கொண்டுஓய் பிராணநாயகா, நீர்இப்போது
நடக்கிறகாரியம்எனக்குஎவ்வளவும்நன்றா யிருக்கவில்லை பூலோகத்தில்
உத்தமக்ஷத்திரியராயிருக்கப்பட்டவர்கள் ஒரு சங்கதியைப்பற்றி ஏதா
கிலும் சபதம்பண்ணிக் கொண்டாலதைத்தப்பி நடப்பார்களோ ஒரு
நாளும்சபதம்தப்பிநடவார்களப்படியாக மிஞ்சி வருங் காலத்தில்தங்
களுடைய பிராணனையாவதுதியாகஞ்செய்து சத்தியத்தையே நிலைநி
றுத்துவார்களப்படிக்கிருக்கதேவரீர் க்ஷத்திரியவம்சத்திற் பிறந்தவரா
யிருந்துமந்தவர்ச்சுனனுடையகுதிரையைமுன்பின்எண்ணிப்பாராமல்
பதட்டமாகப் பிடித்துக்கட்டி விட்டு மறுபடியுமவனோடெதிர்த்

துப்போராடித்திரும்பவு மவனைச்செயிக்கமுடியாமல் பயந்துஓடிவ
ந் தபகீர்த்திக் குள்ளாகி பின்னுமவன் குதிரையுங் காணிக்கைக்கப்ப
ங்களும் கொண்டுபோய்க்கொடுத்து உபசாரவார்த்தைகள்சொல்லிசி
நேகம்பண்ணிக்கொள்ளுகிறதுராசநீதியோ, இந்தசங்கதியைஉம்மைப்
போன்ற ராஜாக்கள்கேள்விப்பட்டால்பரிகாசபண்ணமாட்டார்களோ
இப்படிப்பட்ட பரிகாசத்துக்கிடமானகாரியஞ் செய்கிறதைபார்க்கி
லு மந்தவர்ச்சுனனுடனே எதிர்த்துநின்று யுத்தஞ்செய் துரணக்களத்
தில் மடிந்துபோனாலும் வீரசொர்க்கமுண்டாகு மதனால்வருங்கீர்த்தி
யுமுண்டு ஆகையால்நீர்எப்போதும்போலேயந்த அஸ்வமேதக்குதிரை
யை யரண்மனையிற்கட்டிவிட்டுயுத்தசன்னத்தராய் ரணக்களத்திற்போ
யர்ச்சுனமகாராசனுடனேபோராடியவனைக்கொன்றுபேரும் பிரக்கியா
தியும்படைத்துக்கொள்ளுமென்றுசொல்லவதுகேட்டுநீலத் துவசமகா
ராசனுமப்படியேநல்லதென்று சம்மதித்துத்திரும்பவு மந்தக்குதிரை
யைக்கொண்டுவந்து தன்னுடையவரண்மனையிற் கட்டிவைத்து தன்னு
டையமந்திரிபிரதானிகளையும்தம்பிமார் மாமன்மைத்துனன் குமாரவ
ர்க்கங்கள் பந்துவர்க்கங்கள்முதலானவர்களையுங் கூட்டிக்கொண்டு தான்
யுத்தசன்னத்தனாய்ரதாரூடனாய்ப்பட்டணத்தைவிட்டுப் புறப்பட்டுவந்
துவர்ச்சுனராசனுடையசேனைகளுடனேஎதிர்த்து வனேகமாயிரம்சஸ்
திரங்களைப்பிரயோகஞ்செய்தான்.

அதுகண்டுவர்ச்சுனராசனும் சற்றுநேரம் ஆலோசனை செய்தந்த
வக்கினிதேவன்சமாதானம்பண்ணிவைக்கிறேனென்று சொல்லிப்போ
னதென்ன,இவன்சண்டைக்குவந்ததென்ன அவன்பேச்சைக் கேளாமல்
நம்மைச்செயிக்கலாமென்றுநினைத்து வந்தவனாகவேண்டும் ஆனாலும்
ஆகட்டும்இப்போதுஎன்பாணமென்கிறசொல்லினாலே இந்தராசாவை
க்கேட்பிக்கிறேனென்றுசொல்லிமகாரோஷத்துவேஷனாய்த்தன்னுடை
யகையிற்பிடித்திராநின்றகாண்டீபத்தில்தேவேந்திராதிதேவர்கள் கொ
டுத்ததிவ்ய பாணங்களைத்தொடுத்து நீலத்துவசமகா ராசாவினுடைய
சேனைகளின்பேரில்பிரயோகஞ்செய்து அந்த சேனைக ளெல்லாம்பெ
ருங்காற்றினாலடிப்பட்டமாந்தளிர்கள் போல பூமியில் விழுந்திறக்கும்
படிசெய்தான் அதுகண்டு நீலத்துவசமகாராசனுங் கோபங்கொண்டு
வர்ச்சுனராசன்பேரில் தன்னுடைய ரதத்தைத்தூண்டி வனேகமாயிர
ம்பாணங்களைப்பிரயோசஞ்செய்தான்அதுகண்டு வர்ச்சுனராசனும்அ
திக ரோஷத்துடனே தன்னுடை காண்டீபத்தில் குரூரமானநாராசங்களை
த்தொடுத்துப்பிரயோசஞ்செய்து அந்தநீலந்துவச மகாராசனுடைய
மார்பிலேதைக்கும்படிசெய்தான் அதனாலந்தநீலத்துவசனும்ஆயாசம
டைந்து தொப்பென்றுதேரின்பேரில்விழுந்துமூர்ச்சையடைந்தான்அ
துகண்டு வவனுடையசாரதியும்தேரைநடத்திக்கொண்டு பட்டணமே
போய்ச்சேர்ந்தான்.

அப்பொழுதுசூரியபகவானும்மேற்குத்திசையில்அஸ்தமானமா

னார்உடனேசந்திரோதயமுண்டாயிற்று. தடாகங்களிலுள்ள தாமரைப்பு
ஷ்பங்களெல்லாமூடிக்கொண்டது செங்கழுநீர் புஷ்பங்களெல்லாமலர்
ந்தது அதிலேநீலத்துவசமகாராசனும் மூர்ச்சைதெளிந் தெழுந்திருந்
து தன்னுடையரதசாரதியைப்பார்த்துஓய்சாரதிநீயென் தேரைக்கொ
ண்டுவந்துவிட்டாயென்றுகேட்கஅதற்குஅந்தரதசாரதியும் தன்னுடைய
ராசனைப்பார்த்து ஐயா, ராசசேகரா, நீர்யுத்தமுகத்தில்நிர்வகிக்கமா
ட்டாமல்மூர்ச்சையடைந்து ரதத்தின்பேரில்விழுந்து விட்டபடியினா
ல்நான்ரதத்தைக்கொண்டுவந்து விட்டேனென்றுசொல்லஅதுகேட்டு
நீலத்துவசமகாராசனும் சந்தேர்ஷிசித்தனாய்த்தன்னைத்தானேநிந்தித்துக்
கொண்டுஐயையோ,யென்மருமகனாகிய அக்கினிதேவன் பேச்சைக்கே
ட்டுச்சும்மாயிராமல் பாதகியாகியபெண்சாதிபேச்சைக்கேட்டுப் பிள்
ளைகளையும் தம்பிமார்களையுந் பந்துவர்க்கங்களையும் கொன்றுவிட்டே
னென்று சொல்லி மனந் தளர்ந்து தன்பெண்சாதியாகிய சுவாலாதே
வியிடத்திற்குப்போய் அவளைப்பார்த்துமகாகோபங்கொண்டு அடிப
சாசே,உன்னுடைய பேச்சைக்கேட்டுநான்பயித்தியக்காரனாய்ப்போ
ய்விட்டேன்இனிநீ இருந்தால்என்னுடைய அரண்மனையும்அஸ்தான
மும்அழிந்துபோம்ஆகையால் நீ இங்கேயிருக்கவேண்டாம் எங்கேயா
கிலும் ஓடிப்போவென்று சொல்லஅதற்குஅந்த சுவாலாதேவியும்நா
னேன்என்வீட்டை விட்டுப்போவேன் நான்போகிற தில்லையென்று
சொல்ல அதுகேட்டு அந்தராசனும் அவளை அடித்துக் கழுத்தைப்பி
டித்துத்தள்ளிக்கொண்டுபோய்பட்டணத்திற்குவெளியிலேதள்ளிவிட்
டுபிற்பாடுஅந்தநீலத்துவசமகாராசனும் தன்னுடைய அரண்மனைக்கு
வந்துஅஸ்வமேதக்குதிரையைப்பிடித்துக் கொண்டுசிறிது காணிக்கை
கப்பங்களையும்எடுத்துக்கொண்டுபோய் அந்தஅர்ச்சுன ராசனுக்குமு
ன்பாகவைத்துஅவனைத்தழுவிக்கொண்டு ஓய் அர்ச்சுனராசனே நான்
உன்னுடையசினேகம் வேண்டிவந்தேன் நானும்என்னுடைய புத்திர
மித்திரகளத்திராதிகளும் உங்களுடைய அடிமையா யிருக்கின்றோமெ
ன்றுஅநேகம் சமாதான வார்த்தைகள் சொல்ல அதுகேட்டு அந்தஅ
ர்ச்சுனராசனும் அப்படியே நல்லதென்று சம்மதித்து மாகிருஷ்ணப
திபட்டணத்துக்கதிபதியாகிய நீலத்துவச மகாராசாவைப்பார்த்துஓ
ய்ராசேந்திரா நீர்எங்களுடைய சினேகத்தை வேண்டிவந்தது மெய்யா
னால்எங்களுடனேகூடபடைத்துணையாய்வர வேண்டுமென்று சொல்ல
அப்படியேநல்லதென்று அந்தநீலத்துவசனும் சம்மதித்துப் பட்ட
ணத்திற்குப்போய் மறுநாள்அந்தராசனும் தன்னுடைய சேனைகளுட
னேபுறப்பட்டுவந்து அர்ச்சுன ராசனுடனே கலந்துகொண்டான் அ
துகண்டுஅந்தஅர்ச்சுனராசனும்அஸ்வமேதக் குதிரையைவிட்டு அதி
ன்பிறகேசகலசேனாசமுத்திரங்களோடும்மகாஆடம்பரத்துடனே பதி
னெட்டுமேளவாத்தியங்களு முழங்கத்தக்கதாகநடந்தான்,

(சுவாலாதேவி உல்முகராசனிடத்திற்போந்தது)

---

அப்பால் இவிடத்தில் அந்தசுவாலாதேவியானவள் தன்புருஷன் அடித்துத்துரத்தி விட்டபடியினால் மகா துக்கத்துடனே போய் காசிப்பட்டணஞ்சேர்ந்து அந்தப் பட்டணத்தை அரசாக்ஷி செய்கிறவன்தமையனுகிய (உல்முகனென்கிற ராசனைக்கண்டு) கூகாவென்று கூச்சலிட்டுமாளிகையில் அறைந்துக்கொண்டு அவன் பாதத்தில் விழுந்து கண்ணீர்தாரை தாரையா யொழுகும்படியாக அழுதாள் அதுகண்டு அந்தஉல்முகனும் தன்தங்கையாகியசுவாலாதேவியைப்பார்த்துஒய்அம்மாசுவாலாதேவி நீயேன்அழுகிருய்உனக்குஎன்ன குறைவு சொல்லென்றுகேட்க அதுகேட்டு சுவாலா தேவியும் ஒய் அண்ணு வீ என்துக்கத்தையென்னவென்று சொல்லப்போகிறேன் நான்என்கணவனுகியநீலத்துவசமகாராசனுடனேஒருவார்த்தைசொன்னேன் அந்த வார்த்தைக்காகஅவர் என்மயிரைப் பிடித்து இழுத்து அடித்துத்தள்ளி எங்கேயாகிலும்போய்விடென்றுஎன்னை ஒட்டிவிட்டார். ஐயையோ. இதென்னபாவம் என்முறையைக்கேட்டு அவரைத் தண்டனைகண்டனைசெய்கின்றவர்கள் ஒருவரும் இந்தப்பூமியின்கண் இல்லையோ வென்று மிகுந்தஅழுகையுடனேசொல்ல அதுகேட்டு அந்தஉல்முகனும் பதறிப்பேசாமல் தன்னுடைய தங்கையைப்பார்த்து ஒய் அம்மாஅவர்அப்படிப்பட்டகஸ்திப்படுத்தினும் நீஇப்படிதனி வழியாய் வந்துவிடலாமோபுருஷனைவன் தன்னுடைய பெண்சாதியின்பேரில்கோபித்துக்கொண்டுஒருவேளை அடித்தாலும் திட்டினும் வீட்டுக் குள்ளே தானேயிருந்துக்கொண்டு சாதிக்கவேண்டு மேயல்லாமல் சமுசாரியானவள் இப்படி வரப்போகாதுநல்லது நீபேய்வேலை பண்ணி வந்துவிட்டாய் ஆனுலு மாகட்டும் மாமிவீட்டுப்பெண் தாய்வீட்டுக்கு வரலாம் தாய்வீட்டுப்பெண் மாமிவீட்டுக்குப்போகலாம் ஆகையினல்அதற்குத்தாழ்வில்லைஒய்அம்மாநீநம்முடைய வீட்டில்தானேசுகமாயிருஉன்புருஷனுக்குக்கோபந்தீர்ந்து அவர்உன்னை அழைத்துக்கொண்டு போகிறதற்கு வந்தால்அப்போது அவரிடத்திற் சகலதிட்டமும் பண்ணிக்கொண்டுபிற்பாடுஉன்னையனுப்பிவைக்கிறேன் அம்மா வென்றுசொல்ல அந்தவசனங்களைக்கேட்டு சுவாலாதேவியும் உல்முகனைப் பார்த்துஒய்அண்ணுவீ நான் என்புருஷன் அடித்துத்துறத்தி விட்டாரென்று உன்னண்டைக்குவந்தவளல்ல பூலோகத்தில் புருஷனைவன் ஸ்திரீயின் பேரில்கோபித்துக்கொண்டால் அந்த ஸ்திரீயும் வீட்டில் தானேயிருக்கவேண்டுமேயல்லாமல் இப்படிதனிவழியேவந்து விடுகிறது நியாயமல்லஆனுலும் நீயேன்இப்படி வந்தாயென்று கேட்பீராகில் அதுவுஞ்சொல்லுகிறேன்கேளும்அஃதென்னவென்றால்,

அஸ்தினுபுரத்தை அரசாக்ஷிசெய்கிற தர்ம ராசாவானவர்அஸ்வமேதயாகம் பண்ணுகிறதற்குப் பிறயத்தினப்பட்டுகுதிரையைவிட்டு

அந்தக்குதிரையின் பிறகே அவர் தம்பியாகிய அர்ச்சுனராசனையும் இன்ன
முஞ்சிலபிரமுகாளையுஞ்சேனைகளையுங்கூட்டியனுப்பினாராம் அந்தக்கு
திரையானது எங்களுடைய மாகிஷ்மதி பட்டணத்திற்குச்சமீபத்
தில்வருகிறபோது என்புருஷனாகிய நீலத்துவச மஹா ராசன் அந்தக்
குதிரையைப்பிடித்துக் கட்டிவிட்டு அவர்கள்பேரில் சண்டைக்குபுறப்
பட்டுப்போய் அவர்களுடைய சஸ்திர அஸ்திரங்களுக்கு நிற்வகிக்கமா
ட்டாமல் முறிந்துவந்து பிற்பாடு அவர்களைச் சமாதானம் பண்ணிக்
கொள்ளும்படி நினைத்து சிலகாணிக்கை கப்பங்களையும் அந்த அஸ்
வமேதக்குதிரையுங்கொண்டுபோகுஞ் சமயத்தில் எனக்குத் தெரிந்து
நான்போய் அவரைப்போகவொட்டாமல்மறித்துக்கொண்டு அவரைப்
பார்த்து ஓய்பிராணவல்லபா, நீர் கொஞ்சமாகிலும் சவுரியபராக்கிரமமி
ல்லாமல் இப்பொழுது இந்தக்குதிரையையுங்காணிக்கை கப்பங்களையும்
அந்தஅர்ச்சுனமகாராசனுக்குக் கொண்டுபோய்க் கொடுத்து சமாதா
னம்பண்ணிக்கொள்ளுகிறதைப்பார்க்கிலும் அந்தஅர்ச்சுனனுடனேச
ண்டைசெய்துயுத்தகளத்தில் இறந்துவிட்டாலும் அதனால்உமக்குவீர
சொர்க்கமுண்டு உலகத்தில் கீர்த்திப்பிரதாபமும் உண்டென்று சொன்
னேன் அதுகேட்டு என்புருஷனும் அப்படியே நல்லதென்று சம்மதி
த்து புத்திரமித்திரகளத்திராதிகளுடனுங்கூடிக் கொண்டுபோய் அந்தஅ
ர்ச்சுனனுடனேபோராடி அவர்களெல்லாரையும் பறிகொடுத்துதானும்
மூர்ச்சையாய் அரண்மனைக்குவந்து பிற்பாடு என்னைப் பார்த்து அடி நீலி
உன்பேச்சைக்கேட்டுக்கெட்டேனே யென்றுசொல்லி என்னையடித்து
த்துரத்திவிட்டார் அதற்கு நான் விசாரப்படவில்லை அந்தஅர்ச்சுனரா
சனவன் யாகம்பண்ணினால் சுகமாய் தன்பட்டணத்தில் மாத்திரம்
குதிரையைச் சுற்றுவித்து யாகஞ்செய்து முடிக்கவேண்டுமே யல்லா
மல் இப்படி சீமைகளின் பேரில் குதிரையை விட்டு அந்தக் குதிரை
யினுடைய நெத்தியில்விருதென்று ஒன்றையெழுதிக் கட்டலாமோ அ
ல்லாமலும் அதையாவது வாசித்துப்பார்த்துக் குதிரையைப் பிடித்து
க் கட்டினால் அவர்களையும் அவர்கள் சேனைகளையுங் கொன்று விடலா
மோ அதுவுமல்லாமல் என்னுடைய புத்திரபௌத்திராதிகளையும் பந்
துவர்க்கங்களையு மவன் ஏன்கொன்றுவிட்டான் ஆகையினால் அந்தப்ப
கை யானது என்மனதிலிருக்கின்றது நீ இப்பொழுதுதானே உன்சே
னைகளுடனே யுத்தசன்னத்தனாய் ரதமேறிக்கொண்டு புறப்பட்டந்தவ
ர்ச்சுனனுக் கெதிரேபோய்மறித்துக்கொண்டுபிரசண்டயுத்தஞ்செய்து
அந்த வர்ச்சுனராசனையும் அவன்சேனைகளையுஞ் சின்னாபின்னப் படுத்
தி என்மனதையுஞ் சந்தோஷப்படுத்து மென்றுசொல்ல அதுகேட்டு அ
ந்த உல்முகனும் தீர்க்கஆலோசனைசெய்து ஓய்அம்மா அப்படியே ந
ல்லது அந்த அர்ச்சுனராசன் நம்முடைய பட்டணத்திற்கு வந்தானே
யாகில் அப்பொழுது உன்கருத்தின்படியே அவனோடு போராடி அவ
னையும் அவன்சேனைகளையுந் தும்சப்படுத்தி உன்மனதைச் சந்தோஷி

ப்படுத்துகிறேன் நீஇப்பொழுது அந்தப்புரத்திற்குப்போயிரு அம்மா வென்றுசொல்ல அதுகேளாமல் சுவாலாதேவியானவள் பின்னையுஞ்சலமாய்ப்பிடித்து ஓய்அண்ணாவீ அந்தஅர்ச்சுனன் இங்கேவருகிறதேதுநீஅவனைச்செயிக்கிறதேது அதுவிருதாவானவார்த்தை அப்படி சொல்லுகிறது எனக்குசம்மதமல்லநீஇந்தக்ஷணமேபோய் அவனுடனேபோராடிஅவனைக்கொன்றாலாச்சுது இல்லாவிட்டால்நான் உன்வீட்டிலுமிருக்கிறதில்லை எங்கேயாகிலும்போய்விடுகிறேனென்றுஒரேபிடியாய்பிடித்துக்கொண்டுநிற்க அதுகண்டுஉல்முகனும் மகாகோபங்கொண்டுஓய்அம்மாநீயேன்என்பேச்சைக்கேளாமல்இப்படிசலமாய்ப்பிடித்துக்கொண்டுநிற்கிறாய் நீஎத்தனை குரூரகர்ம்மி இப்படிதானே அந்தநீலத்துவசனுடனே போராடிஅவனையும்அவன்பந்துவர்க்கங்களையும்கெடுத்து ஒண்டியாக்கிவிட்டாய் இப்போது என்னிடத்திற்குவந்து என்னோடு போராட்டஞ்செய்து என்னையும் என்சேனைகளையுங்கொல்லுவிக்கத்துணிந்திருக்கிறாய் ஆகையினால் இனிமேல்உன்முகத்தைப்பார்க்கிறதில்லை அல்லாமலுல் மாமியார்வீட்டிலிருந்து தனிவழியேவந்தவளைவீட்டில்வைத்துக்கொண்டானென்கிறஅபகீர்த்தியும்எனக்குச்சம்பவித்தது நீபிறந்தவீட்டிற்கும் புகுந்தவீட்டிற்கும் புழுவாய்த்தோன்றினாய் அடிதோஷிநீஇங்கேயுமிருக்கவேண்டாம்எங்கேயாகிலும்போய்விடென்றுசொல்ல அந்தவசனங்களைச்சுவாலாதேவியுங்கேட்டுமகாதுக்கப்பட்டுஓய்அண்ணாவீ நான்பிறந்து உங்கள்இரண்டுவீட்டிற்கும்ஆபத்துநேரிட்டதல்லவோ ஆதலால்நான்எங்கேயாகிலும்போய்ாகிறேன்இனியாகிலும் நீங்ாள்சுகப்படுங்கோ ளென்றுசொல்லி அவிடம்விட்டு சங்காநதியில்விழுந்துசாவோமென்றெண்ணிக்கொண்டு சங்கைக்கரையோரமாய்வருகிறபோது தனக்குத்தானேயோசனை செய்துக்கொண்டு அந்த அர்ச்சுனனைக்கொல்லுகிறதற்குஒருவகையுமில்லாமல் போச்சுதல்லவோவென்றுதாபந்திரியப்பட்டு பின்புஆலோசனை பிரிந்துதான்செத்தாலும் அந்தஅர்ச்சுனன்சாகிறதற்குஉபாயஞ்செய்துவிட்டு பிறகுதானுஞ்சாகிறதென்று நிச்சயப்படுத்திக்கொண்டுஅந்தசுவாலாதேவியானவள் சங்கைக்கரையிலோரமாய் நடந்துபோகையில் அந்தநதியினுடைய அலையானதுவந்துஇவள்காலில்பட்டது அப்படிப்பட்டவுடனே சுவாலாதேவியானவள் தன்காலையுதறிஐயையோஇந்தப்பாவியானகங்கைவந்து என்காலைத்தீண்டினாளே இதற்கென்னசெய்வேன்முன்னமேநான்நினைத்தகாரியம் ஆகாமலிருக்கின்றது அதுவும்போதாமல்எனக்குஇதுவும்ஒருகர்மம்வந்துசம்பவித்ததே இதற்கென்னபரியாயஞ்செய்கிறதுநான்எந்தஇடத்திற்குப்போய்ஸ்நானம்பண்ணிஇவளைத்தீண்டினபாதகத்தைபோக்கடித்துக்கொள்ளப்போகிறேன்நானறியாமல்இந்ததோழியாகிய கங்கைக்கரையிலோரமாய்வந்து விட்டேனே இவளைப்பரிசித்ததினால் மகத்தாகியபாதகம்வந்துஅநுசரித்ததே இதற்கென்ன செய்யப்போகிறேனென்றுவிசாரப்பட்டுக்கொண்டிருக்க அந்தச்சமயத்தில் வெகுதூரத்திலிருந்துபு

றப்பட்டு அந்தக்கங்காநதியில்ஸ்நானம்பண்ணி பிர்மஹத்திமுதலியம
காபாதகங்களையெல்லாம்நிக்கிரகித்துபரமபவித்திரராகும்படிவிரும்பி
வந்ததபோதனர்கள் பிர்மரிஷிகள் முதலானசகலமானசனங்களும்அந்த
பாதகியாகியசுவாலாதேவிசொல்லுகிறபாபவார்த்தைகளையெல்லாங்கே
ட்டுப்பயங்கொண்டுஅந்தப்பயித்தியக்காரர்களும்அவள்சொன்னவார்த்
தைகளைச்சூதென்றெண்ணாமல் உண்மையாகநினைத்துக்கொண்டுஐயை
யோநாங்களிந்தசவிஸ்தாரந்தெரியாமல்வெகுதூரதேசங்களிலிருந்துஅ
லைச்சல்பட்டுவந்துசேர்ந்தோமேயென்று தாபந்திரியப்பட்டுக்கொண்
டுதாங்கள்கொண்டுவந்தமடிசஞ்சிகளைக்கட்டிமேலே போட்டுக்கொண்
டுபூசைப்பொட்டகங்களைஎடுத்துத்தூக்கிட்டுக்கொண்டு அந்தகங்காதீர்
த்தத்தைவிட்டுவிலகிஅப்புரத்திற்போய்நின்றார்கள்.

அப்பொழுது அந்தசங் காதேவியானவள் சண்டாளி யாகிய சு
வாலாதேவிசொன்ன வசனங்களை யுங்கேட்டு உண்மையென்று நம்பி
ன புத்தியில்லாதஅந்தப்பயித்தியகார ரிஷிகள் முதலியசகல சனங்களு
ஞ்சொல்லிக்கொண்ட வசனங்களையுங் கேள்விப்பட்டு நடுநடுங்கிமிகு
ந்த விசாரமடைந்துஐயையோசகலபாவங்களும்என்னைக்கண்ட மாத்தி
ரத்திற்பறந்துபோய்விடுமே அப்படிப்பட்டஎன்னைஇந்தசுவா லாதே
வியானவள் இப்படிசொல்லுவானேன் ஆனாலும் நம்மையறியாமற்ப
டிக்கு என்னபாதகம் வந்திருக்கிறதோ அதைத் தெரிந்து கொள்ளவே
ண்டுமென்று ஆலோசித்து அந்தக்சங்காதேவியானவள் ஸ்திரீ ரூபந் த
ரித்துக் கொண்டு வெளியே வந்து அந்தசுவாலா தேவியைப் பார்த்
து ஓய்அம்மா சுவாலாதேவீ நீ என்னைப்பாபிஷ்டி யென்றுசொன்
னாயே நான்என்னபாவம் பண்ணினேன் சகல லோகங் களிலுள்ளவர்க
ளுஞ்செய்கிறபாவங்களையெல்லாந் தொலைப்பித்து அவர்களைப் பரிசுத்
தர்களாகச்செய்கிறயென்னைஇப்படி சொல்லலா மாஅதையெனக்குச்ச
த்தேதெரியப்பண்ணுமம்மாநான்சங்காதேவி யென்றுபிரியவசனமாக
ச்சொல்ல அதுகேட்டு சுவாலாதேவியும் அவளை ரோஷினாற்போல இ
டைந்துநின்று அடிபாதகி நீஅப்பாலேபோடீ உன்னைப்பார்த்த பேர்
களுக்கும்அநேகம்பாவ முண்டுஉன்னுடனே பேச வும்போகாது அடீ
பாபிஷ்டீ அப்புறத்தே போடி யென்று அதட்டிச் சொல்ல அதுகே
ட்டுசங்காதேவி மெத்தவும் பயமடைந்து அடிஅம்மா சுவாலா தேவி
உனக்குசரணம் சரணம் நான்செய்திருக்கிற பாதக மின்ன தென்றெ
னக்குகிஞ்சித்தாகிலும்தோற்ற வில்லை அதையெனக்கு நன்றாய்த் தெ
ரியும்படிசொல்லவேண்டுமம்மாவென்று மெத்தவுந் தாபந்திரியமாய்க்
கேட்க அதற்குசுவாலாதேவியும்தன்பகையைமுன்னிட்டுக்கொண்டுஅந்
தசங்காதேவியைப்பார்த்துஅடிசங்காநீபண்ணினபாதகம்உனக்குத்தெ
ரியாதோநீமறந்துபோய்விட்டாயோஆனால் சொல்லு கிறேன் கேள்நீ
பெற்றபிள்ளைகளைக்கொன்றுவிடுகிறவள் குழந்தையாயிருக்கிறபோதுக
ழுத்தைப்பிசைந்துதண்ணீரில்போட்டுக்கொன்றபாவி நீயல்லவோபெ

ற்றபிள்ளைகளைக்கொன்றுவிடுகிறபாபிகள்இந்தப்பூலோகத்திலெவர்களா கிலுமுண்டோ அதுவல்லாமல் கடைசியில் உனக்கு ஒருபிள்ளை பீஷ் மனென்பவன்உப்புப்பானையைப்போலதப்பிப்பிழைத்திருந்தால்அவ னையுங்கபடத்தினால்சிகண்டி கொன்றுவிட்டானென்றுபேர்வைத்துஅந் தஅர்ச்சுனமகாராசன்கொன்றுவிட்டுப் போனான்அப்படி பிள்ளையைக் கொன்றஅந்தப்பகையாளியாகியஅர்ச்சுனராசன்சுகமா யிருக்கநீசற்று கிலும்விசனமில்லாமலிருக்கிறாயாகையினாலும்பிள்ளையில்லாதவர்கள்பா பிஷ்டிகளென்றுதர்மசாஸ்திரங்கள்சொல்லுகின்றபடியினாலும்உன்னைப் பாதகியென்றுசொன்னேனென்றுசொல்ல அதுகேட்டுசங்காதேவியும் மெய்தானென்றுசம்மதித்துமகாகோபங்கொண்டவளாய்அந்தசுவாலா தேவியைப்பார்த்துஅடிஅம்மாஇந்தச்சங்கதியைஇதுவரையிலும்நான றியமாட்டேன்இப்பொழுதுநீசொல்லக்கேட்டேன்ஆகையினால் என்பு த்திரனாகியபீஷ்மனைக்கொன்றஅந்தஅர்ச்சுனனும்இன்னம்ஆறுமாசத்திற் குள் அவன்பிள்ளைகையில்இறந்துபோகக்கடவனென்றுசாபமிட்டாள்அ துகேட்டுசுவாலாதேவியும்மகாசந்தோஷப்பட்டு ஓய்சங்காதேவீ இனி மேல்நீபுண்ணியவதியென்றுசொல்லிவெகுவாய் தோத்திரஞ்செய்துஅ ந்தப்பாதகியும் கங்காதீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினாள் இதுசங்கதிக ளைக்கேட்டுக்கொண்டுஅங்கிருந்தபிரமரிஷிகள் முதலானசகலஜனங்களு ம்சந்தேகந்தீர்ந்துஅந்தநதியில்ஸ்நானம்பண்ணிதங்கள் தங்கள்இருப்பி டத்திற்குப்போனார்கள்,

அதன்பிறகுசுவாலாதேவியும் இனியெப்படியாகிலும் அந்த அர் ச்சுனனைக்கொன்றுபகையை முடிக்கிறதே யெனக்குக் கீர்த்தியென்று சொல்லிஅவிடத்தில் அக்கினியை வளர்த்திக்கொண்டு அந்த அக்கினி யில்விழுந்து சரீரத்தை விட்டு அஸ்திர வுருவமெடுத்து மணிபுரமென் னும்பட்டணத்தையரசாக்ஷிசெய்கின்ற(பப்பிரவாகனுடைய) அம்புறா த்தூணியிற்போய்ப்புகுந்துக்கொண்டு அர்ச்சுனராசன் எப்பொழுது வரப்போகிறானென்றுசமயம்பார்த்துக் கொண்டிருந்தாள் கேட்டீரோ ஜெனமேஜெயமஹாராசாவேஇதுவரையில் சுவாலாதேவியி னுடைய சவிஸ்தாரஞ்சொன்னோமல்லவோ,இனிமேல் அஸ்வமேதக்குதிரையின் பிறகேபோகிறஅர்ச்சுனராசனுடைய சரித்திரத்தைச்சொல்லுகிறோம் கேளுமையா வென்றுசெயமுனீந்திரனென்னுமஹாரிஷியானவர்சொல் லத்தொடங்கினார்,

கேளும்செனமேஜெயமஹாராசாவே அப்பாலந்த அஸ்வமேதக் குதிரையானதுதெற்குமுகமாய்ப் போகிறபோது அந்தக்குதிரையை ச்சூழ்ந்துபதினாயிரஞ்சேவகர்கள்பாதுகாத்துக் கொண்டு போனார்கள் அவர்களுக்குப்பிறகேஅர்ச்சுனராசன்-அஷ்வகேது-பிரத்தியுமன்னன்- மேகவர்னன்,அனுசாளுவன்-எவ்வனாசுவன்- நீலத்துவசன்.இவர்களு டனேசகலசேனா சமுத்திரங்களும் புடைசூழ்ந்து வரத்தக்கதாக நடக் கிறபொழுது அந்தக்குதிரையும் நடந்து வனங்கள் வனாந்தரங்கள் கா

டுகள்செடிகள் ஆறுகள் கழிகள் மடுக்கள் தேசங்கள் பட்டணங்கள்மலை
கள்குன்றுகள் மேடுகள்பள்ளங்கள் இதுமுதலிய இடங்களெல்லாங்கடந்
துபோய்விந்தியபர்வதத்திற்குச் சமீபத்தில் நடக்கையில் சரீரம் நுனை
வெடுத்தபடியினால்அவிடத்தில் ஒருபெரியபிர மாண்டமாகிய குத்துக்
கல்லைக்கண்டு அஸ்வமேதக்குதிரையானது அந்தக்கல்லின்பேரில் தன்னு
டைய சரீரத்தினவு அடங்கும்படியாகத் தேய்த்துக்கொண்டது அதனா
ல்அந்தக்குதிரையும் கல்லோடுகல்லாய்ஒட்டிக்கொண்டுகொஞ்சமாகிலு
ங்கைகால்முதலிய அவயவங்களை அசைத்தற்கிடமில்லாமல்அங்கேதா
னே நின்றுவிட்டது. அதுகண்டுஅந்தக்குதிரையின்பிறகேவந்தசேவகர்
களெல்லாம்பயந்து இதுவென்ன காரணமென்று கையைமுறித்துக்கொ
ண்டு அந்தக்குதிரையினண்டைக்குப் போய்அதை அதட்டியும், அடித்
தும், இழுத்தும், குந்தத்தினாலிடித்தும் இப்படி அனேகவிதமான உப
த்திரவஞ்செய்தார்கள் - அப்படிசெய்தும் அந்தக்குதிரையானதுஎவ்
வளவும் அசையாமல் கல்லைப்போலுமிருந்தது-அதுகண்டுஅந்தசேவ
கர்களெல்லாரும்மிகவும்பயந்தோடிவந்து அர்ச்சுனமஹாராஜனைக்க
ண்டுதெண்டனிட்டுஜெய்ஜயா, கிரீடிநாங்கள்குதிரையைமுன்னேநடத்திக்
கொண்டு எல்லோரும் சாக்கிரதையாகப் பின்னேநடந்துபோகையில்,
அந்தக்குதிரையானது விந்தியபர்வதத்திற்குக் சமீபத்தில் ஒருகுத்துக்
கல்லைக்கண்டு அதிலுராய்ந்துக்கொண்டு அந்தக்கல்லோடுகல்லாய்ஒட்டி
க்கொண்டுபோய்விட்டது. அதைக்கண்டுநாங்கள்வெகுபிரயாசைப்ப
ட்டு அடித்தும்பார்த்தோம்,இழுத்தும்பார்த்தோம், அதையென்னசெ
ய்தும்கல்லோடுகல்லாய் ஒட்டிக்கொண்டிருக்கின்றதேயல்லாமல் சற்றா
கிலும் அசையவில்லை சுவாமியென்றுசொல்ல,அதுகேட்டு அர்ச்சுனம
ஹாராஜனும் ம ஸ்தாபமடைந்து ஐயையோ? இது என்னபாவம் தர்
மநந்தனர்செய்கிறயாகத்திற்குவிக்கி ம்நேரிட்டதல்லவோவென்றுதன
க்குள்ளேதானே நினைத்துவிசாரப்பட்டுக்கொண்டு அந்தக்குதிரையின
ண்டைக்குவந்து அதைப்பார்த்துஆச்சரியமடைந்துஇதென்னவிபரீத
முண்டாயிற்றென்று சொல்லி அங்கிருந்தசேவகர்களைவிட்டு இழுக்கச்
சொல்லியும்- இப்படிநானாவிதமான தந்திரயுக்திகளைச்செய்தும் அந்த
க்குதிரையானது அசையாமல் கல்லைப்போலஇருந்துவிட்டது- அதுக
ண்டர்ச்சுனராசனும் சிந்தாக்கிரந்தனாய் யோசனைசெய்து இது என்ன
காரணத்தினாலேயோ இப்படியிருக்கின்றது ஒன்றுந்தெரியவில்லை இதி
ல்ஏதோஒருவிந்தையுண்டா யிருக்கும்போலத் தோற்றுகின்றது, அந்த
விந்தையைஇந்தவனாந்திரத்தி லிருந்துதபசுசெய்கிற யோகீஸ்வரர்களை
க்கண்டுசேவித்துஅவர்கள்முகாந்திரமா யிந்தவகையைத்தெரிந்துகொ
ள்ளவேண்டுமென்று நினைத்துதன்னோடிருக்கின்ற சேனைகளையெல்லா
மவிடத்தில்தானேநிறுத்திவிட்டு அங்கிருக்கிறகாய்கனிகளைக்கொள்ளையி
டாமலும்புஷ்பவகைகளைப்பறிக்காமலும் பத்திரமாய்க்காத்துக்கொண்
டிருக்கும்படிசேனைகளுக்கெல்லாந் திட்டஞ்செய்துவிட்டு-விஷ்வகேது

எவ்வர்ஜுசுவன். நீலத்துவசன்- அனுசாலுவனிவர்கள்நால்வரையுந்தன்
னோடழைத்துக்கொண்டர்ச்சுன மஹாராஜனானவன்அந்தவனத்துற்பு
குந்துபோய் அங்கங்கேயிருக்கிற விசித்திரங்களையும் புலிகளும் மா
ன்குட்டிகளும் ஒன்றுக்கொன்று விரோதமில்லாமல் கலந்து விளையாடு
கின்றதையும், மயில்களும், பாம்புகளும், ஒன்றாய்க்கூடிச்சினேகித்திரு
க்கின்றதையும், சிங்கங்களும், யானைகளுங்கூடிக்கொண்டு பந்தடிக்கின்
றதையும்,வண்டுகளும்,தும்பிகளும்,சுகந்தமாகிய புஷ்பங்களைபறித்துக்
கொண்டுவந்துரிஷிகளிடத்தல்கொடுத்து தேவதார்ச்சனை பண்ணுவிப்
பதையும்இன்னுமிப்படிப்பட்ட வனேகவிசித்திரமான அதிசயங்க
ளைப்பார்த்து ஆச்சரியகரமாய் ஒருவர்க்கொருவர் சந்தோஷிப் பட்டுக்
கொண்டுவன்னிமரங்கள் பனைமரங்கள்-மாமரங்கள்- பலாமரங்கள் ஈச்ச
மரங்கள்-அரசமரங்கள் திராக்ஷமரங்கள்-எலுமிச்சமரங்கள் - நாரத்தை
மரங்கள்-மாதளமரங்கள்-புன்னைமரங்கள்-சந்தனமரங்கள்- வேங்கைமர
ங்கள்-இன்னுமிப்படிப்பட்ட வனந்தவிதமான விருக்ஷங்களும்,பூத்து
ம்காய்த்தும்பழுத்துமலங்காரமாயிருக்கின்றதைப்பார்த்துசந்தோஷம
டைந்துபின்னையும் மல்லிகைமுல்லை இருவாக்ஷி- சண்பகம் தாமரைசா
மந்தி-மருக்கொழுந்துபாரிசாதம்- கொன்றையின்னும் இப்படிப்பட்
டஅனேகவகையானபுஷ்பசாதிகளும் புஷ்பித்தது லுண்டான தேன்கள்
பெருகிஆறுபோடுகின்றதையும்பார்த்துசந்தோஷிப் பட்டுக் கொண்டு
நடக்கும்பொழுது அங்கேஒருசுத்தபூமியில்புனியாசனம்பரப்பிஅதன்
பேரில்உட்கார்ந்துகொண்டு கிருஷ்ணசலத்தைத்தரித்து சரீரமுழுதும்
விபூதியையுத்தூளித்துக்கொண்டு உருத்திராட்ச மாலிகாலங்கிருதராய்
சிவந்தசடாபாரத்தையுடையவராய் .பமாலிகையைக் கையினிடமாக
ப்பிடித்துக்கொண்டு இரண்டுகண்களையும்ஊக்துவமாகக் திருப்பிவிட்
டுஇரண்டுபுஜங்களிடத்திலும் யோகதண்டத்தை யூன்றிக் கொண்டு உல
ககர்த்தாவாகிய பரப்பிரமத்தினுடைய உபயபாதங்களையும் இருதயக
மலத்தில் நிறுத்துக்கொண்டு நிவாததீபம்போல அசையாமலிருந்துஜெ
பம்பண்ணுகிற(சௌபரிமஹாரிஷியைக்கண்டு)அர்ச்சுன மஹாராஜனு
ம்மிகுந்தபயபக்தி விசுவாசத்துடனே அந்தமுனீஸ்வரனைப்பிரதக்ஷிண
ஞ்செய்துசாஷ்டாங்கமாகதண்டன்சமர்ப்பித்துஇரண்டுகைகளையும்அஞ்
சலியாகசிரசின்மேல் கூப்பிக்கொண்டு அந்தமுனிசிகாமணியைப்பா
ர்த்துஓய்புராணபுருஷா ஓய்மஹானுபாவா. ஓய்சுவாமி, தேவரீருடைய
தெரிசனத்திற்குதமனந்தனருடையதம்பியாகிய அர்ச்சுனன் வந்திருக்
கின்றேன் ஆதலால் தேவரீரதுகிருபா திருஷ்டியினாற்பார்த்து அடியே
னுடைய மனோதுக்கத்தைநிவர்த்தி செய்து ரக்ஷிக்கவேண்டும் சுவாமி
யென்றுஅனேக விதமாகத்தோத்திரஞ்செய்தான்,

அப்படி தோத்திரம் பண்ணுகிற அர்ச்சுன னுடைய முறையை
செபம்பண்ணிக்கொண்டிருக்கிறசௌபரிமகா முனிவருங்கேட்டு கண்
களைவிழித்து அர்ச்சுனனைப்பார்த்து ஓய்அர்ச்சுனா,நீசர்வாந்திரியாய் சர்

வசிவதபாபரனாய்விளங்கப்பட்டலோககர்த்தாவாகிய (பரமசிவனோடு)
எதிர்த்துப்போராடி செயங்கொண்டவீராதிவீரனென்கிறகீர்த்திப்பிரதா
பம்பொருந்திய தர்மனந்தனருடையதம்பியான அர்ச்சுனன்நீதானோ.
அப்படிப்பட்டமஹாராஜனாயவனாகிய உன்னைக்காணவேண்டுமென்றுநெ
டுநாளாய்க்காத்துக்கொண்டிருந்தேன் இன்றைக்கு உன்னைக்கண்குளிர
ப்பார்த்துச் சந்தோஷிக்கும்படி தெய்வங்கூட்டிவைத்ததென்றுசொல்
லிஅர்ச்சுனராஜனுக்கும் ஒருகிருஷ்ணாசனம் போடுவித்துஅதன்மேலி
ல் உட்காரப்பண்ணிகனிவர்க்கங்களையும் தேனையும்புசிக்கும்படிகொடு
த்து உபசாரஞ்செய்துநீர் என்னிடத்திற்குவந்தகாரியமென்னவென்று
கேட்கஅதுகேட்டுஅர்ச்சுனராஜனும்அந்தசௌபரிமுனியைப்பார்த்து
ஓய்ஐயாமுனிநாதா, என்தமயனாராகிய தர்மராஜாவானவர் அஸ்வமேத
யாகம்பண்ணும்படிநினைத்து குதிரையைப்பூமிப்பிரதக்ஷணம்பண்ணி
க்கொண்டுவரச்சொல்லிஎன்னை அனுப்பிவைத்தார்நானுமவருடையகட்
டளைப்படி இந்தமட்டுக்கும் அந்தக்குதிரையைக்காப்பாற்றிக்கொண்டுவ
ந்தேன்இப்பொழுதுதேவரீருடைய ஆசிரமத்துக்குச் சமீபத்தில்வந்து
ஒரு குத்துக்கல்லுடனேஉராய்ந்துக்கொண்டு அந்தக்கல்லோடு கல்லாய்
ஒட்டிக்கொண்டது அதைஅனேகயுத்திகளினால்சேவகர்களைக்கொண்டு
அதட்டியும்அடித்தும்இடித்தும் இழுத்தும்பார்த்தோம்,அது எந்தவித
த்திலும் அசையவில்லைஆகையினால் இதென்னகாரணமோவென்றுசம்
சயங்கொண்டு தேவரீருடையபாதத்தில்விழுந்து சரணமடைந்துதெரி
ந்துகொள்ளவேண்டிவந்தேனென்றுவிண்ணப்பஞ்செய்தான். அதுகே
ட்டுஅந்தச்சௌபரிமஹாரிஷியுஞ்சிரித்துஅர்ச்சுனனைப்பார்த்து அதற்
குஒருகதையுண்டு அதைச்சொல்லுகிறேன் சாவதானமாய்க்கேளுமெ
ன்று அந்தக்குத்துக்கல்லுடனே குதிரையொட்டிக்கொண்ட விர்த்தாந்
தத்தைச்சொல்லுகிறார்.

கேளுமையா அர்ச்சுனா பூர்வத்தில் அந்தக் குத்துக்கல்லின் சமீ
பத்தில் ஜண்டிகவுசிகனென்னும் பெயருடைய ஒருமுனீஸ்வரர் ஆசிரம
ங்கட்டிக்கொண்டிருந்தார் அவரிடத்தில் உத்தாலகனென்னும் பெயரை
யுடையஒருவன்சிஷ்யனாகியிருந்து பணிவிடைசெய்துக்கொண்டுவந்தா
ன் அங்ஙனஞ்செய்து வருகின்றகாலத்தில் ஒருநாள் அந்தஜண்டிகவுசிகரி
ஷியானவர்தீர்த்தயாத்திரைபண்ணவேண்டுமென்கிற உத்தேசங்கொண்
டுசிலரிஷீஸ்வரர்களுடனே கூடிப்போனார் அதுகண்டு அவருடையசி
ஷ்யனாகியஉத்தாலகனும் தனதுஆசிரியர்பின்னாகவே நடந்து போனான்
அப்படிக்குஆசிரியரைவிடாமல் அவன்தொடர்ந்துநடப்பதைஜண்டிக
வுசிகமுனிவருந் திரும்பிப்பார்த்துஓய் உத்தாலகா நீ எங்களோடு கூட
சிரமப்பட்டுக்கொண்டு தீர்த்தயாத்திரைசெய்யவேண்டாம் நீஇவடத்தி
ல்தானேநின்று கலியாணஞ்செய்துக்கொண்டு சகல சவுக்கியங்களையும்
அனுபவித்து சுகமாயிருவென்றுசொல்ல அதற்குஅந்த உத்தாலகனும்

சம்மதப்படாமலிருந்தான் அதுகண்டுஅந்த சண்டிகவுசிகரும் அவனுக்குஅப்பலைக்ஷவரும்படிஅனேகம்ப்ரியவசனங்களைசொல்லிஅவனைச்சம்மதப்படுத்தி பின்பு ஒரு பிராமணன் வீட்டில் ஜண்டிகை யென்கிற பெண்ணை விவாகித்து அந்த உத்தாலகனுக்கு கலியாணம் பண்ணுவித்து நீங்கள்சுகமாய்வாழ்ந்திருங்களென்று அவர்களிருவருக்கும் ஆசிர்வாதஞ்செய்து அவர்களை அங்கேதானே நிறுத்திவிட்டுப்பிற்பாடுஅந்தரிஷியிஷ்டவர்களுடனேசேர்ந்து தீர்த்தயாத்திரைக்குப் போய்விட்டார் அதன்பிறகு அந்தஉத்தாலகனுஞ்சண்டிகையுங்கூடியிருந்துசமுசாரஞ்செய்துவருகிறநாளில் அந்த உத்தாலகன்தன் பெண்சாதியாகியஜண்டிகையைப்பார்த்துஅடிபெண்ணே, எனக்குப்பசிக்கின்றதுசமையில்பண்ணென்றுசொன்னால் அவள்சோற்றுப்பானையைஉடைத்தெறிந்து அவனைப்பார்த்து நீபானைகொண்டுவந்தால்சமைக்கிறேனென்றுசொல்லுவாள்பின்னையும்அவன்போசனஞ் செய்யவேண்டும் அக்கினிகொண்டுவாவென்றுசொன்னால்வீட்டிலிருக்கிற நெருப்பில் தண்ணீர்வார்த்து ஆற்றிவிட்டுநெருப்பில்லை யென்றுசொல்வாள். அதுவுமல்லாமல் சாணமெடுத்துவந்துவீடுமுழுதும் சுத்திபண்ணென்றுசொன்னால்அங்கேபார்த்தாலும் குப்பையுங்கூளமுங்குவித்து எச்சிலையுமிழிந்துவைப்பாள். வஸ்திரத்தைக் கொடுத்து உலர்த்தச்சொன்னால் நனைத்துப்போடுவாள் போசனம்பண்ணஇலைகொண்டுவா வென்றுசொன்னால் இலையைகிழித்துப்போடுவாள். இந்தப்பிரகாரம் அந்தச்சண்டிகையானவள் நாள்தோறும்அகடவிகடமாகச்செய்து வருகிறபோது உத்தாலகனும்நிர்வகிக்கமாட்டாமல்விசனப்பட்டுஐயையோ,இந்தப்பசாசானவள் எனக்கென்று எங்கேயிருந்துவந்தாள்தெய்வமேயென்று துக்கித்துக்கொண்டிருக்கையில் அந்தஜண்டிகவுசிகமுனிவருந் தீர்த்தயாத்திரைபண்ணிவிட்டுமறுபடியும் இந்தஉத்தாலகனிருக்குமிடத்துக்கு வந்துசேர்ந்தார்.

அதுகண்டு உத்தாலகனும் தன்னுடைய ஆசிரியருக்குச் சாஷ்டாங்கதண்டன் சமர்ப்பித்து ஓய்ஐயா குருநாதா தேவரீர்தீர்த்தயாத்திரைக்குப்போம்பொழுது பலவத்காரமாய்அடியேனுக்குக்கலியாணஞ்செய்துவைத்தபெண்சாதியின்வாழ்க்கைப்பாட்டினால் அடியேன்படுகிற மனோதுக்கத்தை இன்னபடியென்று சொல்லமுடியாது ஆனாலும் கொஞ்சம்சொல்லுகிறேன்கேளுமென்று சிலசெய்திகளைச்சொல்லி விண்ணப்பஞ்செய்தான் அதுகேட்டுஅந்தகவுசிகமுனிவரும்ஆலோசனைசெய்துஓய் உத்தாலகா நீ உன்பெண்சாதியை ஒன்றுசெய்யச்சொன்னால்அவள்ஒன்றுசெய்கிறாளல்லவோ, ஆனால் நீ அதற்கொரு தந்திரஞ்செய்யவேண்டும் அஃதென்னவென்றால்உனக்குஅவளால் ஆகவேண்டியகாரியத்தைவேண்டாமென்றுசொல் அதைஅவள் வேண்டுமென்றுமதித்துச்செய்வாள்.

இதுவேஉபாயமென்று உத்தாலகனுக்குச் சொல்லிவிட்டு ஜண்டி கவுசிகமுனிவருந் தன்னுடைய ஆசிரமத்திற்குப்போய்விட்டார் பிற்

பாடு அந்தஉத்தாலகனும்தன்னுடையகுருவாக்கின்படி பெண்சாதியை
யழைத்துஓய் பெண்ணே எனக்குப் போசனம் வேண்டாமென்றுசொ
ல்லுவான் அதுகேட்டு அந்தசண்டிகையும் அது என்னகாரியமென்று
சொல்லி அதிசீக்கிரத்தில் சமையல்செய்து அவனுக்கு உபசாரமாகப்ப
டைப்பாள். நெருப்பு வேண்டாமென்று சொன்னால் நெருப்புகொண்
டுவருவாள் வஸ்திரத்தை நனைத்துக் கொண்டுவாவென்றால் உலர்ந்தவஸ்
திரத்தைக்கொண்டுவந்துகொடுப்பாள் ஒருபதார்த்தமும் வேண்டாமெ
ன்றுசொன்னால் சகலபதார்த்தங்களும் சமைத்து வைப்பாள் ஸ்திரீசை
யோகஞ் செய்பத்தகாத புண்ணிய தினங்களில் வேண்டினவன் போல்
சைகைபண்ணினால்வேண்டாமென்றுதூரப்போய்நிற்பாள்செய்யத்தகு
ந்தநாள்களில் வேண்டாமென்றுசொன்னால்வேண்டுமென்று கூடியிருப்
பாள்.வீடுசுத்திசெய்யவேண்டாமென்றால் வீடெல்லாம்நன்றாயலங்கரித்
துவைப்பாள்,இந்தப்படிநாள்தோறும்அந்தஉத்தாலகனுக்கு வேண்
டியவைகளையெல்லாம்வேண்டாமென்றுதந்திரமாகச்சொல்லஅதற்குஅ
ந்தசண்டிகையும் வேண்டாமென்றவைகளையேவேண்டுமென்றுமாறாக
ச்செய்துவருவாள்இந்தப்பிரகாரம்இவர்களிருவருங்கூடிஇல்வாழ்க்கைசெ
ய்துக்கொண்டுவருங்காலத்தில்அந்த உத்தாலகனுடையதகப்பனுக்கு
த்திதிவந்ததுஅன்றைக்கும்அவன்தன்னுடையபெண்சாதியாகியசண்டி
கையைஅழைத்துஅவளைப்பார்த்துஅடிபெண்ணேஎன்தகப்பனுக்குஇ
ன்றையதினம்திதிவந்ததுஅதற்குநாமென்னசெய்யப்போகிறோம்ஒன்
றுஞ்செய்யவேண்டாமென்றுசொல்லஅவளும் அதுகேட்டுநீர்என்னகா
ரியஞ்சொன்னீர்இதுஎனக்கு நன்றாயிருக்கவில்லைபிள்ளையிருந்தால் தக
ப்பனுக்குதிவசங்கொடுக்கவேண்டாமோநாம்சம் பிரமமாய்க்கொடுக்க
வேண்டுமென்றுசொன்னாள்,

அதற்குஅவனும்ஒருவனுக்குமாத்திரம்சாறுஞ்சாதமுமாய்ச்சமை
த்துப்போடென்றுசொல்லஅதற்குஅவள்சம்பிரம மாய்ப்பத்துபேருக்
குச்சாப்பாடுபண்ணவேண்டுமென்றுசொல்ல அதுகேட்டுஅவனும்நல்
லதுபொழுதுபோனபின்புஆகட்டுமென்றுசொல்ல அதிசீக்கிரத்தில்ப
ண்ணவேண்டுமென்றுசொல்லிஉதயகாலத்திற்சேவீடுவாசலைச்சுத்திப
ண்ணிபதினைந்துநாழிகைக்கெல்லாம்சகலபதார்த்தங்க ளோடும்அன்ன
ம்சமைத்துவைத்துப்பத்துப்பேர்பிராமணர்களை அழைத்துத் தன்புருஷ
ன்கையினால் அவர்களைப்பூசைபண்ணிவைத்துபிரதானமும்பண்ணிவித்
துபிற்பாடுஉத்தாலகன்அவர்களுக்குச்சாதத்தைக்கொஞ்சமாகப்படை
யென்றுசொல்லஅவளும்விஸ்தாரமாகத்திருப்திபோஜனமாய்சகலபதா
ர்த்தங்களையும்படைத்துஅவர்கள்போஜனம்பண்ணிஎழுந்துகைகால்சுத்
திசெய்துக்கொண்டபின்புஅவர்களுக்குத்தாம்பூலமும்புஷ்பமும்சந்தன
முமும்விஸ்தாரமாகக்கொடுத்துஅவர்களுக்கு உபசாரஞ்சொல்லி அனுப்
பிவிட்டுபின்புஅந்தஉத்தாலகன்அண்டைஅயலிலுள்ள எவர்களையும் அ
ழைத்துச்சாப்பாடுபடைக்கவேண்டாமென்றுசொல்ல அவளும் அதே

ன்னபரிகாசமென்றுசொல்லிஅந்தத்தெருவிலிருக்கிறவர்களை யெல்லாம் குழந்தைகுட்டிகளுடன்அழைத்துக்கொண்டு வந்துபோஜனம் படைத்துஅவர்களைத்திருப்திபண்ணிஅனுப்பினாள்.

பின்புஉத்தாலகனும் அவளையழைத்து அடிபெண்ணேயெனக்குக்கொஞ்சமாகபோஜனம் படை யென்றுசொல்ல அதற்கு அவளும் இதென்னபரிகாச மென்று சொல்லி சகலபதார்த்தங்களும் நெய்தயிர்பணியாரவகைகளும்பத்துபேருக்காகும்படிஅந்தஉத்தாலகனுக்குப்படைத்தாள் அதுகண்டு அவனும்தனக் குள்ளேதானே சந்தோஷப்பட்டுக்கொண்டுவயிறுநிறையதிருப்தியாகச்சாப்பிட்டெழுந்துபோகிறவன்தன்பெண்சாதியினுடைய குணத்தைத்தெரிந்தவனாயிருந்தும்மறந்துவிட்டுஅவளை அழைத்துஅடிஜண்டிகா இந்தப்பிண்டப்ர தானம்பண்ணின அன்னத்தைக்கொண்டுபோய்கங்கையில்போட்டுவா வென்றுசொன்னான்-அதுகேட்டுஅவளும்பிண்டப்ரதானம்பண்ணின அன்னத்தையெடுத்துக்கொண்டுபோய்வீதியினிடமாகக்குப்பைகளின்பேரில் விழுந்துபுரண்டுகொண்டிருக்கிறநாய்களுக்குமுன்பாகவைத்தாள் - அதைக்கண்டுஅந்தநாய்கள்ஓடிவந்துதின்றுவிட்டதுகள் - அதுகண்டு உத்தாலகன்மிகுந்தகோபங்கொண்டுஅடிபாவிதுன்மார்க்கீ கெடுத்தாயோ உன்னால்என்னுடையபிதிர்க்களெல்லாம்நரகத்தில்விழுந்தார்களேஇதற்கெப்படி அடிதோஷியென்றுசொல்லிநீஇந்ததோஷத்தினால்குத்துக்கல்லாய்விழுந்துகிடக்கக்கடவாயென்றுசாபமிட்டான்,

அதுகண்டுசண்டிகையானவள்பயந்துதன்புருஷனாகிய உத்தாலகனைப்பிரதக்ஷணஞ்செய்துதெண்டனிட்டு ஐயா,பிராமணோத்தமாதேவரீர்,அடியாளுடைய துர்க்குணத்தைக்கண்டுஇப்படிப்பட்டசாபங்கொடுத்தீரோஇந்தச்சாபமானது எந்தநாளில்எனக்கு விமோசனமாகுமென்று இரக்கமாகக்கேட்க அதற்குஅந்தஉத்தாலகனும்நீயனேககாலம்இப்படிகுத்துக்கல்லாகவேகிடந்துபின்புதர்மபுத்திரரானவர்அஸ்வமேதயாகஞ்செய்கிறதற்குப்பிரயத்தனப்பட்டுகுதிரையைவிட்டுஅதன்பிறகேயவர்தம்பியாகியஅர்ச்சுனனைக்கூட்டியனுப்பிவைப்பார்அப்பொழுதுஅந்தக்குதிரையும்பூமிப்பிரதக்ஷணம்பண்ணிக்கொண்டுதிக்குவிஜயஞ்செய்துவருகையில்குத்துக்கல்லாய்க்கிடக்கிறஉன்பேரில் விழுந்து உராய்ந்துக்கொண்டுகல்லோடுகல்லாயொட்டிக்கொள்ளும்அதுசேதியையர்ச்சுனராஜன்கேள்விப்பட்டுவந்துஉன்னைப்பிடித்துக்கொண்டுஅந்தக்குதிரையையிழுப்பான் அப்போதுகுதிரையும்விடுதலையாகின்றது நீயும்சாபவிமோசனமாகிஎன்னிடத்திற்குவந்துசேருவா யென்று உத்தாலக னெனும்பிராமணன்சொல்லியனுப்ப அவளும்வந்துகுத்துக்கல்லாய் விழுந்துகிடக்கிறாள் கேட்டீரோ அர்ச்சுன மகாராஜனே ஆதலால் அந்தக்கல்லோடுகல்லாய்நீங்கள் விட்ட அஸ்வமேதக்குதிரையும்ஒட்டிக்கொண்டது நீஇந்தக்ஷணமே அந்தக்குத்துக்கல்லினிடத்திற்குப்போய் அந்தக்கல்லை ஒருகையினால்பிடித்துக்கொண்டு குதிரையை ஒருகையினால் பிடித்திழு

த்தால்அந்தக்குதிரையு மெழுந்திருக்கும் அவளுக்கும் சாபவிமோசன
மாகு மென்று சௌபரி மஹாரிஷி யானவர்- சொல்ல அதுகேட்டு
வர்ச்சுனனும் சந்தோஷி சித்தனாய் எழுந்து அந்தமஹாரிஷிக்கு சாஷ்
டாங்கதண்டன்சமர்ப்பித்துஅவரிடத்தில்அனுமதிபெற்றுக்கொண்டுவி
ஷ்வம்கதுமுதலானஅந்தமல்லர்களுடனும்அந்தவனத்தைவிட்டுவெளி
யேவந்துகுதிரையினிடத்திற்குப்போய்அந்தக்குத்துக்கல்லைஒருகையி
னற்பிடித்துக்கொண்டுமற்றஒருகையினால் அந்தகுதிரையையும்பிடித்
திழுக்க அதனாலந்தக்குதிரையும்வெளியேவந்து சரீரத்தைநிமிர்த்து
அனுமானித்தது

அந்தக்குத்துக்கல்லானஜண்டிகையும்முன்போலஸ்திரீரூபந்தரிந்
துவந்து அர்ச்சுனராஜனிடத்தில் செலவுவாங்கிக்கொண்டுஉத்தாலகனிட
த்திற்குப்போய்சேர்ந்தாள், பிற்பாடு அர்ச்சுனமகாராஜனுங்குதிரையை
விட்டு சகலசேனைசமூகங்களோடும்நடக்கும்போது அந்தக்குதிரையான
துசெண்பகாபுரமென்கிற பட்டணத்திற்கு மூன்றுயோசனை தூரத்தில்
வருகையில்அப்போது அந்தசெண்பகாபுரத்தை யாளுகின்றஅம்சத்
து வமகாராஜாவினுடையசேவுகாரர்கள் பார்த்து அந்தக்குதிரையினு
டையசேதி யெல்லாந்தெரிந்துஓடிவந்துஅந்த அம்சத்துவமகாராஜாவு
க்குதெண்டனிட்டுஜயாராஜேந்திராஅஸ்தினாபுரத்தையாளுகின்றதர்மரா
ஜாவானவர்அஸ்வமேதயாகஞ்செய்யும்படி பிரயத்தினப்பட்டு குதிரை
யைவிட்டாராம், அந்தக்குதிரையும் அர்ச்சுனராஜனும்இன்னுஞ்சிலசே
னைகளுநம்முடையபட்டணத்திற்கு மூன்றுயோசனைசமீபத்தில்வருகின்ற
தென்றுசொல்லிப்போனார்கள் அதுகேட்டுஅம்சத்துவமகாராஜனுஞ்சந்
தோஷிப்பட்டுமந்திரிகளையழைத்துஓய்மந்திரிகளே நாம்தர்மராஜாவான
வர்விட்டகுதிரையைபிடித்துக்கொண்டு அதன்பிரகேவருகிறவர்ச்சுன
ராஜனையும் எதிர்த்துப்போராடி நன்றாய்பூசைபண்ணினோமேயானால்
அர்ச்சுனனையுங்குதிரையையுங்காப்பாற்றிக்கொள்ளுகிறநிமித்தம் ஸ்ரீகி
ருஷ்ணமூர்த்திவருவார் அவரைபிடித்துக்கொள்ளலாம்இது நன்றாயிருக்
கிறதென்று சொல்ல, அதற்கு அவர்களுஆலோசித்து அப்படியேசெய்ய
லாமென்று சொன்னார்கள்.

அதுகேட்டுஅந்த அம்சத்துவமகாராஜனும்அங்கிருக்கின்றசேனை
களைப்பார்த்து ஓய்ராஜாக்களே,மந்திரிகளே, சேனாபதிகளே,நீங்களெல்
லாரும்என்னுடையவார்த்தையைக்கேளுங்கள். அஃதென்னவென்றால், நம்
முடையபட்டணத்திலுண்டானசகலசனங்களும்வில்லைப்பிடித்தவர்கள்-
ஆயுதத்தைபிடித்தவர்கள்-எவர்களோ அவர்களெல்லாரும்அவர்கள்சேனை
களுடனேரணக்களத்திற்குயுத்தசன்னத்தர்களாய்ஆயுத்தப்பட்டுவந்து
சேரவேண்டும்,அப்படிவந்துசேராமல்என்னுடைய ஆக்கினைதள்ளிநட
ந்தார்களாகில்அவர்கள்எவ்வகைப்பட்டவர்களாயிருந்தாலும்அவர்களைக்
கொண்டுபோய்ஊருக்குப் புறம் பாகக்காய்ந்து கொண்டிருக்கிற எண்
ணெய்க்கொப்பரிகையில்தள்ளிவிடுகிறதென்று திட்டஞ்செய்துசங்கலி

கீதர்களென்கிறபிராமணர்களையழைப்பித்துஅவர்களிடத்தில்தம்முடை
யமுத்திரைமோதிரத்தையுங்கொடுத்தனுப்பினர்அவர்களுமந்தப்பிரகா
ரமேஎண்ணெய்க்கொப்பரிகையண்டையிற்போயிருந்தார்கள் அப்படி
கட்டளையிட்டஅம்சத்துவமஹாராஜன் எப்படிப்பட்ட நன்மையையு
டையவனென்றால்,

---

## அம்சத்துவமகாராஜன்யுத்தம்.

அஸ்திரசஸ்திரவித்தைகளில் மகாவல்லமை யுடைத்தானவன் சத்
தியசந்தன்ஸ்ரீமந்நாராயணனுடையதிவ்யநாமத்தைக்கனவிலுமறவா
தவன்சகலஜீவாக்களிடத்திலும்பூததயவுள்ளவன், அகண்டிதவீரபராக்கி
ரமதுரந்தரன். அஷ்டலட்சிமீவிலாசபோகபோக்கியங்களு முடையவன்
தர்மநீதியில்யமதர்மராசனுக்குச்சமானமானவன் - இப்படிப்பட்டகு
ணாதிசயங்களை யுடையவனாகியஅந்தஅம்சத்துவமஹாராஜனானவன்மூற்
சொன்னபடியேதிட்டஞ்செய்துபட்டணமுழுதும்பறையறைவித்துயு
த்தசன்னத்தனாய் ( நவரத்நமயமானதேரின்மேலேறி ) மந்திரிபிரதா
னிகளுடனேபுறப்பட்டுப்பட்டணத்திற்குவெளியேவந்து தண்டுவிட்டிரு
ந்தினன்- அந்தராஜாவினுடைய பிள்ளைகள்நால்வரில் மூன்றுபேர்மாத்திர
ம்ரதமேறிக்கொண்டுதங்கள் தங்கள்சேனைகளுடனே புறப்பட்டுநடந்தா
ர்கள்பின்னும்ரதக்காரர்ஆனைக்காரர்குதிரைக்காரர் காலாள்களாகியநால்வ
கைச்சேனைகளில்ஒருவராகிலும் பட்டணத்தில்நில்லாமல் எல்லாரும்ரண
க்களத்திற்குநடந்தார்கள். அப்பொழுது அந்தராசாவினுடையகுமாரனா
னசுதர்மனென்கிறவன் அவனுடையபிதாவிலும்மகாசத்தியசந்தனும் த
ர்மமாகியபாசத்திற்கட்டுப்பட்டவன்வேதமொழிகளைக்கடவாதவன்வி
ஷ்ணுவினுடையதிருவடிக்கமலங்களில்அத்தியந்தபிரீதிவிசுவாச முடை
யவன்-இப்படிப்பட்டசற்குணசம்பன்னனான அந்தராஜாகுமாரன் தன்
னுடையபிதாவின்கட்டளைப்படிரணக்களத்திற்குப்போக வேண்டுமெ
ன்று ஆயுத்தப்பட்டுயுத்தசன்னத்தனாய்ரதமேறிக்கொண்டுபுறப்பட்டுத
ன் பெண்சாதியாகியபிரபாவதிக்குச்சொல்லிவிட்டு அவளிடத்திற் செலவு
வாங்கிக்கொண்டுபோகலாமென்றுநினைத்து அவளரண்மனைக்குப்போய்
அவளைப்பார்த்துஅடிபெண்ணேபாக்கியவதீதர்மராஜாவானவர் அஸ்வ
மேதயாகஞ்செய்கிறதற்குப்பிரயத்தனப்பட்டுகுதிரையைவிட்டு அந்த
க்குதிரையின்பிறகேஅர்ச்சுனராஜனையுங்கூட்டியனுப்பியிருக்கிறார், ஆ
கையினாலந்தஅஸ்வத்தைப்பிடித்துக்கொண்டதன்பின்னேவருகிற அர்ச்
சுனனுடனேபோராடவேண்டுமென்றுஆயுத்தப்பட்டுஎன்பிதாவானவர்
வாய்ப்பறையாகவில்லைப்பிடித்தவர்கள் ஆயுதத்தைப்பிடித்தவர்கள் முத
லானபட்டணத்திலுள்ளசகலஜனங்களும்யுத்தசன்னத்தராய்அவ்வவர்கள்
சேனைகளோடும்வந்து ரணக்களத்திற்சேரவேண்டியது அப்படி வந்து
சேராதவர்கள்எவர்களாயிருந்தாலும் அவர்களை எண்ணெய்க்கொப்பரி
கையில்தள்ளிவிடுகிறதென்றுகட்டளையிட்டுப்போனார்.

ஆதலால் அவருடைய கட்டளையைக்கடவாமல் நானும்போகவே
ண்டும்எனக்குச்செலவுகொடுத்தனுப்பென்றுகேட்க, அதுகேட்டந்த
பிரபாபதியுந்தன்புருஷனைக்கண்டமாத்திரத்தில் காமவிகாரமிஞ்சினவ
ளாய் அதிசயப்பட்டசைகொண்டு இதற்கெப்படியென்று எழுந்திருந்து
தன்புருஷனுக்கு நமஸ்காரம்பண்ணி ஓய்பிராணநாயகா, நீரென்னவார்
த்தைசொன்னீர் பிதாவினுடைய ஆக்கினைப்படி ரணகளத்திற்குப்
போகிறேனென்றுசொல்லுகிறீரே அதுகூடாது-இன்றையத்தின ந்ம்த
வரீர் என்னுடனேகூடியனுபவித்து என்னபேட்சையைத்தீர்க்கவேண்
டும்-மன்மதனுடைய பாணக்கினி மிருந்து என்னைத் தகிக்கின்றது அ
தை என்னாற்சகித்து முடியவில்லை ஏனென்றால் இன்றையத்தினம் அ
டியாளும் ருதுஸ்நானம்பண்ணியிருக்கிறேன் ஆதலால் இப்பொழுது
என்னைக்கூடி யனுபவித்துச் சந்தோஷப்படுத்துமென்று இரக்கமாகச்
சொன்னாள்.

அதுகேட்டு அந்த ராசகுமாரனும் தன் பெண்சாதியைப் பார்த்
து ஓய் பிராணநாயகி நீகொண்டிருக்கிற எண்ணமானது இகபரசவுக்
கிய மில்லாமற் போகத்தக்கதாயிருக்கின்றது-எத்தனை மூடபுத்தியுடை
யவர்களாயிருந்தாலும் பட்டப்பகற்காலத்தில் ரதிகேளிசெய்வார்களோ
அப்படிசெய்தால் நரகவாதனைவருமல்லவோ அதுவல்லாமலும் உன்கு
ருதீதன்படியே இன்றையத்தினம் உன்னிடத்திலிருந்துவிட்டால் என்
பிதாவினுடைய ஆக்கினை தப்பாது-ஆதலால் நீநினைத்தகாரியம் இன்னு
மொருவேளையில் ஆகட்டுமென்றுசொல்ல அதற்கவளும் சம்மதப்படா
மல் புருஷனைப்பார்த்து ஓய்நாயகா, நீர் என் விருப்பத்தின்படி பட்ட
ப்பகற்பொழுதில் செய்யாவிட்டாலும் இன்னுஞ்சற்றுநேரத்தில் பொ
ழுதுபோகின்றது ராத்திரிக்கிருந்து என்னுடனேகூடி சகல சவுக்கியங்
களையு மனுபவித்து விடிந்தபின்பு யுத்தகளத்திற்குச் சுகமாய் போக
லாமென்று மறுத்துச்சொன்னாள்.

அதுகேட்டு சுதர்மனுஞ் சம்மதப்படாம லவளைப்பார்த்து ஓய் சு
வுந்தரியவதி நீசொன்னபடியே இராத்திரிக்கு கேளிவிலாசமாயிருந்து
அனுபவித்து உன்னுடைய விரகதாபத்தைத் தீர்த்தேனாகில் விடிந்த
பின்பு எனக்கு வரதன் ஆக்கினைப்படிக்கு எண்ணெய்க் கொப்பரிகை
யில்விழவேண்டிவருமே யதற்கென்ன செய்யலாமென்றுகேட்க அ
துகேட்டு பிரபாவதியும் ஓய் பிராணநாயகா நீரிப்பொழுது சொன்ன
வார்த்தையுண்மையேயாம் - நான் இன்றைக்குத்தான் ருதுஸ்நானப்ப
ண்ணிபரிசுத்தமா யிருக்கிறேன் இன்றையதினம்நீர் என்னுடனே கூ
டாமற்போனால்உமக்கு புரு ஷத்தியா தோஷமும் யமவாதனையு முண்
டாகுமல்லவோஆகையினால்உமக்கு எதுயுக்தமா யிருக்கின்றதோஅந்
தப்படிசெய்யு மென்றுசொல்ல அதுகேட்டு சுதர்மனும் (அற்பசுகத்
தைவிரும்பினால்கற்பதுக்கம்வருமென்) றறிந்தவனாயிருந்தும் பெண்
சாதிசொன்னவார்த்தையு மெய்தானென்று ஆலோசனைசெய்து இன்

றையதினமரசன் ஆக்கினையைக் கடந்துநடந்தாய் நாளையதினம் என்
ணெய்க்கொப்பரிகையில் தள்ளுவார்கள் அங்ஙனந் தள்ளினவுடனே
இந்தச்சரீரத்தைவிட்டு தேவசரீரம் பெற்றுக்கொண்டு சகலசம்பிரமத்
துடன் சுவர்க்கத்திற்குப்போயிருந்து இந்திரபோகத்தையாகிலு மனு
பவிக்கலாம் அரசனுக்கினையைக்கடவாமல் பெண்சாதியினுடைய சொ
ல்லைக்கடந்து நடப்போமானால் புருஷஹத்தியாதோஷமும் நரகவாதனையு
முண்டாகுமாதலால் அரசனுடைய ஆக்கினையைத்தள்ளி பெண்சாதியி
ன்விருப்பத்தின்படி செய்கிறதே உத்தமமென்று நினைத்து அந்தப்ப
டியேஅன்றுராத்திரியிருந்து அந்தப்பிரபாவதியுடனேகூடி சரச சல்
லாபவினோத லீலைகளையனுபவித்து அவள்மனதைச்சந்தோஷம் பண்
ணுவித்து மறுநாள் விடியற்காலையெழுந்து ஸ்நானம்பண்ணி ஜபதபங்
களை முடித்துக்கொண்டு ஓமசாந்திசெய்து சூரியபகவானுக்கு அர்க்கி
யங்கொடுத்து பிராமணர்களுக்குத் தானங்கொடுத்து அவர்களுடைய
ஆசீர்வாதங்களைக் கைக்கொண்டு யுத்தசன்னத்தனாய் ரதாரூடனாய் புற
ப்பட்டு ரணக்களத்தைநோக்கிவருகையி லதற்குமுன்னமே அம்சத்து
வமஹாராஜனானவன் தன்னுடைய சேனைகளெல்லாம் வந்து சேர்ந்த
பிறகு எண்ணிக்கை பார்க்கும்போது தன்பிள்ளைகள் நால்வரில் மூன்று
பேர்மாத்திரம்வந்திருந்தார்களதுவு மல்லாமல் எழுபதுபேர் சேனாபதி
களும்ஒவ்வொருசேனாபதிக்கு எழுபத்தோ ராயிரந்தேர்களும் - எழுப
த்தோராயிரம்ஆனைகளும், லக்ஷங்குதிரைகளும் லக்ஷங்காலாள்களும் எ
ழுபதுசேனாநாயகருமாகஎண்ணிக்கைப்பார்த்துக்கொண்டு தன்னுடை
யகுமாரனாகியசுதர்ம னென்கிறவனைக் காணாமல் சிந்தாக்கிராந்தனாய் ம
ந்திரிகளைப்பார்த்து ஓய்மந்திரிகளே கேட்டீரோ என்னுடைய ஆக்கி
னைப்படிக்குநம்முடையபட்டணத்தி லுண்டானஜனங்களும் என்குமா
ரர்களில் மூன்றுபேரும்வந்திருக்கிறார்கள் இன்னம் என்குமாரனாகிய
சுதர்ம்மன்மாத்திரம் வரவில்லைபார்த்தீர்களோ நம்முடைய தகப்பன்
நம்மையென்னச்செய்யப்போகிறானென்று நினைந்து அந்தசுதர்ம்மன்
அசட்டையாயிருந்துவிட்டதுபோலத்தோற்றுகின்றது அப்படியிருந்
தால்நம்முடையஆக்கினைத்தப்பிபோகுமோ பூலோகத்திலரசாக்ஷிசெ
ய்கின்ற வரசர்களுக்கு உறவினமொன்றும் சிநேகமொன்றும் பிள்ளைகளெ
ன்றும் பக்ஷபாதகமுண்டோ அப்படியிருக்க,அந்தப்பயித்தியகாரனா
னசுதர்ம்மன் பேய்வேலைப ண்ணிக்கொண்டான். ஆதலால் நீங்கள்இந்
தக்ஷணமே என்குமாரனான சுதர்மனைப்பிடித்துக்கட்டிக் கொண்டுபோ
ய்சங்கிலிகிதர்கள்வசத்தில்ஒப்பிவித்து,எண்ணெய்க்கொப்பரிகையில் த
ள்ளிவிட்டுவாருங்களென்றுசொல்லியனுப்பினர்.

அதுகேட்டுஅந்தமந்திரிகளும்அப்படியேநல்லதென்று போம்
பொழுதுஅவர்களுக்குஎதிராகத் தேரேறிக் கொண்டுவருகிறராஜகுமா
ரனைப்பார்த்து விசாரப்பட்டுஓய்ராஜனந்தனனே நீர்உமது பிதாவினுடைய
ஆக்கினையைக்கடந்துநடக்கலாமாநேற்றியதினம் நீர்வரவில்லை நே

ற்றிய தினஞ்செய்தகாரியம்இன்றைக்குச்செய்யலாகாதோ சத்தியந்தவ
ராதவராய்விஷ்ணுபக்தியுடையவராய்புண்ணியபுருஷராய்விளங்கப்பட்
டநீர்இப்படிப்பட்டபேய்வேலை செய்துவிட்டீர் ஆகையால் உம்மு
டையபிதாவாகிய அம்சத்துவமஹாராஜனவர்எங்களையனுப்பிஉம்மை
க்கட்டிக்கொண்டுபோய்எண்ணெய்க்கொப்பரிகையிற் றள்ளிவிடும்படி
கட்டளையிட்டார்அதற்கெப்படியென்று விசாரப்படுகிற மந்திரிகளைப்
பார்த்துசுதர்ம்மனானவன்தேரைவிட்டிழிந்துஓய் புண்யவான்களாகிய
மந்திரிமார்களேங்களுங்கள்நீங்கள்என்னைக்கொண்டுபோய் எண்ணெய்
க்கொப்பரிகையில்தள்ளுகிறதற்குமுன்னேயோசனைபண்ண வேண்டா
ம்இந்தச்சரீரமோநிலையாமையென்னும்பெயரையுடையதுஇதுபிதாவி
னுடைய ஆதீனமாயிருக்கப்பட்டது ஆகையினால்இந்தச்சரீரத்தைஅ
வர்என்னசெய்யவேண்டுமென்றாலும்செய்துக்கொள்ளலாம்இதுவல்
லாமல்பராபரவஸ்துவாகிய(ஸ்ரீமன்நாராயணமூர்த்திக்குச்சரியாய்) விள
ங்கப்பட்ட என்பிதாவினுடைய ஆக்கினைதப்புமோஅதுதப்பாது என்
னுடையசரீரம்விருதாவில் போகாமல்பிதாவுக்குப்பிரீதியாய்ப்போகிற
து எனக்குமெத்தசந்தோஷம் அல்லாமலும் இந்தச்சரீரம் எத்தனைநா
ளைக்கிருந்தாலும் சுதந்தரமில்லாமல் இரவலாகயிருக்கின்றபடியினால் நீ
ங்கள்என்னைக்கட்டிக்கொண்டுபோய் அந்தச்சங்கிலி கீதர்கள் வசத்துமேல
ஒப்புவித்துஎண்ணெய்க் கொப்பரிகையில் தள்ளிவிடச் செய்யுங்களெ
ன்றுமகாபிரியத்துடன்சொல்லஅதுகேட்டுஅந்தமந்திரிமார்களும்விசா
ரப்பட்டுபகவத்சங்கல்பத்தினால்இப்படிசம்பவித்ததென்று துணிந்து
குதிரைக்கயிற்றினால்சுதர்ம்மனைப்பிடித்துக்கட்டிக் கொண்டு பட்டணத்
திற்குப்புறம்பாகக்காய்ந்துக்கொண்டிருக்கிறஎண்ணெய்க்கொப்பரிகை
யண்டைக்குக் கொண்டுபோய் அவிடத்தில்யமகிங்கிலியர்கள் போல்பா
ர்க்கப்பயங்கரமாய்க்குரூரமாயிருக்கப்பட்டசங்கிலிகீதர்களென்கிறபிரா
மணர்கள்வசத்தில்ஒப்புவித்து ஓய்சங்கிலி கீதர்களேஇவன்ராச னாக்கினை
யைத்தள்ளிநடந்தபடியினால்இவனையெண்ணெய்க்கொப்பரிகையில்தள்
ளும்படிஅம்சத்துவமஹாராஜனவர்கட்டளையிட்டார்ஆதலால் நீங்களி
வனைப்பிடித்துத்தள்ளிவிடுங்களென்றுசொல்லிப்போனார்கள்.

அதுகேட்டுஅந்தசங்கிலிகீதர்களென்கிறஇரண்டு பிராமணர்களும்
மனஸ்தாபப்பட்டுசுதர்ம்மனைப்பார்த்துஓய்ராசகுமாரகா நீர் என்னகார
ணத்தினால்அரசனாக்கினையைக்கடந்துநடந்தீர் ஸ்திரீசையோகம்பண்ண
வேண்டுமென்கிறவிருப்பமிருந்தால்அதற்குகாலமில்லையோ நம்முடை
யதகப்பனார்தானே நம்மையென்னசெய்யப் போகிறாரென்று எளிதாக
நினைத்திருந்தீரோஇப்படிநினைந்திருக்கலாமோ அதுஎன்ன வென்றால்
ராசாவினுடைய சிநேகமும்நாகப்பாம்பினுடையவிஷமும் துர்ச்சனசா
வகாசமும்பகையாளியினுடையவிருந்தும்சற்சனருடையதுவேஷமும்
ஒருவேளைபோலிருக்கமாட்டாது ஆதலால் தேவரீர்சகல நியாயங்களுந்

தெரிந்திருந்தும்இப்படிசெய்துக் கொண்டால் நாங்களென்ன செய்யப்போகிறோம் உபசாரவார்த்தைமாத்திரம்சொன்னோமேயல்லாமல் உம்மைஎண்ணெய்க்கொப்பரிகையில் தள்ளாமலிருக்கக்கூடுமோ அப்படி நாங்கள் தள்ளாமலிருப்போமானால்உன் பிதாவானவர் எங்களைத்தள்ளுவிப்பார்ஆகையினால்நாங்கள் அரசனுக்கினையைக் கடந்துநடக்க மாட்டோம்இதற்கெப்படியென்றுகேட்கஅதற்குசுதர்ம்மனும்ஆலோசனைசெய்துசங்கிலிகிதர்களைப்பார்த்துஓய்ஐயமாரே . நீங்கள் மிகவும் புண்ணியவான்கள்அதுஎப்படியென்றால் எவர்களாகிலும் ஒருகுற்றஞ்செய்தால்அவர்களுடையகுற்றத்தைப்பரிகரித்துபுண்ணியலோகங்கொடுக்கப்பட்டவர்ஆதலால்நீங்களிப்போதுஒருஆலோசனையுஞ்செய்யாமல்என்னைஎண்ணெய்க்கொப்பரிகையில்தள்ளி,நான்செய்தபாவத்தைப்போக்குவித்துஎன்னைப்பரிசுத்தனாகச்செய்யுங்களென்று வேண்டிக்கொண்டான் அதற்குஅந்தசங்கிலிகிதர்கள்மனம்வராமல் ஆலஸ்யமாயிருந்தார்கள்அதுகண்டுஅந்தசுதர்ம்மனும்நானேகுதிக்கிறேனென்று துணிந்துஅரையில்தரித்திருக்கிறவஸ்திரத்தைநன்றாகவலித்துகட்டிக்கொண்டுசர்வசிவதயாபரமூர்த்தியாகிய(ஸ்ரீகிருஷ்ணபகவானை)மனதினிடமாகதியானஞ்செய்து ஓய் ஹரிஹரீ கிருஷ்ணதேவகிநந்தன கோவிந்தா ஹரச்சுதாபரந்தாமாகோபிகாரமணவிருஷ்ணி கேசாகேசவா ஸ்ரீமந்நாராயணஅடியேனைரட்சித்துஎன்னுடைய அஞ்ஞானத்தை நிவர்த்தித்து தேவரீருடையஉபையபாதாரவிந்தங்களைத்தந்துரட்சிக்கவேண்டுமென்றுதோத்திரம்பண்ணிக்கொண்டுஅந்தக்கொப்பரிகையை மூன்றுதிரம் பிரதக்ஷிணஞ்செய்து கிழக்குமுகமாகநின்று உயரஎழும்பிஅக்கினிச்சுவாலையாய்எரிந்துகொண்டிருக்கிற அந்தஎண்ணெய்க்கொப்பரிகையில் தொப்பென்று குதித்தான் அந்தச்சமத்தில் தேவேந்திராதிதேவர்கள் ஆகாசமார்க்கத்தில்வந்து' நின்றுசுதர்ம்மனுடையபக்திக்குமெச்சிக்கொண்டாடினார்கள் அந்தசுதர்ம்மனும்எண்ணெய்யில்விழுந்துவாடாமல்வதங்காமல்எவ்வளவும்தபமில்லாமல்மகாசீதளமாய்ஒருவிசாலமானதடாகத்தில்விகசித்திருக்கின்றசெந்தாமரைப் புஷ்பம்போலவும்திருப்பாற்கடலிலுதயமான சந்திரனைப்போலவும் பிரகாசித்து அந்தஎண்ணெய்க்கொப்பரிகையில் ஆனந்தத்துடனே நீந்திவிளையாடிக் கொண்டிருந்தான்-

அதுகண்டு அந்தசங்கிலி கிதர்களிருவரும் ஆச்சரியப்பட்டுஇதேதுபுதுமையாயிருக்கின்றது இதுவரையிலிந்த எண்ணெய்யில் எவர்கள்விழுந்தாலும் அவர்கள் நீறாய்ப்போவார்கள் அப்படியிருக்க இதுஆச்சரியகரமாயிருக்கின்றது அல்லது இந்த எண்ணெய் நன்றாய் காயவில்லையோ அதையுந்தெரிந்துகொள்ளவேண்டுமென்று ஆலோசித்து ஒருதேங்காயைக்கொண்டுவந்துஅந்த எண்ணெயிற்போட்டார்கள்அந்ததேங்காயானது விழுந்து உள்ளேபோய்ப் படீலென்று வெடித்துதிக்கென்றெறிந்துஆகாசத்திலெழும்பிப்போய்விட்டதுஅதுகண்டுஅந்தசங்கிலிகிதர்களிருவரும்சந்தோஷித்தாய் சுதர்ம்மனைப்பார்த்துஇவன்

ஹரிபக்தியுள்ளவன் பெரியோர்கள் சேவையுள்ளவன் பிதாவினுடைய சொல்லைக் கடவாதவனுதலா லிவன் இப்படி சுகமாயிருக்கிறான்.

மேலும்பூலோகத்தில் சந்தனர்களாயிருக்கப்பட்ட நல்லோர்களுக்கு எந்தகாலத்திலுங் கேடுவருகிறதில்லையென்று வேதஞ்சொல்லுகிறபடியினால் இந்த ராஜகுமாரன் அகிலாண்டகோடிபிர்ம்மாண்டநாயகராகிய ஸ்ரீமந்நாராயண மூர்த்தியினுடைய பரிபூரண கடாக்ஷத்தினால்இப்படி நிர்ப்பயமாய்விளையாடிக்கொண்டிருக்கிறான்அதுவல்லாமல் நம்முடைய கையினால் இவனைப் பிடித்துத் தள்ளவில்லையே அதுசேதியைஅம்சத்துவமஹாராஜன் கேள்விப்பட்டால் நீங்களேன் பிடித்துத் தள்ளவில்லையென்றுநம்மிருவரையும்இந்த எண்ணெய்க்கொப்பரிகையில்தள்ளுவிப்பார் ஆகையால் நாம் அதற்குமுன்னுதாகவே விழுந்துஅந்ததோஷித்தைப்பரிகரித்துக்கொண்டுஸ்ரீகிருஷ்ணபகவானுடையபாதாரவிந்தங்களிற் சேருகிறதே நிச்சயமென்றுசொல்லி சங்கிலிகீதர்களென்கிறஇரண்டு பிராமணரும் அந்த எண்ணெய்க்கொப்பரிகையைமூன்றுதிரம் பிரதக்ஷிணஞ்செய்து ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய திருவடிகளைதியானித்துக்கொண்டு ஜயோவென்றுஎழும்பிக்குதித்தார்கள் அங்ஙனங்குதித்தஅவர்களும் ஒருவேதனையுமில்லாமல்தண்ணீரில் நீந்துகிறதுபோலவிளையாடிக் கொண்டிருந்தார்கள்.

அதுகண்டுஆகாசவாணியும்மெச்சிக்கொண்டாடினாள் தேவேந்திரன்முதலான தேவர்களும் பாரிசாத புஷ்பங்களைச் சலசலவென்று அந்தமூவர்பேரிலும் வருஷித்தார்கள் தேவதுந்துமியும் திம்திம்மென்று முழங்கியது தும்புருநாரதர்கள் வீணையை மீட்டினார்கள் கந்தர்வர்கள் பாடினார்கள் யக்ஷயஸ்திரீகள் கூத்தாடினார்கள் இப்படி சகல வைபவத்துடன் அந்தமூன்றுபேரும் பிரகாசித்துக்கொண்டிருப்பதை மந்திரிகள்கண்டு ஆச்சரியப்பட்டு ஓடிவந்து இந்தஅதிசயமெல்லாம் அம்சத்துவ மஹாராஜனிடத்திற் சொன்னார்கள் அதுகேட்டு அந்தராஜனும்அதிசயப்பட்டு மகாசந்தோஷித்துடனே மந்திரிகளைப்பார்த்து ஓய்மந்திரிகளே நீங்கள்போய் அந்தமூன்றுபேரையும் இவ்விடத்திற்குஅழைத்துவாருங்களென்று உத்தரவு செய்தார் - அதுகேட்டு அவர்களும்எண்ணெய்க்கொப்பரிகையினிடத்திற்குப்போய் அவர்களைப்பார்த்துஉங்களை ராஜாவானவர் அழைத்துவரும்படி கட்டளையிட்டாரென்றுசொல்ல அதற்கு அந்தமூன்றுபேரும் நல்லதென்று வெளியேவந்து மங்களஸ்நானம்பண்ணிஜபதபங்களை முடித்துக்கொண்டு திவ்யமாகியவஸ்திரங்களைத்தரித்துக்கொண்டு ரதாரூடர்களாய் சகல சேனைகளும் புடைசூழ்ந்து வரும்படி சகலசம்பிரமத்துடன் அம்சத்துவமஹாராஜன்இருக்குமிடத்திற்குவந்து சேர்ந்தார்கள்.

அதுகண்டு அம்சத்துவமஹாராஜனும் அந்தசங்கிலி கீதர்களென்கிற பிராமணர்களிருவருக்கும் நமஸ்காரம்பண்ணினார். அப்பொழுது சுதர்ம்மனும் தேரைவிட்டிழித்து தன்பிதாவுக்கு மூன்றுதிரம் பிரத

க்ஷிணஞ்செய்துசாஷ்டாங்கதெண்டன் சமர்ப்பித்தான்- அதுகண்டு அம்சத்துவ மஹாராஜனும் தன்குமாரனுகிய சுதர்ம்மனை யெடுத்து மார்போடணைத்துக்கொண்டு உச்சியைமுகந்துமுத்தமிட்டு ஐயா,புத்ர ரத்நமேஉன்னால் எனக்குச் சகலபிரதிஷ்டையுங் கீர்த்தியு முண்டாச்சுது- ஆனாலும் நீ நேற்றியதினம் வராமற்போன தென்னவென்றுகேட்கஅதற்கு அந்த சுதர்ம்மனும் ராத்திரிஇருந்துவந்த சங்கதிகளைச் சொல்ல அதுகேட்டு அந்தராசனும் மகிழ்ச்சிகொண்டு அந்தக்ஷணமேசங்கா தீர்த்தமுதலானதிவ்யதீர்த்தங்களை அழைப்பித்து பிர்ம்மசொரூபமாக விளங்கப்பட்டபிராமணர்களால் மந்திரபூர்வகமாய் அந்தசுதர்ம்மனுக்கு அபிஷேகம்பண்ணிவைத்து இந்த சண்பகாபுரத்திற்குநீயே அரசனென்று சகலசம்பிரமத்துடன்மகுடஞ் சூட்டிவைத்தார்,

பிற்பாடு சுதர்ம்மனும் பட்டாபிஷேகனாய் சகலவேடிக்கையுடன் இருந்துக்கொண்டு தன்னைவந்துசேவித்துக்கொள்ளுகிற மண்டலீகருக்கெல்லாம் ஆதரணைசொல்லி மகா உச்சாகத்துடனே சேனாபதிகளைப் பார்த்து அர்ச்சுனராஜனுடைய அஸ்வமேதக்குதிரை எவ்விடத்தில்வருகின்றது அதைப் பிடித்துக்கொண்டு வாருங்களென்று உத்தரவு செய்துஆயிரம்ரதக்காரர்களை யனுப்ப அவர்களுமப்படி யேநல்லதென்று போய்அந்தக்குதிரையைப்பிடித்துக் கொண்டுவந்து விட்டார்கள் - அதுகண்டு சுதர்ம்மனும்அந்தக் குதிரையைப் பார்த்து இனிமேல் என் கையிலகப்பட்ட குதிரையை அந்தஅர்ச்சுனன் விடுவித்துக் கொண்டு போய் தர்மராசாவினுடைய கையினால் யாகம்பண்ணுவிக்கப் போகிறேனு அதுஅந்த கிருஷ்ண பகவானுக்கே பிர சித்தமாகத் தெரியவரும் ,அதுவுமல்லாமல் அர்ச்சுனனுக்காக பாக்கியப்பட்டு தேவேந்திராதிதேவர்களெல்லாரும் ஒருமுகமாகக்கூடிவந்து குறுக்கே விழுந்து குதிரையைப்பிடிப் பார்களானாலும் அவர்களையும் என்னுடைய குரூரபாணங்களினால்கண்டதுண்டம் பண்ணுகிறேனென்று சொல்லி பிற்பாடு அந்தக்குதிரையையும் தன்தகப்பனுன அம்சத்துவமஹாராசாவையும்சேனைகளுக்குமத்தியில்நிறுத்தி தன்னுடைய சேனைகளையெல்லாம் பத்துவியூகமாகநிறுத்தி தான் முதன்மையாகயுத்தசன்னுத்தனாய்கனகமயமானஒருதிவ்யரதத்திலேறிக்கொண்டு கோதண்டத்தைக் கையிலேபிடித்துநின்றுமஹாஉச்சாகத்துடனேரணபேரிகைவெங்கலப் பேரிகைமுதலானதுகளையுமுழக்குவித்தான்-இவளிடத்தில்இப்படி நடந்துகொண்டிருக்கஅவடத்திலந்தஅஸ்வமேதக்குதிரையைக்காத்துக்கொண்டு பின்னுகநடந்துவந்தசேவகர்களெல்லாம் அந்தஆயிரம் ரதக்காரர்களால் அடிபட்டுநொந்துஓட்டமெடுத்து அர்ச்சுனனிடத்திற்குப்போய் சுவாமீ நம்முடையகுதிரையானதுஅம்சத்துவ மஹாராசனிடத்தில் அகப்பட்டுக்கொண்டதென்று முறையிட்டார்கள் அதுகேட்டு அர்ச்சுனராசனும்மஹாரோஷித்துவேஷித்துடனே யந்த சேவகர்களைப் பார்த்து ஓய் சேவகர்களே,நம்முடையகுதிரையைப்பிடிக்கிறவனும் இருக்கிருனேஅ

ல்லதுபயமில்லாமல் எவனாகிலும்ஒருவன்பிடித்துக்கட்டுவானே யாகில் அவனுக்குயமலோகமேகதியென்பதுஇந்தப்பூமண்டலத்தில் எவர்களு மறியார்களோ ஆனாலுமாகட்டும் இப்பொழுதே என்னுடைய பாணாக் கினியினாலெரித்துஅந்தஅம்சத்துவமஹாராஜனுடைய கெர்வத்தையும டக்கிவைக்கிறேனென்று உக்கிராகாரத்துடன்சொல்லி யதன்பின்பு பெ ரியகாட்டைப்போலவிஸ்தீரணமாய்நெருங்கியிருக்கின்ற சதுரங்கபல சேனைகளுடனும்விஷ்வகேதுமுதலானதுரைகளுடனும் புறப்பட்டுசிங் கநாதங்கள்அட்டகாசங்கள்முழங்கவும் எழாவரங்கள் கெர்ச்சிக்கவும்ரத த்தொனிகள்படபடாசாரங்கள்செய்யவும் நடக்கிறஅதிர்ச்சியினால் பூமி யதிர்ந்துபத்தல்பத்தலாய்வெடிக்கவும்அஷ்ட்குல பர்வதங்களும் நடு நடுங்கவும்அஷ்டகஜங்களும் வீரிட்டோடவும் சேனைகளுடைய பாததூ ளியினால்சமுத்திரமுழுதும் சேராய்ப்போகவும் மஹா ஆரவாரத்துட னேஅதிவேகமாய்நடந்துசுதர்ம்மனுடையசேனைகளிருக்குமிடத்திற்கு ச்சமீபமாகவந்து நின்றுஅர்ச்சுனராசனும் தண்டுவிட்டிறங்கி எதிராக இருக்கின்றசேனைகளையும்அந்தசேனைகளுக்கு மத்தியி லிருக்கப்பட்ட அம்சத்துவமஹாராசனையும்அஸ்வமேதக்குதிரையையும் முதன்மந்திரி யாயிருக்கின்றசுதர்மனையும்பார்த்துஎவ்வளவும் முன்பின் யோசித்துப் பாராமல்இந்தக்ஷணமே என்னுடைய பாணாக்கினியினால் ஸ்மீசரப்ப டுத்திவிடுகிறேனென்றுசொல்லி தன்னுடைய சேனைகளையும் பத்துவி யூகமாகநிறுத்திதன்னுடையரதத்தையு முன்னேநிறுத்தி தன்கையினி டமாகப்பிடித்திராநின்றஅக்கினிதேவன் கொடுத்த காண்டீபத்தைக் கு ணத்தொனிபண்ணிசாரதியையு மெச்சரித்து ரத்தையும் வேக மாக நடத்தினான்,

அதுகண்டு பிரத்தியுமனனுஞ்சிறித்து அர்ச்சுனராசனைப் பார்த் துஓய்ஐயா,அர்ச்சுன தேவரீர்இந்தக்கொஞ்சஞ்சேனைகளை ஒரு பொரு ட்டாகநினைத்துயுத்தத்துக்குப் போகவேண்டுமோ இப்படியாகதேவரீர் எதிர்த்துப்போகின்றதையோசித்துப் பார்க்குமிடத்தில் மினிமினிப்பு ழுக்கள்பேரில்சூரியபகவான் எதிர்த்துப்போகின்றதுபோ லிருக்கின்ற தேயல்லாமல்வேறல்லஆதலால் தேவரீருக்குத்தெரியும்படிஎங்களுடை யசவுரியத்தையும்பராக்கிரமத்தையும் வில்வித்தையையும்என்றைக்குக் காண்பிக்கப்போகிறோம் எங்களுடைய கீர்த்திப்ரதாபமானது என்றை க்குப்பிரகாசமாகப்போகிறதுதேவரீர்சற்றேநில்லும் என்னுடைய வீ ரப்ரதாபத்தைப்பாரும் என்னுடையசஸ்திர அஸ்திரங்களுக்கு இந்த ராஜனையும்சேனைகளையும்இறையாக்கிவைக்கிறேனென்று ஆக்ருஷமாகச் சொல்லிக்கொண் டிருக்கையில் வீராதிவீரனான விஷ்வகேதுவும் அ ந்த அர்ச்சுன ராசனைப்பார்த்து ஓய் ஐயா, தேவரீர் இந்தச் சேனைகளை ஒருபொருளாய்நினைந்து சண்டைக்குப் போகவேண்டுமோ. சின்ன முளையைப்பிடுங்கிப்போடுகிறதற்குபெரியகோடாலிதேடவேண்டுமோ ஆகையினால்தேவரீர்போகவேண்டாம்சற்று நேரம் நில்லும் நான்போ

ய்இந்தராசனையும்சேனைகளையும் என்னுடையசஸ்திர அஸ்திரங்களினல்
சின்னபின்னம்பண்ணுகிறேனென்றுசொல்லிதன்னுடையரதத்தைஅதி
கவேகமாகத்தூண்டிதன்கையிலிராநின்றகோதண்டத்தில் அதிதீக்ஷண்ணி
யமானஅநேகமாயிரம்பாணங்களைத்தொடுத்துப்பிரயோகஞ்செய்தான்

அந்தபாணங்களானது இரைச்சலிட்டுக்கொண்டுவந்து சுதர்ம்ம
னுடைய சேனைகள்பேரில் விழுந்துதைக்கிறபோது அந்த சேனைகளு
டையதயிரியங்களெல்லாம் நிறைந்ததடாகத்தி லிருக்கின்ற தாமரைப்பு
ஷ்பங்களின்வாசனைநீங்கினது போலப் போய்விட்டது அதுகண்டு வி
ஷ்வகேதுவும்அநேகமாயிரம்பாணங்களை மேன்மேலாகப் பிரயோகஞ்
செய்துசுதர்ம்மனுடைய சேனைகளையெல்லாம்பின்னிட்டோடும்படியா
கச்சின்னபின்னப்படுத்தினன்அதுகண்டு சுதர்ம்மனும் ஓடிப்போகின்
றதன்னுடைய சேனைகளையெல்லாம் நிறுத்திஅந்த விஷ்வகேதுவுக் கெ
திரே தன்னுடைய ரதத்தைத்தூண்டி விஷ்வகேதுவைப் பார்த்து ஓய்
ராஜகுமாரகா நீபதரவேண்டாம்அந்த அர்ச்சுனராஜன் முன்னுதாகவந்
தால் அவனைநிறுத்திவிட்டு நீமுதன்மையாகவந்துஎதிர்த்தாயேநீமஹா
வீரன்தான் உன்னுடையபலத்தை ஒருநிமிஷத்தி லறிகிறேன் ஆனாலும்
உன்னுடைய குலங்கோத்திரமறிந்துகொள்ளாமல்உன்னோடுசண்டைப
ண்ணக்கூடாது ஆதலால்உன்பெயரென்ன உன்பிதாவின்பெயரென்னஉ
னக்கு ஆசிரியரெவர் உன்னுடைய வம்சமென்ன அதையெனக்குச்சற்
றே தெரியப்படுத்த வேண்டுமென்றுசொல்லஅதுகேட்டு விஷ்வகேது
வும்சுதர்ம்மனைப்பார்த்து ஓய்ராஜநந்தனஎன்னுடைய குலங்கோத்திரங்
கேட்கவேண்டுமோ ஆனல்சொல்லுகிறேன்கேளும்.

நான்சகல சீவராசிகளுக்கும் ஆனந்தத்தை யுண்டாக்குகிறவராய்
ஸ்ரீமந்நாராயணமூர்த்திக்குநேத்திரமாய் திரிமூர்த்தி ஸ்வரூபமாய்தாம
ரைக்குச்சிநேகராய் சகலதேவர்களுக்கும்பிராமணர்களுக்கும்ஆதாரமா
னதெய்வமாய்விளங்கப்பட்ட சூரியபகவானுடைய பேரன்மஹாதான
வினேதியாகிய கர்ணமஹாராஜனுடைய குமாரன்என்பெயரோவென்
றல்சகலவீராதிவீரர்களையெல்லாஞ்செயித்த விஷ்வகேதுவென்றுசொ
ல்லுவார்கள் அதுவுமல்லாமல் பரமாத்துமனகிய ஸ்ரீகிருணமூர்த்தியே
எனக்கு ஆசிரியருந்தெய்வமுமாயிருக்கின்றவர் நானந்தபகவானுடை
ய அநுக்கிரகத்தினலேயே சகலசத்துருக்களையும்தும்சப்படுத்துகின்ற
தென்றுசொல்லி பின்னையும் அந்த சுதர்ம்மனைப்பார்த்து நான் என்னு
டைய விர்த்தாந்தமெல்லாம்விவரமாகச் சொன்னேனல்லவோ உன்னு
டையவிர்த்தாந்தத்தையும் எனக்குத்தெரியும்படி சற்றேசொல்லென்று
கேட்க. அதுகேட்டுசுதர்ம்மனும் விஷ்வகேதுவைப்பார்த்துஓய்விஷ்வ
கேதாஎன்னுடையகுலமுங்கோத்திரமுஞ்சொல்லுகிறேன்கேளும்நான்
பரவாசுதேவரானஸ்ரீகிருஷ்ணமூர்த்திக்கு அடிமையாயிருக்கப்பட்டஅ
ம்சத்துவமஹாராஜனுடைய குமாரன்என்பெயர் சுதர்ம்மனென்றுசொ
ல்லுவார்கள் இனிமேல் உன்னுடனேயெதிர்த்துநின்று போராடுகிறதற்

குளனக்குத்தகும், எதோபார்ப்போம் வாவென்றுசொல்ல,அதுகேட்டு விஷ்வகேதுவும் தன்னுடையகோதண்டத்திடமாகக் கோடையிடிகளுக்குச் சமானமான குரூரபாணங்களைத்தொடுத்து சுதர்ம்மனுடையசேனைகளையெல்லாந் தத்தளிக்கப்பண்ணி அவனுடையரதசாரதியையுங்குதிரைகளையும் நாசஞ்செய்துகொடியையுமறுத்துவில்லையுங்கண்டித்து அவனையுஞ் சல்லடைக்கண்களாகத்துளைத்து சரீரமுழுதும் ரத்தமயமாக்கினான்.

அதற்கு அந்தச்சுதர்மனும் சற்றுநேரம் ஆயாசமாயிருந்து உடனேமஹாகோபதீப்தனாய்வேறொருவில்லையெடுத்துஅநேகமாயிரம்பாணங்களைத்தொடுத்துவிஷ்வகேதுவின்பேரில்பிரயோகஞ்செய்தான்- அதனால் விஷ்வகேதுவும்நொந்துஆக்கிரவியாக்கிரம நிற்குரோதனாய் அதிசீக்கிரமாகத்தன்னுடையவில்லிலே அதிகதீக்ஷண்யமானகோடானுகோடிபாணங்களைத்தொடுத்துப் பிரயோகஞ்செய்து சுதர்ம்மனுடையரதத்தையும்சக்கைசக்கையாய்ப்பிளந்துசாரதியையுங்குதிரைகளையுங்கொன்று அவன்கையிலிராநின்ற வில்லையுங்கண்டித்துஅவனுடையமார்பையும் பக்தலாகக்கிழித்து ரத்தமயமாக்கினான்,அதனால்சுதர்ம்மனும்ஆயாசமடைந்து மஹாரோஷத்துடனே வேறொருவில்லை எடுத்து வளைத்து குணத்தொனிபண்ணி அந்தவில்லினிடமாக சூரியகிரணம்போலஅதிதீக்ஷண்யமான பாணங்களைத்தொடுத்துப் பிரயோகஞ்செய்து விஷ்வகேதுவினுடைய சாரதியையும் அதம்பண்ணி குதிரைகளையுங்கண்டித்து அவனுடையமார்பிலும் ஐந்துபாணங்கள்தைக்கும்படி செய்தான்,அதனால்விஷ்வகேதுவும்நிர்வகிக்கமாட்டாமல்மெத்தவும் ஆயாசப்பட்டுதேரின்பேரில்தொப்பென்றுவிழுந்து மரணத்துக்குச் சரியானமூர்ச்சையையடைந்தான்.அதுகண்டு பிரத்தியுமனனுங்கோபமிகுந்து நறநறவென்று பற்களைக்கடித்துக்கொண்டு மீசைபடபடவென்று துடிக்கும்படி அதிகரோஷத்துடனே தன்னுடையரதத்தைத்தூண்டி சாரதியையுமெச்சரித்து வில்லைக்குணத்தொனிபண்ணிஅநேகமாயிரம் அளவிறந்தபாணங்களைத்தொடுத்துப்பிரயோகஞ்செய்துசுதர்ம்மனுடையசேனைகளையெல்லாஞ் சூழ்ந்துக்கொண்டு தேர்களையெல்லாம் குத்துக்கால்வேறு கொடுங்கைவேறாகச்சக்கைச்சக்கையாகப்பேர்த்தெறிந்துஆனைகளையெல்லாம் கால்வேறு வால்வேறு மஸ்தகம்வேறு தும்பிக்கைவேறு தந்தங்கள் வேறாகவிழும்படிசெய்துகுதிரைகளையெல்லாம் கண்டதுண்டம் பண்ணிகால்வேறுகைவேறு-தலைவேறு-மாமிசம்வேறு- எலும்புவேறாகக்கண்டித்து எங்கேபார்த்தாலும்பிணமலைகளாகக்குவித்துரத்தவெள்ளம்ஆறாகவழிந்தோடும்படிசெய்து மஹாஆக்ருஷத்துடனே சிங்கநாதம் பண்ணினான் அதனால்சுதர்ம்மனுடையசதுரங்கபலசேனைகளும்நிர்வாகஞ்செய்யமாட்டாமல்இறந்தவர்கள்போகமற்றவர்களெல்லாரும்பயங்கொண்டு ஓட்டமெடுத்தோடினார்கள்,

அதுகண்டு சுதர்ம்மனும் மஹாரோஷித்து வேஷங்களையுடைய

வனுய் ஓடிப்போகின்றதன்னுடையசேனைகளைப்பார்த்து நீங்களேன்ப யந்தொடுகிறீர்கள் இந்தப் பிரத்தியு மனனுடைய சேவகத்தை ஒருநி மிஷத்திலேகாண்பிக்கிறேன் நீங்கள் ஓடிப்போகவேண்டாமென்றுகை யமர்த்திஎல்லாரையுநிறுத்தி தன்னுடையரதத்தைஅதிகவேகமாகத்துற த்தி அந்தப் பிரத்தியுமனனைப்பார்த்து ஒய்மன்மதா நீயேன்தலை கீழா ய்விழுகிறாய்சற்றேபொறுத்திருஉன்னுடையபாணத்தையும்உன்னுடை யவில்லையும்உன்னுடையசவுரியபராக்கிரமத்தையும் நினைத்துப்பார்க்கு மிடத்தில்சிரிப்புவருகின்றது உன்னுடையயுத்தத்தையும்பெண்டுகளே மெச்சவேண்டும்என்முன்னெதிர்த்துநிர்வகிக்கமாட்டாய்முன்புபரம சிவனுடையநெற்றிக்கண்ணாலெரிந்துசாம்பலானபொழுதே உன்னுடை யகெர்வமெல்லாம்அடங்கிப்போச்சுமேதநீஇன்னமும்வெட்கமில்லாமல் ஆண்பிள்ளையாகவந்துஎன்முன்னேயெதிர்த்துநிற்கிறாயல்லவா ஆனாலு மென்ன இப்போதுஒருநொடிக்குள்ளேஎன்னுடையபாணக்கினியினால் உன்னைபஸ்மீகரப்படுத்திவிடுகிறேன்உன்னை ஒருபொருளாயெண்ணி நான்சட்டைபண்ணுகிறதில்லையென்றால்உன்பிதாவாகியகிருஷ்ணபக வானை என்பிதாவாகியஅம்சத்துவமஹாராசன்இருதயகமலத்திற் கட்டி வைத்துக்கொண்டிருக்கிறார்அப்படிக்கொத்தமஹானுபாவனுடையபுத் திரனாகியஎன்னுடையசவுரியபராக்கிரமத்தைக்காண்பிக்கிறேன்நீ சற்று நேரம்நில்லென்றுசொல்லிதன்னுடையரதத்தையும்அந்தப் பிரத்தியும னனுடைய ரதத்திற்கு நேராகத்தூண்டினான்,

இப்படியாகச்சொன்னவசனங்களையெல்லாம்பிரத்தியு மனன்கே ட்டுநன்றாயிருக்கிற தென்றுசிரித்து அந்தசுதர்ம்மனைப் பார்த்து ஒய் சுதர்ம்மா- நீ என்னைச் சவுரியமில்லாதவனென்றுசொன்னாயல்லவோநா னிதுவரையில் ஒருகரும்பிவில்லினாலும்ஐந்து புஷ்பபாணங்களினாலும் வண்டுகளையேநாணியாகக்கொண்டுஈரேழுபதினாலுலோகங்களையுஞ்செ யித்தேன்இப்போதுவயிரமானவில்லும் எழுகுபாணமு முண்டானால் எப்படியாகவேண்டும்அதையுஞ்சற்றுநேரத்தில்நீயேபார்க்கப்போகி றாயென்றுசொல்லிபிரத்தியுமனனானவன்காலாக்கினி ருத்திரனைப்போல யெரிந்துவிழுந்து தன்னுடையவில்லி னிடமாகவச்சிரா யுதத்திற்குச்ச மானமானஅநேகமாயிரம்பாணங்களைத்தொடுத்துப்பிர யோகஞ்செய் துசுதர்ம்மனுடையதேரையுந்தும்சப்படுத்தி அவனுடைய தேர்ப்பாக னையுங்குதிரைகளையுங்கொன்றுஅவனையும்நோகவெய்தான் அதனால் சு தர்ம்மனானவன் மெத்தவும்இளைப்படைந்து மகாரோஷித்து வேஷித்து டனே மனோதயிரியம்விடாமல்வேறேஒருதேரிலேறிக்கொண்டு வில்லை க்குணத்தொனிபண்ணிஅந்தவில்லினிடமாக அநேகமாயிரம் தீக்ஷண்ய மானதிவ்வியபாணங்களைத்தொடுத்துபிரத்தியுமனன்பேரிற் பிரயோக ஞ்செய்துஅவனைநோகவெய்தான் அதுகண்டுஅந்தபிரத்தியு மனனும் பயப்படாமல்நின்றுதன்னுடைய வில்லிலேகாளகூட விஷத்துக்குச் ச மானமானதிவ்யபாணங்களைத்தொடுத்துசுதர்ம்மன்பேரில் பிரயோகஞ்

செய்து அவனுடைய ரதசாரதியையுங்கொன்று குதிரைகளையுங் கண்டி
த்துவில்லையுந்துண்சப்படுத்திதேரை யுஞ்சக்கை சக்கையாகப் பிளந்து
அவனையுஞ்சல்லடைக்கல்களாகத்துளைத்து சரீரமுழுதும்ரத்தமயமாக்
கினான் அதுகண்டுசுதர்ம்மனானவன் எவ்வளவுந்தயிரியம்விடாமல் ஒரு
கத்தியுங்கேடகமும்எடுத்துக்கொண்டு தேரைவிட்டுப் பூமியிற்குதித்து
வருகையில்பிரத்தியுமனன்கண்டுஇரண்டு அர்த்தசந்திர பாணத்தினால்
அந்தக்கத்தியையுங்கேடகத்தையும்பொடிப்பொடியாக்கினான்அதற்கும்
பின்னிடாமல்மறுபடியும்ஒருகதாயுதத்தைஎடுத்துக் கொண்டு வருகை
யில் அதைப்பிரத்தியுமனன்பார்த்துத்தானும் ஒருகதாயுதத்தை எடுத்து
க்கொண்டுதேரைவிட்டு பூமியிற்குதித்து அந்தச்சுதர்மனுடனே சிங்க
மும்சிங்கமும்எதிர்த்ததும்பால் எதிர்த்துநின்று இரண்டுதிறவரும் சம
மாய்கதாயுதத்தினால்பராக்கிரமத் துடனே போராடினார்கள், அதனாலிர
ண்டுபேர்கையிலுமிருந்தகதாயுதங்களும் பொடியாகி விட்டது அதுக
ண்டுபிரத்தியுமனனும்வேறொருகத்தியுங் கேடகமும் எடுத்துக்கொண்
டுஇரண்டுவியாக்கிரமத்தைப்போலஆக்கிரகித்து நின்று ஒருவர்க்கொரு
வர்செலிக்கவேண்டுமென்கிறஆசையினால்ஒருவரையொருவர் கட்டிப்புர
ண்டும்வெட்டியுங்குத்தியும்தள்ளியும்முட்டியும் இடித்தும் இழுத்தும்
இந்தவிதமாகவெகுநேரம்போராடினபின்புஒருவருடைய கத்திவெட்
டுஒருவர்பேரில்விழுந்துஅந்தஇரண்டுபேரும் மூர்ச்சையடைந்தார்கள்,

அதில்அந்த சுதர்ம்மன்மாத்திரம் சற்றுநேரத்தில் மூர்ச்சைதெளி
ந்தெழுந்திருந்துமகா ஆக்ருஷித்துடனே வேறொருதேரி லேறிக்கொ
ண்டுவில்லைகுணத்தொனிபண்ணி அர்ச்சுனனுடைய சேனைகள் பேரில்
எதிர்த்தான் அதுகண்டு கிருதவர்மனும்எதிர்த்துசுதர்ம்மனுடனே சற்று
நேரம்போராடிஅவனுடைய பாணக்கினிக்கு நிவர்வாகஞ்செய்ய மாட்
டாமல்நொந்து தேரைவிட்டுக்குதித்து ஓடிப் போனான் அதுகண்டு சு
தர்ம்மனும்சிரித்துதன்னுடையரதத்தைச்சக்கிராகாரமாய்சுழற்றிக்கொ
ண்டுவந்துஅனுசாலுவனுடனேசிறிதுநேரம்போராடி அவனையும் மூர்
ச்சிக்கப்பண்ணிவித்துபின்புஎவ்வர்ணகுவனுடனே எதிர்த்து அவனோ
டும்சற்றுநேரம்யுத்தம்பண்ணிஅவனையும் மூர்ச்சையடை வித்து அப்
புறம்நீலத்துவசமஹாராசனுடனேஎதிர்த்து யுத்தஞ்செய்துஅவனையும்
மூர்ச்சிக்கப்பண்ணிவித்துஅந்தசுதர்ம்மனானவன் தாமரைத்தடாகத்திற்
புகுந்தஆனையைப்போல ஆக்கிரகித்துஎங்கே பார்த்தாலும் சுதர்ம்மனா
கப்பிரகாசித்துநின்றுரதகஜதுரகபதாதிகளாகிய நால்வகைச் சேனைகளை
யுஞ்சின்னாபின்னமாய்க்கண்ட துண்டப்படுத்தி எந்தஇடத்திலும் பிண
மலைகளாசக்குவித்துரத்தவெள்ளமானது ஆறாய்ப்பெருகி யோடும்படி
செய்து பின்னையும் வில்லைப்பிடித்துவந்து தன்னைஎதிர்த்தவர்களை யெ
ல்லாம்அதம்பண்ணி மருந்துக்காகிலும்ஒருவரையும் விடாமற்படிகொ
ன்றுவிட்டுஎங்கேபார்த்தாலும்யமனுடையவண்டகசாலையைப்போலவ

ம்வேடனனவன்மாமிசக்குப்பையைப் போட்டுவைத்ததுபோலவும்அர்ச்சுனனுடைய சேனைகளையெல்லாம் மூலைக்குமூலை ஒதுக்கிசிங்கநாதம் சங்கநாதம்-அட்டகாசம்-முதலானவைகளைச்செய்து மகாஉச்சாகத்துடனே தன்னுடைய ரதத்தைத்தூண்டி அர்ச்சுனராசன்பேரில் எதிர்த்துநின்றுதன்னுடைய வில்லினிடமாக அக்கினிச்சுவாலையை வீசுகின்ற அநேகமாயிரம் பாணங்களை யெடுத்து இதுபத்துஇதுநூறு இதுஆயிரம் இதுபதினாயிரம் இதுலக்ஷம் இதுபத்துலக்ஷமென்று கணக்குவழக்கில்லாமற் றெடுத்துப்பிர யோகஞ்செய்து இருநூறு பாணத்தினால் அர்ச்சுனராஜனுடைய மார்பைப் பத்தலாகக்கிழித்து நூறுபாணத்தினால்அநுமக்கொடியையும்அறுத்து நூற்றைம்பது பாணத்தினால் சாரதியையும் நோகப்பண்ணிஅர்ச்சுனனுடைய ரதத்தையும்மிஞ்சிவரவொட்டாமல்சிக்குப்படுத்திகியாவென்றுசிங்கநாதம்பண்ணினான்,

அதுகண்டு அர்ச்சுன ராசனும்மகா கோபதீப்தனாய் இரண்டுகண்களிலும்குபீல் குபீலென்று நெருப்புப்பொறிகள் பறக்கவும் பல்லுகளைநெறநெறவென்று கடித்துக் கொண்டு மீசை படபட வென்று துடிக்கவும் சரீரமுழுதும் வெயர்க்கவும் பிரளயகால ருத்திரனைப்போலநின்றுஅட்டகாசம்பண்ணி அந்த சுதர்ம்மனை உறுமிப்பார்த்துதன்கையிற்பிடித்திராநின்றகாண்டீபமென்கிற வில்லைவளைத்து குணத்தொனிபண்ணிதனக்கு அஷ்டதிக்குப்பாலகர்கள் கொடுத்திருக்கின்ற அதிதீக்ஷண்யமானஅஸ்திரங்களை அந்தவில்லினிடமாகச் சந்தித்துப்பிர யோகஞ்செய்தான்-அந்த அஸ்திரங்களானது கிருஷ்ண சர்ப்பம்போல் இரைச்சலிட்டுப்புகைகளுடனும் எரிகளுடனும் ஒன்றொன்றுஉராய்ந்துக்கொண்டுவந்து சுதர்ம்மனுடைய கைவில்லைக் கண்டித்து ரத சாரதியையுங் குதிரைகளையுஞ்சின்னபின்னப்படுத்தி குடையையும் கொடிச்சீலைகளையுந்துண்டித்து அவனுடையசரீரமெல்லாஞ் சல்லடைக் கண்களாகத்துளைத்து அவனையும் பிர்ம்மிக்கும்படி செய்து விட்டது.அதனால் அந்த சுதர்ம்மனானவன் மிகவும் நொந்து மகா ஆயாசத்துடனே சற்றுநேரம் கொடிஸ்தம்பத்தின்பேரில் மூர்ச்சையாய்விழுந்து கிடந்துதிரும்பவும் ஆயாசந்தீர்ந்து எழுந்திருந்து உக்கிராகாரனாய் வேறே ஒரு ரதத்திலேறிக்கொண்டு திகுதிகுவென்று எரிகிற அக்கினிக்குச் சமானமாய்தங்கக்கட்டுகளுடனே கூடியிருக்கின்ற ஒரு வில்லையெடுத்து அந்தவில்லைக்குணத்தொனிபண்ணி அந்தவில்லினிடமாக அதிகோரமான பாணங்களைத்தொடுத்துப் பிரயோகஞ்செய்து அர்ச்சுனராஜனை நோகவெய்தான்,

அதனால் அந்தஅர்ச்சுனராஜன் மெத்தவும் நொந்து தயிரியத்தை விடாமல் காண்டீபத்தில் ஒரு அக்கினியாஸ்திரத்தைத் தொடுத்து சுதர்ம்மன்பேரில் பிரயோகஞ்செய்தான் அதுகண்டு சுதர்ம்மனும் ஒருவருணாஸ்திரத்தை எடுத்து அபிமந்திரித்து தன்னுடைய வில்லினிடமாகத் தொடுத்து அர்ச்சுனராசன்பேரில் பிரயோகஞ் செய்தான் அந்த அஸ்திரமானது மின்னிக்கொண்டுவந்து சப்தமேகங்களு மொன்றாகக் கூடி

மேககாலத்தில் வருஷித்ததுபோல ஜலத்தைவருஷித்து அந்தஅக்கினியாஸ்திரத்தினுடையஜ்வாலையெல்லாந் தணித்துவிட்டது அதுகண்டு அர்ச்சுனராஜன் திரும்பவும் அநேகமாயிரந் திவ்யபாணங்களைத் தொடுத்துப்பிரயோகஞ்செய்தான்,

அதுகண்டு சுதர்ம்மனும் அந்த பாணங்களில் ஒன்றாகிலும்தன்னுடையதேரினிடத்திற்கு வரவொட்டாமல் கண்டித்துவிட்டு சண்டப்பிரசண்டனாய் தன்னுடைய வில்லைவளைத்து அநேக அஸ்திரங்களைச் சந்தித்துதேவர்கள் முதலானவர்களுக்குந் தெரியவொட்டாமல் மணலைவாரியிறைத்ததுபோல் அர்ச்சுனராசன்பேரில்பிரயோகஞ்செய்துஅர்ச்சுனராஜனைக்காண்டீபத்தைப் பிடிக்கவொட்டாமலும் அஸ்திரங்களை எடுக்கவொட்டாமலும் கால்கைகளை அசைக்கவொட்டாமலும்செய்தான் அதனால்அர்ச்சுனராசன் மெத்தவும் தாப மடைந்து சுதர்ம்ம னுடைய ஆண்மைக்கு மெச்சிதலையயசைத்து சுதர்ம்மனைப்பார்த்து ஓய் ராஜகுமாரகா உன்னை நான் மெச்சினேன் பளாபளா உன்பாணத்தி னுடையசுறுக்கே சுறுக்கு நான் பாரதயுத்தத்தில் வீஷ்மாசாரியார் துரோணாசாரியார் கர்ணன் சல்லியன் முதலான வீராதி வீரர்க ளுடனும் போராடினேன் அவர்கள் பிரயோகித்த பாணங்களினுடைய சுறுக்கும்இதற்கீடல்ல,அதுவுமல்லாமல் ஒருகாட்டுப் பன்றி நிமித்தமாய் பரமேஸ் வரன் வேடனாகவந்து என்னுடனே போராடி அவர் பிரயோகஞ் செய்த பாணங்களினுடைய சுறுக்கும் இதற்கீடல்ல ஆதலால் உன்னையே மெச்சினேன் நீகற்றிருக்கிற வில்வித்தை உன்னுடைய சவுரிய பராக்கிரமம்இந்தப் பூலோகத்தில் ஒருவருக்காகிலு முண்டோவென்று மெச்சிச் சொன்னான்,

அதுகேட்டு சுதர்ம்மனும் அர்ச்சுனனைப்பார்த்து ஓய் அர்ச்சுனாநீயோஎன்னைமெச்சுகிறவன் இனிமேல் உன்னைச்சாக அடிக்கிற போது உன்னைக்காப்பாற்றவேண்டுமென்று ஸ்ரீகிருஷ்ணபகவான் வருவார் அந்தபகவானல்லவோ என்னுடையஆண்மையைக்கண்டு மெச்சவேண்டும் அப்போதல்லவோ எனக்குச்சந்தோஷமுண்டாகும் - ஆகையினால் அந்தபகவானையும் இன்னஞ் சற்றுநேரத்தில் வரப்பண்ணு கிறேன் நீயும் அநேகயுத்தத்தில்கைகண்டிருக்கிறாயல்லவா அந்த வில்வித்தையை யெல்லாம் என்முன்னே காண்பி யென்றுசொல்லி தன்னுடைய வில்லிலே ஒருசுழல்பாணமென்கிற திவ்வியாஸ் திரத்தை எடுத்துத் தொடுத் துப்பிரயோகம்பண்ணினான் அந்த அஸ்திரமானது றிவ்வுறிவ்வு மென்று சுழன்றுக்கொண்டுஓடிவந்து அர்ச்சுனனுடைய ரதத்தின்பேரில் விழுந்தது அந்தஅர்ச்சுனனுடைய ரதசாரதியும் தலை யுடைந்து செத்தான். அதுவுமல்லாமலும் அந்தஅஸ்திரமகிமையினால்அர்ச்சுனனுடைய, ரதமானது சரசரவென்கிற ஓசையுடனே குலாலனுடைய சக்கரஞ் சுழல்வதுபோலகுதிரைகளோடுஞ் சுழலத்தலைப்பட்டது அந்த சுழலினால் அர்ச்சுனன்மகா பயங்கரமடைந்து தன்கையி லிராநின்ற காண்டீபத்தை

தீதேரின்பேரில் வைத்துவிட்டு கொடிஸ் தம்பத்தைக் கெட்டியாகக்
கட்டிப்பிடித்துக் கொண்டு ரதத்தை நிறுத்துகிறதற்குச் சக்தி யில்லா
மல் பிரமித்துநின்று தன்னுடைய இஷ்டதெய்வமான (ஸ்ரீகிருஷ்ணப
கவானை) இருதயகமலத்தில் நினைத்து ஓய் துவாரகாபுரிவாசா- புண்ணி
யபுருஷா- வசுதேவதனயா-தேவகிநந்தனா-மாதவாவைகுந்தவாசாஜநார்
த்தனா - அப்பிரமேயா - விருஷிகேசா - கோபிகாரமணா -ருக்மணிம
னோகரா- புருஷோத்தமா-ஹரீ-ஹரீ-கோவிந்தா.முகுந்தா-கேசவா-ஸ்ரீகி
ருஷ்ணா வாசுதேவா வாரும்வாரும்நான் அனாதையாய் சகலசேனைகளையு
ம்பறிகொடுத்துவிட்டுதனியே ஒண்டியாய் அகப்பட்டு நிற்கின்றேன்எ
ன்னுடைய சரீரத்தில் பிராணன்நிற்கவில்லை ஓய் கோபாலமூர்த்தி நான்
தேவரீரைவிட்டுவந்த அன்றுமுதல் இதுபரியந்தமும் எந்தஇடத்திலும்
ஒரு அபஜயங்கண்டதில்லைதேவரீரில்லாத பிழைப்பும்ஒருபிழைப்போ
ஓய்சுவாமீ நீர் சீக்கிரமாகவந்து என்னைக்காப்பாற்றிரக்ஷியும் ரக்ஷியுமெ
ன்று முறையிடுகிறபோதுசகலபுவனகர்த்தாவாகியும்சர்வஜீவதயாபரனா
கியும் சர்வாந்திரியாமியாகியும் சர்வபூரணராகியும் சர்வவியாபகராகியு
ம்விளங்கப்பட்ட (ஸ்ரீமந்நாராயணமூர்த்தியே) பாரதயுத்தநிமித்தம் ஒ
ருவடிவம்போல எழுந்தருளி ஸ்ரீகிருஷ்ணதேவனென்றுபெயர்வைத்துக்
கொண்டு அஸ்தினாபுரத்தில் தாமபுத்திரரோடு பேசிக்கொண்டிருக்கிற
அந்தகிருஷ்ணபகவானுடைய செவியினிடமாக அர்ச்சுனராஜனுடைய
முறையானது கேட்டவளவில் அந்தபகவானுந் திடுக்கிட்டெழுந்திருந்
துதர்மபுத்திரருக்குந் தெரியவொட்டாமல்அவிடத்திலிருக்கிறதுபோல்
வேமாயாவினோதமாயப் புறப்பட்டு மனோவேகத்திலும்அதிவேகமாக
நடந்துகாதுகளில் அணிந்திருக்கின்ற (நவரத்நகுண்டலங்கள்) தளதள
வென்று நாலுதிக்குகளிலும்பிரகாசிக்கவும்தலைமுடியில் சொருகிக்கொ
ண்டிருக்கிற மயிற்பீலிகள்அசைந்தாடவும்,கழுத்தினிடமாகத்தரித்திரு
க்கின்ற முத்துமாலைகள் நவரத்நமாலைகள் ஒன்றோடொன்றுசிக்குப்பட
வும், புஜங்களில்தரித்திருக்கின்றவாகுவலயங்கள்தகத்தகாயமாகப்பிரகா
சிக்கவும்புஜத்தின்பேரில்போட்டுக்கொண்டிருக்கின்றபீதாம்பரத்தொ
ங்கலானது நழுவிநிலத்தில்விழவும் முகாரவிந்தத்தில்முத்துகளைப் போ
லகுறுவேர்வுபிரகாசிக்கவும் அரையிலும் திருவடிகளிலும் அணிந்திரு
க்கின்றமணிகள்தண்டைகள் சதங்கைகள் கணீல்கணீலென்றுசப்திக்கவு
ம்வருகின்ற வேகத்தினால் பூமிகிடுகிடென்று நடுங்கவும் வயிற்றிலடக்கி
யிருக்கின்ற சமஸ்த அண்டகோடிகளுங் குலுங்கவும் இப்படி அனந்த
கோலாகலமாகவந்து சேர்ந்து சக்கரம்போற்சுழலுகின்ற அர்ச்சுனராஜ
னுடையரதத்தின்பேரில் நின்றுகொண்டு அர்ச்சுனராஜனைப்பார்த்து ஓ
ய்அர்ச்சுனா நீ பயப்படாதேஇதோநான்வந்திருக்கின்றேன் நீதேவர்கள்
ராட்சதர்முதலானவர்களுக்கும்பயப்படாத வீராதிவீரனாச்சுதே அப்ப
டிப்பட்டசுத்தவீரனாகிய நீ இன்றையதினம் இந்தசுதர்மனால்சிக்குப்ப
ட்டு பிரமித்து நிற்கின்றாயோ நல்லது நீபயப்பட வேண்டாமென்று

அபயாஸ்தங்கொடுத்து அந்தபகவானுனவர் அர்ச்சுனனுடையரதத்தை
ச்சுழலவொட்டாமல் மிதுத்துபூமியின்மேரில்நிறுத்தி அர்ச்சுனராஜனி
டத்திற்குவந்துஅவனைமார்போம தழுவிக்கொண்டு அவனுடைய சரீர
முழுதுந் தமது திவ்யாஸ்தங்களினுற் றுடைத்து ஓய்அர்ச்சுனு உனக்கு
இத்தனைஆபத்துவந்து நேரிட்டதோஉன்னுடைய சேனைகளெல்லாம்
மடிந்துபோய்விட்டதோவென்றுசொல்ல அதுகேட்டுஅர்ச்சுனராஜனு
ம்ஓய் அய்யாகிருஷ்ணுதேவரீரிருந்தால் எனக்குஒருஆபத்துவராதுதே
வரீரில்லாமற்போனபடியினுல் இப்படிப்பட்டஆபத்துநேரிட்டது இ
னிமேல் என்னுடையசவுரியபராக்கிரமத்தைப்பாரும் அந்தசுதர்ம்மனை
யும்அவன்சேனைகளையும் ஒருநொடிக்குள்ளே கண்ட துண்டம் பண்ணி
விடுகிறேனென்றுசொல்லிதன்னுடைய காண்டீபத்தைக் கையிலெடுத்
துக்கொண்டு ரதத்தின்பேரில்உச்சாகத்துடனே நின்றுன்அப்போதுஸ்ரீ
கிருஷ்ணபகவானுந் தேரைவிட்டிழிந்து குதிரைகளிடத்திற்குவந்துஅந்
தக்குதிரைகளின்பேரில் தைத்திருக்கின்றஅஸ்திரங்களையெல்லாம்பிடுங்
கியெறிந்துசரீரமுழுதுந் தடவிக்கொடுத்து அதுகளின் ஆயாசத்தைதீ
ர்த்து எப்போதும்போல குதிரைகளை ரதத்திற் பூட்டி தம்முடையவல
துகையிற் சவுக்கைபிடித்துக்கொண்டு ரதத்தின்பேரிலே றிசாரத்தியஞ்
செய்யும்படி உட்காந்தருளினுர் அதுகண்டு ஆகாச மார்க்கத்தில் நிற்கி
ன்றமுப்பத்துமுக்கோடிதேவர்களும் அநேகமாயிரந்தோத்திரஞ்செய்
து ஓய்புராணபுருஷா கபடநாடக சூஸ்த்ராவதாரீ தேவரீர் இந்தஅர்ச்
சுனன்பேரில்வைத்தகிருபை எங்கள்பேரில் வைக்கலாகாதோஅதுவுமல்
லாமல்தேவரீர்ஒருபுத்திரனைப்பெற்று சாம்பமூர்த்திக்குச் சாரத்தியஞ்
செய்யும்படிஅமர்த்திவைத்து நீர்இந்தஅர்ச்சுனனுக்குச் சாரதியாய்அ
மர்ந்தீரோவென்றுஅனேகவிதமாகக்கொண்டாடிபாரிசாதப்புஷ்பங்களை
அந்தபகவானுடைய சிரசின்பேரில் சலசலவென்று வருஷித்தார்கள்அ
ப்பொழுஅர்ச்சுனனும் தன்னுடைய காண்டீபத்தைக் குணத்தொனி
பண்ணிதேவத்தத்தமென்கிறசங்கத்தையும்வாயினிடமாகவைத்துபம்ப
ம்மென்றுபூரித்தான் அதிலேஅந்த ரதத்திற்சாரதியாய் எழுந்தருளி யி
ருக்கின்ற ஸ்ரீகிருஷ்ணபகவானும் தம்முடைய பாஞ்சசன்னியமென்னு
ம்சங்கத்தைதாமரையையொத்தவாயினிடமாகவைத்து அண்டகடாகங்க
ளுமதிரும்படி முழக்கியருளினுர் துவசமாகிவிளங்குகின்ற அனுமாரு
ம் ஆகாவென்று அட்டகாசம்பண்ணினுர் ரதத்திற்பூட்டி யிருக்கின்றகு
திரைகளும் அனுமானித்ததுகள் இந்தப்படியாக அர்ச்சுனராசன் மகா
சந்தோஷஉச்சாகத்துடனே சுதர்த்தம்மன்பேரில், எதிர்த்துநிற்க.

அதுகண்டு சுதர்ம்மனுஞ்சிரித்து அர்ச்சுனனைப்பார்த்து தலையை
யசைத்துஓய்அர்ச்சுனு நீ பதற வேண்டாம் நீமகாவீராதிவீரன் முப்
பத்துமுக்கோடி தேவர்களையும் தேவேந்திரனையுஞ் செலித்தவன் கா
லகேய நிவாத கவசாளென்கிற ஒன்பதுகோடி ராக்ஷதவீரர்களையுங்கொ
ன்று ஜெயம்பெற்றவன் (ஸ்ரீகயிலாசபதியாகிய பரமசிவனேடும்) போ

ர்டி அவனைஜெயித்து அவரிடத்தில் பாசுபதாஸ்திரம்பெற்றவன் வீஷ்மாசாரியார் துரோணசாரியார் முதலானவர்களோடும்போராடி ஜெயம்பண்ணினவன் சித்திரசேனனென்கிற கந்தர்வனுடனே போராடி ஜெலித்தவன் இப்படி அநேகயுத்தத்தில் கைகண்டசூரனீயல்லவோ அதுவல்லாமல்உன்னிடத்தில் அக்கினிதேவன்கொடுத்த அக்ஷயதூணிரதமிருக்கின்றது அந்தவலிமையினால் என்பேரில் அநேகபாணங்களைப்பிரயோகஞ்செய்தாய் அதுகளையெல்லாம் நான்கண்டித்துவிட்டேன் ஆனால் ஒரு பிரயோசனமுமில்லை இனிமேல் இத்தனைபாணத்தினால் என்சிரசைக் கண்டிக்கிறேனென்று பிரதிக்கினை பண்ணென்று சொல்லிவிட்டு ஸ்ரீகிருஷ்ணபகவானைப்பார்த்து ஓய் புண்டரீகாக்ஷா, மகானுபாவா தேவரீர் இந்த அர்ச்சுன னுக்குச் சகாயமாய் வந்ததனால் இவன் என்னை என்ன செய்ய மாட்டுவான் அதுவல்லாமல் தேவரீர் இந்த அர்ச்சுனனுடைய ரதத்தின்பேரி லிருக்கிறீர் - என்னுடைய இருதய கமலத்திலு மிருக்கிறீர்-ஆனபடியினால் ஓய்சுவாமி பக்தவச்சலா பரமதயாளா நான் இந்தஅர்ச்சுனனை ஜெயிக்கமாட்டுவேனோ சொல்லுமையாவென்றுநமஸ்காரம்பண்ணினான் -அதுகேட்டு கிருஷ்ணபகவானும் சுதர்ம்மனைப் பார்த்து ஓய்சுதர்ம்மா நீயே ஜெயிக்கப்போகிறாய் பயப்படவேண்டாமென்றுசொன்னார். அந்த வார்த்தையை அர்ச்சுனராசன் கேட்டு மெத்தவுங்கிலேசமிட்டு ஐயா,கிருஷ்ண தேவரீர் என்னுடைய பக்ஷமா யிருந்து என்பகையாளியைப்பார்த்து நீயேசெயிக்கப்போகிறாயென்று எப்படி சொல்லுகிறீர் அப்போது எனக்கு அபஜெயமோ இப் படிப்பட்ட நடக்கைகளுக்கோ நானும்மை யழைப்பித்தது சொல்லுமையா வென்று கேட்க அதற்கு கிருஷ்ணபகவான்சிரித்து அர்ச் சுனனைப்பார்த்து ஓய்கிரீடி நான் அப்படி சொன்னேனென்று நீசந்தேகப்பட வேண்டாம் நீயுஞ் ஜெயிக்கப்போகிறாய் நானிருக்கும்பொழுது உனக்கு ஒருகுறைவுவருமோ கிருஷ்ணார்ச்சுனர்களிருவரும் ஒரு தேரின்பேரி லிருந்தால் அவர்களுக்கு முன்னே எதிர்த்துநின்று எவர்களும் நிர்வகிக்க மாட்டாரென்பது பிர்ம்மாதி தேவர்களுக்குந் தெரியாதோ அதை நீயறியமாட்டாயே ஆதலால் உனக்கு அபசெயம் வருகிறதில்லை யென்று சொல்ல அந்தவசனங்களை அர்ச்சுனராசன்கேட்டு மகா சந்தோஷ சித்தனாய் உச்சாகத்துடனேநின்று அந்தசுதர்ம்மனைப்பார்த்து அர்ச்சுனராசன் சொல்லுகிறான் ஓய்ராஜகுமாரகா என்னுடைய வார்த்தையைக் கேளும் அஃதென்னவென்றால் பிர்ம்மாதிதேவர்கள் உனக்குச்சகாயமாகவந்தபொழுதிலும் அவர்களையெல்லாம் அதம்பண்ணி உன்னுடைய சிரசையும்மூன்றுபாணத்தினால் ஒருக்ஷணப் பொழுதில் கண்டித்து விடுகிறேன் அப்படிசெய்யாவிட்டால் நான்இதுவரையில் செய்த புண்ணியங்களைத்தும் அசுராதிகளுடைய பங்காகிஎன்னுடைய கீர்த்திக ளெல்லாம் பூமியின்பங்காகி நானும் என்சந்ததியி லுள்ளவர்களும் கங்கா தீரத்தில் காராம்பசுவைக்கொன்றவர்கள் போகிற கதியிலும் போகக்கடவோமென்

றுமகத்தாகிய சபதம்பண்ணினன் - அதுகேட்டு சுதர்ம்மனுஞ் சிரித்து அர்ச்சுனனைப்பார்த்து ஓய் அர்ச்சுன நீ பிரயோகஞ் செய்கிற மூன்று பாணத்தையும்நான்கண்டித்து விடுகிறேன் அப்படி கண்டிக்காவிட்டால் நான் செய்த புண்ணியங்களெல்லாம் அசுராதிகளுடைய பங்காகி நானும்என்னுடைய சந்ததியிலுண்டான பிதிர்க்களும் கொடிதாகியநரகத்தில்விழக்கடவோமென்று சபதம்பண்ணினன் - அப்பொழுது ஆகாசமார்க்கத்தில்இயக்கர் . கின்னரர் - கிம்புருடர் - கருட காந்தருவர் சித்தர் வித்தியாதரர்-ஏகாதசருத்திரர் - துவாதசாதித்தர்கள் - முதலான முப்பத்து முக்கோடி தேவர்களும் தேவேந்திரனும் வந்திருந்து அர்ச்சுனராஜன்செய்தபிரதிக்கினையையும் சுதர்ம்மன்செய்த பிரதிக்கினையுங் கேட்டு ஆச்சரியப்பட்டு ஒருவர் ஒருவரைப்பார்த்து ஓய் தேவர்களே இந்த அர்ச்சுனராஜனும் சுதர்ம்மனுஞ் செய்துக்கொண்டசபதவார்த்தைகளைக்கேட்டீர்களோ அதுவுமல்லாமல் அர்ச்சுனராசனுடைய ரதத்திலும் கிருஷ்ணதேவர் எழுந்தருளியிருக்கிறார் இந்த சுதர்ம்மனுடைய மனோ ரதத்திலும்அந்தபகவானே எழுந் தருளியிருக்கின்றார் - ஆதலால் இவர்களிருவரும் பக்தர்களானபடியினல் இவர்களில் எவரைக் கெலிப்பிப் பாரோ அது தெரியவில்லை எல்லாஞ் சற்றுநேரத்தில் தெரியவருகிற தென்று பேசிக்கொண்டிருந்தார்கள்,

அப்பொழுது சுதர்ம்மனும் கோபதீப்தனய் ஆக்கிரகித்து தன்னுடைய வில்லினிடமாகக் காளகூடவிஷத்திற்குச் சமானமான ஆயிரந்திவ்யபாணங்களைத் தொடுத்துப்பிரயோகஞ்செய்தான் - அந்தபாணங்களானது அதிதீக்ஷண்ணியமாய்ஒன்றோடொன்று உராய்ந்துக்கொண்டு வந்துகிருஷ்ணபகவானுடைய இரண்டுபுஜத்திலும் இரண்டுபாணந்தைத்துப்பிற்புறத்தில்உருவிப்போய்விட்டது மற்றபாணங்களெல்லாம் அர்ச்சுனராசனுடைய ரதத்தைச் சூழ்ந்துக்கொண்டு அந்தரதத்தை நானூறுவிரற்கடைப் பிரமாணத்தில் கொண்டுபோய் விட்டுவிட்டது - அதுகண்டு அர்ச்சுனராசனும் மஹா ஆக்ருஷித்துடனே கிருஷ்ண பகவானைப்பார்த்து ஐயாகிருஷ்ணமூர்த்தி இப்பொழுது நம்முடைய ரதத்தைப்பின்னுக்குப் போக வொட்டாமல் முன்னுக்குத் தள்ளி செவ்வையாகநிறுத்து மென்று சொன்னன் அதுகேட்டு கிருஷ்ண மூர்த்தியும் அர்ச்சுனராசனைப்பார்த்துஓய் அர்ச்சுனபிரதிக்கினை பண்ணு கிறத்திற்கும், பேச்சுகள் பேசு கிறத்திற்கும் துரைத் தனஞ் செய் கிறத்திற்கும் காரியங்கொண்டுபோகிறத்திற்கும், நீயே எசமானயிருக்கிறாய் நடந்தசாகிறத்திற்கும் தெப்பல்படு கிறத்திற்கும் காரியங்களைச் செவ்வைப்படுத்துகிறத்திற்கும், என்னை ஏற்படுத்தியிருக்கிறாய் பளா பளா இது நன்றாயிருக்கிறதென்று மனவருத்தங் கொண்டவர்போலச் சொல்லியருளினர். அந்தவார்த்தைகளைக்கேட்டு அர்ச்சுனராஜனும் சிரித்துகிருஷ்ணமூர்த்தியைப்பார்த்துஐயா, எங்கள் குலதெய்வமே தேவரீருடைய திருமேனியில் பாணம்பட்டதோ, அதனல் தேவரீருடைய சரீரம்வலிக்கின்

றதோ,நல்லது ஆகட்டும் பக்தஜனங்களை ரக்ஷிக்கிறது இன்னங் கொஞ்
சத்தி லிருக்கின்றதோ, அல்லாமலும் தங்களுக்கு எத்தனை ஆபத்துகள்
வந்துசம்பவித்தாலும் அதைப்பாராமல்தம்மைநம்பின பேர்களுக்குஒ
ரு ஆபத்தும் வரவொட்டாமல் பாதுகாத்துரக்ஷித்தருளுவதுபெரியோ
ர்களுடையகடமையாகுமென்று மெத்தவும் இரக்கமாகச் சொன்னான்.

அதுகேட்டுகி ருஷ்ணபகவானும் புன்சிரிப்பாகச்சிரித்து அர்ச்சு
னனைப்பார்த்துஓய் அர்ச்சுனா நீ இப்பொழுது சற்றாகிலும் யோசித்து
ப்பாராமல்பதட்டமாகப் பிரதிக்கினைசெய்துவிட்டாயே அப்படிமுடி
க்காவிட்டால் உங்கள் சந்ததியிலுண்டான பிதிர்க்களெல்லாரும் அதோ
கதியில்விழுவார்களே அதற்குஎன்னசெய்யலாம் அல்லாமலும் அந்த
சுதர்மனுடைய சிரசை மூன்று பாணத்தில் கண்டித்து விடுகிறேனெ
ன்றுசபதம்பண்ணிக்கொண்டாயே அப்படிகண்டிக்கமாட்டுவாயோ,அ
ல்லது, அவனைக்கண்ணெடுத்துப் பார்க்கமாட்டுவாயோ அவன் மஹா
வீராதிவீரன் சத்தியசந்தனன் தர்ம்மசொரூபன் ஏகபத்தினிவிரதனாச்சு
தே அப்படிப்பட்ட மஹாபுருஷனை நீஎப்படி கொல்லமாட்டுவாய் அ
துவுமல்லாமல் ஸ்ரீகைலாசபதியாகிய பரமசிவனானவர் தம்முடைய பக்
தனென்று நினைத்து உனக்குச்சகாயமாய் சகலபூதகணங்களுடனேஎழு
ந்தருளிவந்தாலும் அல்லது தேவேந்திரனானவர் தன்னுடைய புத்திர
னென்று நினைத்து உனக்குச்சகாயமாய் சகலதேவகணங்களுடனே புற
ப்பட்டுவந்தாலும் அல்லது நம்முடைய மச்சினனாச்சுதேயென்றுஉன
க்குச்சகாயமாய் என்னுடைய பலத்தையெல்லாங்கொடுத்தாலும்,நீஅந்
த சுதர்ம்மனுடைய சிரசைக் கண்டிக்கமாட்டாய் இப்படியிருக்க நீயும்
யோசனைபண்ணாமல் என்னோடுஞ்சொல்லாமல் விருதாவாகப்பதறி பிர
திக்கினைசெய்து கொண்டாயென்று சொல்லியருளினார்.

அதுகேட்டு அர்ச்சுனராஜனும் சிந்தாக்கிராந்தனாய் விசாரப்பட்டு
தன் கையிலிருந்த காண்டீபத்தை தேரின்பேரில் போட்டுவிட்டு இரண்
டுகைகளையும் அஞ்சலியாகக்கூப்பிநின்று அந்த தேவனைப்பார்த்து ஓய்
கிருஷ்ணா துவாரகாபுரிவாசா தேவகிநந்தனா வசுதேவகுமாரகா வாசு
தேவா கம்ஸசம்ஹாரா கயிலாசபதிமித்திரா கௌரீசகோதரா ஹரிமு
குந்தா கோபாலா கோவிந்தா ருக்மணி மனோகரா வனமாலிகாபரணா
சங்குசக்கிராயுதா தாமோதரா கேசவா என்னை ரக்ஷியும் ரக்ஷியும் நான்
அறியாமல் சபதம்பண்ணிவிட்டேனாதலால் அந்த சபதத்தைமுடித்து
என்னை ரக்ஷிக்கவேண்டும் பக்தவச்சலாவென்றுதோத்திரஞ்செய்து அந்
த கிருஷ்ணபகவானுடைய திருவடிக்கமலங்களில் அடியற்றமரம்போல்
விழுந்து எனக்கு அபயாஸ்தங்கொடுத்தருளவேண்டும் சுவாமியென்று
வெகுநேரம் வேண்டிக்கொண்டான் அதுகண்டு ஸ்ரீகிருஷ்ணபகவானு
ம் திருவுளமிரங்கிச் சந்தோஷகரமாய் அந்த அர்ச்சுனனைப்பார்த்து ஓய்
அர்ச்சுனா நீயே ஜெயிக்கமாட்டுவாய் நீபயப்படவேண்டாம் நான்வந்து
குறுக்கேவிழுந்தமட்டும் அந்தகாரியம் நிறைவேறுமதற்போனால் உலகத்

தில் எனக்கு அபகீர்த்தியல்லவோ ஆதலால் நானே முன்னின்று உன்னுடைய பிரதிக்கினையை முடித்துவைக்கிறேன் நீயெழுந்திருந்து காண்டீபத்தையெடுத்து பாணத்தைப்பிரயோகம்பண்ணென்று உறுதிவார்த்தையாகத் திருவாய்மலர்ந்தருளினார்.

அதுகேட்டு அர்ச்சுனராஜனும் சந்தோஷகரமாய் எழுந்துநின்று ஸ்ரீகிருஷ்ணபகவானைப்பார்த்து ஓய்சுவாமி, ஜநார்த்தனா, இப்பொழுது அடியேன்செய்த பிரதிக்கினை தேவரீர்செய்த பிரதிக்கினையல்லவா மேலும் அடியேன்பெறுகின்ற ஜெயாபஜெயங்கள் தேவரீருடைய ஜெயாபஜெயங்களேயல்லாமல் வேறல்லவேயென்று பிரியவசனமாகச்சொல்லி அந்த பகவானுடைய அனுமதியின்பேரில் மஹா உச்சாகத்துடனே முகாரவிந்தமானது சந்திரவிம்பம்போலப்பிரகாசிக்கத்தக்கதாகநின்று தன்னுடைய தூணிரத்திலிருக்கின்ற அதிதீக்ஷண்யமானஒருதிவ்வியபாணத்தையெடுத்துஅக்கினிதேவன்கொடுத்தருளியகாண்டீபத்திலிடமாக வைத்து அபிமந்திரித்து சுதர்ம்மனுடைய கழுத்துக்கு நேராகக் குறிவைத்துப்பிடித்து ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியைப்பார்த்து-ஐயா,கிருஷ்ணமூர்த்தி இதோ பாணந்தொடுக்கிறேன் பாருமென்றுசொல்ல அதுகண்டு கிருஷ்ணபகவானும் அர்ச்சுனனைப்பார்த்து ஓய்அர்ச்சுனா, இந்தபாணம் வெட்டுண்டுபோம் இதற்குப் பலன்போதாது நான் இதற்குப் பலனுண்டாகச்செய்கிறேன்.

அஃதெப்படியென்றால், முன்பு தேவேந்திரனெனவன் கோபாலர்கள்பேரில் கோபித்துக்கொண்டு ஏழுநாள்பரியந்தம் இரவும்பகலும் கல்மழையைப்பெய்வித்தான் அப்பொழுது அந்த கோபாலர்களெல்லாரும் அதற்குச் சகிக்கமாட்டாமல் பசுக்கள் கன்றுகள் பிள்ளைகளுடனுந் தத்தளித்து மஹா பிரயாசமடைந்து என்னைக்குறித்து வேண்டிக்கொண்டார்கள். அந்தச்சமயத்தில் அவர்களுக்குச் சகாயமாயிருந்து கோவர்த்தனகிரியை ஒருவிரலிலெடுத்துக் குடையாகப்பிடித்து அவர்களையெல்லாங் காத்து ரக்ஷித்தேன் அந்தப் புண்ணியத்தையெல்லாம் இந்தப்பாணத்துக்குக்கொடுத்தேன் ஆதலால் இப்பொழுது சந்தேகப்படாமல் பிரயோகம்பண்ணென்றுசொல்லியருளினார், அதுகேட்டு அர்ச்சுனனும் அப்படியே நல்லதென்று அந்தபாணத்தைஅதிதேவதாபிரதிதேவதா மந்திரங்களுடனே அபிமந்திரித்துபிரயோகம்பண்ணினான் அந்தபாணமானது காளகூடவிஷம்போல மஹாஉக்கிராகாரத்துடனே பார்க்கப்பயங்கரமாய் கறகறவென்று சுழன்றுஇரைச்சலிட்டுக் கொண்டுசுதர்ம்மனுடைய கழுத்துக்குநேராகவருகையில் அதுகண்டுசுதர்ம்மனுங்கைகொட்டிசிரித்து இந்தபாணமானது மஹாமகிமையுடனேவருகிறதென்றுசொல்லிதன்னுடைய தூணிரத்திலிருந்த அதிதீக்ஷண்யமான ஒருதிவ்வியபாணத்தையெடுத்து தன்கையிற்பிடித்திராநின்ற வில்லினிடமாகத்தொடுத்துஏகமனதாயிருந்துகொண்டுதான் சரீரமெடுத்தநாள்

முதல்இதுபரியந்தம்சத்தியந்தவறுமலும்பிதாவாக்கியங்கடவாமலும்இ ருந்ததுமெய்யானால் இந்தபாணமானது அந்த அர்ச்சுனன்பிரயோகஞ் செய்தபாணத்தைக் கண்டித்துவிடக்கடவதென்றுசொல்லிப் பிரயோக ஞ்செய்தான். அதுவுமஹா வேகத்துடனே திகுதிகுவென்று எரிந்துக் கொண்டுவந்து அர்ச்சுனன்விட்டபாணத்தைஇரண்டுதுண்டமாகக்கண் டித்துவிட்டது அதுகண்டு அர்ச்சுனராசனும் சிந்தாக்கிராந்தனாய் கிரு ஷ்ணமூர்த்தியைப்பார்த்து-ஐயா, தேவகிநந்தனே தேவரீருடைய அனும தியின்பேரில் நான் லக்ஷியம்வைத்துப் பிரயோகஞ்செய்த பாணமான துவிருதாவாகவெட்டுண்டுவிழுந்துபோச்சுதேயென்று மனஸ்தாபமா கச்சொல்ல அதுகேட்டுக் கிருஷ்ணபகவானும் அர்ச்சுனனைப் பார்த்து ஓய்கிரீட்டி உனக்குப்பாணம்போய்விட்டதென்கிற விசாரமிருக்கின்ற து எனக்குப்புண்ணியம்போய்விட்டதென்கிற விசாரமிருக்கின்றதுஇ தற்குநாமென்னசெய்யலாம் ஆனாலுமாகட்டும் இன்னமும்ஒருபாணத் தையெடுத்துப்பிரயோகம்பண்ணென்றுசொல்லியருளினார்.

அதுகேட்டு அர்ச்சுனனும் மஹாரோஷத்துடனே வேறேயொரு கொரமான அஸ்திரத்தையெடுத்துக் காண்டீபத்தினிடமாகத்தொடுத் து கிருஷ்ணபகவானுக்குக்காண்பித்தான், அந்தபகவானுஞ் சற்றுநேர ம்யோசனைபண்ணி அர்ச்சுனனைப்பார்த்து ஓய்அர்ச்சுனா இந்தஅஸ்திர மும் வெட்டுண்டுவிழுந்துபோம் ஆயினும் நான் இதற்குப் பலனுண் டாக்கிவைக்கிறேன் அஃதெப்படியென்றால் பூர்வத்தில் நான்பரசுராம அவதாரமெடுத்துப்பஞ்சாசத்கோடி பூமண்டலத்தையும் என்னுடைய வசமாக்கிக்கொண்டு பின்பு அந்தப்பூமண்டலத்தைக் கசியபிர்ம்மாவுக் குத்தாரைவார்த்துக்கொடுத்தேன்அந்தப்புண்ணியத்தைஇந்தப்பாணத் துக்குத்தத்தஞ்செய்துவிட்டேன் இப்பொழுதுநீசந்தேகப்படாமல்பி ரயோகம்பண்ணென்றுசொல்லியருளினார்.

அதுகேட்டு அப்படியேநல்லதென்று அர்ச்சுனராசனும் சந்தோ ஷிகரமாய் அந்தப்பாணத்தை அபிமந்திரித்துப்பிரயோகம் பண்ணினா ன். அந்தப்பாணமானது காலாக்கினியைப்போல் திகுதிகுவென் றெரி ந்துக்கொண்டு நெருப்புப்பொறிகள்பறக்கும்படி அதிவேகமாய்இரை ச்சலிட்டுவருகையில் அதுகண்டு சுதர்ம்மனும் ஒரு தீக்ஷண்ணிய மா ன பாணத்தை யெடுத்து தன்னுடைய கோதண்டத்தினிடமாகத்தொ டுத்து நான்என்னுடைய பிதாவையே தெய்வமென்று கருத்தில் நினை த்திருப்பதும் அகிலாண்டகோடி பிர்ம்மாண்டநாயக ஸ்ரீமந்நாராயண மூர்த்தியைச் சதாகாலமும் என்மனதில்தியானம்பண்ணிக்கொண்டிரு ப்பதும் உண்மையானால் இந்தபாணமானது அர்ச்சுனராஜன்பிரயோக ஞ்செய்தபாணத்தைக்கண்டித்துவிடக்கடவதென்றுபிரயோகம்பண்ணி னான். அதுவும் மஹாஉக்கிரத்துடனே இரைச்சலிட்டுக்கொண்டுசிவசுப் பிரமணியக் கடவுளுடையகையிலிராநின்ற சத்திவேலைப்போலவும், பிர் ம்மதண்டம்போலவும், அதிவேகமாகவந்து அர்ச்சுனராஜன்விட்டபாண

த்தை இரண்டுதுண்டமாகக்கண்டித்துவிட்டுஅதனோடும் போகாமல் கி
ருஷ்ணபகவானுடைய வலதுபுஜத்தில் தைத்துப்பிறகேயுருவிப் பெரி
யோர்களைநோகப்பண்ணினவன்அதோகதியில்வாழுவானென்பதுபோ
லஅந்தபாணமானது பூமியிலுருவிப்போய்விட்டது அதுகண்டு அர்ச்
சுனராசன் துக்காக்கிராந்தனாய் மெத்தவும் விசாரப்பட்டுகிருஷ்ணதேவ
ரைப்பார்த்து ஐயாகிருஷ்ணமூர்த்தி நான்பிரயோகஞ்செய்தபாணமெ
ல்லாம்விருதாவாய்ப்போய்விட்டதே அதுவுமல்லாமல்பிரதிக்கினைபண்
ணிக்கொண்ட மூன்றுபாணத்தில் இரண்டுபாணம்போய் விட்டது இன்
னம் ஒருபாணமிருக்கின்றது அதனாலாகிலும்சுதர்ம்மனுடையசிரசை
க்கண்டிக்கும்படி செய்யவேண்டும்சுவாமீ யென்று விண்ணப்பஞ்செய்
தான்அந்தவார்த்தைகளைக்கேட்டு கிருஷ்ணதேவரும் அர்ச்சுனனைப்பார்
த்துஓய்அர்ச்சுனாஉனக்குப்பாணங்கள்போய்விட்டதென்றும், பிரதிக்கி
னை நிறைவேறவில்லையென்றும்,புண்ணியமெல்லாம்விருதாவிற்போய்வி
ட்டதென்று விசாரமாயிருக்கின்றது,ஆனாலுமாகட்டும் இன்னமும்ஒரு
பாணத்தையெடுத்துப் பிரயோகம்பண்ணென்று சொல்லியருளினார்.

அதுகேட்டு அர்ச்சுனராசனும் அப்படியே நல்லதென்று பர்வ
தமுதலானதுகளையுந் துளைக்கப்பட்டதாகியும் தகத்தகாயமாய் மிகு
ந்த கூர்மையுள்ளதாகியு மிருக்கப்பட்ட மெத்தவு மகிமையுள்ள ஒ
ரு திவ்ய பாணத்தை யெடுத்து காண்டீபத்திற்றொடுத்து ஸ்ரீ கிருஷ்
ணபகவானுக்குக் காண்பித்தான், அதுகண்டு அந்தபகவானும் சுதர்ம்
மனைக்கொல்ல வேண்டுமென்று நிச்சயித்துக் கொண்டு அர்ச்சுனனை
ப்பார்த்து ஓய் அர்ச்சுனா நான் முன்பு ஸ்ரீராமாவதார மெடுத்த பொழு
து ஏகபத்தினி விரதனாயிருந்து ராவண சம்ஹாரம்பண்ணி தேவர்களுக்
குச்சகாயம்பண்ணினேன் அந்தபுண்ணியமெல்லாம் இந்த பாணத்திற்
குத்தத்தஞ்செய்தேன்- அதுவுமல்லாமல் அப்பொழுது பதினாறுயிரம்
வருஷம்ராச்சியபரிபாலனம்பண்ணிகோதானம்பூதானம்கன்னிகாதான
முதலானமகாதானங்கள்பண்ணினபுண்ணியங்களையும் இந்தபாணத்திற்
குத்தத்தஞ்செய்தேனென்றுசொல்லிபின்னையும்தேவதைகளையும் இந்தி
ரன்முதலானஅஷ்டதிக்குப்பாலகர்களையும் அந்தபாணத்தைப் பாதுகா
க்கும்படி ஆவாகனம்பண்ணி அந்தபாணத்தினுடைய நுனியில்பிர்ம்ம
தேவனை ஆவாகனம்பண்ணிமத்தியில்தன்னுடையசக்தியைநிறுத்திஅடி
யில் ருத்திரமூர்த்தியை ஆவாகனம்பண்ணிவெகுமகிமையுண்டாக்கிஓ
ய்அர்ச்சுனா நீசந்தேகப்படாமல் பிரயோகஞ் செய்வாயாக இந்தபாண
மானது சம்சயமில்லாமல்சுதர்ம்மனுடையசிரசைக்கண்டித்துவிடு மெ
ன்று திருவாய்மலர்ந்தருளினார்.

அதுகேட்டு அர்ச்சுனனும்சரீரம்புளகிக்கத்தக்கதாகிய மகாசந்
தோஷமடைந்து அந்தபாணத்தை அதிதேவதாபிரதிதேவதாமந்திரங்
களுடனே அபிமந்திரித்து சுதர்ம்மனுடையசிரசுக்குச்சரியாய்ப்பிடித்
துப் பிரயோகம்பண்ணினான். அதுவுங்காண்டீபத்திலிருந்துவிடுபட்டு

பூமியாகாசமெங்கும்நிறைந்து அநேகமாயிரம் இடிகளுடனும் மின்னல்களுடனும் பளிச்சென்று மகாதளதளப்புடனே பிர்மாண்டகடாகங்களும் பிளக்கத்தக்கதாகஎரிந்துபுகைந்துஜடஜடவென்கிறதொனியுடனே நெருப்புப்பொறிகளை வாறியிறைத்துக்கொண்டுநாராயணாஸ்திரத்திற்கும்பிர்ம்மாஸ்திரத்திற்கும்சக்ராயுதத்திற்கும் சூலாயுதத்திற்கும்பாசுபதாஸ்திரத்திற்கும் மிஞ்சினதாய்மிகுந்த உக்கிராகாரத்துடனே சுதர்ம்மனுடையசிரசுஎங்கேஎங்கேயென்று சமீபித்துவருகையில்ஆகாசவாசிகளாகியதேவேந்திராதி தேவர்களெல்லாரும் பயந்துநின்றார்கள், அப்பொழுதுசுதர்ம்மனும் அந்தபாணத்தைக்கண்டுசிரித்து இந்தபாணம்அநேகமகிமையுடனேஅதிககுரூரமாய்வருகின்றதுஅப்படிவந்தாலுமென்னவென்று சொல்லிதன்னுடைய வில்லினிடமாக ஒருபாணத்தைத்தொடுத்து அபிமந்திரித்து நான்சரீரமெடுத்ததுமுதல் இதுபரியந்தமும் ஏகபத்தினிவிரதனாயிருப்பதும்என்னுடைய ஸ்திரீகளையெல்லாம்ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய பிராணநாயகியாகிய ருக்மணி தேவியைப்போலக்காண்பதும் கிருஷ்ணமூர்த்தியினுடைய உபயபாதங்களை எந்நேரமும் இடைவிடாமல் தியானித்துக்கொண்டிருப்பதும், சிநேகருக்கு வஞ்சனைதுரோகஞ் செய்யாமலிருப்பதும், அந்தக் கிருஷ்ணபகவானுடைய பக்தஜெனங்களுக்குத் தொண்டுசெய்வதும், உண்மையானால் இந்த பாணமானது அதோ வருகின்றபாணத்தைக் கண்டிக்கக்கடவதென்று சொல்லிப் பிரயோகம்பண்ணினான்.

அதுவும்புறப்பட்டு அதிவேகமாய் மகா குரூரத்துடனேவந்து அர்ச்சுனராஜன் பிரயோகம்பண்ணின பாணத்தை இரண்டுதுண்டமாகக் கண்டித்துத்தள்ளிவிட்டு பின்னையும் அந்தபாணமானது அதிவேகமாகவந்து சுதர்ம்மன் இருக்கிறதற்குஸ்தானம் உண்டாக்கிவைத்ததென்று சொல்லும்படியாக கிருஷ்ணபகவானுடையமார்பையுந்துளைத்துக்கொண்டுபோய்விட்டது அதுகண்டு அர்ச்சுனராஜனும் சிந்தாக்கிராந்தனாய்மெத்தவும்பிரலாபித்தான் அப்பொழுதுகிருஷ்ணதேவரும் அர்ச்சுனனைப்பார்த்து ஓய்அர்ச்சுனா நீபயப்படவேண்டாம் சுதர்ம்மனுடைய சிரசை அந்தபாணமேகண்டிக்கின்றது நீசற்றுநேரம்பார்த்திருவென்று சொல்லியருளினார். அதுகேட்டுஅர்ச்சுனனுந்துக்கந்தீர்ந்து சந்தோஷிகனாயிருந்தான்அந்தச்சமயத்தில்முன்புசுதர்ம்மனுடையபாணத்தினால் வெட்டுண்டு விழுந்துபோன அர்ச்சுனனுடையபாணத்தின்அடிதுணுக்கையானது, கருடனைப்போலஎழும்பிறிவ்வுறிவ்வுமென்றுஅதிதீக்ஷண்யமாகவந்துமகரகுண்டலங்களும் மாணிக்கக்கிரீடமும்விளங்கத்தக்கதாகச்சந்திரவிம்பம்போற்பிரகாசித்துக் கொண்டிருக்கிற சுதர்ம்மனுடையசிரசைக்கண்டித்துப்போய் விட்டது - அப்பொழுது அந்தச்சிரசானது அதிகவேகமாய் ஆகாசமார்க்கத்திலெழும்பிக்கிருஷ்ணபகவானைப் பார்த்து ஹரிஹரிகோவிந்தா-ஹச்சுதா-பரந்தாமா-விஸ்வரூபா விருஷிகேசா-அகிலாண்டகோடிபிர்ம்மாண்டநாயகா-அநாதரக்ஷகா-அப்பிரம்ம

யா-பக்தஜனபரிபாலகா-பரமபுருஷா-கோபிகாவல்லபா-குஞ்சரரக்ஷகா-ரு
க்மணிமநோகரா-ஜெய்சுவாமி ரக்ஷியுமையாவென்று முறையிட்டுக்கொ
ண்டுவந்துஅந்தபகவானுடையபாதாரவிந்தங்களில்விழுந்தது-அப்படி
சுதர்ம்மனுடையசிரசானதுகிருஷ்ணபகவானுடைய திருவடிக்கமலங்க
ளில்வந்துசேர்ந்தபின்புஅவனதுசரீரத்திலிருந்து சுயம்பிரகாசமாகியஒ
ருசோதியானதுவெளிப்பட்டுவந்துகிருஷ்ணமூர்த்தியினுடைய திவ்யச
ரீரத்திற்புகுந்துஅவரதுதிருமேனியில்அபின்னமாகக் கலந்துவிட்டது.

அதுகண்டு தேவேந்திராதி தேவர்களெல்லாரும் - மகா ஆச்சரிய
கரமாய்ச் சந்தோஷிப்பட்டு - அந்தஹரியினுடைய மகிமையை பிர்ம
தேவன்முதலானதேவர்களும் அறியமாட்டார்களென்று சொல்லிகிருஷ்
ணபகவான்பேரில் பாரிசாதபுஷ்பங்களைச்சலசலவென்று வருஷித்தார்க
ள்தேவதுந்துமியும் திம்திம்மென்று முழங்கியது அப்பொழுது கி
ருஷ்ணமூர்த்தியும் தம்முடைய திருப்பாத கமலங்களில் விழுந்தசுதர்
ம்மனுடையசிரசைத்தமதுதிவ்யாஸ்தங்களினால் எடுத்துஅந்த முகாரவி
ந்தத்தைப் பீதாம்பரத்தினாற் றுடைத்து சுதர்ம்மனுடைய பக்திவிசு
வாசத்திற்கு அநேகவிதமாகக் கொண்டாடி அந்தச்சிரசை அர்ச்சு
னராஜனுடைய கையிலே கொடுத்தருளினார் அர்ச்சுன ராசனும் அந்
தசிரசைப்பார்த்து மெத்தவுந் துக்காக்கிரந்தனாய் தாபந்திரியப் பட்டு
திரும்பவுங்கிருஷ்ணமூர்த்தியினுடையதிவ்யாஸ்திரத்திற்கொடுத்தான்அ
ந்தபகவானும் அதைக்கையினால்வாங்கி அம்சத்துவமஹாராசனுடைய
தேரின்பேரில்போட்டருளினார் அதுகண்டு அம்சத்துவ மகாராஜனும்-
சிந்தாக்கிரந்தனாய்சுதர்ம்மனுடையசிரசைக்கையிலெடுத்துக்கொண்டுஆ
குமாரகா சத்தியசந்தனேநீர்அர்ச்சுனனுடையபாணத்தினால்வெட்டுண்டு
விழுந்தாயோ மகாவிஷ்ணுவினுடையதிருவடிக்கமலங்களில் அயிக்கிய
மாகிப்போய்விட்டாயோஆபுத்திரசிகாமணியேயென்றுவிசாரப்பட்டு
திரும்பவும்அந்தச்சிரசைகிருஷ்ணபகவானுடையரதத்தின்பேரில் போ
ட்டுவிட்டுமகாதுக்காக்கிரந்தனாயிருந்தான் அதுகண்டுஅந்தபகவானும்
அந்தச்சிரசை தம்முடைய திவ்யாஸ்தங்களினாலெடுத்து அதைப்பார்த்
துஇந்தச்சிரசானது சூரியார்ப்பிதமாகக்கடவதென்று ஆகாசத்தில்விட்
டெறிந்தார். அப்பொழுது அந்தச்சிரசானது கிருஷ்ணபகவானுடைய
திருவுளப்பிரகாரம் அதிகவேகமாகப்போய் சூரியமண்டலத்திற்புகுந்
து சூரியபகவானுடனே கலந்துபோய்விட்டது.

கேட்டீரோ ஜெனமேஜெயமஹாராஜாவே அந்த சுதர்ம்மனுடை
ய பாக்கியமேபாக்கியம் எப்படிப்பட்ட தபோதனர்களுக்கும் அந்த
பகவானுடைய திருவடிக்கமலங்களைக்கண்டு தரிசிப்பது அருமையாயி
ருக்கும் அப்படிக்கிருக்க சுதர்ம்மனானவன் அந்த பகவானுடைய திரு
மேனியில் அபின்னத்துவமாகக்கலந்துபோனால் அவனுடையபாக்கியத்
தை நாமெப்படி அளவுபடுத்திச் சொல்லப்போகிறோமென்றுசொல்லி
ஜெயமுனீந்திரரானவர்அப்பால்நடந்தசரித்திரத்தைச்சொல்லுகின்றார்.

கேளுமையா ஜெனமேஜெயபூபாலகா, இந்தவிதமாகச்சுதர்ம்மன் விழுந்ததைப்பார்த்து அம்சத்துவமஹாராஜனானவன்மிகவும்பிரலாபித்து விசாரப்பட்டுக்கொண்டிருந்தான். அதுகண்டு இரண்டாவதுபுத்திரனாகிய சுதர்த்தனென்கிறவன் தன்னுடையபிதாவாகிய அம்சத்துவமகாராஜனிடத்திற்குவந்துவிழுந்து சாஷ்டாங்கமாகத்தெண்டனிட்டெழுந்து நின்று ஓய்ஐயா, தேவரீர் இப்படி விசாரப்படலாமோ என் தமையனான சுதர்ம்மன்வீராதிவீரனாய் ரணக்களத்தினின்றுயுத்தஞ்செய்துதேவேந்திராதிதேவர்களெல்லாரும் மெச்சும்படி தான்பண்ணின பிரதிக்கினையைநிறைவேற்றி அகண்டிதவீரபராக்கிரமனாய்கிருஷ்ணபகவான்செய்த புண்ணியங்களையெல்லாம் வியர்த்தமாக்கி அவருடைய மகிமையினால் வெட்டுண்டுவிழுந்து அவரதுதிருமேனியிற்கலந்துபோனான். அந்தசிரசும் சூரியார்ப்பிதமாய்சூரியபகவானிடம் அயிக்கியமாய்விட்டது அப்படிப்பட்டமஹானுபாவனாகிய என்தமையனைக்குறித்துநீர்விசாரப்பட வேண்டாம் தேவரீர்இப்பொழுது எனக்குச் செலவுகொடுத்தனுப்பும் நான்போய் அந்தகிருஷ்ணார்ச்சுனர் இருவர்களையும் ஜெயித்துவருகிறேனென்று அநேகவிதமாய்வேண்டிக்கொண்டான். அதுகண்டு அம்சத்துவமஹாராஜனும் சற்றேமனந்தெளிந்து தன்குமாரனாகிய சுதர்த்தனையணைத்து மார்போடுதழுவிக்கொண்டு அப்பா புத்திரரத்நமே உன்னுடைய மனோபீஷ்டப்பிரகாரம் ரணக்களத்திற்குப்போய் யுத்தம்பண்ணென்று செலவுகொடுத்தனுப்பினான். அதுகேட்டு சுதர்த்தனும் நல்லதென்று பிதாவினிடத்தில் விடைபெற்றுக்கொண்டு யுத்தசன்னத்தனாய்ப்புறப்பட்டு நவரத்தினமயமான ஒருதிவ்யரதத்திலேறிக்கொண்டுகாலாக்கினி ருத்திரனைப்போல சண்டப்பிரசண்டனாய் எரிந்துவிழுந்து அட்டகாசம்பண்ணி குமுகுமுவென்று வில்லைக் குணத்தொனிசெய்து அந்தவில்லினிடமாகப் பர்வதமுதலானதுகளையுந் தொளைக்கத்தக்கதாகிய அநேகமாயிரந் திவ்யபாணங்களைப் பிரயோகம்பண்ணி அர்ச்சுனராஜனுடைய சேனைகளையெல்லாம் சின்னபின்னமாய் கண்டதுண்டங்களாய் பொடிபொடியாய்க் குப்பல்குப்பலாய் தூள்தூளாகச்செய்துரதகஜதுரகபதாதிகளையெல்லாங் கால்மாடுதலைமாடாய்ச் சாய்த்துக்கொண்டு எங்கேபார்த்தாலுஞ் சுதர்த்தனாய்த்திரிந்து சக்கிராகாரமாய்ச்சுழன்று மகாஆக்ருஷித்துடனே வருகிறபோது கிருஷ்ணமூர்த்தியானவர் கண்டு தலையை அசைத்து அர்ச்சுனராஜனைப்பார்த்து ஓய் அர்ச்சுனா, கண்டாயோ இதோவருகிறவீராதிவீரன் சுதர்ம்மனைப்பார்க்கிலும் சவுரியபராக்கிரமத்திலும் வில்வித்தையிலும் அதிகவல்லபத்தையுடையவன் அதுவுமல்லாமல்விஷ்ணுபக்தியுடையவன்-சற்சனபரிபாலகன்-துர்ச்சனகண்டிதன்-மகாதானவிநோதி இப்படிப்பட்ட குணாதிசயங்களையுடைய இவனைச்செயிக்கிறதற்குக்கயிலாசபதியாகிய சாம்பவமூர்த்தியினாலு முடியாது) இப்படிப்பட்ட வீராதிவீரன்முன்னே நீ எதிர்த்துநின்று எத்தனை பிரதிக்கினைபண்ணினாலும்நிறைவேறமாட்டாது; அவன்வருகிற உக்கிரா

காரித்தைப்பார்த்தால் உன்னையும் என்னையும் நல்ல பூசைபண்ணுவான்
போலத்தோற்றுகின்றது. ஆதலால் இந்தவேளையில் இவன்முன்னே நில்
லாமல் நம்முடைய ரதத்தைத்திருப்பிக்கொண்டு அப்புறம் தூரத்திற்
போய் மறைந்திருந்தால் இரண்டுபேரும் பிழைக்கலாம் நாம் சீவனுட
னே பிழைத்திருந்தால் அநேகஞ்சுகங்களை யடையலாமென்றுசொல்ல.

அந்த வார்த்தைகளைக்கேட்டு அர்ச்சுனனும் சம்மதப்படாமல்
ஸ்ரீகிருஷ்ணபகவானைப்பார்த்து, ஐயா, கிருஷ்ணா, தேவரீர் இப்படிச்
சொல்லுவானேன் என்னுடையபாணக்கினியினால் இந்தராஜகுமாரனைப்
பஸ்மீகரப் படுத்திவிடுகிறேன் நீர் ஏன் இப்படிப்பட்ட யோசனைபண்
ணுகிறீர் இதோசற்றுநேரத்தில் என் வில்வித்தையைக் காண்பிக்கிறேன்
நீரேபார்த்து மெச்சப்போகிறீர் ஆகையினால் பின்னுக்குத்திருப்பவே
ண்டாம் ரதத்தை முன்னுக்குநடத்துமென்றுசொல்ல, அதுகேட்டு அர்
ச்சுனனைப்பார்த்து கிருஷ்ணமூர்த்தியுஞ்சிரித்து ஓய் அர்ச்சுனா நீ பயி
த்தியங்கொண்டு பேசுகிறாய் நான் சொல்லுகிறவார்த்தை உனக்கு என்
றைக்கும் பரியாசமாயிருக்கின்றது- அப்படி யோசனைபண்ணவேண்
டாம் இந்த உக்கிரத்தைத் தப்பித்துக்கொண்டு பிற்பாடு அவனுடனே
எதிர்த்துப்போராடலாம் இப்பொழுது அவனுடைய சூரதிருஷ்டியி
ன்முன் ஹரிஹரப்பிர்ம்மாதிகளு நின்று ஈடுசெய்யமாட்டார்களே நீயோ
நின்று ஈடுசெய்கிறவன் ஆகையினால் ரதத்தைத்திருப்பிக்கொண்டுபோ
கிறேனென்றுசொல்ல அதற்கு அர்ச்சுனராஜனும்சம்மதப்பட்டு கிருஷ்
ணபகவானைப்பார்த்து ஓய்பரமபுருஷா, உம்முடைய வார்த்தைக்கு எதி
ரிருக்கின்றதோ உமது திருவுளப்பாங்கின்படியே ரதத்தைத் திருப்பு
கிறதாகக் காண்பியாமல் பின்னுக்குத்தானே ஓடிப்போகிற சேனைகளை
மடக்குகிறதுபோல ரதத்தைக் கொண்டுபோமென்றுசொல்ல அதுகே
ட்டுகிருஷ்ணதேவரும் அர்ச்சுனராஜனுடைய ரதத்தைத்திருப்பிமூன்று
யோசனைதூரத்திற் கொண்டுபோய் நிறுத்திவைத்துக்கொண்டிருந்தார்.

அந்தவேளையில்சுதர்ம்மனும் தன்கைகொண்டமட்டும் பாணங்க
ளைப்பிரயோகம்பண்ணி அர்ச்சுனனுடைய சேனைகளையெல்லாம் உரு
வந்தெரியவொட்டாமற்செய்து பூதப்பிரேதபசாசகணங்களுக்கும் டா
கினி சாகினிகளுக்கும் நாய் நரி கூளிகழுகுகளுக்கும், உதிர மாமிசங்க
ளினால் திருப்தியடையப்பண்ணிவித்து பிரளயகால ருத்திரனைப்போ
லவும் அகோரவீரபத்திரனைப்போலவும் பிரவேசித்து எந்தஇடத்திலு
ம்அர்ச்சுனனைத்தேடிக்காணாமற்படிக்கு தன்னைக்கண்டு ஓடிப்போகிற
சேனைகளையெல்லாம் ஓடவேண்டாமென்று கையமர்த்தி நிறுத்தி அந்
தசேனைகளைப்பார்த்து ஓய் சேனைகளே ஓய்ராசாக்களேகேட்டீர்களோ
என்பகையாளியாகிய அர்ச்சுனன் எங்கேயிருக்கின்றான் அவனைக்காண்
பியுங்கோள் அக்கினிதேவன் நிமித்தியமாய்க்காண்டாவனத்தைத்தகனம்
பண்ணுவித்து முப்பத்துமுக்கோடி தேவர்களோடும் போராடினவீர
னைக்காண்பியுங்கோள் காலகேயநிவாத கவசாளென்கிற ராட்சத வீரர்க

ளைக் கெலித்து தேவேந்திரனுடைய அர்த்தாசனத்திலிருந்த தனஞ்சய
னைக் காண்பியுங்கோள் (கயிலாசபதியாகியசாம்பவமூர்த்தியோடு) பாசு
பதாஸ்திரத்துக்சாகக் கட்டிப்புரண்ட வீராதிவீரனைக்காண்பியுங்கோள்
பாரதயுத்தத்தில் வீஷ்மாசாரியார் துரோணாச்சாரியார் முதலான சுத்த
வீரர்களுடனே எதிர்த்துப்போராடின கிரீட்டியைக் காண்பியுங்கோள்
அவனெங்கே யிருக்கிறான் அவனை என் கண்குளிரப் பார்க்க வேண்டு
மென்று சொல்லிக்கொண்டுவந்து மூன்றுயோசனை தூரத்தி லிருக்கின்
ற அர்ச்சுனராசனைக் கண்டு புன்சிரிப்பாகச் சிரித்து ரதத்தின்பேரிலொ
ன்றுந்தெரியாதவரைப்போலிருக்கிற கிருஷ்ணதேவரைப் பார்த்து ஓய்
ஜநார்த்தனா ருக்குமணி மனோகரா ஓய் சுவாமி தேவரீர் என்னகாரியஞ்
செய்தீர் நவரத்நத்தைக் கொடுத்து ஈச்சங்காயை வாங்கிக் கொண்டது
போல தேவரீர் சம்பாதித்த புண்ணியங்களை யெல்லாம் வியர்த்தமாக்கி
என் தமையனுடைய சிரசைவாங்கிக்கொண்டீர் அதனால் உமக்குவந்த
பிரயோசன மென்ன அதை சொல்லுமையா வென்றுசொல்லி பிற்பாடு
அர்ச்சுனனைப்பார்த்து ஓய்அர்ச்சுனா நீசெய்தவேலைக்கு உன்னைக்கொஞ்
சத்திலேவிடுகிறதில்லை நீ எங்கேதப்பிப்போக விருக்கிறாய் என் தமை
யனைக்கொன்றபழிக்குப் பழிவாங்காமற்போவேனோ சற்றுநேரம் பத
றாமல் ஓடிப்போகாமல் என்முன்னே நில்லு உன்னைக் கண்டிக்கிறே
னென்றுசொல்லி சுதர்த்தனனவன் மகா ஆக்கிர வியாக்கிரம நிக்குரோ
தனாகத்தன்னுடைய வில்லைக்குணத்தொனிபண்ணி அநேகமாயிரம் அ
தி தீட்சண்ணியமான பாணங்களைத்தொடுத்துப்பிரயோகஞ்செய்துஇரு
நூறுபாணத்தினால் அர்ச்சுனனுடைய சரீரமுழுதுஞ் சல்லடைக் கண்
களாகத் துளைத்து ரத்தமயமாக்கி நானூறு பாணத்தினால் கிருஷ்ண பக
வானுடையமார்பையும் பத்தலாகக்கிழித்து நவசமாகி விளங்குகின்றஅ
னுமாருடைய கெர்வத்தையுமடக்கி எண்பது பாணத்தினால் குதிரைக
ளையுஞ் சிவந்த நிறமாக்கி அர்ச்சுனனுடைய ரதத்தை மிஞ்சிவரவொட்
டாமல் சிக்குப்படுத்திவிட்டு சிங்கநாதம் பண்ணினான் அதனால் அர்
ச்சுனன் மிகவுநொந்துரோஷதாம்பிராட்சகனாய்க்காலாந்தகனைப்போல்
ஆக்கிரகித்துநின்று அநேகமாயிரம் பாணங்களை யெடுத்து தன்னுடை
யகாண்டீபத்தி னிடமாகத்தொடுத்துச் சுதர்த்தன்பேரில் பிரயோகம்ப
ண்ணினான் அதுகண்டு சுதர்த்தனும் மஹாகோபதீப்தனாய் எரிந்து வி
ழுந்து அர்ச்சுனராசன் பிரயோகஞ்செய்த பாணங்களையெல்லாம் நடு
பாதியில் கண்டித்துவிட்டு கிருஷ்ணார்ச்சுனர்க ளிரண்டுபேரையும் கால்
கைகள் ஆடவொட்டாமலும் ரதத்தை நடத்தவொட்டாமலும்பிரமிக்க
ப்பண்ணினான் அதனால் கிருஷ்ணபகவானும் மெத்தவும் ஆயாசமடை
ந்து அர்ச்சுனனைப்பார்த்து ஓய் அர்ச்சுனா நீ அசட்டையா யிருக்கவே
ண்டாம் சாக்கிரதையாயிருந்து போராடி இந்த துன்மார்க்கனைக் கொ
ல்லென்று சொல்லியருளினார் அதுகேட்டு அர்ச்சுனனும் உக்கிராகார
னாய் பற்களைநெறநெறவென்று கடித்து மீசைப் படபட வென்றுதுடி

க்கும்படி தன்னுடைய காண்டீபத்தைக் குணத்தொனிபண்ணி சூரிய
கிரணங்களைப்போல அதிதீட்சண்யமாய் விளங்குகின்ற குரூரபாணங்க
ளைத்தொடுத்துப் பிரயோகஞ்செய்து சுதர்த்தனுடைய ரதசாரதியையு
ங்குதிரைகளையும் நோகப்பண்ணி சுதர்த்தனையுஞ் சல்லடைக் கண்களா
கத்துளைத்து ரத்தமயமாக்கினான் அதனால் சுதர்த்தனும் மிகுந்த பிரயா
சமடைந்து பூமியில் நிற்கமாட்டாமல் தன்னுடையரதத்தைச் சாரதி கு
திரைகளுடனே ஆகாசமார்க்கத்தில் கொண்டுபோய் நிறுத்திக்கொண்டு
அவிடத்திலிருந்து தன்னுடையவில்லினிடமாக அநேகமாயிரம்பாணங்
களைத்தொடுத்து திவ்வுதிவ்வுமென்று ஸ்ரீ கிருஷ்ணார்ச்சுனர்களிருவர்பே
ரிலும் பிரயோகம்பண்ணுகையில் அர்ச்சுனனும் மஹா ஆக்ருஷித்துட
னேஎதிர்த்துநின்று சுதர்த்தனுடைய பாணங்களையெல்லாம் தும்சப்ப
டுத்தி அவன்பேரிலும் அநேகமாயிரம் பாணங்களைப் பிரயோகஞ் செ
ய்தான்.

அதுகளையெல்லாஞ் சட்டைபண்ணாமல் மிஞ்சினவனாய் ராமலட்
சுமணர்கள்பேரில் பாணப்பிரயோகஞ்செய்த மேகநாதனைப்போலவும்
சுதர்த்தனென்ற மேகமானது விடுபட்டு சரவருஷ்டி வருஷிக்கிறதுபோ
லவும் கிருஷ்ணார்ச்சுனர்களிருவர்பேரிலும் பாணவருஷங்களை வருஷித்
தான். அதுகண்டு அர்ச்சுனனும் மஹாரோஷித்து[illegible]துடனே சுத
ர்த்தனுடைய பாணங்களையெல்லாந் கண்டித்துவிட்டு பின்னையும் அநேக
மாயிரம்பாணங்களைத் தண்டோபதண்டமாய் பிரயோகஞ்செய்கிறபோ
துசுதர்த்தனும்பயப்படாமல் அஞ்சலப்படாமல் எதிர்த்துநின்றுமகாகோ
பதீப்தனாய் எரிந்துவிழுந்து தன்னுடைய கோதண்டத்தினிடமாக ஒரு
திவ்யபாணத்தைத்தொடுத்துப் பிரயோகம்பண்ணினான். அதுவும் வட
வாமுகாக்கினிபோல திகுதிகுவென்று எரிந்துக்கொண்டுவந்து அர்ச்சுன
னுடையமார்பிலேதைத்து முதுகிலுருகிப்போய்விட்டது அதனால் அர்
ச்சுனனும் மெத்தவும் ஆயாசத்தையடைந்தான்.

அப்பொழுதுசுதர்த்தன்பின்னையும் தன்னுடையவில்லினிடமா
கபிர்ம்மசக்கிரமென்கிறஒருகுரூரபாணத்தையெடுத்துத்தொடுத்துப்பி
ரயோகம்பண்ணினான், அதுவும்அதிகவேகமாய்திவ்வுதிவ்வுமென்கிற சத்
தத்துடனேவந்துஅர்ச்சுனனுடைய ரதத்தின்பேரில் தாக்கினவளவில்அ
ந்தரதமானது ஸ்ரீகிருஷ்ணார்ச்சுனர்களிருவருடனும் துவசமாகிய அனு
மாருடனும் குடைகொடிச்சீலைகள்- குதிரைகள்-வண்டிகளுடனும்-கிறு
கிறுவென்று குயவனுடைய சக்கரம்போலச் சுழலத்தலைப்பட்டது அது
கண்டுதேவேந்திராதி தேவர்களெல்லாரும்சுதர்த்தனுடைய சவுரியபரா
க்கிரமத்திற்குமெச்சி சந்தோஷப்பட்டார்கள். அப்படிஅண்டகடாகங்க
ளும் அதிரத்தக்கதாக அர்ச்சுனனுடையரதமானது சுழலுகிறபொழுது
அதனால்பூமியானது அறுப்புண்டு பாதாளபரியந்தம் பள்ளமாய்அந்த
ப்பள்ளத்தில்கிருஷ்ணார்ச்சுனர்களுடனும் குதிரைகளுடனும் அந்தரதமா

ணது இழிந்து அனுமக்கொடிமாத்திரம் மேலே நின்றது அதுகண்டு துவ
சமாகிய அனுமாரும் மஹாகோபங்கொண்டு இப்படிப்பட்ட ஆபத்து
வேளைக்குதவிசெய்யாமல் நாம் என்னகாரியத்திற்கு இருக்கின்றோமெ
ன்று சீக்கிரமாக நிலத்திற்குதித்து தன்னுடைய வாலைவளர்த்தி அந்தரதத்தி
ற்கு மூன்று சுற்றாகச்சுற்றிக்கொண்டு இரண்டுகால்களையும் பூமியிலூன்றிக்
கொண்டு ரதம்பூமியிலிரங்காமல் கெட்டியாய் இழுத்துப்பிடித்துக்கொ
ண்டிருந்தார். அந்தச்சமயத்தில் கிருஷ்ணபகவானும் அர்ச்சுனனைப்பார்
த்து-ஓய் அர்ச்சுனா, நீ சும்மாயிராமல் துன்மார்க்கனாகிய சுதர்த்தன்பேரில்
பாணப்பிரயோகம்பண்ணென்று சொல்ல அதுகேட்டு அர்ச்சுனனும் கி
ருஷ்ணபகவானைப்பார்த்து-ஐயா, ஜனார்த்தனா என்னுடைய நாவு வறளுகி
ன்றது தலையைச்சுழற்றுகின்றது, சரீரம் நடுங்குகின்றது, இந்தச்சுழற்சிநி
ற்கட்டுமென்று சொன்னவளவில் கிருஷ்ணமூர்த்தியும் அர்ச்சுனனைப்பா
ர்த்து ஓய் அர்ச்சுனா எனக்கும் அப்படிப்பட்ட பிரயாசமாகத்தான் இருக்
கின்றதென்று சொல்லியருளினார்.

அதிலே அந்தபாணத்தினுடைய சுருக்கும் அடங்கி மெதுவுபட்ட
து அது தெரிந்து அனுமாரும் ரதத்தையெடுத்துப் பூமியின்பேரில் செ
வ்வையாக நிறுத்தினார். அதற்குக் கிருஷ்ணபகவானும் சந்தோஷமடைந்து
அர்ச்சுனனைப்பார்த்து ஓய் அர்ச்சுனா இந்த அனுமந்தன் மெத்த நல்லவன்
சற்சனன் உபகாரி மஹாவித்வான் இவன் பூர்வத்தில் ராமமூர்த்திக்குச்
சகாயமாயிருந்து ராவணாதிராக்ஷதர்களையெல்லாஞ் சங்கரித்துகீர்த்திபெ
ற்ற மஹானுபாவன் இப்போது நமக்குச்சகாயமாயிருந்து பூமியில் முழு
கிப்போகிற ரதத்தையும் எடுத்துவைத்த மஹாபுருஷன் இவன் நம்முடை
ய பிராணசிநேகனென்று சொல்லி அநேகவிதமாகக்கொண்டாடி, அனு
மானை மார்போடு தழுவிக்கொண்டார். அனுமாரும் அந்தபகவானுக்கு ந
மஸ்காரம்பண்ணி அவரது செலவு பெற்றுக்கொண்டு முன்போலவே கொ
டியினிடமாகப்போய் விளங்கியிருந்தார். அப்பொழுது கிருஷ்ணபகவா
னும் அர்ச்சுனனை எச்சரிக்கைபண்ணி சுதர்த்தன்பேரில் பாணப்பிரயோ
கஞ்செய்யும்படி உத்தரவுசெய்தருளினார், அதுகேட்டு-அர்ச்சுனனும் ந
ல்லதென்று தன்னுடைய காண்டீபத்தைக் குணத்தொனிபண்ணி அதிதீ
க்ஷண்யமான பாணங்களைத்தொடுத்துப் பிரயோகஞ்செய்து ஆகாசவீதி
யினிடமாக நிற்கின்ற சுதர்த்தனுடைய ரதத்தைச் சாரதி குதிரைகளுடனே
பொடிபொடியாகத் தும்சப்படுத்திவிட்டு அவனையும் நோகச்செய்தான்.

அதற்குச் சுதர்த்தனும் பயப்படாமல் பூமியிற்குதித்து வே
றே ஒரு தேரிலேறிக்கொண்டு அர்ச்சுனராஜனுடனே எதிர்த்தான் அது
கண்டு அர்ச்சுனராஜனும் தன்னுடைய காண்டீபத்தைக் குமுகுமுவெ
ன்று குணத்தொனிபண்ணி அதனிடமாக ஒரு திவ்யபாணத்தையெடுத்
துப் பிரயோகஞ்செய்யும்பொழுது அந்த அர்ச்சுனனைப்பார்த்து ஓய்
அர்ச்சுனா உன்னிடத்தில் அக்கினிதேவன் கொடுத்த அக்ஷயதூணிரமிரு
க்கின்றதென்று நினைந்து என்விருதாவாகப் பாணங்களையெல்லாம் பிர

யோகம்பண்ணுகிருய் அப்படிசெய்யாமல் இனியாகிலும் இத்தனைபா
ணத்திஞல் என்னுடைய சிரசைக் கண்டிக்கிறேனென்று பிரதிக்கினை
பண்ணென்றுசொல்ல அதுகேட்டு அர்ச்சுனனும் அந்தப்பிரகாரம் ஆ
லோசனைசெய்து சுதர்த்தனைப்பார்த்து ஒய் சுதர்த்தா நீ சொன்னபடி
யே ஸ்ரீஅகிலாண்டகோடி பிர்ம்மாண்டநாயகராகிய கிருஷ்ணதேவரு
டைய திருவடிசாட்சியாக இந்த ஒருபாணத்திஞல் உன்னுடைய சிரசை
க்கண்டிக்கிறேனென்று மகத்தாகிய சபதம்பண்ணிஞன்.

அதுகேட்டு சுதர்த்தனும் அர்ச்சுனனைப்பார்த்து ஒய் அர்ச்சுன
நான்சரீரமெடுத்துத்தெளிவுண்டான அதுமுதல் இதுபரியந்தமும்வை
ஷ்ணவமத சித்தாந்தப்பிரகாரம் ஆசார கிருத்தியத்துடன் நடந்துவரு
கின்றது உண்மையாஞல் உன்னுடைய அஸ்தத்திற் பிடித்திருக்கின்ற
காண்டீபத்தினுடைய நாணியையும் அறுத்து உன் கைப்பிடியையும்
விடப்பண்ணுகிறேனென்று சொன்ஞன்.

அதுகேட்டு அர்ச்சுனனும் அந்தபாணத்தைஅதிதேவதாமந்தி
ரங்களுடனே அபிமந்திரித்து சுதர்த்தனுடையசிரசுக்குநேராகலக்ஷியம்
வைத்துப் பிரயோகம்பண்ணிஞன். அதுகண்டு சுதர்த்தனும்தன்னுடை
ய வில்லினிடமாக ஒருதிவ்யபாணத்தைஎடுத்துத்தொடுத்துப்பிரயோக
ம்பண்ணிஞன். அந்தஇரண்டுபாணங்களும் அதிகோரமாய்ப்பிரளயகா
லாக்கினியைப்போலச்சீறிஎதிர்த்து ஒருசமயமாய்இரண்டுசிங்கங்கள்போ
லவும், இரண்டுசர்ப்பங்கள்போலவும், இரண்டுவியாக்கிரமங்கள்போலவு
ம், இரண்டுசூரியர்கள்போலவும், இரண்டுகாலாக்கினிகள்போலவும், இர
ண்டு ஆலகாலவிஷங்கள்போலவும், இரண்டுசூலாயுதங்கள்போலவும்,இர
ண்டுவச்ராயுதங்கள்போலவும்,இரண்டுயமதண்டங்கள்போலவும்,இரண்
டுசக்ராயுதங்கள்போலவும்ஒன்றுக்கொன்றுஊடுதாக்கி ரோஷித்துவேஷ
ங்களுடனே நெருப்புப்பொறிகளைவாரியிறைத்துக்கொண்டு ஒன்றிஞெ
டொன்று- முட்டியும் தட்டியும் - இடித்தும் - இப்படிநாஞவிதமாகஇ
ரண்டுபாணங்களும் வெகுநேரம் போராடிக்கடைசியில்ஒன்றுக்கொன்
றுகதிகள்தப்பிமிஞ்சிநடந்துஅதில் சுதர்த்தனுடைய பாணமானது அ
திவேகமாகவந்து அர்ச்சுனன்கையிலிரா நின்றகாண்டீபத்தினுடையநா
ணியைப்படீலென்று அறுத்துவிட்டது,அப்படிநாணியறுந்தவுடன்கா
ண்டீபமானது நிகளமாகநீண்டு அர்ச்சுனன்கையிற்பிடித்திருந்தவிசை
யோடுதேரின்பேரில் விழுந்துவிட்டது அதஞல்அர்ச்சுனனுங்கைசோ
ர்ந்துமெய்சோர்ந்து மெத்தவும்ஆயாசத்தையடைந்தான் அப்படியிரு
க்க அர்ச்சுனனுடையபாணமானது சுறசுறவென்று சுழன்றுக் கொண்டு
வந்துசுதர்த்தனுடைய சிரசைக்கண்டித்துத்தள்ளிவிட்டது அந்தசிரசுங்
குப்பென்றுஆகாசமார்க்கத்திலெழும்பிசிங்கநாதம்அட்டகாசத்துடன்மு
றையிட்டுக்கொண்டுவந்து அர்ச்சுனனுடைய சிரசின்பேரில் தொப்பெ
ன்றுவிழுந்து மறுபடியும் எழும்பிகிருஷ்ணபகவானுடைய சிரசின்பே
ரில்விழுந்து அங்கேயிருந்துமறுபடியும்எழும்பி அந்தபகவானுடைய

பாதாரவிந்தங்களினிடமாகவிழுந்தது அதுகண்டு ஸ்ரீகிருஷ்ணபகவானும் சிரித்துசுதர்த்தனுடையசிரசைத்தமது திவ்யாஸ்திரங்களிற்பிடித்துக் கொண்டுஅர்ச்சுனனையழைத்தருளினர்.

அதும்கேட்டுஅர்ச்சுனனும் கழுத்தைத்தொங்கவிட்டுக்கொண்டுகோது செவிடுபட்டு ஆயாசமடைந்து கிருஷ்ண தேவனைப்பார்த்து ஐயா தேவாதிதேவா-எனக்குமெத்தவும் இளப்பாயிருக் கின்றதென்று சொல்லஅதுகேட்டு அந்தபகவானும் தமதுபாதத்தில்விழுந்து கிடக்கிறசுதர்த்தனுடைய சிரசைக்கையிலெடுத்துதமது பீதாம்பரத் தொங்கலினால் முகத்தைத்துடைத்து அவனுடையபக்தியையும்சவுரியபராக்கிரமத்தையும்அர்ச்சுனனுடனே வர்ணித்து அந்தச் சிரசைஅர்ச்சுனனுடைய கையிற்கொடுத்தருளினர் அர்ச்சுனனும் அந்தச்சிரசை வாங்கிப்பார்த்துஅநேகவிதமாகக்கொண்டாடி திரும்பவுங்கிருஷ்ணபகவானுடையகையிற் கொடுத்துவிட்டான் அந்தபகவானும் சுதர்த்தனுடைய சிரசைக்கையிலேவாங்கிக் கொண்டு இதைநாம் எங்கே போடுகிறது இவன் மஹாபுண்ணியபுருஷன் சத்தியசந்தனுச்சுதே யென்றுதிருவுளஞ்செய்துகருடனை நினைத்தருளினவளவில்அதுதெரிந்து கருடபகவானும் சீரசமுத்திரக்கரையைவிட்டு ஓடிவந்துகிருஷ்ணபகவானுடையபாதத்தில் விழுந்து நமஸ்க்காரம்பண்ணிஎழுந்துநின்று ஓய்ஸ்ரீமந்நாராயணதேவாதிதேவா இப்பொழுது தேவரீர்அடியேனை நினைத்தகாரியம்என்னவென்றுவிண்ணப்பஞ்செய்ய அதுகண்டு கிருஷ்ணமூர்த்தியும் சுதர்த்தனுடைய சிரசைக்கருடனுடைய கையிற்கொடுத்து இந்தச்சிரசைப் பிரயாக தீர்த்தத்திற்கொண்டுபோய்ப்போட்டுவிடென்றுகட்டளையிட் டனுப்பினர்.

அப்படியே நல்லதென்று கருட பகவானும் கிருஷ்ண மூர்த்தியினிடத்திற் செலவுபெற்றுக் கொண்டு ஆகாசவீதியிலெழும்பி அதிவேகமாய்ப் போகும்பொழுது ஐந்துமுகங்களையும் திரிநேத்திரங் களையுமுடையவராகியும் சிரசினிடத்திற் கங்காதேவியையும் நெற்றியில் அர்த்தசந்திரனையும்வைத்திருக்கின்ற வராகியும் இடது பாகத்தில் பார்வதாதேவியையுடையவராகியும்- வலக்கரத்திற் சூலத்தையும் இடக்கரத்தில் மானையும் ஏந்தி யிருக்கின்றவராகியும்-அரையில் புலித்தோலைத்தரித்திருக்கின்றவராகியும், சரீரமுழுதும்விபூதியை உத்தூளித்துக் கொண்டு ருத்திராக்ஷமாலிகையும்-சிரமாலிகையும் -அணிந்திருக்கின்றவராகியும்-காதுகளிலும் கைகளிலும்-நாகப் பாம்புகளைப் பூஷணமாகப் பூண்டிருக்கின்றவராகியும்- பின்னையும் சரீரமுழுதும் வாசுகிமுதலான சர்ப்பங்களை ஆபரணமாக அலங்கரித்திருக்கின்றவராகியும் விளங்கப்பட்டபரமசிவனானவர் சேளிவிலாசமாக கயிலாசத்தை விட்டு ரிஷபவாகனரூடராய் எழுந்தருளி விநாயகர்- வீரபத்திரர்- சண்டேஸ்வரர் - சுப்பிரமணியர்-பிருங்கிரிஷி முதலான சிவகணங்கள் புடைசூழ்ந்துவரவும் பிரம்மாதிதேவர்கள் சேவித்துநிற்கவும், நாரதமுனீஸ்வரர் தோத்திரம்பண்ணவும்,ஊர்வசி ரம்பைமுதலான தேவஸ்திரீகளும் உருத்திரகணிகை

யர்களும் பரதநாட்டியஞ்செய்யவும் இதுமுதலான சகல சம்பிரமத்து டனே கருடபகவானுக் கெதிர்ப்பட்டு அந்தகருடன்கையி லெடுத்துக் கொண்டுபோகிற சுதர்த்த னுடைய சிரசைப்பார்த்து தம்மோடு கூட வருகின்ற பிருங்கி ஷியை அழைத்து ஓய்பிருங்கி அதோ சுதர்த்தனெ ன்கிற பக்தனுடைய சிரசைக் கருட னெடுத்துக்கொண்டு போகிறான்- நீபோய்அதைவாங்கிக்கொண்டுவா வென்று கட்டளை யிட்டருளினர்அ துகேட்டு பிருங்கிரிஷியும் அப்படியே நல்லதென்று அதி சீக்கிரமாக நடந்து கருடனைக் கண்டு ஓய்கருடா நீபோக வேண்டாம் நீ கொண்டு போகின்றசிரசை என்கையிற் கொடுத்துவிட்டுப் போவென்றுசொல்ல அந்த வார்த்தைகளைக்கேட்டு கருடபகவானுந் திரும்பிப் பார்த்து புன் சிரிப்பாகச்சிரித்துநாம் இந்தச்சிரசை இந்த நட்டுவனுக்குக் கொடுக்க ப்போகிறோமோ வென்று தன்னுடைய சட்டைகளினல் விசிறினர் அ திலுண்டான காற்றினலடிபட்டு வேசாறி பிருங்கிரிஷியும் பூமியில் வி ழுந்து மூர்ச்சையடைந்து சற்றுநேரத்தில் தெளிந் தெழுந்திருந்து வ ந்து சாம்பவ மூர்த்திக்குத் தெண்டனிட்டு ஓய்தேவாதி தேவா நான் அந்தக்கருடனுடைய செட்டையினல் அடிபட்டு நொந்து தப்பிப்பி ழைத்துவந்தேனென்று சொன்னர். அந்த வார்த்தையைக்கேட்டு பார் வதாதேவியும் புன்னகைகொண்டு சாம்பவமூர்த்தியைப் பார்த்து ஓய் பிராணவல்லபா இந்தபிருங்கியை எம்மாத்திரஞ் சேவகனென்று நினை த்தீர் ஒருபக்ஷியினல் அடிபட்டு நொந்து அதனுடனே எதிர்த்துப் போராடமுடியாமல் வேசாறி ஓடிவந்து விட்டான் பார்த்தீரோ ஆகை யினல்- துணைக்கு எம்மாத்திரஞ் சேவகமுண்டோ, சேவகர்களுக்கும் அம்மாத்திரஞ்சேவகமுண்டு அதெப்படியென்றால், தேவரீருக்குஆ பரணங்களோ சர்ப்பங்கள், மாலைகளோ எலும்புகள்,சிரசில் தரித்திரு ப்பதோ திரிலோகங்களிலும்பிரவேசிக்கின்றநதிகள், அரையிலுடுக்கின் ற வஸ்திரமோ - புலித்தோல், புஜத்தின்மேரி லணிகின்ற பச்சவடமோ யானைத்தோல், சரீரமுழுதும் - பூசுகின்றசுகந்தமோ - விபூதிதூளிதம்- எந்நேரமும் உட்கொள்ளுகிறதோ - கஞ்சாபஸ்பம் - ஏறுகின்ற வாகன மோ - எருது- எப்போதும் இருக்கின்ற ஸ்தானமோ - சர்வசூன்யமான பூமி - பக்கத்திற் சேவிக்கின்றவர்களோ - பூதப்பிரேதபசாச கணங்கள்- சாப்பிடுகின்றதோ - ஆலகாலவிஷம் - இப்படிப்பட்ட வைபவத்தையு டையஉமக்குச்சேவக வீரமுண்டோ வென்று பரிகாச வார்த்தையாகச் சொன்னள் அந்தவசனங்களை யெல்லாங் கேட்டு சாம்பவ மூர்த்தியும் புன்சிரிப்பாகச்சிரித்து தம்முடைய குமாரனகிய சுப்பிரமண்யனை அ ழைத்துஓய் குமாரகா நீ அதிசீக்கிரத்திற்போய் அந்தகருட னெடுத்து க்கொண்டுபோகின்ற சிரசை வாங்கிக்கொண்டுவாவென்று கட்டளையிட் டனுப்பினர்.

அதுகேட்டு சுப்பிரமணியரும்நல்லதென்றுமயில்வாகனரூடராய் எழுந்தருளிவேலாயுதத்தைக் கையிற்பிடித்துக்கொண்டு மகாவேகமாக

ரத்துடன் நடந்துபோய் கருடனைக்கண்டு ஓய் கருடா, நீ அந்தசிரசை
க்கொண்டுபோகவேண்டாம் நில்லுநில்லுமென்று சொல்ல, அதுகேட்
டு கருடபகவானுந் திரும்பிப் பார்த்து நாம் நமது ஆண்டவனுடைய
கட்டளையைத்தள்ளி இந்தச்சிரசை இவனிடத்திற் கொடுக்கப்போகிறோ
மோவென்று அதிசீக்கிரமாக நடக்க, அதுகண்டு சுப்பிரமணியக்கடவு
ளும் மகா ஆக்ருஷித்துடனே கியாவென்றுஅட்டகாசம்பண்ணினார், அ
ந்த அதிர்ச்சியினால் கருடபகவானுந் திகிலடைந்து திசைதடுமாறி பிர
யாகை தீர்த்தத்திற்குச் செல்லுகின்ற வழிதப்பி வெகுதூரந்திரிந்துவே
சாறிபிரயாகை நதியைக்காணமல் அலைந்து அந்த சுதர்த்தன்செய்த பு
ண்ணியபலத்தினால் பிரயாகையைக்கண்டுகருடபகவான் சந்தோஷித்து
சீக்கிரத்தில்அந்தநதியினிடமாகச் சுதர்த்தனுடைய சிரசை எறிந்துவிட்
டு அதிவேகமாகத் தன் னிருப்பிடத்திற்குப் போய்விட்டார், அது
கண்டு சுப்பிரமணியக் கடவுளும் தண்ணீரில்விழப்போகிற அந்தச்சிர
சைச்கெட்டியாகப்பிடித்து எடுத்துக்கொண்டுவந்து சாம்பவமூர்த்தியி
னிடத்தில் ஒப்புவித்தார் சாம்பவ மூர்த்தியும் அந்தச் சிரசைத் தமது
திவ்யாஸ்தத்திலேந்திக்கொண்டு பார்வதாதேவியைப் பார்த்து ஓய்பிரா
ணநாயகீ இந்தச் சிரசைப்பார்த்தாயோ இந்தச் சுதர்த்தன் மூன்செ
ன்மத்தில்நமக்குப்பயபக்திவிசுவாசத்துடன் அன்புசெய்தவன் - அது
வுமல்லாமல் இவன் விஷ்ணுவினுடைய பக்தன்- வீராதிவீரன் - சத்திய
சந்தனன்- இவனுடைய சீவனானது ஸ்ரீகிருஷ்ண தேவருடன் சலந்து
போய்விட்டது -ஆதலால் நான் இந்தச் சிரசைத் தரித்துக் கொள்ளுகி
றேனென்று தமதுமார்பினிடமாகத் தரித்திருக்கின்ற ஸிர மாலிகையில்
நடுநாயகமாகத்தரித்து மகா சந்தோஷித்துடனே சகல பூதகணங்களுட
னும் -ரிஷிகணங்க ளுடனும் ஸ்ரீசயிலாசபர்வதத்திற் கெழுந்தருளினா
ர் இவ்விடத்தில் கிருஷ்ணார்ச் சுனர்களிருவர் பேரிலும் தேவேந்திராதி
தேவர்கள் பாரிசாதபுஷ்பங்களைச் சலசலவென்று வருஷித்தார்கள்.

அப்பொழுதுகிருஷ்ணார்ச்சுனர்களிருவரும் தேவதத்த மென்னு
ஞ்சங்கத்தையும் பாஞ்ச சன்னியத்தையும் பப்பமென்று முழக்கஞ்
செய்தார்கள் துவசமாகி விளங்குகின்ற அனுமாரும் அட்டகாசம் பண்
ணினர்,ரதத்திற் பூட்டியிருக்கின்ற குதிரைகளும் ஏழாரவங்களைச் செ
ய்தது அந்தவேளையில்அம்சத்துவ மஹாராசனும் தன்னுடைய புத்தி
ரர்களாகிய சுதர்ம்மனும் சுதர்த்தனும் ரணக்களத்தில்மடிந்து போ
னதைக்கண்டு துக்காக்கிரந்தனாய் விசாரப்பட்டு சற்று நேரத்தில் மனந்
தெளிந்துதைரியம்விடாமல் நம்முடையகுமாரர்கள்மோக்ஷபதத்தைப்
பெற்றார்கள் அவர்களைக்குறித்துநாம்விசாரப்படவேண்டிய காரணமே
ன்னவிருக்கின்றதென்றெண்ணிக்கொண்டுகிருஷ்ணார்ச்சுனர்கள் பேரில்
எரிந்துவிழுந்து மஹாகோபதீப்தனாய் என்பகையாளியான அந்த அர்ச்
சுனனைக்கண்டித்துஎன்மனதுக்கத்தை நிவிர்த்திசெய்துக் கொள்ளுகி
றேனென்றுஒருதேரிலேறிக்கொண்டு யுத்தசன்னத்தனாய்ப்புறப்பட்டு

யனைகளத்தைநோக்கிவருகையில்அதுகண்டு ஸ்ரீகிருஷ்ணபகவானும்அர்ச்சுனனுடனேகூடசீக்கிரமாகத்தேரைவிட்டிழிந்து அம்சத்துவஜமஹாராஜனுக்கு எதிர்கொண்டுநடந்தார்கள். அதுகண்டு அந்தராஜனும்கோபத்தைவிட்டு சந்தோஷத்துடனே தன்னுடைய ரதத்தைவிட்டிழிந்து எதிரேவந்தான், அப்பொழுதுஸ்ரீகிருஷ்ணபகவானும் அம்சத்துவஜமஹாராஜனையணைத்துமார்போடு தழுவிக்கொண்டுஐயா,உம்முடையபுத்திரர்களிருவரும் விருதாவாகயுத்தகளத்தில்மடிந்துபோனார்களேயென்றுதாமும்விசாரப்பட்டுபிற்பாடுஸ்ரீமந்நாராயணமூர்த்தியுடனேகலந்துபோனவர்களைக்குறித்து நீர்விசாரப்படவேண்டாமென்று அந்தராஜனுடைய துக்கத்தையும் நிவிர்த்திசெய்துசந்தோஷப்படுத்திவைத்தார். அதுகண்டுஅர்ச்சுனனும் அந்தராஜனைத்தழுவிக்கொண்டு சிநேகம்பண்ணிக்கொண்டான் அதுகண்டுஅம்சத்துவஜமஹாராஜனும் சந்தோஷகரமாய்தன்னுடையபட்டணத்திலிருந்துஅநேககாணிக்கைகப்பங்களையும், அஸ்வமேதக்குதிரையையும்,அழைப்பித்துஸ்ரீகிருஷ்ணார்ச்சுனர்களிருவர்களிடத்திலும்ஒப்புவித்துஸ்ரீகிருஷ்ணபகவானுடையபாதத்தில்விழுந்துநமஸ்காரம்பண்ணி எழுந்துநின்று அந்தபகவானைப்பார்த்துஐயா, கிருஷ்ணமூர்த்திஅடியேன் தேவரீருடைய பாததரிசனையைப்பிரத்தியக்ஷமாகக்கண்டுகளிப்பதற்கு ஏதுவில்லாமல் நெடுநாளாய்எப்பொழுதுகிடைக்குமென்கிற தாபந்திரியத்துடன் சதாகாலமும் தேவரீருடைய பாதத்தையே தியானித்துக் கொண்டிருந்தேன் அங்ஙனமிருக்க இந்த அஸ்வமேதக்குதிரையானது விடுபட்டு வந்ததென்கிறசேதிதெரிந்தவளவில்இதைநாம்பிடித்துக்கட்டி அர்ச்சுனனையும் நோகப்பண்ணினால்அவனிமித்தமாய்கிருஷ்ணபகவான்எழுந்தருளிவருவார்அதுமுன்னிலையில்அவரைக்கண்டுதரிசனம்பண்ணிநம்முடைய கோரிக்கையைஈடேற்றிக்கொள்ளலாமென்றுதீர்க்க யோசனைசெய்து இந்தக்குதிரையைப் பிடித்துகட்டிவைத்தேன்இப்பொழுதுதேவரீருடையபாததரிசனையைக் கண்டமாத்திரத்தில் என்னுடையஜென்மம் சாபல்லியமாச்சுதுஎன்கோரிக்கையும் ஈடேறிவிட்டதென்று அநேகவிதமாகத்தோத்திரம்பண்ணினான்அந்தவார்த்தைகளையெல்லாம் தோத்திரியப்பிரியராகிய கிருஷ்ணபகவானுஞ்சந்தோஷமாகக்கேட்டு கிருபைகூர்ந்து அம்சத்துவஜ மஹாராஜனைப்பார்த்து ஓய்ராஜேந்திரா நான் அஸ்தினபுரத்திற்குப் போகவேண்டும் நீ உம்முடையசேனைசமுத்திரங்களுடனேகூடஅர்ச்சுனனுக்குச்சகாயமாயிருந்துஅஸ்வமேதக்குதிரையைப் பாதுகாத்துக்கொண்டு போகவேண்டுமென்று திருவாய்மலர்ந்தருளினார் அதுகேட்டு அம்சத்துவஜ மகாராஜனும் கிருஷ்ணபகவானைப்பார்த்து ஓய்சுவாமிஅடியேன் தேவரீருடையஉத்தாரப்படியேபோய்அஸ்வமேதக்குதிரையைப்பாதுகாத்துக்கொண்டுவந்து தர்மபுத்திரருடைய யாகத்தை நிறைவேற்றி வைக்கிறேனென்றுசொல்லி பின்னையும் ஒருவர்க்கொருவர் சமாதானங்களால் அநேகவிதங்களாகப்பேசிக்கொண்டிருக்கையில்முன்புயுத்தகளத்தில் மூர்ச்சையடை

ந்திருந்த- விஷ்வகேது- பிரத்தியுமனன்- நீலத்துவஜன்- எவ்வர்ணசுவன்
மேகவர்ணன் - கிருதவர்மன் - முதலானவர்களும் மூர்ச்சைதெளிந்தெ
ழுந்திருந்து கிருஷ்ண மூர்த்திக்கு நமஸ்க்காரம் பண்ணி சந்தோஷிகரா
மாயிருந்தார்கள்.

பின்னையும் ரதகஜதுரக பதாதியாகிய சதுரங்கசேனைகளும்மூர்
ச்சைதெளிந்தெழுந்ததுகள் அப்பொழுது அம்சத்துவஜமஹாராஜனை
வன் கிருஷ்ணார்ச்சுனர்க ளிருவரையும் சகலதுராதுரைகளையும் சகலசே
னைகளையும் சண்பகாபுரத்திற்குச் சகலசம்பிரமத்துடன்அழைத்துக்கொ
ண்டுபோய் ஸ்நானம்பண்ணுவித்து போஜனமுதலான உபசரணைகள்செ
ய்வித்து ஐந்துநாள்மட்டுக்கும் தன்னுடைய அரண்மனையில் மஹாபிரி
யத்துடன்உபசரித்துக்கொண்டிருந்தார் அதன்பிறகு ஸ்ரீகிருஷ்ணபகவா
ன்அம்சத்துவஜ மஹாராச னிடத்திலும் அர்ச்சுனனிடத்திலும் செலவு
பெற்றுக்கொண்டு தாரகனை நினைத்து ரதத்தைக்கொண்டு வரும்படிசொ
ல்லி அந்தரதத்தின்மேரி லெழுந்தருளிஅஸ்தினாபுரத்திற்குப் போய்சே
ர்ந்து தர்மபுத்திரரைக்கண்டு தெண்டனிட்டு அவரும் நீ ரெங்கேபோ
யிருந்தீரென்றுகேட்க நாம்பின்னையெங்கும்போகவில்லை யமுனை தீர்த்த
த்திற்கு விலாசமாகப்போயிருந்தோமென்றுசொல்லிவிட்டு அவரிடத்தி
ல்தானேயிருந்தருளினார் இவிடத்தில் அர்ச்சுனராசன் மறுபடியும் இர
ண்டுநாள்மட்டுக்கும் அம்சத்துவஜ மகாராசனுடைய பட்டணத்தில்சக
லசேனைகளோடும் மஹாவைபவத்துடனே யிருந்துபிற்பாடுமறுநாள்யு
த்தசன்னத்தனாய் ரதாரூடனாய்ப்பட்டணத்தைவிட்டுப்புறப்பட்டு அஸ்வ
மேதக்குதிரையைவிட்டுஅந்தக்குதிரையின்பிறகே அம்சத்துவஜமஹா
ராஜன்முதலான சகலதுராதுரைகளுடனும்நடந்தான்.

கேட்டீரோஜெனமேஜெயபூபாலகா இந்தவிதமாய் சுதர்மனு
ம் சுதர்த்தனும் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியுடன் கலந்துபோன திவ்ய சரித்தி
ரத்தை எவர்களானாலும் பயபக்திவிசுவாசத்துடனே யிருந்து எந்தெ
ந்த கோரிக்கையை விரும்பிக்கேட்கிறார்களோ அவர்களுக்கு அந்தந்த
கோரிக்கைகளைக்கொடுத்து ஸ்ரீகிருஷ்ணபகவான் ரட்சித்தருளுவாரென்
றுசெயமுனீந்திரரானவர் திருவாய்மலர்ந்தருளி அப்பால்நடந்த சரித்தி
ரத்தைச்சொல்லத்தொடங்கினார்.

கேளுமையா ஜெனமேஜெய மஹாராஜாவே,இந்தப்பிரகாரம் அர்
ச்சுனமஹாராஜன்சர்வாடம்பரத்துடனேசண்பகபுரத்தைவிட்டுப்புறப்
பட்டு அப்பால்நடக்கும்பொழுது அஸ்வமேதக்குதிரையானது நடந்து
வனங்கள்-வனாந்திரங்கள்-காடுகள்- செடிகள்-மலைகள்-குன்றுகள்- முதலா
னதுகளையுந் தாண்டி அப்புறம் கௌரீதேவி வனத்திற்குப்போய் அவி
டத்தில் ஒரு தடாகத்தைக்கண்டு அதிலிறங்கி தண்ணீர்குடிக்கவளவில்
ஆண்குதிரையாயிருந்த அஸ்வமேதக்குதிரையும் பெண்குதிரையாகி நி
ன்றது அதுகண்டு அர்ச்சுனராஜனும் இதுஎன்னவிபரீதமென்றுநினைத்து
விசாரப்பட்டுக்கொண்டிருக்க அந்தக் குதிரையானது மறுபடியும் வே

ஒருதடாகத்திலிறங்கி தண்ணீர்குடித்துவெங்கைப்புலியாகநின்று சே
னைகள்பேரில்சீறிவந்தது அதுகண்டு அர்சுனராஜனுந்திகிலடைந்துவி
சாரப்பட்டு இதுஎன்னஆச்சரியமாயிருக்கின்றது நாம்வழியில்பட்டபா
ட்டைப்பார்க்கிலும் இதுமெத்த சங்கடமாய்வந்துநேரிட்டதுநாம்இந்த
வெங்கைப்புலியின்பேரில் பாணப்பிரயோகஞ் செய்வோமாகில் அஸ்வ
மேதக்குதிரையாகிய இந்தப்புலியும் இறந்துபோகுமே இதற்கு என்ன
செய்கிறதென்று மெத்தவுந்தாபந்திரியப்பட்டு கிருஷ்ணதேவரை நினை
த்து ஓய் துவாரகாபுரிவாசா தேவகிநந்தன கோபிகாரமண ஓய்சுவாமி,
இந்தப்புலியை முன்னிருந்ததுபோல அஸ்வமேதக்குதிரையாக்கி ரக்ஷி
க்கவேண்டுமென்று அநேகவிதமாகத் தோத்திரம்பண்ணினன். அப்ப
டி தோத்திரம்பண்ணுகிற அர்ச்சுனனுடைய வார்த்தையை அஸ்தினபுர
த்திலிருக்கின்ற ஸ்ரீகிருஷ்ணபகவான்கேட்டுச்சிரித்து பார்த்தனாகிய அர்ச்சு
னன் நினைத்தபிரகாரம் ஆகக்கடவதென்று ஆசீர்வாதஞ்செய்தருளினர்.
அதனால் அந்தப்புலியும் எப்பொழுதும்போல ஆண்குதிரையாச்சுதெ
ன்று செயமுனீந்திரர்சொல்ல, அதுகேட்டு ஜெனமேஜெய மஹாராசா
வும் ஆச்சரியப்பட்டு ஜெயமுனீந்திரரைப்பார்த்துஓய்முனிநாதா அந்த
இரண்டுதடாகத்திலும் என்னவினோதமிருந்ததுஅதைச்சற்றே தெரியச்
சொல்லவேண்டுமென்று கேட்டவளவில் செயமுனீந்திரர்திருவுள்ம்பற்
றியருளுகின்றார் கேளுமையா ஜெனமேஜெயமஹாராசாவே அந்தவன
த்தில் பார்வதாதேவியாரும் சாம்பவமூர்த்தியைத்தனக்குப் புருஷனாக
வேண்டுமென்றுநினைத்து தவஞ்செய்துக்கொண்டிருக்கும்பொழுதுஅ
விடத்தில் உக்கிரசேனனென்கிற ஒருராக்ஷதன்வந்து பார்வதா தேவியி
னுடைய சவுந்தரியத்தைப்பார்த்துஉலகமாதாவென்று நினையாமல் ஒரு
பெண்ணாகநினைந்து மோகாந்தகாரனாய் துர்ச்செய்கையைக் கருதின
ன் அதுதெரிந்து பார்வதாதேவியாரும் மஹாகோபங்கொண்டு அந்த
துன்மார்க்கனாகிய ராக்ஷதனைப்பெண்வடிவாகப்பண்ணிவிட்டு பின்னை
யும்இன்றுமுதல் இந்தவனத்திலுள்ள தடாகத்தில் எண்பத்து நான்கு
லக்ஷஞ்சீவராசிகளில் பிறந்துள்ள ஆண்சீவர்கள்வந்து தண்ணீர்குடித்தா
ல்பெண்சீவர்களாகப் போகக்கடவதென்று சாபமிட்டருளினள் அந்த
ச்சாபத்தினால் அர்ச்சுனன்விட்ட அஸ்வமேதக் குதிரையானது வந்து
தண்ணீர்குடித்தவுடன் பெண்குதிரையாகிவிட்டது. அப்பால் அந்தக்
குதிரையானதுமறுபடியும் வெங்கைப்புலியான சரித்திரத்தையுங் கே
ளும், அஃதெப்படியென்றால் அலக்கிரனென்கிற பிராமணன் ஒருவன்
தீர்த்தயாத்திரைசெய்யும்படி நினைத்துப் பிரவேசித்து அங்கங்கேயுண்
டானபுண்ணியதீர்த்தங்கள்தோறும் முழுகிக்கொண்டுவந்துஅந்தகௌ
ரீதேவிவனத்திலும் ஒரு சுனையைக்கண்டு அந்தசுனையில்ஸ்நானம்பண்
ணவேண்டுமென்றுநினைத்து அதிலிறங்கிஸ்நானம்பண்ணுகையில் அதி
லிருந்து கொடூரமான முதலைவந்துஅந்தபிராம்மணனைப்பிடித்துக்கொ

ண்டுமகா கஸ்திப்படுத்த அதனால் அந்தப்பிராமணன் மெத்தவும் பிர யாசமடைந்துசரீரம்நொந்து வேசாரிஅவனதுநல்வினையினால்அந்தமு தலையின்பிடியை மெள்ளத்தப்புவித்துக்கொண்டு கரையில்வந்து மகா ஆக்ருஷித்துடனே இன்றுமுதல்எவர்களாகிலும் இந்தச்சுனையில் இறங் கினாலும் தண்ணீர் குடித்தாலும் புலியாகக்கடவதென்று சாபமிட்டா ன்அதனால் அஸ்வமேதக் குதிரையானது அந்தச்சுனையினிடத்தில்தண் ணீர்குடித்து வேங்கைப்புலியாகப் பின்பு ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய கிருபாகடாட்சத்தினால் எப்போதும்போல ஆண்குதிரையாச்சுதுகேட் டீரோ செனமேசெயமஹாராசாவே அப்பால்அர்ச்சுனராசன்அவ்விட த்திலிருந்து குதிரையைவிட்டு தானும் சகலசேனாசமுத்திரங்களுடனே புறப்பட்டு ரதாரூடனாய் நடக்கும்பொழுது அந்தத் திசையிலுள்ள ம னிதர்களில் மிருகசாதியைப்போல ஒருவருக்குந் தெரியாதபாஷைகளை ப்பேசிக்கொண்டு நான்குசிரசும் மூன்றுசிரசும் நான்கு பாதமும் மூ ன்றுபாதமும் உள்ளவர்களாய் விச்சித்ரரூபமாய்ச் சிறிதுபேரிருக்க அவர்களைக்கண்டு ஆச்சரியப்பட்டுக்கொண்டு அப்பால் நடக்கையில் அங்கேசிறிதுபேர்கள் பிர்ம்மாண்டமான ஒருபெரிய ஆலாவிருக்ஷத்தி ன்பேரிலிருந்து சம்மாரம் பண்ணிக்கொண்டு மிருகசாதிகளுக்குப் பய ந்துபூமியில்றங்காம லிருப்பதையுங்கண்டு அதிசயித்துக்கொண்டுஅப் பால் அநேகந்தூரம் நடந்து பெண்மலையாளத்திற்குச் சமீபமாகப் போகும்பொழுது அஸ்வமேதக்குதிரையானது விடுபட்டு அந்தப்பட் டணத்திற்குள்ளேபோய் நுழைந்தது, அது சேதியை வேவுகார ஸ்திரீ கள்தெரிந்து ஓடிவந்து ராசநீதி வழுவாமலும் ஒரு ஆண்பிள்ளைகள் இல்லாமலும் மதனமஞ்சரியென்கிற சேனாதிபதியுடனே சிங்காசனத்தி லுட்கார்ந்து இருபதாயிரம் ரதங்களும் ஐம்பதினாயிரம் யானைகளும் லக்ஷங்குதிரைகளும் அநேகம்பெண்சேனைகளும்புடைசூழத்தர்களாயி ருந்துஅந்தப்பெண்மலையாளத்தைஅரசாக்ஷிசெய்துக்கொண்டுவருகின் றபிரலாவதியென்னும்பெயரையுடையபெண்ணரசியைக்கண்டுதெண்ட னிட்டுஓய்அம்மாஇன்றையதினம்நம்முடையபட்டணத்திற்குள் அர்ச்சு னமகாராசன்விட்ட அஸ்வமேதக்குதிரையானதுவந்துநுழைந்தது அ தைப்பிடித்துக்கட்டுகிறதோ விட்டுவிடுகிறதோ-வென்று கேட்டார்கள் அதுகண்டுஅந்தப்பிரலாவதியும் தன்னுடைய சேனாதிபதியாகிய மதன மஞ்சரியுடனே ஆலோசனைசெய்து அவர்களைப்பார்த்து அர்ச்சுனராச னுடைய சாமர்த்தியம்எம்மாத்திரம் அதுநமக்குத் தெரிந்தேயிருக்கின் றதுநீங்கள்போய் அந்தக்குதிரையைப்பிடித்துக்கட்டிவிட்டுநம்முடை ய சேனைகளையெல்லாம் யுத்தஞ்செய்வதற்கு ஆயுத்தப்படும்படி பறை யறைவியுங்கோளென்று செலவுகொடுத்தனுப்பினாள்.

## பிரலாவதியுத்தம்.

அதுகேட்டு அப்படியேநல்லதென்று அந்தவேவுகாரஸ்திரீகளும் அதிசீக்கிரமாக வந்து அஸ்வமேதக் குதிரையைப் பிடித்துப் பட்டணத்திற் கட்டிவைத்து பிற்பாடு சேனைகளும் ஆயுதங்களுடனே இன்றையதினம்யுத்தத்திற்கு ஆயுத்தமாகப் புறப்பட்டுவரவேண்டுமென்று பறையறைவித்தார்கள் அதுசேதியைக்கேட்டு நாம் ராசனுக்கினைப்படியேநடக்கவேண்டுமென்றுஅந்தப்பட்டணத்திலுள்ளரதகசதுரகபதாதிகள் முதலானதுகளுடனே சகல பெண்சேனைகளும் யுத்தசன்னுத்தராய்ப்பட்டணத்தைவிட்டு புறப்பட்டு வெளியேவந்து தண்டுவிட்டிறங்கினார்கள் பிரலாவதியென்கிற பெண்ணரசியானவள் மதனமஞ்சரியென்கிறசேனாதிபதிமுதலான சகலபெண்சேனைகளுடனேயும் அநேக சஸ்திரஅஸ்திரங்களை யெடுப்பித்துக்கொண்டு யுத்தபிரமுகியாய் ரதாரூடியாய்ப்புறப்பட்டு வெளியேவந்துதண்டுடனே சேர்ந்து ரணபேரிகையறைவித்தாள். இப்படியிருக்க அவிடத்தில் அர்ச்சுனராசனுங் குதிரை பிடிபட்டு போனசேதியைக்கேட்டு மகாகோபத்துடனே சகலசேனைகளோடும் அதிசீக்கிரமாகவந்துஅந்தப்பெண்சேனைகளை எதிர்த்துநின்று அநேகமாயிரம்பாணங்களைப்பிரயோகஞ்செய்துஅந்தச்சேனைகளையெல்லாம் கைகாலாடவொட்டாமல்சின்னபின்னப்படுத்த அதுகண்டுஅந்தப்பெண் சேனைகளும் தங்கள் தங்களுடைய வில்லுகளைவளைத்து அளவிறந்தபாணங்களைத்தொடுத்துப்பிரயோகஞ்செய்து அர்ச்சுனராஜனுடையசேனைகளையெல்லாம் சின்னபின்னமாகக் கண்டித்து நோகப்பண்ணினார்கள்- அதில்சிறிதுபெண்கள்இரண்டுயோசனை மூன்றுயோசனைநிகளமாய் வளர்ந்திருக்கின்ற தங்களுடைய ஸ்தனங்களின் கச்சுகளை அவிழ்த்துவிட்டு மச்சகூட்டங்கள்பேரில்வலைக்காரன் வலைவிசிறுகிறதுபோல்அர்ச்சுனன்சேனைகளை விசிறி அடித்து ஒவ்வொருஅடிக்குஆயிரம்இரண்டாயிரஞ் சேனைகளைப் பொடியாக்கித் தள்ளினார்கள் - இப்படி நானாவிதமாக அர்ச்சுனனுடைய சேனைகளை அந்தப்பெண்சேனைகள் சூழ்ந்துகொண்டு துரத்தியடித்து மூலைக்குமூலை ஒதுக்குகின்றதைக்கண்டு அம்சத்துருவசமகாராஜன் முதலான வீராதிவீரர்களெல்லாம் வெட்கப்பட்டு தலையை சாய்த்துக்கொண்டார்கள்.

அப்படி அர்ச்சுனனுடைய சேனைகளெதிர்த்து நின்றுயுத்தஞ்செய்துநிர்வகிக்கமாட்டாமல்பின்னுக்கு இடைந்துபோகின்றதைக்கண்டுபெண்சேனைகளெல்லாருங் கைகொட்டிச்சிரித்து சிங்கநாதங்கள் அட்டகாசங்கள் பண்ணிக்கொண்டுமிஞ்சிவந்து அர்ச்சுனராஜன்பேரிலெதிர்த்தார்கள் - அதுகண்டு அர்ச்சுனனும்ஆச்சரியப்பட்டு இதுஎன்னவிபரீதம், நாம்இப்படிப்பட்டயுத்தத்தை ஒருநாளுங்கண்டதுமில்லை,கேட்டதுமில்லை,இதுமகாவேடிக்கையாயிருக்கின்றது நாம்பெண்டுகள்பேரில்பாண

ப்பிரயோகஞ்செய்கின்றதெப்படி நல்லது நாமேபோய் எல்லாச்சேதி
யுந் தெரிந்து கொள்ளலாமென்று ஆலோசித்து தன்னுடைய ரதத்தை
ப் பிரலாவதிபேரில் அதிகவேகமாகத்தூரத்தி அவளைப்பார்த்து ஓய்
பெண்ணரசி! நீஎங்களுடனே எதிர்த்துச்சண்டைபண்ணமாட்டுவாயோ
தேவேந்திராதி,தேவர்கள் முதலானபேர்களும் எங்கள்முன்னே எதிர்த்
து நிற்கமாட்டார்களே,நீயோநிற்கின்றவள்ஆதலால் நீ சண்டைபண்ண
வேண்டாம்சமாதானமாய்க்குதிரையைக்கொண்டுவந்து ஒப்பிவித்து சு
கமாய் உன்னுடைய பட்டணத்திற்குப் போவென்று சொன்னான். அது
கேட்டு அந்தபிரலாவதியும்புன்சிரிப்பாகச்சிரித்து அர்ச்சுனராஜனுடை
ய சவுரியபராக்கிரமத்தையுஞ் சௌந்தரியத்தையுங் கண்டு மோகித்து
ஓய்கிரீட்டி, நீர் நல்லவார்த்தை சொன்னீர் நாங்கள் உங்கள்முன்னே எ
திர்த்து நிற்கமாட்டோமென்று நினைத்தீரோ அப்படி நினைப்பதை வி
ட்டுவிடும், உம்மைப்பார்த்தால் எனக்குச் சண்டைபண்ணுகிறதற்கு ம
னமில்லை, ஆகையால் நான் இரண்டு வார்த்தையாகச் சொல்லுகிறேன்
கேளும் அவை யென்னவென்றால், இப்பொழுது சர்வாடம்பரத்துட
னே என்னைக் கலியாணம் பண்ணிக்கொண்டு என்னுடனேகூடிச் சக
லபோகங்களையும் அனுபவித்திருந்துபிறகு என்னுடைய சேனைகளையு
ம் - சீர்மைபூமிகளையும் - பண்டுபண்டாரங்களையும்- உம்முடைய வசம்
பண்ணிக்கொண்டுஅப்பால்அஸ்வமேதக்குதிரையும் நடத்திப்பூமிப்பிர
தக்ஷணஞ்செய்வித்து சந்தோஷிகரமாய் தர்மபுத்திரர்செய்கின்ற யாக
த்தை நிறைவேற்றிவையும்அப்படிசெய்ய மனமில்லாவிட்டால்என்னு
டனேஎதிர்த்துபோராடிஎன்னைசெயித்துக்குதிரையைவிடுவித்துக்கொ
ண்டுபோமென்று சொன்னாள், அதுகேட்டு அர்ச்சுனனுஞ் சிரித்து பி
ரலாவதியைப்பார்த்து ஓய் பிரலாவதி,நீநல்லவார்த்தைசொன்னாய் நான்
வந்த காரியமென்ன அஸ்தினபுரத்தில் என்தமையனாராகியதர்மபுத்திர
ர் யாகதீக்ஷையைக்கைக்கொண்டிருக்க, அதை நினையாமல்நான்இவ்விட
த்தில் உன்னைக்கலியாணம்பண்ணிக்கொண்டு உன்னோடுகூடிச்சகலபோ
கபாக்கியங்களையும் அனுபவித்துக்கொண்டிருப்பது தர்ம்மமோ,அது
கூடாது நீ குதிரையைக்கொண்டுவந்துஒப்பிவித்தாலாச்சுதுஇல்லாவிட்
டால் சண்டைக்குவாவென்றுசொல்ல, அதுகேட்டுபிரலாவதியும்கோபி
த்து தன்னுடைய வில்லினிடமாகச் சிறிதுபாணங்களைத்தொடுத்து அர்
ச்சுனன்பேரில்பிரயோகம்பண்ணினாள். அர்ச்சுனனுங்கோபங்கொண்டு
தன்னுடையகாண்டீபத்தில் அநேகம் பாணங்களைப் பிரயோகித்து அ
ந்த பாணங்களையெல்லாம்நடுபாதியில்கண்டித்துத்தள்ளி பின்னையுமூன்
று திவ்யபாணங்களைத்தொடுத்துப் பிரயோகஞ்செய்து பிரலாவதியினு
டைய மார்பிலே தைக்கும்படி செய்தான்.

அதனால் அவளும் நொந்து மகாரோஷித்துடனே ஏழு பாணங்க
ளைத்தொடுத்துப்பிரயோகித்து அர்ச்சுனனுடைய மார்பில் தைக்கும்ப
டிசெய்து அட்டகாசம்பண்ணினாள். இந்த விதமாக வெகுநேரம் அர்

ச்சுனராஜனும் பிரலாவதியும் ஒருவர்க்கொருவர் தோர்வையடையாமல்
சிங்கமும் சிங்கமும் எதிர்த்ததுபோலெதிர்த்துப் போராடுகிறபோது
அர்ச்சுனராஜனும் ஒரு மோகனாஸ்திரத்தை எடுத்துத்தொடுக்க அதுக
ண்டு அவளும்ஒருதிவ்விய பாணத்தைத்தொடுத்துப் பிரயோகித்து அ
ர்ச்சுனனுடைய காண்டீபத்திற்றொடுத்த அந்த அஸ்திரத்தை இரண்டு
துண்டமாகக் கண்டித்துவிட்டாள். அதைக்கண்டு அர்ச்சுனராஜனும்
அவளுடைய சாமர்த்தியத்திற்கு மெச்சி, மகா ரோஷத்துடனே அநே
கமாயிரம் குரூரபாணங்களை எடுத்துத் தொடுக்கப்போகையில் ஆகாச
வாணியுங்கலகலீலென்று நகைத்து அர்ச்சுனனைப்பார்த்து ஓய்அர்
ச்சுனா வீராதிவீரா நீ இவளுடனே எத்தனைநாள் போராடினாலும் அவ
ள் பின்னிடுகிறவளல்ல நீயேன் விருதாவாகப் போராடுகின்றாய் இவள்
மெத்த வல்லமையுள்ளவள் மந்திரதந்திரங்களில்மிஞ்சினவள். ஆகையா
ல்இவளுடனே சிநேகம்பண்ணி இவளைக் கலியாணம்பண்ணிக்கொண்
டுஇவள்மனதைச் சந்தோஷப்படுத்திவைத்து உன்னுடையகுதிரையை
மெள்ளவிடுவித்துக்கொண்டு போவென்று சொல்ல, அந்த வார்த்தை
யைக்கேட்டு தனக்குத்தானே ஆலோசனைசெய்து இதுவுமெய்தானெ
ன்றுநினைத்து தன்கையிற் பிடித்திருந்த காண்டீபத்தை ரதத்தின்பே
ரில்வைத்துவிட்டு அந்த பிரலாவதியைப்பார்த்து ஓய் பெண்ணரசீ உ
னக்கும் நமக்கும் துவேஷம்வேண்டாம் இன்னேரம் என்னுடையவில்
வித்தையைத் தெரியவேண்டிப் போராடினேனல்லாமல் வேறல்லஆத
லால் இந்தமட்டுக்கும் சண்டையைநிறுத்திச் சமாதானமாய்உன்னுடை
ய மனோபீஷ்டப்படியே உன்னைக் கலியாணஞ்செய்து ரதிகேளியில்
உன்மனதைச் சந்தோஷப்படுத்தி வைக்கிறேனென்று சொல்ல அந்த
வார்த்தையைக்கேட்டு அவளும் சந்தோஷமடைந்து தன்னுடைய சே
னைகளையெல்லாம் அனுப்பிவைத்துப் பட்டணமுழுதும் நன்றாயலங்க
ரிக்கும்படி திட்டம்பண்ணினாள்.

அவர்களும் அந்த உத்தாரப்படியேபோய் சகல சம்பிரமத்துட
ன் பட்டணமுழுதும் குபேரனுடைய அளகாபுரியைப்போலநவரத்தி
னமயமாயலங்கரித்து பதினெட்டுவகை மேளவாத்தியங்களும் தாம்தா
மென்று முழங்கத்தக்கதாக சர்வாடம்பரத்துடனே பிரலாவதியினுடை
ய கலியாணபேரி யறைவித்தார்கள் அப்பொழுது பிரலாவதியும் மத
னமஞ்சரி யென்கிற சேனாதிபதியுடனும் சகல சேனைகளுடனும் மகா
வைபவத்துடனே அர்ச்சுனராசன் அம்சத்துவசராசன்முதலானராசகூ
ட்டங்களையும் சேனாசமுத்திரங்களையும் பட்டணத்திற்குள்ளே அழை
த்துக் கொண்டுபோய் அவர்களுக்குத் தகுந்த விடுதிகள் விடுவித்துப்
போசனமுதலான சர்வஉபசாரங்களும் நடப்பித்துவைத்தாள் பிற்பா
டு பிரலாவதியும் நல்லசுபமுகூர்த்த லக்கினத்தில் அர்ச்சுனராசனைக்கலி
யாணஞ்செய்துக்கொண்டு அன்றையதினம் சால சம்பிரமத்துடனே
சப்பிரமஞ்சத்தின்பேரில் அர்ச்சுனராசனோடு கூடி மகா லீலாவினோத

மாகச்சகல சவுக்கியங்களையும் அனுபவித்திருந்து பொழுதுவிடிந்த பி ன்பு பிரலாவதியும் சந்தோஷித்து அர்ச்சுனராசனுக்குவெகுமானமாக உன்னதமான ஆடையாபரணங்களும் நவரத்நங்களுங்கொடுத்து அஸ்வ மேதக்குதிரையும் சிறிது ஸ்திரீசனங்களையும் கூட்டியனுப்பி நாங்களு ம் தர்ம புத்திரர் செய்கிற யாகத்திற்கு வருகிறோமென்றுசொல்ல அ துகேட்டு அர்ச்சுனராசனும் பிரலாவதியைப்பார்த்து ஓய் பெண்ணே நீயும் உன்னுடைய சேனைகளும் யாகத்திற்குவந்து சேரவேண்டுமென் றுஉபசாரமாகச்சொல்லி அவளிடத்தில் செலவுவாங்கிக்கொண்டு அந்த ப் பெண்மலையாளத்தைவிட்டுப் புறப்பட்டு குதிரையைவிட்டு அந்தக் குதிரையின்பிறகே அர்ச்சுனமகாராசனனவன் ரதாரூடனாய் சகல ராச கூட்டங்களுடனும் ரதகசதுரக பதாதிகளாகிய சதுரங்கபலசேனைகளு டனும்நடந்தான்.

## பீஷ்ணன் யுத்தம்.

அப்பால் அந்தக்குதிரையானது வடக்குமுகமாகத் திரும்பி மே ற்குசமுத்திரக் கரையோரமாகநடந்து பகாசூரன் பிள்ளையான பீஷ் ணனுடைய பட்டணத்திற்குச் சமீபமாகவந்தது அதுகண்டு அங்கிருந் தராட்சதர்கள் அந்தக்குதிரையைப்பிடித்துக்கொண்டுபோய் தங்கள்ரா சனாகிய பீஷ்ணனிடத்தில் ஒப்புவித்தார்கள் அப்பொழுது அந்த பீஷ் ணனும்குதிரையினுடைய லலாடத்தில்விருதாவொளியாகக்கட்டியிருக் கின்ற பட்டத்தை வாசித்துப்பார்த்து சந்தோஷப்பட்டு இந்தக் குதிரை யின்பின்னே வருகிறவன் என்பகையாளியாகியவீமசேனனுடைய தம் பியல்லவா ஆகையினால் நானவனுடனேபோராடி செயிக்கிறேனென்று ஆக்ருஷித்துடனே அதிசீக்கிரமாக எழுந்திருந்து தன்னுடைய ரதகசது ரக பதாதிகளான இராட்சதசேனைகளோடும் இராட்சத ஸ்திரீகளோடும் சண்டைக்கு ஆயுத்தமாகப்புறப்பட்டு பட்டணத்திற்குவெளியேவந்து தண்டுவிட்டிறங்கினான்.

அவிடத்தில் அர்ச்சுனராசனும் இந்தச்சங்கதிகளெல்லாம் குதிரை யின்பிறகேவந்த சேவகர்களால்கேள்விப்பட்டு அம்சத்துவசன்-நீலத்து வசன்- அனுசாளுவன்- எவ்வர்ணசுவன் - விஷ்வகேது- பிரத்தியுமனன்- அனுருத்திரன்-சாத்தகி - கிருதவர்ம்மன்- மேகவர்ணன் முதலான ராஜ வர்க்கங்களுடனும் சகலசேனாசமுத்திரங்களுடனும் அதிவேகமாக வந் து ரணபேரிகையடிவித்து ராட்சதகூட்டங்களுடனே எதிர்த்துப்போ ராடி மகாரோஷித்துவேஷங்களுடனே நானாவிதபாணங்களினாலும் பல வகைஆயுதங்களினாலும் இரண்டுலட்சம் ராட்சதசேனைகளையுந் தும்சப் படுத்திச் சின்னபின்னப் படுத்தும்பொழுது அதுகண்டுராட்சதஸ்திரீக ளும் மிஞ்சி உலக்கைகளைக் கையிலெடுத்துக்கொண்டு ராஜகூட்டங்கள் பேரில்விழுந்து ரதங்களையெல்லாம் பொடிபொடியாக்கி ஆனைகளையெ ல்லாம் துண்டந்துண்டமாக்கிக் குதிரைகளையெல்லாம்சின்னபின்னமாக்

கிங்காலாள்களையெல்லாம் கால்வேறு கைவேறு தலைவேறாகக்கண்டித்து இந்தப்பிரகாரம் அர்ச்சுனராஜனுடைய நால்வகைச்சேனைகளையும் அதம்பண்ணி எங்கேபார்த்தாலும்ராட்சதஸ்திரீகள்மயமாய்ச் சுழன்றுதிரிந்து தும்சப்படுத்துகிறபோது அர்ச்சுனனுடையசேனைகளெல்லாரும்அவர்களுக்குமுன்னேநின்று நிர்வாகம்பண்ணமாட்டாமல் மனங்கலங்கிமகாபயமடைந்து நான்குதிக்கிலுஞ்சிதறி ஓடிப்போனார்கள் அதைக் கண்டு அர்ச்சுனராசன் முதலான தூராதுரைகளெல்லாரும் எதிர்த்துநின்று அவரவர்களுடையவில்லைக் குணத்தொனிபண்ணி அநேகமாயிரம் பாணங்களைப்பிரயோகஞ்செய்தார்கள்.

அதுகளையெல்லாம் எவ்வளவுஞ் சட்டைபண்ணாமல் அந்த ராக்ஷதஸ்திரீகளெல்லாரும் மிஞ்சிப் போராடுகின்றதை அர்ச்சுனராஜனுடைய ரதத்திற் கொடியாக விளங்குகின்ற அனுமாரானவர்கண்டு இது என்ன விபரீதமென்று சற்றுநேரம்ஆலோசனைசெய்து நாம்இந்தச்சமயத்தில் முனைந்துபோராடாவிட்டால் நம்முடையசேனைகள்நிற்கமாட்டாதென்று நினைத்து அதிசீக்கிரத்தில் ரதத்தைவிட்டுமகாகோபத்துடனே தொப்பென்று பூமியிற்குதித்து அஷ்டதிசைகளுஞ்செவிடுபடும்படி அட்டகாசம்பண்ணி தம்முடைய வாலைவளர்த்திக் கையிலேபிடித்துகொண்டு ராக்ஷத ஸ்திரீகளைப்பார்த்து ஓய் ராக்ஷதஸ்திரீகளே, நீங்கள் பதறுகிறீர்கள் உங்களுடைய வம்சத்திற்கு யமனான அனுமந்தனென்று என்னையறியுங்கோள். இதோ யமதண்டத்தைப்போலவும், வச்சிராயுதத்தைப்போலவும், காளகூடவிஷத்தைப்போலவும், வடவாமுகாக்கினியைப்போலவும், காட்டுத்தீயைப்போலவும், சூரியகிரணத்தைப்போலவும், பிரகாசிக்கின்றஎன்னுடைய வாலைப்பார்த்தீர்களோவென்றுாரம்பித்துவாலைவிசிறிஅடித்து ஒவ்வொரு அடிக்கு நூறுபேர்-இருநூறுபேர் விழுந்திறக்கும்படிசெய்தும், நசுநசுசாய்ப்பண்ணிக்கடித்தும்-இடித்தும் தள்ளியும்-கிள்ளியும்-உதைத்தும்-சதைத்தும்-கீறியும்-பீறியும்- முட்டியும்- தட்டியும்-இழித்தும்-கிழித்தும்- முறித்தும்- பறித்தும்- தூக்கியெறிந்தும்- மிதித்தும், இந்தவிதமாய் அனுமாரானவர் மகாஆக்ருஷத்துடனேசண்டப்பிரசண்டனாய் எதிர்த்துநின்றுவடவாமுகாக்கினியானது சமுத்திரசலத்தைக்கிரகித்ததுபோல ராக்ஷதஸ்திரீகளில் ஒருத்தியாகிலும் தப்பிப்பிழைத்து ஓடிப்போகவொட்டாமல்மடக்கிக்கொண்டு எல்லாரையும்பூமிக்கிரையாகச்செய்துவிட்டு எப்பொழுதும்போல அனுமாரானவர் அர்ச்சுனனுடைய கொடியினிடமாகப்போய் விளங்கியிருந்தார்.

அதுகண்டு அர்ச்சுனனுடையசேனைகளெல்லாம் மகாசந்தோஷகரமாய்அட்டகாசங்கள் சிங்கநாதங்கள் பண்ணிக்கொண்டுவந்து, ராக்ஷதசேனைகள்பேரிலெதிர்த்தார்கள், அப்பொழுது அம்சத்துவசன் முதலான பிரமுகாளரும் எதிர்த்து குரூரமாகிய அளவிறந்தபாணங்களைப் பிரயோகஞ்செய்து ராக்ஷதசேனைகளையெல்லாம் சின்னபின்னமாகக் கண்டித்துத்தள்ளி பூதப்பிரேதகணங்களுக்குத் திருப்தியாக விருந்துசெய்

வித்தார்கள், அதுகண்டு அந்தராக்ஷதர்களெல்லாம் பின்னிடாமல் முனை
ந்துமகாஉக்கிராகாரத்துடனே ஆனைகள்பேரிலும், புலிகள்பேரிலும்,
கரடிகள்பேரிலும, நாய்கள்பேரிலும்,காக்கைகள் பேரிலும்,பருந்துகள்
பேரிலும்,மற்றுமுண்டான அநேகசீவஜெந்துக்கள்பேரிலும் ஏறிக்கொ
ண்டுஎமகிங்கிலியர்களைப்போலகத்தி- சூலம்-கதை- சக்கரம்-பரசுபட்ட
யம்-அங்குசம்-பிண்டிபால முதலான முப்பத்திரண்டு ஆயுதங்களையும்
அர்ச்சுனனுடைய சேனைகள்பேரி றிவ்வுறிவ்வுமென்று பிரயோகம்பண்
ணிவருத்தினார்கள், அதுகண்டு அர்ச்சுனராஜனுந் தன்னுடையகாண்டீ
பத்தைக்குணத்தொனிபண்ணி அதிதீக்ஷண்யமான அஸ்திரங்களைப்பிர
யோகஞ்செய்து ராக்ஷதர்கள்விட்ட அஸ்திரங்களையெல்லாம்பஸ்பீகரப்
படுத்தி அவர்களையுஞ்சின்னபின்னமாகக் கண்டித்து கால்மாடு தலைமா
டாய்கால்வேறு- கைவேறு- உடல்வேறு-எலும்புவேறு- சதைவேறாகப்
பண்ணி ஒருவனாயாகிலும் தப்பிப்போகவொட்டாமல் தும்சப்படுத்தி
விட்டுகியாவென்று சிங்கநாதம்பண்ணினான்.

அதுகண்டுபீஷ்ணனுந் தன்னுடைய ரதத்தை அர்ச்சுனராஜன்
பேரில்துரத்தி அநேகமாயிரங்குரூரபாணங்களைப் பிரயோகஞ்செய்து
அர்ச்சுனனுடையமார்பையும்பத்தலாகக்கிழித்து சாரதி-குதிரைகளையும்
நோகப்பண்ணி-சொடிதாகிய அனுமானையும்பத்தலாக்கி - அத்துடன்
போகாமல்அம்சத்துவஜனுடைய மார்பையுங்கிழித்து -நீலத்துவஜனையு
ம்பிரமிக்கப்பண்ணி- எவ்வனாசுவனையும் கால்கை ஆடவொட்டாமற்
செய்து அனுசால்வனையுஞ் சல்லடைக்கண்களாகத்துளைத்து விஷ்வகே
துவையும்ரத்தமயமாக்கிபிரத்தியுமனனுடைய தலையையும்உடைத்துசா
த்தகியினுடையபுஜங்களையுங்கிழித்துகிருதவர்மனையும் பாதாதிகேசப
ரியந்தம் தொளைத்துவிட்டு மேகவர்ணனையும் குபீல்குபீலென்றுரத்த
ங்கக்கப்பண்ணி இந்தவிதமாகபீஷ்ணனானவன் அதிகரோஷித்துவேஷி
த்துடனே அர்ச்சுனன்முதலான சேனைகளையுஞ் சிக்குப்படுத்துகையில்
அர்ச்சுனராஜனும்ஆக்கிரவியாக்கிரம நிக்குரோதனைக்கோபங்கொண்டு
மஹாஉக்கிராகாரனாய் தன்னுடையகாண்டீபத்தினிடமாக அநேகபாண
ங்களைத்தொடுத்து பீஷ்ணனுடைய சாரதிகுதிரைகளையுங்கொன்றுரதத்
தையுஞ்சக்கைசக்கையாகப் பேர்த்தெறிந்து அந்தராக்ஷதனையுஞ் சல்ல
டைக்கண்களாகத்துளைத்துவிட்டான். அதற்கும்அவன்எவ்வளவும்பயப்
படாமல்ஆகாயத்திலெழும்பி மேகமண்டலத்தில் மறைந்து சற்றுநேர
த்திற்குள்ளே அவனுடைய மாய்கையினாலே முப்பத்துமுக்கோடிதே
வர்களையும் உண்டாக்கிஅக்கினிபகவான்முதலான திக்குப்பாலகர்களையும்
உண்டாக்கி அந்தபீஷ்ணனுந்தேவேந்திரனைப்போல வெள்ளையானையின்
பேரிலேறிக்கொண்டு சகலதேவர்களுந் தன்னைச்சேவித்துவரத்தக்கதாக
வச்ராயுதத்தைக் கையிலேபிடித்துக்கொண்டுஅர்ச்சுனராஜன்முதலான
பிரமுகாளுக்குமுன்பாகவந்துநின்றுஅவர்களைப்பார்த்து ஓய்மானிடவர்
களே நாங்கள்தேவர்கள் நாங்களும் ராக்ஷதர்களும் தாயாதியானபடியி

னால் எங்களுக்குள் ஒருவர்க்கொருவர் போராட்டமிருந்தபோதிலும்நாங்கள் அன்னியருக்கு மாத்திரம் இடங்கொடுக்கிறதில்லை நீங்கள் எங்களுடைய தாயாதிகளைக் கொன்றுவிட்டபடியினால் நாங்கள் அவர்களுக்குப் படைத்துணையாயிருந்து உங்களைக்கண்டிக்கிறதற்குவந்தோம்இதோ சற்றுநேரத்தில் பாருங்களென்று சொல்லி அந்தமாயாதேவர்கள் சகலமானசஸ்த்திர அஸ்த்திரங்களையுந்தொடுத்துப் பிரயோகஞ்செய்தார்கள்.

அதுகண்டு அர்ச்சுனராஜனுந்திடுக்கிட்டு சற்றுநேரம்ஆலோசனைசெய்துஇதுராக்ஷதமாயையல்லாமல் உண்மையானதேவர்களல்லவென்றுநிச்சயித்துக்கொண்டு தன்னுடையகாண்டீபத்தைவளைத்து ஒருகந்தர்வாஸ்த்திரத்தைஎடுத்துத்தொடுத்துப்பிரயோகம்பண்ணினான் அந்தஅஸ்த்திரமானதுபுறப்பட்டு கிறுகிறென்று சுழன்றுக்கொண்டுவந்துமுப்பத்துமுக்கோடி மாயாதேவர்களையும் திக்குப்பாலகர்களையும்தேவேந்திரனையுந் துறத்தி யடித்து அந்த மாயா விலாசங்களை யெல்லாம் ஒருக்ஷணநேரத்தில்அதம்பண்ணிவிட்டது அதுகண்டுஉண்மையானதேவேந்திராதிதேவர்களும் மனங்கலங்கி தம்மைப்போலவடிவெடுத்துப்போனமாயாதேவர்களைக்கண்டிக்கஅஸ்த்திரமானது தங்கள்பேரிலும்எதிர்த்துஎங்கேவருகின்றதோவென்று மஹாபயங்கரமடைந்துமேகமண்டலத்தில்மறைந்துபார்த்துக்கொண்டிருந்தார்கள். அந்தச்சமயத்தில்சூரியபகவானும்நமதுசுற்றத்தார்களெல்லாரும் பயந்து ஒளித்துக்கொண்டார்களே இனிநாம்மாத்திரமிருந்தால்அந்தஅஸ்த்திரமானது நம்முடையபேரிலுமெதிர்த்து எங்கேவருகின்றதோவென்றுபயந்து ஒளித்துக்கொண்டதுபோல மேற்குத்திசையில்அஸ்த்தமயமாகினர் அப்பொழுதுசெய்த நன்றியறியாத நிர்மூடர்களாகிய அஞ்ஞானிகள் இருதயம்போல்பூதயிருளானது உலகமுழுதும் மூடிக்கொண்டது அந்த இருட்டுவேளையில் பீஷ்ணனும் மஹாஆக்ருஷித்துடன்அந்தகாரசவஜந்தொடுத்துக்கொண்டுஅந்தரவீதியில்நின்று தன்னுடையமாயையினாலே- புலிகள்- கரடிகள்- ஓணான்- உடும்புகள்- முதலான மிருகஜாதிகளையுஞ் சிருஷ்டித்துஅர்ச்சுனராஜனுடைய சேனைகள்பேரில் ஏவினான் அதுகளையெல்லாம் அர்ச்சுனராஜனுங்கண்டித்துவிட்டுபீஷ்ணனைக்காணாமல்பிரமித்து தன்னுடையகாண்டீபத்தினிடமாக நாராயணாஸ்த்திரத்தைத் தொடுக்கவேண்டுமென்றுநினைத்தமாத்திரத்தில் மேகவர்ணனும்அதுதெரிந்து அர்ச்சுனராஜனைப்பார்த்து ஐயா,கிரீடிதேவரீர்இந்த துன்மார்க்கனுக்காக நாராயணாஸ்த்திரத்தை எடுத்துத்தொடுக்கவேண்டாம்சின்னமுளையைக்கிள்ளிப்போடுகிறதற்கு பெரியகோடாலிவேண்டுமோ ஆதலால் எனக்குச்செலவுகொடுத்தனுப்பும் நான்போய் அந்ததுன்மார்க்கனைக்கொன்றுவருகிறேனென்றுசொல்லஅதுகேட்டுஅர்ச்சுனராஜனும் அப்படியேநல்லதென்றுசெலவுகொடுத்தனுப்பஅந்தமேகவர்ணனும்திருகராஸ்த்திரத்தைத்தொடுத்து கோதண்டத்தைக்கையிலெடுத்துக்கொண்டு ஆகாசமார்க்கத்

திலெழும்பிபீஷ்ணன்தொடுத்துக்கொண்டிருக்கிற அந்தகாரகவசத்தை
ப்போக்கடித்து அவனுடனே எதிர்த்து இரண்டுபேரும் போராடுகிற
போதுபீஷ்ணனுடையதெப்பையினால்நொந்து மேகவர்ணனும்பூமியி
ல்விழுந்துமூர்ச்சையடைந்து சற்றுநேரத்தில்தெளிந்து எழுந்திருந்து
ஆகாசத்திலெழும்பி மறுபடியும்அந்தபீஷ்ணனுடனேஎதிர்த்து இரண்
டுதிறவரும் கையினாற்போராடி அங்கேயிருந்து பூமியில்வந்துஒருவர்
க்கொருவர்சமமாகக்-குத்தியும்-வெட்டியும்-சலிப்படைந்து இரண்டுபே
ரும்- மூர்ச்சையாகிவிழுந்தார்கள்.

அதில் பீஷ்ணனும்சற்றுநேரத்தில் மூர்ச்சைதெளிந்தெழுந்திருந்
துரதாரூடனாய்அர்ச்சுனனிடத்திற்குப்போய் அர்ச்சுனனைப்பார்த்துஓய்
அர்ச்சுனா- உன்தமையனான வீமசேனனானவன் வயிற்றுச்சோற்றுக்காக
என்தகப்பனைக்கொன்றானல்லவோநான்இப்பொழுதுஉன்னைக்கொன்று
அந்தப்பழியைத்தீர்த்துக்கொள்ளுகிறேன்நீசாக்கிரதையாய்நின்றுபோ
ராடென்றுசொல்ல அந்தவார்த்தைகளைக்கேட்டு அர்ச்சுனராஜனுங்கோ
பித்து அந்தராட்சதனைப்பார்த்துஓய்பீஷ்ணா உன்தகப்பனை என்தமை
யன்கொன்றானல்லவோஅந்தமுறைமைதப்பாமல் உன்னைநான் கொல்ல
வேண்டும்ஆதலால்நீஎச்சரிக்கையாயிருந்து போராடென்றுசொல்ல அ
ந்தச்சமயத்தில்ஒருமாயாசந்நியாசிவந்துஅர்ச்சுனனைப்பார்த்துஆசிர்வா
தம்பண்ணினான் அதுகண்டுஅர்ச்சுனராஜனும் யதார்த்த சந்நியாசியெ
ன்றுநினைத்து இரண்டுகைகளையுங்கூப்பி தெண்டன்சுவாமியென்று நம
ஸ்க்காரஞ்செய்தான் அதுகண்டுஅந்தமாயாசந்நியாசியும்அர்ச்சுனனைப்
பார்த்துஓய்அர்ச்சுனா நீ யென்னைதெண்டம்போட்டாய்நீபயித்தியக்கா
ரவேலைசெய்துவிட்டாய் அஃதென்னவென்றுகேட்பாயாகில்நீகுதிரை
யின்பிறகேவந்துவிட்டாயல்லவோ உடனேஸ்ரீகிருஷ்ணமூர்த்தியும் சுத
ர்ம்மனும் சுதர்த்தனும் சண்டைபண்ணினயிடத்திற்குவந்து விட்டாரல்
லவோ அந்தச்சமயமறிந்து துரியோதனாதிகளென்கிற ராட்சதர்கள் அ
ஸ்த்தினாபுரத்திற்குப்போய் தர்மராஜாவையும் துரோபதையையும் எடு
த்துக்கொண்டு எங்கேயோபோய்விட்டார்கள்.

அதுசேதியை ஸ்ரீகிருஷ்ணதேவன்கேள்விப்பட்டுவந்துஅவர்களை
த்தேடிக்கொண்டுதிரிகிறார் அப்படியிருக்கும்போதுஎன்னயாகம்என்
னகுதிரைஎன்னசண்டைமேலும்இந்தராட்சதன்மகாதுன்மார்க்கன்இவ
னுடனேஎன்னபோராட்டம்இந்தச்சண்டையைவிட்டு உன்தமையனையு
ந்துரோபதையையுந் தேடப்போவென்றுசொல்லஅர்ச்சுனராஜனும்அ
ந்தமாயாசந்நியாசியினுடையவார்த்தையைக்கேட்டுக் கலீலென்றுநகை
த்துஇதுராட்சதமாயையென்று நினைத்து அந்தமாயாசந்நியாசியைஇர
ண்டுதுண்டமாகக்கண்டித்துவிட்டு அப்பால் அந்தபீஷ்ணனுடனேஎதி
ர்த்துச்சற்றுநேரம்போராடி கடைசியில் அவனுடையசாரதியையுங் கு
திரைகளையுங்கண்டித்து ரதத்தையும்பொடியாக்கிப்பின்பு ஒரு திவ்விய
பாணத்தினால் பீஷ்ணனுடைய சிரசையுங் கண்டித்துத்தள்ளி பிற்பாடு

தேவதத்தத்தைஎடுத்துவாயினிடமாகவைத்துப்பம்பம்மென்று அஷ்ட
திசைகளுஞ் செவிடுபடும்படியூதினான் அதுகண்டு மற்றராஜாக்க ளனை
வரும் அவர்களுடைய சங்கங்களையெடுத்து ஊதினார்கள் அப்பொழு
து அங்கேதப்பியிருந்த ராட்சதசேனைகளெல்லாரும்பயந்து ஓடிப்போ
ய்விட்டார்கள் அதன்பிறகு அர்ச்சுனராசனும் அம்சத்துவசன்முதலான
பிரமுகாளுடனேயும், சதுரங்கபல சேனைகளுடனேயும்,அந்தப்பட்ட
ணத்தினுட் பிரவேசித்து ராட்சதர்களுடைய அரண்மனைகளெல்லாம்
சேனைகளுக்குக்கொள்ளைகொடுத்து பீஷ்ணனுடைய அரண்மனையிலிரு
ந்த அபரிமிதமான திரவியங்களையெல்லாம்எடுப்பித்துப்பொதிபொதி
யாகக்கட்டிஎழுநூறு ஆனைகள்பேரிலும், பதினாயிரங் குதிரைகள்பேரி
லும்போட்டு காலாள்கள்பேரிலும் எடுப்பித்து அஸ்த்தினாபுரத்திற்கு
அனுப்பிவைத்து பிற்பாடு அஸ்வமேதக்குதிரையைவிட்டு அதன்பிற
கே அர்ச்சுனராஜனானவன் ரதாரூடனாய் சகலசேனா சமுத்திரங்களும்
புடைசூழ்ந்து வரத்தக்கதாக நடக்கும்போது அந்தக் குதிரையானது
பாண்டியநாட்டுக்குச் சமீபத்திலிருக்கின்ற மணிபுரமென்னும் பட்ட
ணத்துக்கோட்டைவாசற் படியோரத்தில் பச்சென்றபுல்லைக்கண்டு மே
ய்த்துக்கொண்டிருந்தது. கேட்டீரோ ஜெனமேஜெய மஹாராஜாவே
அந்த மணிபுரமானது எப்படிப்பட்டதென்றால் இந்திரநீலரத்தினத்தி
னால்சல்லுகளடுக்கி தங்கத்தினாற்சேறுசெய்து அரண்மனைகள்-ஆஸ்த்தா
னங்கள்-மெத்தைகள்-மேடைகள்கட்டி விளங்கப்பட்டது. குடிகள்வசிக்
கின்றவீடுகளும்,நவரத்தினமயமாகவும்,சுவர்ணமயமாகவும்,சகலவேடிக்
கைகளுடனேயும் விளங்கப்பட்டது. அல்லாமலும் கோபுரங்களுடைய
உயர்ச்சியைக்கண்டுசூரியபகவானும்பக்கமாகச்சாய்ந்துபோவார் அவ்வ
கைப்பட்ட விச்சித்திரங்களுடனேவிளங்குகின்ற மணிபுரத்தை அர்ச்சு
னராஜன்கண்டு அம்சத்துவசராஜனைப்பார்த்து ஓய்ராஜேந்திரா இத்தனை
சம்பிரமத்துடனே பிரகாசிக்கின்ற இந்தப்பட்டணத்திற்கு அரசன் யா
வன்-அவன்பெயரென்ன அவன்எவ்வளவுசாமர்த்தியமுள்ளவன் அதுகள்
உமக்குத்தெரிந்திருக்குமல்லவோ சற்றேசொல்லுமென்றுகேட்க அது
கேட்டு அம்சத்துவசனும் அர்ச்சுனராஜனைப்பார்த்து ஓய்கிரீட்டி, இந்த
ப்பட்டணம் மணிபுரமென்னும் பெயரையுடையது இதற்கு அரசன்
வீராதிவீரனான பப்பிரவாகன் அவன்மகாசவுரிய பராக்கிரமமுள்ளவன்
அவன் உம்முடையகுமாரன்தான் அஃதெப்படியென்றால்,

நீர் தீர்த்தயாத்திரைவந்தபொழுது பாண்டியராஜன் குமாரத்தியா
ன சித்திராங்கதையினிடத்தில் உமக்குப்பிறந்தவன் மகாவீர வுத்தண்ட
ன் ஆகையினால் நம்முடைய குதிரையானது அவனுடைய பட்டணத்
திற்குட்போகாமற் போனாலாச்சுது அப்படியில்லாமற்போய் நமது
குதிரை அவன்கையி லகப்பட்டுக்கொண்டால் அப்புறம் ஸ்ரீகயிலாசபதி
யாகிய பரமசிவன்வந்தபோதிலும் குதிரையைவிடுவிக்கக்கூடாதென்று
சொல்லிக்கொண்டு நடக்கையில் அதற்குள்ளே அவிடத்தில் பப்பிரவா

கன் சேனாதிபதியான சுமுத்தியென்கிறவன் சாரிமார்க்கமாய் கோட்டைவாசல் ஓரமாய் வருகிறபோது அஸ்வமேதக் குதிரையைக்கண்டு ஆச்சரியப்பட்டு அதைப்பிடித்துக்கொண்டு கோட்டைக்குள்ளே கொண்டுபோய் நவரத்தின கசிதமான மண்டபத்தில் சகலராஜ கூட்டங்களுடனேகொலுவாயிருக்கின்ற பப்பிரவாகனைக்கண்டுதெண்டனிட்டு,ஜயா ராஜநந்தனா இந்தக் குதிரையானது நமது கோட்டைவாசலின் ஓரத்தில் வந்து புல்லைமேய்ந்துக்கொண்டிருந்தது. அதைக்கண்டு நான் பிடித்து வந்தேனென்றுசொன்னான். அதுகேட்டு பப்பிரவாகனும் சிம்மாசனத்தைவிட்டு எழுந்திருந்துவந்து குதிரையினுடைய லலாடத்திற் கட்டியிருக்கின்ற விருதாவோலையை வாசித்துப்பார்த்து தலையை யசைத்து புன்சிரிப்பாகச்சிரித்து சேனாதிபதியைப்பார்த்துஓய்சுமுத்தீ,இதுயாருடைய குதிரையென்றிருக்கிறாய் என்னுடைய பெரிய தகப்பனாராகிய தர்மபுத்திரரானவர் யாகஞ்செய்யநினைத்து அவர்விட்டகுதிரையாக்கும் இந்தக்குதிரையின்பிறகே அகண்டிதவீர பராக்கிரமசாலியான என் தகப்பனாராகிய அர்ச்சுனமஹாராஜன் வருகிறார். நானும் அவரைப்பார்க்க வேண்டுமென்று நெடுநாளாய்க்கோரிக்கொண்டிருந்தேன் அந்தக்கோரிக்கை இன்றையத்தினம் ஈடேறியதென்று சந்தோஷகரமாய்ச் சொல்லிக்கொண்டிருக்க, அதிலே மேற்குத்திசையில் சூரியபகவான் அஸ்தமானமாகினார்.

அப்பொழுது பப்பிரவாகனும் தன்னுடைய சேனாதிபதியைப் பார்த்து, ஓய் சுமுத்தீ, இப்பொழுது அஸ்த்தமானமாகிவிட்டதே ஆதலால் ராத்திரிப்பொழுதுக்கு இந்தக்குதிரையைப் பத்திரமாக நம்முடைய குதிரைலாயத்தில் கட்டிவை- பொழுதுவிடிந்தபின் என் தகப்பனிடத்தில் குதிரையைக் காணிக்கையாகக் கொண்டுபோய்வைத்து அவரைச் சந்தோஷப்படுத்தி அழைத்துக்கொண்டுவந்து இந்த மணிபுரத்தை அவருக்கே பட்டங்கட்டிவைத்து நான் அவரைச் சேவித்துக்கொண்டிருக்கவேண்டும் ஆதலால், நீ அதிஜாக்கிரதையாய்க் காணிக்கையாகக்கொண்டுபோகிறதற்கு அநேகமாயிரந் தங்கத்தட்டுகளில் பட்டுபட்டாவளிகளும், நவரத்தினாபரணங்களும், மாணிக்கப்பதக்கங்களும், முத்துத்தாழ்வடங்களும், கந்தபுஷ்ப பரிமளமாலைகளும், கர்ப்பூரதாம்பூலமும், நல்ல ருசிகரமான பழவகைகளும், தேங்காய்களும், பால், தயிர், நெய்களும், பணியாரவகைகளும், இன்னமுண்டான உசிதவஸ்துக்களும்,முஸ்தீதுபண்ணி இதுவல்லாமல் பதினெட்டுவித மேளவாத்தியங்களையும், நாட்டியப்பெண்களையும், ரதகஜதுரக பதாதிகளுமாகிய நால்வகைச்சேனைகளையும்,ராத்திரிக்குத்தானே எச்சரிக்கையாய் ஆயுத்தப்படுத்திவையென்று உத்தாரம்பண்ணியனுப்பினான்.

அதுகேட்டுசுமுத்தியும் அப்படியேநல்லதென்றுபோய் சகலவஸ்துக்களையும்,சேனைகளையும்,முஸ்த்தீதுபண்ணிவைத்தான். பின்புமறுநாட்காலமே பப்பிரவாகனும் எழுந்திருந்துநித்தியகருமங்களைமுடித்துக்

கொண்டுசர்வாலங்கிரதனாய் சகலசேனைகளுடனும், சகலவஸ்த்துவாகனா
திகளுடனும், அஸ்வமேதக் குதிரையுடனும், முஸ்தீதாகப்புறப்பட்டு
மணிபுரத்தைவிட்டு வெளியேவந்து பதினெட்டுவகைமேளவாத்தியங்
களும், தாம்தாமென்றுமுழங்கத்தக்கதாகச்சர்வாடம்பரத்துடனேவந்து
இதற்குமுன்னமே குதிரை பிடிபட்டுப் போச்சுதென்று சேதிகேட்டு,
மகா கோபங்கொண்டு யுத்தத்திற்கு ஆயுத்தமாயிருக்கின்ற அர்ச்சுன
மஹாராஜனைக்கண்டு, அவருக்குத் தான்கொண்டுவந்தகுதிரைமுதலான
சகலவஸ்த்துக்களையுங்காணிக்கையாகவைத்து, சாஷ்டாங்கமாகவிழுந்து
தெண்டனிட்டு ஓய் ஐயா, சவுரியபராக்கிரமமான தேவரீருடைய குதி
ரையென்றறியாமற் பிடித்துக்கொண்டு பின்பு விருதாவொளியை வாசி
த்துப்பார்த்துத்தெரியவந்ததினால் உம்முடைய பாதத்திற்கொண்டுவந்
துஒப்புவித்தேன், இந்தப்பிழையைத் தேவரீர் மன்னித்தருளவேண்டு
ம், அல்லாமலும், பிள்ளையானவன், தகப்பனுக்கு எத்தனைகுறைசெய்
தாலும்பொறுத்தருளவேண்டுவதல்லாமல் கோபிக்கக்கூடாதல்லவா, அ
தனால் தேவரீர் புத்திரனாகிய, என்பேரில்குறைவுவையாமல் கிருபாதிரு
ஷ்டிவைத்து நான்கொண்டுவந்த வஸ்த்துக்களையுங்கைக்கொண்டு என்
னையும் என்னுடைய சீர்மைபூமிகளையும் உம்முடைய ஆதீனப்படுத்தி
க்கொண்டு என்பேரில்துவேஷமில்லாமல் ரக்ஷித்தருளவேண்டுமென்று
அநேகவிதமாகத் தோத்திரம்பண்ணுகிறபோது, அம்சத்துவசமஹா
ராஜனும் அர்ச்சுனனைப்பார்த்து ஓய் அர்ச்சுனா, புத்திரரின்பேரில் து
வேஷம்வேண்டாம் தயவுசெய்து ரக்ஷியுமென்றுவெகுபிரியவசனமாக
ச்சொல்லவும், பின்னையும்விஷ்வகேது, பிரத்தியுமனன், அனுசாலுவன்,
எவ்வர்ணசுவன், நீலத்துவசன்முதலானராஜாக்களும், அர்ச்சுனனைப்பா
ர்த்துப்பப்பிரவாகன்பேரில் கோபம்வேண்டாம், சிநேகமாகின்றதேநல்ல
தென்றுஅநேகவிதமாகச்சொல்லவும், அவன்சொல்லையுங்கேளாமல்தே
வர்களாலும் விதிமுறையைத்தள்ளக்கூடாதபடியினால் அர்ச்சுனராஜனு
ம் ஆக்ருஷித்துடனேபப்பிரவாகனைக் காலினால் உதைத்துத் தள்ளிவிட்
டு அவனைப்பார்த்து அடா, பப்பிரவாகா, நீ ஒரு க்ஷத்திரியனோ குதி
ரையைப்பதட்டமாகப்பிடித்துக்கொண்டு பின்பு அநேகஞ்சேனைகள்
வந்திருக்கிறதைக்கண்டு பயந்து சரணமடையவந்தாயோ, நீயொருசே
வகனோ, நீ எனக்குப்பிறந்தவனென்று சொன்னாயே, நீ எனக்குப் பிற
ந்தவனல்ல, உன்னுடைய தாயார் உன்னை வைசியனுக்குப் பெற்றிருக்க
வேண்டும், அப்படியில்லாமல் நீ எனக்குப் பிறந்திருந்தால் உனக்குச்
சவுரியபரார்க்கிரமமுண்டாயிருக்காதோவென்றுசொன்னான்.

அந்தவசனங்களையெல்லாம் பப்பிரவாகன்கேட்டு மகா கோபதீ
ப்தனாய்அர்ச்சுனராஜனைப்பார்த்து ஐயா குந்திநந்தனா, தேவரீர் எத்த
னையானாலும் இப்படிப்பட்ட வசனங்களைச் சொல்லலாகுமோ, சற்றாகி
லும் எண்ணிப்பாராமல் என்தாயாரையுந் தூஷிக்கலாகுமோ ஆனால்
நான் வைசியனுக்குப்பிறந்ததும், க்ஷத்திரியனுக்குப்பிறந்ததும், இன்

னுஞ்சற்றுநேரத்தில் தெரியவருகின்றது, ஆதலால்உம்முடையசேனைக
ளெல்லாம் சண்டைக்குமுஸ்தீதுபண்ணிக்கொள்ளுமென்றுசொல்லி
அஸ்வமேதக்குதிரையையும்-காணிக்கைகப்பங்களையும்-மணிப்புரத்திற்
குஅனுப்பிவிட்டுதன்னுடையசேனாதிபதியானசுமுத்தியையழைத்துஓ
ய்சுமுத்தீ, நீபோய்நம்முடையசேனைகளையெல்லாம்யுத்தத்திற்கு ஆயுத்
தப்படுத்திவையென்று கட்டளையிட்டனுப்பிவிட்டு பின்பு பப்பிரவாக
னுந் தேரின்பேரிலேறிக்கொண்டுமதுராபுரிக்குப்போய் தனதுஇஷ்ட
தேவதையான சொக்கநாதருடைய கோயிலுட்புகுந்து அந்தசுவாமிக்
குப் பிரதக்ஷண நமஸ்க்காரம்பண்ணிபூஜைசெய்துஇரண்டுகையையுஞ்
சிரசின்பேரில் அஞ்சலியாகவைத்துக்கொண்டு அந்தசொக்கலிங்கத்தை
ப்பார்த்து அநேகவிதமாகத் தோத்திரம்பண்ணி அப்பால்உலகமாதா
வான மீனாக்ஷியம்மன்கோயிலுக்குப்போய்பிரதக்ஷணநமஸ்க்காரம்பண்
ணி, பூசைநைவேத்தியங்கள் செய்துமுடித்துகைகளைக்கட்டிக்கொண்டு
அந்தமகாதேவியைப்பார்த்து ஓய்அம்மா,மகாதேவீ-சச்சிதாநந்தீ-சங்க
ரீ-சாம்பவீ-சர்வசிவதயாபரீ-சர்வலோகரட்சகீ-மயேஸ்வரீ-கங்காதரீ-நீலக
ண்டாயீ-நிர்மலீ-சதுர்வேதவந்தியநாயகீ-மஹாபரமேஸ்வரீ-சாலோகசா
மீப சாரூப சாயுச்சியகாரணீ-நாரணீ-மாதங்கீ-வராகீ- பர்வதராஜபுத்ரீ-ப
க்தவற்சலீ-பரமதயாளீ-திரிசூலி-ஸ்ரீஅகிலாண்டகோடிபிரம்மாண்டநாய
கீதுஷ்டநிக்கிரகசிஷ்டபரிபாலனீஅடியேனைரக்ஷியும்-ரக்ஷியும்அடியேனு
க்குவந்து சம்பவித்த ஆபத்தைத்தீரும்அம்மாவென்று இப்படிஅநேக
விதமாகத் தோத்திரஞ்செய்தான். அதுகண்டு அந்த மகாதேவியும்மன
மகிழ்ந்து பப்பிரவாகனைவாரும்பிள்ளாயென்று சமீபத்திலழைத்து தன்
னுடைய விபூதியை நெற்றியிலேதரித்து சகலபீடைகளும்பரிகாரமாக
வேண்டுமென்று ஆசீர்வாதம்பண்ணி,பின்னையும்பப்பிரவாகனைப்பார்த்
து அப்பா, முன்னுதாகப்புறப்பட்டு சண்டைக்குப்போவாயாகில் உன
க்கு முன்னமே நானும் உனக்குத்தெரியாமல் வந்திருந்து அர்ச்சுனனு
டைய சேனைகளையெல்லாங்கண்டிக்கிறேன் பயப்படாதேயென்று ஆத
ரித்து, அப்பொழுதே அந்தமஹாதேவியும், வெள்ளைக்குதிரையின்பே
ரிலேறிக்கொண்டுமுப்பத்திரண்டுஆயுதங்களையுந்தாங்கிக்கொண்டுபினாக
பாணியாய்பூதவேதாளகணங்களுடனேபுறப்பட்டுபப்பிரவாகனுடனே
நடந்துஅவன்கண்ணுக்குத்தெரியாமல்மாய்கையாய்மறைந்துபோனாள்.

## பப்பிரவாகன் யுத்தம்.

பப்பிரவாகனும்மனோவுச்சாகசந்தோஷத்துடனே நவரத்தினமய
மான தேரிலேறிக்கொண்டு தன்னுடைய சேனைகளின் சமீபத்தில்வந்து
தனதுசேனாதிபதியாகிய சுமுத்தியைப்பார்த்து நீங்கள்இப்பொழுது பி
ன்னிடாமல் யுத்தம்பண்ணுங்களென்று உத்திரவுபண்ணினான். அது
கேட்டு சுமுத்தியும், அப்படியே நல்லதென்று ஏழுகோடி ரதத்தையும்

ஒரு அற்புதம்யானைகளையும், இரண்டு அற்புதங் குதிரைகளையும்; மூன்று அற்புதங்காலாள்களையும், காலசக்கிர வியூகம்போல அணியணியாக வகுத்து ரணபேரிகை வெண்கலப்பேரிகைமுதலானதுகளை அண்டகடாகங்களுமதிரும்படி யறைவித்தான் பப்பிரவாகனுந் தன்னுடைய சேனைகளுக்கு முன்பாகயுத்தசன்னத்தனாய் கனகரத்னமயமான தேரின்மேலேறிக்கொண்டு மஹா உக்கிராகாரத்துடனே நின்றான்.

அப்பொழுது அர்ச்சுனனும் அதுதெரிந்து தன்னுடைய சேனைகளையெல்லாம் ஏவினமாத்திரத்தில் அர்ச்சுனனுடைய சேனைகளும்பப்பிரவாகனுடையசேனைகளும் எதிர்த்துஒருவர்க்கொருவர் மஹாரோஷத்து வேஷங்களுடனே போராடுகிறபோது ரதக்காரர்களுடனே ரதக்காரர்களெதிர்த்துஅவரவர்களுடையவில்லைவளைத்து அநேகமாயிரந்திவ்யபாணங்களைப்பிரயோகஞ்செய்து போராடினார்கள் ஆனைக்காரர்களுடனே ஆனைக்காரர்களெதிர்த்துஒருவர்க்கொருவர் ஆக்கிரோஷித்துடனே சஸ்த்திர அஸ்த்திரங்களினாற்போராடினார்கள் குதிரைக்காரர்களுடனே குதிரைக்காரர்களெதிர்த்து கத்திகளினால் ஒருவர்க்கொருவர் வெட்டிக்கொண்டுபோராடினார்கள்- காலாள்களுடனே-காலாள்களெதிர்த்து, கத்தி-சூலம், கதை-தோமரம்-பிண்டிபாலம் முதலான முப்பத்திரண்டு ஆயுதங்களினாலும் போராடினார்கள்-அப்படியேபோராடுகிறபோது இரண்டுசேனைகளிலும் அநேகஞ் சேனைகள் மடிந்துவிட்டது எங்கேபார்த்தாலும் பிணமலைகளாகக்குவிந்து ரத்தவெள்ளம் ஆறாகப் பெருகியோடியது. அதுகண்டு பப்பிரவாகனுந்தன்னுடையரதத்தைத்தூண்டி அர்ச்சுனனுடையசேனைகளையெல்லாங் கண்டதுண்டங்களாக்கும்பொழுது அனுசாலுவன்கண்டு கோபதீப்தனாய் எரிந்துவிழுந்து தன்னுடைய ரதத்தைத்தூண்டி வில்லைக் குணத்தொனிபண்ணி அநேகமாயிரம் பாணங்களைப் பிரயோகஞ்செய்துபப்பிரவாகனுடைய மார்பிலே தைக்கும்படி செய்தான். அந்தவருத்தத்தைப் பப்பிரவாகன் எவ்வளவுஞ்சட்டைபண்ணாமல் ஒரு திவ்விய பாணத்தை எடுத்துப் பிரயோகஞ்செய்து அனுசாலுவனை மோகப்பண்ணி, மேலும் அநேகமாயிரம் பாணங்களை எடுத்து வில்லினிடமாகச்சந்தித்து எய்கிறபோது அந்தபாணங்கள் வந்து சுருக்குசுருக்குமென்றுதைக்க,அதனால் அனுசாலுவனும்நிர்வகிக்கமாட்டாமல்மெய்யும்நொந்து ரதத்தின்பேரில்விழுந்து மூர்ச்சையடைந்தான் - அதுகண்டு பிரத்தியுமனனும் மகாரோஷத்துடனே பப்பிரவாகன்பேரில் ரதத்தைத்தூண்டி தன்னுடைய வில்லிலே அதிதீட்சண்யமான பாணங்களைப்பிரயோகஞ்செய்து, பப்பிரவாகனை நோகப்பண்ணி சாரதியையுங் குதிரைகளையும்ரத்தமயமாக்கி ரதத்தையும்அப்புறம்இப்புறம்போகவொட்டாமல் சிக்குப்படுத்திபின்னையும் அநேகம்அஸ்திரங்களைப் பிரயோகம்பண்ணினான்.அதுகளையெல்லாம் பப்பிரவாகனும் ஒரு அர்த்தசந்திர பாணத்தினால் நடுபாதியில்கண்டித்துவிட்டு பின்னையும் சூரியகிரணங்களைப்போல அதிதீக்ஷண்யமான அநேகபாணங்களைத்தொடுத்துப் பிரயோக

ம்பண்ணினான். அதுகளும் ஒன்றோடொன்று உராய்ந்துகொண்டுநெருப்புப்பொறிகளைக்குழில்குழியென்றுகக்கிக்கொண்டு அதிவேகமாய்வந்து பிரத்தியுமனனுடைய சரீரமுழுதும் சுறுக்குசுறுக்குமென்றுதைக்கும்பொழுதுஸ்ரீஹரிகுமாரனாகிய பிரத்தியுமனனும்ஆயாசமடைந்துதைரியம்விடாமல்ஆக்கிரவியாக்கிரமநிக்குரோதனாய் பற்களைநெறநெறவென்றுகடித்துக்கொண்டு வில்லைக்குணத்தொனிபண்ணிஅந்தவில்லிலேநாளகூடவிஷத்தையொத்த அநேகபாணங்களைச்சந்தித்துப் பிரயோகம்பண்ணி பப்பிரவாகனுடைய சாரதியையுங்குதிரைகளையும் அதஞ்செய்து ரதத்தையுஞ்சக்கைச்சக்கையாகப்பேர்த்தெறிந்து பப்பிரவாகனையுங்கால்கைஆடவொட்டாமல்சல்லடைக்கண்களாகத்துளைத்துவிட்டான். அதனால்பப்பிரவாகனும் மிகவும்நொந்துமூர்ச்சையடைந்தான் சேனைகளெல்லாருஞ்சிதறியோடிப்போனார்கள்அப்பொழுதுபிரத்தியுமனன்மின்சிகன்னுடையரதத்தைச் சக்கிராகாரமாய்த் திருப்பிக்கொண்டு பப்பிரவாகனுடைய சதுரங்கபலசேனைகளையும் சின்னாபின்னமாகக் கண்டித்து எங்கேபார்த்தாலும்பிணமலைகளாகக்குவிக்கும்போது சேனைகளெல்லாம்நாலுமூலையிலும்ஓட்டமெடுக்கத்தலைப்பட்டதுகள்அதுகண்டு பிரத்தியுமனன் ஓடிப்போகின்றவர்களையும் ஓடவொட்டாமல்மடக்கிக்கொல்லுகையில்பப்பிரவாகனும்மூர்ச்சைதெளிந்தெழுந்திருந்து மஹாகோபதீப்தனாய்எரிந்துவிழுந்துவேறேஒருதேரிலேறிக்கொண்டுவில்லைக்குணத்தொனிபண்ணிஓடிப்போகின்ற தன்னுடைய சேனைகளையெல்லாம் பயந்துபோகாதீர்களென்றுகையமர்த்திநிறுத்திபிரத்தியுமனனுடனே எதிர்த்துப்போராடி தன்னுடைய பாணக்கினியினால் அவனேநோகச்செய்து அவனுடையரதத்தையும் பொடிப்பொடியாகச்செய்துவிட்டான்.

அதுகண்டுபிரத்தியுமனன் வேறேஒருதேரில் ஏறிக்கொள்ள அதனையும்பொடியாக்கிவிட்டான்அதனால்பிரத்தியுமனனும்கோபதீப்தனாய்வேறேஒருதேரிலேறி வில்லைவளைத்துக் குணத்தொனிபண்ணி அதிதீட்சண்யமான பாணங்களைப்பிரயோகஞ்செய்துபப்பிரவாகனுடைய வில்லைக்கண்டித்து அவனதுரதத்தையும்பொடிப்பொடியாக்கிவிட்டான். அவன்மறுபடியும்ஒருதேரிலேறினான் அதனையும்,பொடியாக்கிவிட்டான். அப்படிநூறுதேர்மட்டும்பொடிப்பொடியாய்வெட்டுண்டுமகமேருவைப்போலகும்பல்கும்பலாகக்குவிய அதுகண்டுகடைசியில்ஒருதேரிலேறிவில்லைக்குணத்தொனிபண்ணி அந்தவில்லினிடமாக அளவிறந்தபாணங்களைத்தொடுத்துப் பிரயோகஞ்செய்து பிரத்தியுமனனுடைய சரீரமுழுதும் சதைசதையாகப்பேர்த்தெறிந்து அவனதுரதத்தையுந்தூளாக்கிவிட்டான்அப்பொழுது பிரத்தியுமனனும்கோபங்கொண்டு பாதசாரியாய் ஒருகதாயுதத்தையெடுத்துக்கொண்டு ஓடிவருகையில் பப்பிரவாகனும் ஒருகதாயுதத்தைஎடுத்துக்கொண்டுவந்து இரண்டுபேருமெதிர்த்துமஹாரோஷத்துடனே போராடி பின்னையும்- கத்தி- சூலம்- சக்கரம்-கட்கம்-தோமரம்-முதலான ஆயுதவகைகளினாலும் வெகுநேரம்போ

ராடி, கடைசியில்ஒருவர்க்கொருவர் ஈட்டிகளினல்- குத்தியும்- வெட்டியு ம்-இடித்தும்-அடித்தும்-தட்டியும்-மூட்டியும்- உதைத்தும்-சதைத்தும் இப்படி நானுவிதமாகப்போராடி இரண்டுபேரும் மூர்ச்சையடைந்தா ர்கள்.

அதினல் பப்பிரவாகன் மூர்ச்சைதெளிந்தெழுந்திருந்து ஒரு தேரிலேறிக்கொண்டு உக்கிராகாரனுய் தன்னுடையவில்லைக் குணதீதொ னிபண்ணி அர்ச்சுனனுடைய சேனைகள்பேரில் கவிந்து பாணங்களைப் பிரயோகித்து சேனைகளையெல்லாம் கால்மாடுதலைமாடாகச்செய்யும்போ து அம்சத்துவசராஜனுங்கண்டு ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியானவர் அர்ச்சுனரா ஜனை நம்மிடத்தில் ஒப்புவித்துப்போயிருக்க நாம் இப்படி பார்த்துக் கொண்டிருக்கிறது தர்மமல்லவென்று தன்னுடைய தேனைத்தூண்டி பப்பிரவாகன்பேரில் அநேகபாணங்களைப் பிரயோகம்பண்ணி அவன து சாரதியைக்கண்டித்தான் சாரதி இறந்துபோகவே ரதத்தைக் குதி ரைகள் இழுத்துக்கொண்டு ஓடிப்போய்விட்டது. அதுகண்டு அம்சத்து வஜனும் பப்பிரவாகன் சேனைகள்பேரில்விழுந்து ரதங்களைப்பிளந்தும் இடைகளையறுத்தும்கொடிக்கம்பங்களைவெட்டியும் வில்லுகளைக்கண்டி த்தும்குதிரைகளைக்கொன்றும்ரதக்காரர்களைஅதம்பண்ணியும்ஆனைகளை க்கொன்றும்மாவெட்டியர்களைத்தள்ளியும்ரவுத்தர்களைத்தட்டியும்காலாள் களைக் கண்டதுண்டஞ்செய்தும், கவசங்களைக் கிழித்தும், கிரீடங்களையு டைத்தும்,கத்திகளைநொறுக்கடித்தும்,கதைகளைத்துண்டித்தும்,தோமர ங்களைத்துண்டித்தும், இப்படி சின்னபின்னப்படுத்தி எங்கேபார்த்தா லும் ரத்தப்பிரவாகமாய்ப் பூதவேதாள கணங்களுக்குத் திருப்த்திசெய் வித்து ஒருநொடிக்குள் அக்குரோணிசேனைகளைத் தும்சப்படுத்திவிட் டான். அதிலே பப்பிரவாகனும் வேறே ஒருசாரதியை அமர்த்திக்கொ ண்டு யுத்தசன்னுத்தனுய் மஹாரோஷித்துடனேவந்து அம்சத்துவஜனு டனே எதிர்த்து அநேகதிவ்வியபாணங்களைப்பிரயோகித்து அவன்கை வில்லையுங்கண்டித்து சாரதியையுந்துண்டித்து குதிரையையும் அதம்ப ண்ணி தேரையும்பத்தலாகப்பிளந்து அந்தராஜனுடையமார்பிலும்ஏன் பது குரூரபாணங்களைத்தைப்பிக்க அதனல் அவன்மெத்தவும்நொந்து தேரின்பேரில்விழுந்து மூர்ச்சையடைந்தான்.அதுகண்டு எவ்வர்ணசுவ ன் குமாரனுகிய சுவேகனென்கிறவன் மஹாரோஷித்துடனேவந்து பப் பிரவாகனுடனே எதிர்த்துப் பாணப்பிரயோகம் பண்ணுகையில் அது கண்டு பப்பிரவாகனுங்கோபங்கொண்டு தன்னுடையவில்லிலே அதிதீ க்ஷண்யமான பாணங்களைத்தொடுத்துப் பிரயோகித்து சுவேகனுடைய தேரையும் சாரதியையும் குதிரைகளையும் தும்சம்பண்ணி அவன்கைவி ல்லையுங்கண்டித்து கவசத்தையும் அறுத்து பின்னையும் ஒருதிவ்யபாண த்தினல் சுவேகனுடைய சிரசையுங் கண்டித்துவிட்டான்.

அதுகண்டு எவ்வர்ணசுவனும் தன்குமாரனைக்கொன்றுவிட்டானே

யென்று ஆக்கிரகித்து தன்னுடைய ரதத்தைத்தூண்டி சிறிதுபாணங்க
ளைப் பப்பிரவாகன்பேரில் பிரயோகம்பண்ணினான். அதுகளையெல்லா
ம் பப்பிரவாகன் கண்டித்து ரோஷித்துவேஷனாய் தன்னுடைய வில்லி
லே பயங்கரமான பாணங்களைச்சந்தித்து எவ்வர்ணசுவனை வியர்த்தனாக
ரோசப்பண்ணி அவனைமூர்ச்சையாய் விழத்தள்ளி அப்பால் நீலத்துவ
சனுடனேபோராடி அவனையும் மூர்ச்சையாய்விழத்தள்ளி பின்னையும்
கிருதவர்மன் - சாத்தகி - அனிருத்திரன்-மேகவர்ணன்- முதலான துரை
களையெல்லாம் ரத்தமயமாக்கி மூர்ச்சையாய்விழத்தள்ளி பின்னையுங்கா
லாந்தகனைப்போலச் சீறிவிழுந்து அர்ச்சுனனுடைய சேனைகளையெல்
லாம் பாய்க்கிடையாய்விழத்தள்ளி, அர்ச்சுனன்பேரிலும், எதிர்த்துவரு
கையில் அதுதெரிந்து அர்ச்சுனனும் சிந்தாக்கிரந்தனாய் விசாரப்பட்டு
ஓய்குமாரகா விஷ்வகேதா, இந்த பப்பிரவாகனுடைய சவுரிய பராக்கிர
மத்தைப் பார்த்தாயோ நாம் இரண்டுபேர்மாத்திரம் தப்பியிருக்கிறோ
ம் மற்றவர்களெல்லாம் விழுந்துவிட்டார்கள் நாமும் மடிந்துபோகிற
வேளைவந்து சம்பவித்து தர்மபுத்திரர் செய்கிறயாகமும் நிறைவேறா
மல் விக்கினமாய்ப்போகின்றதே இதுவலாயில் சமுத்திரமெல்லாந்தா
ண்டி இப்போது சிறிய காலவாயினிடத்தில் முழுகலாச்சுதே இதற்கெ
ன்னசெய்யலாம் ஓய்குமாரகா நீ தர்மபுத்திரருக்கும் பிரியகுமாரனாகை
யால் நீ சண்டைபண்ணவேண்டாம் நீஅஸ்த்தினாபுரத்திற்குப்போய் தர்
மராஜாவையும், ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியையுஞ் சேவித்துக்கொண்டு சுகமா
யிரு, நான் இவனுடனே போராடி இவனைஜெயித்து குதிரையைக்கொ
ண்டுவந்து சேருகிறேன் இல்லாவிட்டால் ரணக்களத்தில் மடிந்தாகிலும்
வீரசொர்க்கத்தை யடைகிறேன் இதல்லாமல் தர்மபுத்திரருடைய பாக்கி
யம் எப்படி யிருக்கின்றதோ அவருக்கு அதிஷ்டமில்லைபோலத் தோற்
றுகின்றது - ஓய் விஷ்வகேதா, நான் என்னசெய்வேனென்று அர்ச்சு
னன் விசாரமாகச்சொல்ல அதுகேட்டு விஷ்வகேதுவும் அர்ச்சுனனைப்
பார்த்து ஓய் ஐயா, நீர் அப்படி யோசிக்கவேண்டாம் நான் இருக்கும்
போது உமக்கு என்னகுறை யிருக்கின்றது நீர் இப்பொழுது எனக்
குச் செலவுகொடுத்தனுப்பும் நான்போய் ஒரு நிமிஷத்திற்குள் அந்த
துன்மார்க்கனைக் கண்டித்துவருகிறேன் பாருமென்றுசொல்லி விஷ்வ
கேதுவும் அர்ச்சுனனிடத்திற் செலவுபெற்றுக்கொண்டு யுத்தசன்னத்த
னாய் தேரின்பேரிலேறி வில்லைக் குணத்தொனிபண்ணி பப்பிரவாகனு
டனே எதிர்த்து திவ்வியபாணங்களினால் அவனை நோகவெய்தான்- அத
ற்கு அவன் எவ்வளவும்பயப்படாமல் கோபதீப்தனாய் ஆக்கிரகித்துதன்
னுடையதேரைச் சமீபமாகத்தூண்டி தன்னுடையவில்லிலே கோடையி
டிக்குச்சமானமான பாணங்களைப் பிரயோகித்து விஷ்வகேதுவினுடை
ய சரீரமுழுதும் ரத்தமயமாக்கி சாரதியையுங் குதிரைகளையும் நோகப்
பண்ணி அவன்கைவில்லையுங் கண்டித்து கியாவென்று சிங்கநாதம்பண்
ணினான். அதற்குப்பின்வாங்காமல் விஷ்வகேதுவும் வேறே ஒருவில்லை

எடுத்துகுணத்தொனிபண்ணிகோபத்துடனே தன்னுடைய வில்லினிட
மாக விஷங்களைக் கக்குகின்ற அதிதீக்ஷண்யமான பாணங்களை அநே
கமாகத்தொடுத்து பப்பிரவாகனுடைய பாதாதி கேசபரியந்தஞ்சல்ல
டைக்கண்களாகத்துளைத்துரத்தமயமாக்கி குடையையும் அறுத்துசார
தியையுங் குதிரைகளையுங்கொன்று ரதத்தையுஞ் சக்கைச் சக்கையாக
ப்பேர்த்தெறிந்து ஆக்கிரவியாக்கிரம நிக்குமோதனைய் காலாக்கினிருத்
திரனைப்போல ஆக்கிரகித்து சிங்கநாதம்பண்ணினன்.

அதனால்பப்பிரவாகன் மெத்தவும்நொந்து தயிரியத்தைவிடாமல்
வேறே ஒருதேரிலேறி இரண்டு கண்களிலும் நெருப்புப்பொறிகள் ப
றக்கத்தக்கதாக ஆக்ருஷித்து தன்னுடையவில்லிலேவாய்வாஸ்திரத்தை
த்தொடுத்துப் பிரயோகம்பண்ணினன் அதுவும் அதிவேகமாகவந்து
விஷ்வகேதுவினுடைய ரதத்தைக் குப்பென்று ஆகாசத்திற்கிளப்பிவி
ட்டது அப்போது தேவர்களெல்லாம் விஷ்வகேது செத்தானென்று
சொல்லிக்கொண்டார்கள் அப்பொழுது விஷ்வகேதுவினுடையரதமு
ம்ஆகாயத்தில் சக்கரம்போலச் சுழன்று பூமியில் விழுந்து சாரதி கு
திரைகளுடனே பொடியாகிப்போய்விட்டது அதுதெரிந்துவிஷ்வகே
துவும் தரையில் நேர்ப்பாகக்குதித்துமஹாஉக்கிராகாரனாய்வேறேஒரு
தேரிலேறிவில்லையெடுத்து குணத்தொனிபண்ணி அந்த வில்லினிடமா
க ஒரு சுழல்பாணத்தைத் தொடுத்துப் பிரயோகம்பண்ணினன் அது
வும் காளகூடவிஷம்போல அக்கினிஸ்வாலையை வீசிக்கொண்டுவந்து ப
ப்பிரவாகனுடைய தேரை ஆகாசத்திற் கிளப்பிவிட்டது அந்த ரதமு
ஞ்சூரியபகவானைக்கண்டு உம்முடையபேரனாகிய விஷ்வகேதுவும் பப்
பிரவாகன்கையினால் - இறந்துபோகிறானென்று யோகக்ஷேமங்களைச்
சொல்லப்போனதுபோல சூரியமண்டலத்தைச் சேரப்போய்அந்தஅ
னலினால் பக்கென்று எரிந்து சாம்பலாய் விழுந்துவிட்டது பப்பிரவா
கனும்பூமியில்விழுந்து ரத்தங்களைக் குபீல்குபீலென்று கக்கிக்கொண்
டுமூர்ச்சையடைந்து சற்றுநேரத்தில் மீனாட்சியம்மையாருடைய ஆசீ
ர்வாதத்தினால் தப்பிப்பிழைத்து மூர்ச்சைதெளிந்தெழுந்திருந்துகோ
பதீப்தனாய் வேறே ஒருதேரிலேறி வில்லைக்குணத்தொனிபண்ணிஅந்
தவில்லினிடமாக திவ்வியபாணங்களைத் தொடுத்துப் பிரயோகம் பண்
ணினன்.

அதுகளும்கிருஷ்ணசர்ப்பம்போலவும் காலாக்கினியைப்போலவு
ம் சுவாலையைவீசிக்கொண்டுவந்து விஷ்வகேதுவினுடையமார்பில்தை
த்து முதுகிலுருவிப்போய் விட்டது. இப்படிப் பப்பிரவாகனும் வி
ஷ்வகேதுவும் ரோஷித்து வேஷித்துடனே (ஸ்ரீராமமூர்த்தியும்- இராவ
ணனும்) எதிர்த்தாற்போலவும், குமாரசுவாமியும், தாருகாசுரனும், எதிர்
த்தாற்போலவும், தேவேந்திரனும், விருத்திராசுரனும் எதிர்த்தாற்போ
லவும், எதிர்த்து ஒருவர்க்கொருவர் கெலிக்கவேண்டுமென்கிற அபே
க்ஷையினால், பின்வாங்காமல் ஐந்துநாள் இராத்திரியும் பகலும் போரா

டினார்கள் அதில்பப்பிரவாகனும் மிஞ்சி விஷ்வகேதுவினுடைய ரதத்தைச் சாரதிகுதிரைகளுடனே பொடிப்பொடியாக்கிகவசத்தையும்பத்தலாகக்கிழித்து சரீரமுழுதுஞ் சல்லடைக்கண்களாகத் துளைத்துவிட்டு விஷ்வகேதுவைப் பார்த்து ஓய் அண்ணா விஷ்வ கேதா நீ மகா வீராதிவீரனானபடியால் என்னுடனே ஐந்துநாள்மட்டுக்கும் போராடினாய் இப்போது நான் உன்னைக் கண்டிக்கிறேன் நீ உன்னுடைய இஷ்டதெய்வமான ஸ்ரீகிருஷ்ணபகவானைத் தியானம்பண்ணிக்கொள் உன்தகப்பனாகிய கர்ன மஹாராசனை என் தகப்பனாகிய அர்ச்சுனன் கபடமாய் ரதத்தை எடுக்கட்டுமென்று சொல்லும்பொழுதே அதைக் கேளாமல் கொன்றுவிட்டான் அப்படி நான் அனியாயம் பண்ணுகிறதில்லை இன்னமும் உனக்கு வேண்டிய சஸ்திர அஸ்திரங்களைக் கொடுக்கிறேன் அதுகளை நீவாங்கிக்கொண்டு சண்டைபண்ணென்றுசொல்ல அதுகேட்டு விஷ்வகேதுவும் ஆக்கிரகித்து தோமரம்- கத்தி-சூலம்-கதை - இதுகளை றிவ்வுறிவ்வுமென்று எடுத்துப்பிரயோகம்பண்ணினான்.

அதுகளையெல்லாம் பப்பிரவாகன் கண்டித்துவிட்டு மகாகோபத்துடனே தன்னுடைய வில்லிலே ரவுத்திராஸ்திரத்தையெடுத்துத்தொடுத்து அதிதேவதா- பிரதிதேவதா - மந்திரங்களுடனே அபிமந்திரித்துப்பிரயோகம் பண்ணினான் அதுவும் நெருப்புப் பொறிகளைக் கக்கிக்கொண்டுபகபகவென்று எரிந்துக்கொண்டு தேவர்களெல்லாம் பயப்பட்டுப்பார்த்துக்கொண்டிருக்க, அதிவேகமாகவந்துகிரீடமகுர குண்டலங்களுடனே விளங்குகின்ற விஷ்வகேதுவினுடைய சிரசைக் கண்டித்துப்போய்விட்டது. அப்போது அந்தச்சிரசானது ஆகாச மார்க்கத்திலெழும்பி ஹரிஹரீ - கோவிந்தா - கிருஷ்ணா - கேசவா - வரதா - பக்தவற்சலா - பரமபுருஷாவென்று முறையிட்டுக்கொண்டு அர்ச்சுனனுடைய பாதத்தில்வந்துவிழுந்தது அதுகண்டு அர்ச்சுனனும் சாவுக்குச் சரியான மூர்ச்சையடைந்து மகா விசாரத்துடனே அந்த சிரசைப்பார்த்து ஆ- குமாரகா,வீராதிவீரா,ஆ - சவுரியப் பிரதாபா,ஆ - அகண்டிதவீரபராக்கிரமா,ஆ - தயிரியபுருஷா, ஆ - புத்திரசிகாமணி,நீ எங்கேஒளித்துப்போனாய் என்னைஒருவனாக அனாதையைப்போல விட்டுப்போனாயே நான் உன்னைப் பிரிந்திருந்து எப்படி நிர்வகிப்பேன் நான்எந்தமுகங்கொண்டு அஸ்த்தினாபுரத்திற்குப்போவேன்தர்மபுத்திரராணவர்-விஷ்வகேது எங்கேயென்றுகேட்டால் நான் என்னசொல்லுவேன்-வீமசேனன்கேட்டால் நான் என்னசொல்லுவேன் · என் தாயாகிய குந்திதேவியாரும் தன்குமாரனான கர்ணன் இறந்துபோனதிற்கு விசாரமடைந்து தன்குமாரனுக்குக் குமாரனான விஷ்வகேது இருக்கிறானென்று அந்தத்துக்கத்தைவிட்டு கர்ணனைப்போல உன்னைப் பார்த்துக்கொண்டிருந்தாளே, அவளுக்கு நான் என்னசொல்லுவேன் ஆ - வீராதிவீரா, வீரப்பிரதாபா, அஸ்வமேதக்குதிரையினிமித்தம் எவ்வளவு வருணுடனே போராடிஜெயித்து குதிரையைக் கொண்டுவந்து ஒப்பிவி

த்து என் பிறகே இத்தனை நாள்வரைக்கும் - குதிரையைக் காப்பாற்றிக் கொண்டுவந்த மானுபாவனாகிய நீ ரணக்களத்தில் சத்துருவினுடைய கையினால் வெட்டுண்டு விழுந்தாயோ, இனிநான் என்னவென்று நிர்வாகம் பண்ணப்போகிறேன் - ஆ புத்திரகாவென்று - அர்ச்சுனனும் வெகுவாய்ப்பிரலாபித்து அழுகிறபோது, அதுகண்டு பப்பிரவாகன்சிரித்து தன்னுடைய ரதத்தைச் சமீபமாகக்கொண்டுவந்து நிறுத்தி, அர்ச்சுனனைப்பார்த்து, ஐயா- குந்திநந்தனா, இப்பொழுது வைசியன் பிள்ளை பண்ணின சவுரியத்தைப் பார்த்தீரோ - நான் இன்னமும் ராசவர்க்கங்களுடைய கிரீடங்களையுடைத்து அந்த ரத்நங்களையெல்லாம்விஷ்வகேதுவினுடைய சிரசில் போட்டுக்கொண்டு விக்கிரயப்பண்ணுகிறேன்இனிதேவரீர் ஒருத்தருமிருக்கிறீர், எங்கள் தாயார்சித்திராங்கதையைவேசியென்றும் - தாசியென்றும் - தூஷித்தபடியினால், அந்த தோஷமே உமக்கு இப்படிப்பட்ட ஆபத்து சம்பவித்தது. இனியேன் யோசனைபண்ணுகிறீர், தர்மபுத்திரர் செய்கிறயாகமும் நிறைவேறப்போகுதோ - இன்னமும் நீர் குதிரையை- விடுவித்துக்கொண்டுபோக யிருக்கிறீரோவென்று பரிகாசமாகச்சொல்ல, அந்தச் சொல்லெல்லாம் அர்ச்சுனனுடைய செவியினிடமாக நாராசங் காய்ச்சிவிட்டதுபோல நுழைந்து மநா கோபதீப்தனாய் விஷ்வகேதுவினுடைய தலையைரதத்தின்பேரில் வைத்துவிட்டு காண்டீபத்தைக்குணத்தொனிபண்ணிஉக்கிராகாரனாய் பப்பிரவாகனைப்பார்த்து, அடாபயலே துன்மார்க்கா,என்னடாதலைகீழாய் விழுகிறாய் நீ கையிலாகாத சிலரைக்கொன்றோமென்றுகெர்வித்திருக்கிறாய் அந்தகெர்வத்தை இப்போது வெளிப்படுத்தி வைக்கிறேன் சற்று நேரத்தில் பாரடாவென்று தன்னுடைய காண்டீபத்தில் அநேகந்திவ்வியாஸ்த்திரங்களைத்தொடுத்துப் பிரயோகஞ்செய்துபப்பிரவாகனுடைய ரதத்தைக்கண்ணுக்குத்தெரியவொட்டாமல் மறைத்து அவனது சேனைகளையெல்லாங் கண்ட துண்டங்களாக்கிஎங்கேபார்த்தாலும்பிணமலைகளாகக்குவித்தான்.

அதுகண்டுபப்பிரவாகனும் ஆக்கிரவியாக்கிரம நிக்குரோதனாய்தன்னுடையவில்லைக் குணத்தொனிபண்ணிஅந்தவில்லினிடமாகஅளவிறந்த அர்த்தசந்திர பாணங்களையும்,அக்கினியாஸ்த்திரங்களையும்,ஏராசமாகத்தொடுத்துப் பிரயோகித்து அர்ச்சுனன்விட்டபாணங்களையெல்லாம் நடுபாதியில் கண்டித்துவிட்டு அவனது சாரதிகுதிரைகளையும் ரத்தமயமாக்கி அனுமானைக்கெர்வமடக்கிஅர்ச்சுனனையுங்கால்கைகள் ஆடவொட்டாமல் மெத்தவும்நோகப்பண்ணி அவனதுசரீரமுழுதுஞ் சல்லடைக்கண்களாகத்துளைத்துஉதிரமயமாக்கிசிங்கநாதம்பண்ணினான்.அப்பொழுது அர்ச்சுனனும்ஆயாசமடைந்து கங்காதேவியினுடைய சாபம்சமீபித்திருக்கிறபடியினால் மிகுந்தபயத்துடனே காண்டீபத்தைக் கைசோரவிட்டு முன்பின்தோற்றாமல்சும்மாயிருந்தான் முப்பத்துமுக்கோடி தேவர்களையுங் கெலித்தோம்அப்போதும் இத்தனை ஆயாசமும் பயமு

மில்லையேஇப்போதுஇவன்கையிலே ஒண்டியாய் அனாதையைப்போல
சிக்கிக்கொண்டு மடியுங்காலநேரிட்டதே இதற்குஎன்னசெய்கிறதென்
று நினைந்து மறுபடியும் தயிரியம்விடாமல் ரோஷத்துடனே காண்டீப
த்தைஎடுத்துக்குணத்தொனிபண்ணி எப்படியும் என்பகையாளியைக்
கொல்லுகிறேனென்று அந்தகாண்டீபத்தினிடமாகஅக்கினியாஸ்திரத்
தைத்தொடுத்து அதற்குவாய்வுமந்திரத்தைஜெபித்து பிரயோகம்பண்
ணினான்அதுவும்விருதாவாய்ப்பிரவாகனுடையபாணத்தினால் வெட்டு
ண்டுபோய்விடபின்னையும்ஒருஅந்தாரமான அஸ்திரத்தைஎடுத்துத்
தொடுத்துஅதற்குச்சூரியமந்திரத்தைஉச்சரித்துப் பிரயோகம்பண்ணி
னான்-அதுவும்வியர்த்தமாக அங்ஙனே வெட்டுண்டுபோய்விட்டது-இப்
படி அர்ச்சுனனும் அநேகந்திவ்வியாஸ்திரங்களை எடுத்துத்தொடுத்து
விருதாவாய் அஸ்திரபலன்களையெல்லாம்போக்கடித்துவெறிகொண்ட
வன்போல ங்காதேவிசாபத்தினால்மெய்மறந்துமுன்பின்தோற்றமல்பி
ர்மைகொண்டு ரதத்தின்பேரில்காண்டீபத்தை நழுவவிட்டுச் சும்மாயிரு
ந்தான்.

அப்போதுரத்தமழைபொழிந்தது-எலும்புகள்விழுந்தது - ஆந்
தைகள்-கூகாவென்றுகூப்பிட்டது-சுழல்காற்றடித்தது- சூரியனுமடுங்
கினதுபோலத்தோன்றியது-நக்ஷத்திரங்களுதிர்ந்தது - இப்படிஅநேக
மானஅவசகுனங்களையெல்லாங்கண்டு அர்ச்சுனன்மெத்தவுந் திகிலடை
ந்துஸ்ரீகிருஷ்ணதேவனைநினைந்து துக்கப்பட்டான் - அதுதெரிந்துப்
பிரவாகனும் அர்ச்சுனனைப்பார்த்து ஓய்ஐயா,இந்திரபுத்திரா நீர்ஏன்சும்
மாயிருக்கிறீர்பாணந்தொடும் உம்முடைய வல்லபத்தையறிகிறேன் நீர்
என்தாயாரைத்தூஷித்தபடியினால் உம்முடையபேரில் எனக்குத் தயவு
ண்டாகவில்லை-ஆதலால் நான்இப்போது உம்மைக்கண்டிக்கிறேன்பாரு
மென்றுசொல்லி உக்கிரத்துடனே தன்னுடைய வில்லைக் குணத்தொனி
பண்ணி பாணங்களைத்தொடுத்துப்பிரயோகித்து அர்ச்சுனனுடைய சா
ரதியையும் இரண்டுதுண்டமாக்கி எட்டுக்குதிரைகளையும் கண்டித்துஅ
னுமாருடைய மார்பையும்பிளந்து ரதத்தையுஞ் சக்கைச் சக்கையாக
ப்பேர்த்தெறிந்து பிற்பாடுதன்னுடைய தூணீரத்தில் கையிட்டெடுக்க
சுவாலாயென்கிற அஸ்திரங்கையிலகப்பட்டதுஅதையெடுத்துகோதண்
டத்தினிடமாகத் தொடுத்து அதிதேவதா பிரதிதேவதா மந்திரங்களுட
னேஅபிமந்திரித்துஅர்ச்சுனனுடைய சிரசுக்குச்சரியாய்லக்ஷியம்வைத்
துப்பிரயோகம்பண்ணினான்- அதுவும்வில்லிலிருந்துவிடுபட்டுஅதிவே
கமாய் நெருப்புப்பொறிகளைக் கக்கிக்கொண்டுபுகைகளுடனும் ஜடஜட
வென்கிறதொனியுடனும்எரிந்துகொண்டுகாலாக்கினியைப் போலவும்,
காளகூடவிஷத்தைப்போலவும், அண்டகடாகங்களெல்லாமதிரத்தக்கதா
கவரும்பொழுதுதேவர்களெல்லாம் நடுக்கமடைந்துஓய்கிருஷ்ணா,துவா
ரகாபுரிவாசா, தேவகிநந்தனா, உன் பக்த்தனைஅர்ச்சுனனைக் காப்பாற்
றிரக்ஷியுமென்று முறையிட்டார்கள் தேவேந்திரனும்துக்காக்கிராந்தனாய்

அர்ச்சுனனைப்பார்த்து-ஆ-பாண்டவபாணீ-ஆ-கிரீட்டி-ஆ-தனஞ்செயா
ஆ-புத்திரகாவென்று வாய்விட்டலறினான் அப்பொழுது பப்பிரவாகனு
டையசேனைகளெல்லாம் சிங்கநாதங்கள் அட்டகாசங்கள்செய்தார்கள்.

இப்படிப்பட்டஉக்கிரத்துடனேமகாஉற்பாதமாய்அந்தஅஸ்திர
மானதுவந்து கிரீட மகரகுண்டலங்க ளுடனே கூடிச் சந்திர விம்பம்
போலப்பிரகாசிக்கின்றஅர்ச்சுனராசனுடையசிரசைக்கண்டித்துப்போ
ய்விட்டது அப்போதுஅந்தசிரசானது ஆகாயத்தில் குப்பென்றுஎழு
ம்பி ஹரிஹரீ-கிருஷ்ணா -கோபிகாரமணா-கோவிந்தா-சிசுபாலமர்த்தனா-
தேவேந்திரவந்தியா-கம்சஸம்மாரா-காளிங்கநிர்த்தனா-ருக்குமணிமனோ
கரா - சுவாமியென்றுமுறையிட்டுக்கொண்டுபூமியில்வந்துவிழுந்தது.
அதுகண்டுபப்பிரவாகனும் மகாசந்தோஷத்துடனேசரீரம்புளகிக்கத்த
க்கதாகவெற்றிச்சங்கத்தைவாயினிடமாகவைத்துப் பம்பமென்றுபூரி
த்துமனோவுச்சாகத்துடனே ஜெயபேரிகை யறைவித்துச் சகலசேனைக
ளுஞ்சூழ்ந்துவரும்படிபிரயாணப்பட்டுபதினெட்டுவகைமேளவாத்திய
ங்களு முழங்கத்தக்கதாகரதாரூடனாய் சகலவேடிக்கைகளுடனே தன்னு
டையமணிபுரமென்னும்பட்டணத்திற்குவந்துசேர்ந்தான். சேனைகளெ
ல்லாரும் சந்தோஷகரமாய் அவரவர்களுடைய அரண்மனைக்குப் போ
ய்ச்சேர்ந்தார்கள். அதற்குமுன்னமேசித்திராங்கதையும்அவள்சக்களத்தி
யாகியஉலுவசியும்மனமகிழ்ச்சியடைந்தவர்களாய்நமதுபுத்திரனாகியப
ப்பிரவாகன் தகப்பனாகிய அர்ச்சுனனிடத்திற்குப் போயிருக்கிறானே
இனிஅவனைச்சந்தோஷமா யழைத்துக்கொண்டுவருவான் நாம் அவனை
க்கூடிச் சகலசவுக்கியங்களையும் அனுபவிக்கலாமென்று நினைந்து இரு
வர்களும்மஹாஅபேட்சையாய்த்திவ்வியவஸ்திராபரணங்களையலங்கரித்
து சந்தபுஷ்பபரிமளாதிகளை அணிந்துக்கொண்டு அர்ச்சுனராஜனுடை
ய வரவுபார்த்துக்கொண்டிருக்கையில் இடிவிழுந்ததுபோல அர்ச்சுன
னிறந்தானென்று கேட்டளவில்இரண்டுபேரும் மூர்ச்சித்து விழுந்து
பூமியிற்புரண்டழுது சகல ஆபரணங்களையுங் கழற்றியெறிந்துதலைமயி
ரைவிரித்துதுக்கசாகரத்தில் முழுகினவர்களாய்க்கண்ணீராறாய்ப்பெருகி
யோடக் கோவென்றழுகிறபோது அந்தப்புரத்து ஸ்திரீகளெல்லாரு
ங்கூடவந்துஇழவுகொண்டாடினார்கள்.

அதுகேட்டுபப்பிரவாகனுந் தன்னுடைய அரண்மனையைவிட்
டுஅந்தப்புரத்திற்குப்போய் தாயாரைக்கண்டுநமஸ்க்காரம்பண்ணி ஓய்
அம்மா பாக்கியவதிநீஅழுகிறகாரியமென்ன நான்செயத்துடனே வந்த
பொழுதுஉனக்கென்ன குறையிருக்கின்றது நீசந்தோஷமாயிருக்கவே
ண்டாமோ தாயேயென்றுசொல்லஅதுகேட்டு சித்திராங்கதையும் கண்
ணீர்ஆறாய்ப்பெருகும்படியாக மஹாஉக்கிரத்துடனே புத்திரனைப்பா
ர்த்துஅடாபாதகா நீ ஒருசந்தோஷமாய்வந்தாயோ தகப்பனைக்கொன்ற
பிதாத்துரோகிஎன்னவேலைபண்ணினாய் தகப்பனைக்கொல்லவோவில்வி
த்தைகற்றுக்கொண்டாய் ஒரு வனாந்திரத்திலுள்ளமூங்கிற்புதல்கள்தனக்

குத்தானேஒன்றொன்று இழைந்து நீருய்ப்போகிறதுபோல் உன் தகப்பனையுங்கொன்றுநீயும் நீருய்ப்போகச்செய்தாய்-ஆ-துரோகிஇப் போதுஎன்ன என்புருஷனிடத்திற்கொண்டுபோய்விட்டால் நானும்அ க்கினிப்பிரவேசம்பண்ணி அவருடனேசேர்ந்துபோகிறேனென்றுசொ ன்னாள். அதுகேட்டுநாககன்னியாகிய உலுவசியும் சித்திராங்கதையைப் பார்த்து ஒய்அக்காபாக்கியவதி நான்இரண்டுநாளைக்குமுன்னே ஒருசொ ப்பனங்கண்டேன் அஃதென்னவென்றால்நான்சிங்காரவனத்திற்குப்போய் பு ஷ்பமாலையைக்கழுத்திற்போட்டுக்கொண்டு உல்லாசமாகத் திரிகிறபோ துஅந்த புஷ்பமாலை அறுந்துவிழுந்ததுபோலக் கனவுகண்டு திடுக்கெ ன் றெழுந்திருந்து பார்க்கையில் எனதுமாங்கல்யசூத்திரம் அறுந்துவி ழுந்தது அப்போதே இதென்ன விபரீதார்த்தமென்று நினைந்திருந்தே ன்அதுமெய்யாயிற்று இனிமேல்நாம் அக்கினிப்பிரவேசம்பண்ணுகிற தேநிச்சயமென்றுசொல்லிபப்பிரவாகனைப்பார்த்து அடாதுன்மார்க்கா பிதாவைக்கொல்லப்பிறந்ததுரோகிபுருஷனில்லாதபெண்சாதிக்குவஸ்தி ராபரணங்கள்என்னத்திற்கு நீபிறந்துசுமங்கலிகளாயிருக்கிறதாய்மாரை அமங்கலிகளாகச்செய்தாய்இனிஅதைப்பேசுகிறதினால்பிரயோசனமெ ன்ன எங்களை எங்கள்புருஷனிடத்தில் கொண்டுபோய் விட்டுவிடென் றுசொல்லி உலுவசியுஞ்சித்திராங்கதையும் வெகுதுக்கத்துடனேஅழு துகொண்டு கண்ணீராருய்ப்பெருகத்தலைமயிரைவிரித்து மார்பிலறைந் துக்கொண்டு மணிபுரத்தைவிட்டு ரணக்களத்திற்குப்போனார்கள்.

அப்பொழுதுபப்பிரவாகனும்பயங்கரத்துடனே துக்காக்கிரந் தனாய்கண்ணீராருய்ப்பெருக அழுதுகொண்டு நான்இப்படிவருமென் று கொஞ்சமாகிலும் எண்ணிப்பாராமல் பிதாவைக்கொன்று விட்டே னே இதற்கு என்னசெய்கிறதென்று பிரலாபித்துக்கொண்டு ரணக்கள த்திற்குப்போய்ச்சேர்ந்தான் அதற்குமுன்னமே சூரியபகவானும் தன் புத்திரனாகிய அர்ச்சுனன் இறந்துபோனதைக் குறித்து ஸ்நானம் பண் ணுகிற தற்குப் போனதுபோலமேற்குத்திசையில் அஸ்தமானமாகினா ர்.அப்பொழுது அஞ்ஞானிகளுடைய இருதயம்போல்காடாந்த காரமா ன இருளானது எங்குமூடிக்கொண்டது அந்த இருட்டுவேளையில்சித்தி ராங்கதையும்உலுவசியும் அழுதுக்கொண்டு ரணக்களத்திற்குவந்து அ ர்ச்சுனனுடைய சரீரத்தையுஞ் சிரசையுங்காணமல்தேடி வெகுநேரம் அலைச்சல்பட்டுபின்புதலையைக்கண்டு கையிலெடுத்துக்கொண்டுசரீரத் தையும்பார்த்துமேலேவிழுந்துபுரண்டு மூர்ச்சையாகக்கிடந்து திரும்ப வும்எழுந்திருந்து மார்புடனேயணைந்துகட்டிப்புரண்டுமுட்டிக்கொண் டுபின்னையும்அந்தச்சிரசை மார்புடனேசேர்த்து முகத்தைத்துடைத்து ஆ-பிராணநாயகா, ஆ-புண்ணியபுருஷா, ஆ-பிராணவல்லபா, நீர்எங்களை ழித்தீர்; ஆ-அகண்டிதவீரபராக்கிரமா உன்சவுரியமென்ன உன்பிரதாப மென்னஉன்வில்வித்தைஎன்ன இதுகளெல்லாம் எங்கேயடக்கிவிட்டீர் காலநிவாதகவசாளென்கிறஅறுபதுகோடிராக்ஷதர்களையும்ஜெயித்த அஸ்

த்திரசஸ்த்திரங்களெல்லாம் எங்கேஒளித்துப் போய்விட்டது பீஷ்மர்-
துரோணர்-கிருபர்-அசுவத்தாமர்-கர்ணன்-சல்லியன்-இப்படிப்பட்டபிர
முகாளுடன்எதிர்த்துப்போராடினவில்வித்தையை எங்கேமறந்துபோ
ய்விட்டீர் என்னகாரியம்பண்ணினீர்-ஒருபாலன்கையில் ஒண்டியாய் அ
னாதையைப்போலச் சிக்கிக்கொண்டு - புழுதியில் விழுந்து புரளுகிறீர்
இது உமக்குத்தருமமோ எங்களாசையைத் தீர்க்கவொண்ணுதோ நாங்
கள் நீர் வருகிறீரென்று விருப்பங்கொண்டு சந்தோஷகரமா யிருந்தோ
மே அப்படியிருக்க எங்களை ஒண்டியாகவிட்டு நீர் மாத்திரம் தனித்
துப் போகலாமோ, ஆ- கல்யாண குணசம்பன்ன, ஆ- தனஞ்சயா, ஆ-
கிரீடி நீர்பத்துத்திக்கிலுஞ்செயம்பெற்ற திவ்வியபுருஷராச்சுதே அ
ப்படிப்பட்ட நீர் எங்களை இப்படிஅழுதுக்கொண்டிருக்கவைத்து ஒண்
டியாய்ப் போகலாமோவென்று புலம்பி, பின்னையும் விஷ்வகேதுவினு
டைய சிரசைக்கண்டு ஆ-குமாரகா மடிந்தாயோவென்று வெகுவாய்ப்
பிரலாபித்துதங்கள்மனதைத் தாங்களே தேற்றிக்கொண்டுஇனிஆலசிய
மென்ன அக்கினிப்பிரவேசம் பண்ணுகிறதேகாரியமென்று துணிந்து
பப்பிரவாகனைப்பார்த்து அடா-பிதாத்துரோகி, உன்மனமானது தகப்
பனைக்கொல்லுகிறதற்கு எப்படி துணிந்தது உன் முகத்தைப்பார்
க்கலாமோவென்று தூஷிக்க, அவர்களைப்பார்த்து பப்பிரவாகனும் ஓய்
அம்மா, நான் தகப்பனென்றுதெரிந்து அஸ்வமேதக்குதிரையுங்காணிக்
கைகப்பங்களும்கொண்டுபோய்வைத்துத்தரிசனம்பண்ணி அடைக்கல
ம்ஐயா,என்னைக்காப்பாற்றிரக்ஷியுமென்றுவெகுவாய் வேண்டிக்கொண்
டேனதற்கு என்னைஉதைத்துத்தள்ளிவிட்டார் - அதுகண்டு பின்னையும்
வெகுநேரம் வேண்டிக்கொண்டேன்-அதையும்பாராமல் அங்கிருந்தரா
ஜாக்களெல்லோரும் சொன்னசொல்லையுங்கேளாமல் ஆக்ருஷமாய் என்
னைப்பார்த்து அடாபயலே நீஎனக்குப்பிறந்தவனல்லஉன்னைஉன்தாயார்
வைசியனுக்குப் பெற்றாளென்று விபரீதமாகச்சொன்னார்.

அதனாலெனக்குக் கோபம்பிறந்து சண்டைசெய்தேனென்று அ
ழுதுகொண்டுசொல்லஅதுகேட்டு உலுவசியும் சித்திராங்கதையும்விசா
ரப்பட்டு குமாரனைப்பார்த்து அப்பா உனக்குஇன்னம் அழுகையாநல்
லதுஎங்களுக்கு அக்கினிவளர்த்துவை யென்று சொன்னார்கள். அப்படி
யேபப்பிரவாகனும் மந்திரிகளுக்கு உத்திரவுபண்ணி அகிற்கட்டைகளு
ம்,சந்தனக்கட்டைகளும் வண்டிகளில்அழைப்பித்து நூரடிவிசாலம்பர
ப்பிகர்ப்பூரக்கட்டிகளும் சாம்பிராணிக்கட்டிகளும்பொதிபொதியாகப்
போட்டு-நெய்க்குடங்களும் எண்ணெய்க்குடங்களும் விஸ்தாரமாகஅ
ழைப்பித்து அக்கினியைமூட்டி பிர்ம்மாண்டகடாகபரியந்தம்கொழுந்
துவிட்டு திகுதிகுவென்று புகைந்துஎரியும்போது அதுகண்டு பப்பிர
வாகனும் ஆலோசனைசெய்து தகப்பனையுந் தாய்மாரையுங்கொன்ற ம
ஹாபாதகனாகிய நானிருக்கலாகாது, ஆதலால் நானே முதன்மையாகவி

ழுகிறேனென்றுஅந்த அக்கினியை மூன்றுதரம்பிரதக்ஷணம்பண்ணிஉ யரஎழும்பி குதிக்கப்போகின்றசமயத்தில் உலுவசியும்விசாரப்பட்டுசி த்திராங்கதையைப்பார்த்துஅடி அக்காபாக்கியவதீ நாம்புருஷனையுமிழ ந்துகடைசியில் பிள்ளையையுமிழந்துபோகலாகின்றது ஆகையால்நமது புருஷனை எப்படியாகிலும் பிழைக்கப்பண்ணிக் கொள்ளுவோமென்று சொல்லி-பப்பிரவாகனைப்பார்த்து நீ அக்கினியில் விழவேண்டாம் உன் தகப்பனை நான்பிழைக்கப்பண்ணுகிறேனென்றுசொல்ல அதுகேட்டு பப்பிரவாகனும்மாதாவினுடையசொல்லைக்கடவாமல்வந்துஉலுவசியை ப்பார்த்து -தாயே-ஏன் அக்கினிப்பிரவேசமாக வேண்டாமென்றுசொ ன்னாயென்றுகேட்க உலுவசியும் புத்திரனைப்பார்த்து ஓகுமாரகா நாங் கள்புருஷனை இழந்ததுமல்லாமல் உன்னையுமிழந்து எப்படிநிர்வகிக்கப் போகிறோம் நீ ஒன்றுக்கும் பயப்படவேண்டாம்நான் என்னுடைய த கப்பனுக்குச் சொல்லியனுப்பி மிருதசஞ்சீவி ரத்தினமும்அமிர்தகலச மும் அழைப்பித்துஉன்தகப்பனையும்பிழைக்கப்பண்ணுகிறேன் நீசந் தேகிக்கவேண்டாமென்று சொல்ல, அதுகேட்டு பப்பிரவாகனும் ஆன ந்தசமுத்திரத்தில்முழுகினவனாய் சந்தோஷமடைந்திருந்தான்.

அப்பொழுது உலுவசியும் நாககுமாரனை புண்டரீகனென்கிறத ன்சேவகனையழைத்து தன்காதிலணிந்திராநின்றபொன்னோலையைக்கழ ற்றிஅடையாளமாகக்கொடுத்து மாங்கல்யசூஸ்த்திரத்தையுங்கொடுத்து ஓய்புண்டரீகா,நீபாதாளலோகத்திற்குஅதிசீக்கிரமாகப்போய் என்பிதா வாகிய ஆதிசேஷனைக்கண்டு இவிடத்தில் நடந்த சவிஸ்தாரமெல்லாஞ் சொல்லிஅர்ச்சுனராஜனைப் பிழைக்கப்பண்ணுகிறதற்கு மிருதசஞ்சீ வி ரத்தினமும் அமிர்தகலசமும் வாங்கிவரச்சொன்னாளென்று சொல்லி சீக்கிரத்தில் வாங்கிக்கொண்டு வாவென்றுசொல்ல அவனும்அப்படியே நல்லதுஅம்மாவென்றுசொல்லிபின்னையும்உலுவசியைப் பார்த்துஓய்அ ம்மாஅர்ச்சுனனுடைய சிரசையும்சரீரத்தையுங்காத்துக்கொண்டிருக்கி றதுஉங்களுடையகடமை சஞ்சீவிகொண்டுவருகிறது என்னுடைய கட மையென்று சொல்லிவிட்டு மனோவேகத்திலும் அதிவேகமாகப்புறப் பட்டு பூமியைக்கண்டு அதல விதல சுதல நிதல ரசாதல தராதல பாதா ளமென்கிற சப்த்தலோகங்களுங்கடந்து அப்பால் அநேகமாயிரம்நாக குமாரர்களுடனும் வாசுகி தக்ஷகன்-கார்க்கோடகன்-மூர்க்கன்-திருதராஷ் டிரன் முதலான நாகமந்திரிகளுடனும் (ரத்நகஜிதமான) சிங்காசனத்தி லெழுந்தருளி ஆயிரம்பணாமுடிகளும், பிரகாசிக்கத்தக்கதாக கொலுவா யிருக்கிற ஆதிசேஷனைக்கண்டுசாஷ்டாங்கமாகத்தெண்டனிட்டெழுந்து நின்று ஐயா, மகானுபாவா, நாகேந்திரா, தேவரீருடைய குமாரத்தியண் டையிலிருந்து வந்தேன், இதோ அந்த அம்மாள்கொடுத்தபொன்னோ லையும், மாங்கல்யசூத்திரமும், பார்த்தீர்களாவென்று கொடுத்து பின்னை யும் அந்த நாகராஜனைப்பார்த்து ஐயா, நாகாதிபா, அஸ்த்தினாபுரத்தை

யாளுகிற தர்மபுத்திரரானவர் அஸ்வமேதயாகம்பண்ண நினைத்துக் குதிரையைவிட்டு அந்தக் குதிரையின்பிறகே அர்ச்சுனனையனுப்பினர்.

அந்தக்குதிரையானது மணிபுரத்துக்குச் சமீபமாகவந்தது கண்டு பப்பிரவாகனும் அந்தக் குதிரையைப்பிடித்துக்கட்டி அர்ச்சுனராஜனுடனே எதிர்த்து சண்டைபண்ணி ரணக்களத்திலே புத்திரபவுத்திராதிகளுடனும், அம்நக ராஜவர்க்கங்களுடனும், அந்த அர்ச்சுனராஜனைக் கண்டித்துவிட்டான். ஆகையினல் உலுவசியுந் துக்கப்பட்டு பொன்னுலையை அடையாளமாகக்காண்பித்து அறுந்துவிழுந்துபோன மாங்கல்ய சூஸ்த்திரத்தையும், எப்போதும்போலஅணியத்தக்கதாக அனுக்கிரகம் பெற்றுக்கொண்டு மிருதசஞ்சீவி ரத்தினமும், அமிர்தகலசமும், வாங்கிவரச்சொன்னென்றுசொல்ல அதுகேட்டு ஆதிசேஷனும் ஆச்சரியப்பட்டு, புண்டரிகனைப் பார்த்து ஓய் புண்டரீகா - நீ சொல்லுகிறசேதி எனக்குச் சந்தேகமா யிருக்கிறது, அர்ச்சுன னுடைதேது - அவன்பிள்ளை பப்பிரவாகன்கையில் மடிவதாவது, அவன் வீராதிவீரன் விஷ்ணு பக்தன் ஸ்ரீகைலாசபதியாகியபரமசிவனேடுபோராடிபாசுபதாஸ்த்திரம் பெற்றவன் அப்படிப்பட்ட ரணரங்கசூரனைப் பப்பிரவாகன் கொன்றுனென்றால் எனக்கு உண்மையாகத்தோற்றவில்லையென்றுசொல்ல, அதுகேட்டு புண்டரீகனும் ஐயா சேஷாதிபா, தேவரீர்சொன்னபடியே அர்ச்சுனன் வீராதிவீரன்றான் அவன் எதிரிவிறந்துபோனனென்றால் கங்காதேவிசாபம் சமீபித்தபடியினல் இப்படி முடிந்ததென்று சொல்ல, அதுகேட்டு ஆதிசேஷனும் அப்படியானல் மெய்தானென்று சம்மதித்து நமது குமாரத்திக்கு மாங்கல்யமுண்டாகச்செய்கிறதே நமக்குத் தருமமென்றுசொல்லி மிருதசஞ்சீவி ரத்தினமும் அமிர்தகலசமுங்கொடுத்தனுப்பும்படி சம்மதித்தான். அதுதெரிந்து திருதராஷ்டிரனென்கிற நாகமந்திரியும் ஆதிசேஷனைப்பார்த்து ஐயா, சேஷாதிபா நீர் என்னவேலைசெய்ய நினைக்கிறீர் நீர் செய்கிறவேலை எனக்குச் சம்மதமில்லை அதேதினலென்றால் இந்த புண்டரீகன் சொல்லைக்கேட்டு மிருதசஞ்சீவி ரத்தினத்தையும், அமிர்தகலத்தையுங்கொடுத்து பூலோகத்திற்கு அனுப்பலாமோ அல்லவென்று அனுப்பினல், அதுகள் மறுபடியும் நமதுலோகத்திற்கு வருமோ அதல்லாமலும் நமக்குக் கருடனல் பயமின்றி யிருக்கத்தக்கதாக பிரம்மதேவர் நியமித்துக் கொடுத்திருப்பதை நாம் ஒருத்தருக்குக் கொடுக்கலாமோ இதுகள் இருக்கின்றதினலல்லவோ நமதுலோகத்திற்குக் கருடன் வராமலிருக்கிறன் இதுகளை நீர் கொடுத்துவிட்டால் கருடன் கேள்விப்பட்டுவந்து நம்மையெல்லாங் கொல்லுவான். அப்போது நாம் எல்லாரும் நீர்ப்பாம்புபோல விழுந்துகிடக்கவேண்டும் - நம்மைக் கண்டவர்களெல்லாரும் தடியெடுத்து அடித்துக்கொல்லுவார்கள்.

அதல்லாமல் அர்ச்சுனனைப் பிழைக்கப்பண்ணுகிறதற்கு இது போகவேண்டுமோகபடநாடகசூஸ்த்திரவதாரியான ஸ்ரீகிருஷ்ணபகவ

யிருக்கிறார், அவராலாகாத காரியமிருக்கின்றதோ பூர்வத்தில் பிர்ம்மதேவரானவர் பசுக்களையுங், கன்றுகளையுங், கோபாலர்களுடைய பிள்ளைகளையுங்கொண்டுபோய் ஒருவருஷம் ஒளித்துவைத்திருந்தான். அதுதெரிந்து அவர்கள் வீடுகள்தோறும் பசுக்களாகவும், கன்றுகளாகவும், பிள்ளைகளாகவும், இருந்து ஒருவருக்குந் தெரியவொட்டாமல் லீலாவிநோதம் பண்ணின மஹாபுருஷன் அங்கே யிருக்கும்பொழுது அர்ச்சுனனுக்கு ஒருநாளுங் குறைவுவருகிறதில்லை ஆதலால் என்சொல்லை நம்பி இந்த புண்டரீகனைச் சும்மாபோகச் சொல்லுமென்றுசொல்ல அதுகேட்டு ஆதிசேஷனும், மெய்தானென்று சந்தோஷப்பட்டு, புண்டரீகனுக்குச் சொல்லியனுப்ப, புண்டரீகனும், நல்லதென்று பூலோகத்திற்குவந்து, உலுவசியையும் பப்பிரவாகனையுங் கண்டு அங்கே நடந்த சவிஸ்தாரமெல்லாஞ்சொல்ல அதுகேட்டு பப்பிரவாகனுங் கோபங்கொண்டு அந்த ஆதிசேஷனவன் தான் பூமியைச் சுமக்கிறேனென்று கெர்வித்திருக்கிறானல்லவா, அவன் பூமியைச் சுமக்காமற்போனாலும் போகட்டும் அவனுடைய கெர்வத்தைச சற்றுநேரத்தில் அடக்கிவைக்கிறேன் என்னுடைய பாணத்தினால் நாகங்களையெல்லாஞ் சாம்பலாக்கி விடுகிறேன் ஸ்ரீகயிலாசபதியாகிய பரமசிவன் ஒருவேளை என்னுடைய ஆபரணங்களைக் கண்டிக்கிறாயாவென்று, சண்டைக்குவந்தாலும், என்னுடைய புஜபலத்தினால் அந்த ருத்திரமூர்த்தியையும், பூசைபண்ணி அவரது ஆபரணங்களையெல்லாஞ் சின்னபின்னப் படுத்துகிறேனென்று பப்பிரவாகனும், ஆக்கிர வியாக்கிரம நிற்குரோதனைய் நவரத்நகஜிதமான ஒருதேரின்மேலேறிக்கொண்டு யுத்தசன்னுத்தனைய்ப்புறப்பட்டு ரதகஜதுரகபதாதிகளையுங் கூட்டிக்கொண்டு புண்டரீகனைப் பாதாளலோகத்திற்கு வழிகாட்டும்படி அவனை முன்னுதாக நடத்திக்கொண்டுபோய்ச்சேர்ந்து அவிடத்தில் தண்டுவிட்டிறங்கி ரணபேரிகை வெண்கலப்பேரிகை முதலானதுகளை முழக்குவித்து வெற்றிச்சங்கத்தையெடுத்து பம்பம்மென்று பூரித்தான்.

---

## ஆதிசேஷன்யுத்தம்.

அந்தச்சத்தத்தைக்கேட்டு ஆதிசேஷனும் திகிலடைந்து மனங்கலங்கி சண்டைக்கு ஆயுத்தப்பட்டு பப்பிரவாகன் வந்துவிட்டானேஅவன் இனி நம்மைக் கொல்லாமல் விட மாட்டான் அதற்குநாம் என்ன செய்யப் போகிறோமென்று விசாரப்பட்டு இந்த திருதராஷ்டிரன் குரூரகர்ம்மியாய் நாம்கொடுக்கப்போகிற மிருதசஞ்சீவி ரத்தினத்தையும் அமிர்தகலசத்தையும் கொடுக்கவேண்டாமென்று தடுத்ததினாலல்லவா இத்தனைவிபரீதம்வந்து நேரிட்டதென்று நினைத்து மந்திரிகளைப்பார்த்து ஓய்மந்திரிகளே நீங்கள் சண்டைக்குப் போங்கோளென்றுகோபமாகச்சொல்ல அதுகேட்டு தட்சகன் கார்க்கோடகன் - திரு

தராஷ்டிரன்முதலான நாகமந்திரிக ளெல்லோருங்கூடி அந்த பப்பிர வாகன் எம்மாத்திரம்அவனை நம்முடையவிஷாக்கினியினால் தகித்துவிட லாமென்றுஒருவர்க்கொருவர்வல்லமையாகப்பேசிக்கொண்டுஅவரவர்கள் சேனைகளுடனேபுறப்பட்டுயுத்தசன்னுத்தர்களாய்வந்து பப்பிரவாகனு டனேஎதிர்த்தார்கள் அதுகண்டுபப்பிரவாகனுடைய சேனைகளெல்லாம் மகாஆக்ருஷித்துடனேஎதிர்த்துஅதிதீட்சண்ணியமாகியசஸ்த்திரஅஸ்த் திரங்களினால்நாகசேனையெல்லாந்துண்டந்துண்டமாய்ச்சின்னபின்னப் படுத்துகையில் அதற்கு நாககுமாரர்கள்பின்னிடாமல் ரோஷித்துவேஷ ங்களுடனே தங்களுடையவிஷாக்கினியால் ரதங்களையும் ரதக்காரர்களை யும்பஸ்மீகரப்பத்தி ஆனைகளையும் ஆனைப்பாகர்களையும் அதம்பண் ணிகுதிரைகளைச் சாம்பலாக்கி ரவுத்தர்களைக்கொன்று காலாள்களையெல் லாம் பொடியாக்கி இந்தவிதமாக நாககுமாரர்கள்மிஞ்சி பப்பிரவாகனு டைய சேனைகளையெல்லாந் தும்சப்படுத்தும்பொழுது சேனைகளெல் லோரும் பின்வாங்கி ஓடத்தலைப்பட்டார்கள்அதுகண்டு பப்பிரவாகனு ம் ரோஷசாம்பிராட்சதனாய் வில்லைக்குணத்தொனிபண்ணி அந்தவில்லி னிடமாகஅக்கினியைப்போலஅதிதீட்சண்ணியமான பாணங்களையெடு த்துப்பிரயோகித்துநாகங்களுடையபணமுடிகளைப்பீறிமாணிக்கங்களை யுதிர்த்துவாய்களைக்கிழித்து விஷங்களையடக்கி துண்டந் துண்டமாகக்க ண்டித்து நாகசேனைகளையெல்லாம் அதமாக்கிவிட்டான்.

அதுகண்டு திருதராஷ்டிரன்முதலான மந்திரிகளெல்லோரும் ஓடி ப்போகிற நாகசேனைகளையெல்லாம் ஓடவேண்டாமென்று நிறுத்திமறு படியும் அவர்களைச்சண்டைக்கனுப்பி தாங்களும்ஆக்ருஷித்துடனேவந் து பப்பிரவாகனுடையசேனைகளுடனே எதிர்த்துநின்றார்கள் அதில் தி ருதராஷ்டிரனும்பப்பிரவாகனைப்பார்த்துஓய்ராசகுமாரகா நீ உன்தகப் பனைக்கொன்றுவிட்டுதிரும்பவும் அவனைப்பிழைக்கப்பண்ணலாமென் றுநினைத்துவந்தாயோ- அதுஎனக்குச்சம்மதமல்ல உன்தகப்பனைக்கொ ன்றுவிட்டதே எனக்குமெத்தவுஞ் சந்தோஷமாயிருக்கின்றது நீதிரும் பவும் எழுப்பலாகாது அஃதெதினாலென்றால் நீ உங்கள் குலத்திலே மு ன்பின்னடந்தவழக்கப்படிசெய்தாய் நீ நூதனமாகஒன்றுஞ்செய்யவில் லைஅஃதெப்படியென்றால்உன் தகப்பனாகியஅர்ச்சுனனானவன்பாரதயுத் தத்திலே சண்டைசெய்துவஞ்சனையினால் பிதாவுக்குச் சரியான கர்னம ஹாராஜனைக்கொன்றான் அதல்லாமலும்பீஷ்மர்- துரோணர்-கிருபர்-மு தலானவர்களையும் பெரியோர்களென்றுசற்றாகிலும் எண்ணிப்பாராமல் கொன்றுவிட்டான்ஆகையினால்உன் தகப்பன்செய்தபிரகாரம்நீயும்செய் தாய்இதுநல்லகாரியந்தான்இதுவுமல்லாமல்பூலோகத்தின்கண்பிதாவான வன்எந்தப்படிநடந்தானோ எந்தப்படிகீர்த்தி வகித்துக் கொண்டானோ அந்தப்படியேபுத்திரனானவன் நடக்கவேண்டுமென்றுதர்ம்மசாஸ்த்திர ங்களுஞ்சொல்லுகின்றதுஆதலால் நீயும்அந்தப்படி நடந்துக்கொண்டா ய்அதைக்குறித்துஉனக்கும்விசாரம்வேண்டாம் நீசுகமாய்ப்போய் அ

ஸ்தினபுரத்திற்குப்பட்டாபிஷேகனாய்சந்தோஷகரமாய்ராச்சியபரிபாலனம்பண்ணிக்கொண்டிருமென்று சொன்னான்.

அதுகேட்டு பப்பிரவாகனும்புன்சிரிப்பாகச்சிரித்து திருதராஷ்டிரனைப்பார்த்து ஓய்நாகமந்திரியே நீர்சொன்னவார்த்தை மெய்யேயாம் தகப்பன்செய்தபடி பிள்ளைசெய்யவேண்டுமென்றுசொன்னதும் உண்மைவசனந்தான் அஃதெப்படியென்றால் பூலோகத்தில் எங்கள்தாயாதியாகியதிருதராஷ்டிரனானவன் எங்களுக்குஉரிமையாகியபாதிராச்சியத்தைக்கொடாமல் அட்டிசெய்தபடியினால் என்தகப்பனாகியஅர்ச்சுனராசன் தன்னுடையபாணாக்கினியினால் அவனுடையவம்சத்தையெல்லாம்வேரறுத்து அஸ்த்தினபுரத்தையுங் கொள்ளைகொண்டான்அந்தமுறையினால் நானும்உம்முடையவம்சத்தையெல்லாம் என்னுடைய பாணாக்கினியினால் வேரறுத்து மிருதசஞ்சீவி ரத்தினத்தையும் அமிர்தகலசத்தையும்ஆதிசேஷனிடத்தில்வாங்கிக்கொண்டுபோகிறேன் சற்றேபார்த்துக்கொண்டிருமென்றுசொல்லி தன்வில்லினிடமாக அனந்தமாயிரம் பாணங்களைப்பிரயோகம்பண்ணி அந்ததிருதராஷ்டிரன்முதலான நாகமந்திரிகளெல்லோரையும் உதிரமயமாக்கி மெத்தவும்நோகப்பண்ணினான் அதற்கு அந்தநாகமந்திரிகளும்பின்வாங்காமல் தங்கள்சேனைகளோடும் சேர்ந்து விஷங்களைக்கக்கிக்கொண்டு அந்தவிஷாக்கினியினால் பப்பிரவாகனுடைய சேனைகளையெல்லாங் கொல்லுகையில் அதுகண்டு பப்பிரவாகனும் ஆக்கிரவியாக்கிரமநிக்குரோதனாய் மீசைபடபடவென்றுதுடிக்கும்படி பற்களை நெறநெறவென்று கடித்துக்கொண்டு வில்லைக் குணத்தொனிபண்ணி அந்தவில்லினிடமாகஒருநாகாஸ்த்திரத்தைஎடுத்துத்தொடுத்துப்பிரயோகம்பண்ணினான்.

அந்தஅஸ்த்திரத்தில் அநேகமாயிரம்கலைமான்கள்பிறந்து அந்தசர்ப்பங்களையெல்லாம்கண்டதுண்டஞ்செய்தும்மிதித்தும்-கிழித்தும்-அடித்தும்-கடித்தும்-இந்தவிதமாய்க் கொல்லுகிறபோது அந்தசர்ப்பங்களெல்லாம்பயந்து பாதாளத்திலிராமல் உயரஎழும்பி வரத்தலைப்பட்டது அதுகண்டுபப்பிரவாகனுந்தன்னுடையவில்லினிடமாகஒருகிருதாஸ்த்திரத்தைஎடுத்துத்தொடுத்துப்பிரயோகம்பண்ணினான்-அந்தஅஸ்த்திரத்தில்கோடானுகோடி-பருந்துகள்-கூளிகள்-டேகைகள்-பிறந்துஉயரஎழும்பிவருகிற சர்ப்பங்களையெல்லாம் உரித்துவாழைப்பழம்போல்விழுங்கத்தலைப்பட்டது-அதுகண்டு அந்தசர்ப்பங்களெல்லாம்நாம்எங்கேபோய் ஒளிப்போமென்றுமனோதுக்கத்துடனே புதருகளிலும்பொந்துகளிலும், நுழைந்துக்கொள்ள, அதுதெரிந்துபப்பிரவாகனும்ஒருநீலகண்டாஸ்த்திரத்தைஎடுத்துத்தொடுத்துப்பிரயோகம்பண்ணினான்அந்த அஸ்த்திரத்தில் அநேகமாயிரம்மயில்கள்பிறந்துநாகசர்ப்பங்களையெல்லாம் விழுங்கத்தலைப்பட்டது, அதுதெரிந்து அந்த சர்ப்பங்கள் திரும்பவும் வளைகளிலும் சுவரின் பிளவுகளிலும் நுழைந்துக்கொள்ள அப்

போது பப்பிரவாகனும் தன்னுடையவில்லினிடமாக மூஷிகாஸ்த்திரத்
தை எடுத்துத்தொடுத்துப் பிரயோகம்பண்ணினான்.

அதில் அளவிறந்த கிரிப்பிள்ளைகள் பிறந்து சந்துகளிலும் பொந்து
களிலும் போய் ஒளிக்கின்ற சர்ப்பங்களை யெல்லாம் துண்டந் துண்ட
மாகக் கண்டிக்கத்தலைப்பட்டது -அதற்கு நிர்வகிக்கமாட்டாமல்சர்ப்ப
ங்களெல்லாம் கவலையடைந்து நாம் பூமியிலிருந்தாலும் கலைமான்களு
டைய உபத்திரவம் பொறுத்துமுடியவில்லை ஆகாசத்திலெழும்பினாலு
ம் பருந்துகள் கூளிகளுடைய உபத்திரவம் பொறுத்துமுடியவில்லை
அல்லவென்று புதறுபொந்துகளில் நுழைந்துக்கொண்டாலும் கிரிப்பி
ள்ளைகள் இழுத்துக்கொல்லுகின்றது- இனி நாம் எந்தயிடத்திற் போயி
ருப்போமென்று ஆலோசித்து வளைகளில் புகுந்துக்கொண்டிருந்தது
கள் - அதுகண்டு பப்பிரவாகனுஞ்சிரித்து தன்னுடைய வில்லிமேலமது
வாஸ்த்திரத்தை எடுத்துத்தொடுத்துவிட்டான் அதில் மேகங்கள் பிறந்
து ஒரு சாமபரியந்தம் ஆனைத்தும்பிக்கையிலிருந்து ஜலம் விழுவது
போல தேன்மழையைப்பொழிந்தது- பின்னையும் பப்பிரவாகன் பிபீ
லிகாஸ்த்திரத்தை எடுத்துத்தொடுத்துவிட்டான்அதில்அனந்தமாயிரம்
சிற்றெறும்புகள் கட்டெறும்புகள் பேயெறும்புகள் பிறந்து அந்தத்
தேனுடனே கலந்து சர்ப்பங்களைச் சூழ்ந்துகொண்டு சாம்பலாக எரித்
துவிட்டது- அதனால் இறந்ததுபோக நின்றசர்ப்பங்களெல்லாம் பயந்
து ஓடிவந்து ஆதிசேஷனைக்கண்டு தெண்டனிட்டு ஓய்-ஐயா அனந்த
புருஷா' எங்களைக்காப்பாற்றிரட்சியும்இப்பொழுதுபப்பிரவாகனுடைய
பாணமானது எங்களை எந்தவிடத்திலும் நிற்கவொட்டாமல் துறத்திக்
கொண்டுவருகின்றது நாங்கள் எங்கேபோயிருப்போம் என்னசெய்யப்
போகிறோம் அந்த துன்மார்க்கனான திருதராஷ்டிரன் சொன்ன வார்த்
தைக்குத் தேவரீர் செவிகொடுத்தபடியினால் எங்களுக்கு இத்தனை ஆப
த்துவந்து சம்பவித்தது நாகசேனைகளெல்லாம்மடிந்துபோய்விட்டது
ஆதலால் தேவரீர்இப்போதாகிலும் எங்கள்பேரில்தயவுசெய்துமிருதச
ஞ்சீவிரத்தினத்தையும் அமிர்தகலசத்தையும்பப்பிரவாகனுக்குக்கொண்
டுபோய்கொடுத்து எங்களைக்காப்பாற்றி ரட்சியுமையாவென்றுவேண்டி
க்கொள்ள,அந்தவார்த்தைகளையெல்லாம் ஆதிசேஷன்கேட்டு திகிலடை
ந்து திருதராட்டிரன்பேரில் எரிந்து விழுந்து நாம் முன்னே தானே
புண்டரீகன்கையிற் கொடுத்தனுப்பாமற் போனபடியினால் இத்தனை
அவமானம் வந்ததென்று அதிசீக்கிரமாக எழுந்திருந்து மிருதசஞ்சீவி
ரத்தினமும் அமிர்தகலசமும் எடுத்துக்கொண்டு அதுவுமல்லாமல்பப்
பிரவாகனுக்குவெகுமானமாய்மாணிக்கக்கிரீடமும் ரத்தினாபரணங்களு
ம்,மாணிக்கப்பதக்கங்களும்,எடுத்துக்கொண்டுவந்து பப்பிரவாகனைக்க
ண்டு தான்கொண்டுவந்த வஸ்த்துக்களையெல்லாம் அவனுக்கு முன்கா
ணிக்கையாகவைத்து அவனை மார்போடு தழுவிக்கொண்டு ஐயா பப்பிர

வாகனு, நாங்கள் உன்னுடைய பராக்கிரமத்தையறியாமல் எங்களுடைய
அஞ்ஞானத்தினால் அபசாரம்பண்ணினோம்.

அந்தப்பிழையைப்பொறுத்து உன்னுடைய கோபத்தை யடக்கி
எங்களைரக்ஷிக்கவேண்டுமென்று வேண்டிக் கொள்ள-அதுகண்டு பப்பி
ரவாகனுஞ்சிரித்து ஆதி சேஷனைப்பார்த்து ஐயா - பாட்டா அடிமேல
டியடித்தால் அம்மியும் நகருமென்றுஉலகத்தார் வழக்கமாகச்சொல்லு
கின்றவார்த்தையானது இப்போது உங்களிடத்தில்நிஜமாச்சுதென்றுப
ரிகாசமாகச்சொல்லி, பின்னையும் ஆதிசேஷனுக்கு நமஸ்க்காரம்பண்ணி
அவருடையஆசீர்வாதமுங்கைக்கொண்டு சகலசேனா சமேதனாய் அந்
த ஆதிசேஷன் முதலான நாகசேனைகளுடனும் புறப்பட்டு பாதாள
லோகத்தைவிட்டு பூலோகத்திற்குப்போகையில் அதுதெரிந்து (திருத
ராஷ்டிரனென்கிற நாகமந்திரியானவன்) முன்னேநினைத்த மச்சரம் வி
டாமல் அதிசீக்கிரமாகத் தன்னுடைய வளவிற்குவந்து தன் குமாரர்க
ளாகியதுர்ப்புத்தி யென்கிறவனையும் துர்ப்பாவ னென்கிறவனையும் அ
ழைத்து ஓய்குமாரர்களே நீங்களிருவரும் என்னுடைய வார்த்தையை
மறுத்துவிடாமல் அதிவேகமாய்பூலோகத்திற்குப்போய்ரணக்களத்தில்
விழுந்துகிடக்கிற அர்ச்சுனராஜனுடையசிரசையெடுத்துக்கொண்டுகரு
டன்வராத இடமாகப்பார்த்து ஒளித்துவைத்திருங்கோள்-நீங்கள் அப்
படிசெய்வீர்களானால் அர்ச்சுனராசன் பிழைக்க மாட்டான் - அந்த
அர்ச்சுனன்பிழையாதவகைக்கேஎன்னாலாகிய தந்திர-யுக்திகள் அனேக
மாகச்செய்கிறேன்-அதுகளெல்லாம் வீணாகிப்போய் விட்டது அதோ
பார்த்தீர்களோ-ஆதிசேஷன்முதலானநாகசேனைகளெல்லோரும் பப்பி
ரவாகனுடனே சமாதானமாய்ச்சேர்ந்துக்கொண்டு பூலோகத்திற்குப்
போகிறார்கள். நானும்அவர்களோடு சேர்ந்துபோகவேண்டும், ஆதலால்
அதற்குமுன்னமே நீங்கள்போய் உங்களுக்குச் சொன்னபடிசெய்யுங்
கோளென்று சொல்லிவிட்டு திருதராஷ்டிரனும் சீக்கிரமாகப்போய் ஆ
திசேஷனுடனே கூடிக்கொண்டு நடந்தான். அந்த துர்ப்புத்தி, துர்ப்
பாவனென்கிற இரண்டுபேருந் தங்களுடையபிதாவின் சொற்படியே
பூலோகத்திற்குஅதிவேகமாகவந்துதங்களுடையமாய்கையினால் ஒருவ
ருக்குந் தெரியவொட்டாமல் அர்ச்சுனனுடைய சிரசை எடுத்துக்கொ
ண்டுகருடன் வரக்கூடாத இடமாகப்பார்த்து சத்தசமுத்திரத்திற்குஅ
ப்புறத்தில் பக்தப்பிரியமகா முனீந்திரருடைய ஆசிரமத்திற்கொண்டு
போய் ஒளித்துவைத்திருந்தார்கள்.

---

அர்ச்சுனன் இறத்தலைக்காண்க

## ஸ்ரீகிருஷ்ணதேவர்எழுந்தருளியது.

இவடத்தில்இப்படியிருக்க அங்கேஅஸ்த்தினாபுரத்தில் குந்தாதே
வியானவள் ஒருகனவுகண்டெழுந்திருந்துமகா துக்காக்கிராந்தியாய் ஸ்ரீகி

ருஷ்ணபகவான்சயனித்திருக்கிறபள்ளியறைக்குப்போய்அந்தபகவானைத்தட்டியெழுப்பி ஓய்கிருஷ்ணா நான்இன்றையதினம்என்றுங்காணாதஒருபொல்லாதகனவுகண்டேன்-அஃதென்னவென்றால், உன்மைத்துனனாகிய அர்ச்சுனனானவன்தலையின்மேல எண்ணெயிட்டுக்கொண்டுசரீரமுழுதுஞ் சாணியைப்பூசிக்கொண்டுசிகப்புவஸ்திரமும் சிகப்புசந்தனமுந்தரித்துக்கொண்டு கழுதையின்பேரிலேறிக்கொண்டு தெற்குமுகமாய்ப்போகிறதுபோலக்கண்டேன். ஓய்சுவாமி, அர்ச்சுனனுக்கு ஏதோ ஆபத்துநேரிட்டதுபோலிருக்கின்றது எனக்கொன்றுந் தோற்றவில்லை என்வயிற்றைக்கலக்கின்றது-மனந்துகிலாயிருக்கின்றது-ஓய் ஆபத்பாந்தவா, அநாதரக்ஷகாவென்றுசொல்ல அந்தவார்த்தைகளையெல்லாங்கபடநாடகசூஸ்த்ராவதாரியான ஸ்ரீகிருஷ்ணபகவானுங்கேட்டு தம்முடையஞானதிருஷ்டியினால் பார்த்து-ஆ-ஆ-அர்ச்சுனனுக்குமோசம்வந்ததென்றுதெரிந்து அர்ச்சுனனுடையசங்கதியைச்சீக்கிரத்திற்போய்அறியவேண்டுமென்றுகருடாழ்வானை அழைப்பித்து அந்தக்கருடாழ்வான்பேரில்தாமும்வீமசேனனும்-குந்திதேவியும்- அசோதையும்-தேவகி தேவியாருமாகஏறிக்கொண்டு அதிவேகமாகஒருநாடிக்குள்ளேமணிபுரத்திற்குச் சமீபமாகவந்து கருடாழ்வானை விட்டிழிந்து அந்த கிருஷ்ணமூர்த்தியானவர் வீமசேனன்-குந்திதேவி-தேவகிதேவி -அசோதை-இவர்களுடனேபுறப்பட்டு ரணக்களமுழுதுஞ் சுற்றிப்பார்க்கும்பொழுது வீமசேனனும்ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியைப்பார்த்துஐயர்-கிருஷ்ணாஇதுஎன்னகாரணமெனக்கு ஒன்றுந்தெரியவில்லை பிரமித்தாற்போலிருக்கின்றதென்றுசொல்லஅதுகேட்டு ஸ்ரீகிருஷ்ணபகவானும் வீமசேனனைப்பார்த்துஓய்வீமசேனாஇதுயுத்தகளம்அதோமணிபுரமிருக்கின்றதுஅந்தப்பட்டணத்தை அரசாக்ஷிசெய்கின்ற பப்பிரவாகனென்னுநம்முடையகுதிரையைப்பிடித்து சகலசேனைகளையும்அதம்பண்ணி, அதுவல்லாமல்விஷ்வகேதுவையும் அர்ச்சுனனையுங்கொன்றுவிட்டான் அதோபார்த்தாயோபிரத்தியும்னன் முதலான துரைகளெல்லாரும் மூர்ச்சையாய்விழுந்து கிடக்கிறார்களென்று பின்னையும்அந்தபகவான் ரணக்களமுழுதுஞ் சோதித்துக்கொண்டுவருகையில் அதுதெரிந்து சித்திராங்கதையும் உலுவசியும்கண்ணீர்ஆறாய்ப்பெருகும்படிகோவென்றசத்தமாய் அழுதுக்கொண்டு ஸ்ரீகிருஷ்ணபகவானுடையபாதத்தில்வந்துவிழுந்துநமஸ்க்காரம்பண்ணிஅப்பால் குந்திதேவியையும் தேவகிதேவியையுங்கண்டு அவர்களுடையபாதத்திலும்வந்துவிழுந்துநமஸ்க்காரம்பண்ணிஅழுதார்கள் அதுகண்டுஅவர்களுங் கோவென்று முறையமிட்டழுதார்கள்.

அப்போது ஸ்ரீகிருஷ்ணபகவானும் வீமசேனனும் அர்ச்சுனனுடைய சரீரத்தைக்கண்டு மூர்ச்சையாய் விழுந்துசற்றுநேரத்தில் தெளிந்து அதில் ஸ்ரீகிருஷ்ணதேவரானவர் அர்ச்சுனனைப்பார்த்து ஆ,வீராதிவீரா,ஆ-வீரப்பிரதாபா, ஆ, தோழா, ஆ-அர்ச்சுனா, நீஎங்கே யடங்கி

ளுய்எங்கேபோயொளித்தாய் நீ என்னுடனே பேசப்போகாதோஇது வரையில் நீ ஒருநாளும் இப்படிப்பட்ட ஆபத்தையடைந்த தில்லையே, நீஇல்லாமலிருக்கிறது சூரியனில்லாத பகற்போலவும், சந்திரனில்லாத பட்டணம்போலவும், தாமரையில்லாத தடாகம்போலவும், அரசனில்லாத கொலுவைப்போலவும்பாழடைந்திருக்கின்றதே நீவீரலட்சுமியுடனே போகித்துக்கொண் டிருக்கிறாயேஇதுஉனக்குஞாயமாயிருக்கின்றதோ சுபத்திரையுடனும் துரௌபதையுடனும்போகிக்கலாகாதோஉன்னுடைய தாயாரும் உன்னுடையஸ்திரீகளும் உன்னைக்காணமல் எந்நேரமும் அழுகின்றார்களே நீவந்து அவர்களுடைய துக்கத்தை நிவர்த்திசெய்ய மாட்டாயோ உனக்கு அந்தபாவியான கங்காதேவியினுடைய சாபம் எப்படிவந்துநேரிட்டது உன்வில்வித்தை எங்கே அடங்கிவிட்டது ஓய் மைத்துனனென்று அநேகவிதமாகச்சொல்லி இரண்டுகண்களாகிய தாமரைகளிலும் ஜலமானது தாரைதாரையாயொழுகும்படி அழுகிறதுகண்டுவீமசேனனும் மனோதயிரியம்விடாமல் கிருஷ்ணமூர்த்தியைப்பார்த்துஓய் திருட்டுகிருஷ்ணா நீர் லோகநாடகநடிக்கின்றீர் நீர் அழுகிறதைப் பார்த்தால் எனக்கு மெத்தவும் ஆச்சரியமாயிருக்கின்றது அர்ச்சுனன் பிழைக்கவேண்டுமென்கிற எண்ணம்உமக்கிருக்குமானால் அர்ச்சுனனென்று ஒருதரம் அழைப்பீராகில் அர்ச்சுனனும்நித்திரைசெய்தவன்போலஎழுந்துவருவான் அதற்குளெவ்வளவுஞ் சந்தேகமில்லை நீர்பிடித்தகாரியம்முடியாமற்போகுமோ நீர்வேண்டுமென்றால்மலையைத்துரும்பாக்குவீர் துரும்பைமலையாக்குவீர் உம்முடையமகிமையைத்தேவேந்திராதிதேவர்களாலும் அறியக்கூடாதென்றால்என்னால் அறியக்கூடுமோ இதுவுமல்லாமல்முன்னேசந்திபனென்கிறஒருபிராமணப்பிள்ளையை அழைப்பித்துக்கொடுத்த உமக்குஇந்தஅர்ச்சுனனை அழைப்பிக்கிறதுஅருமையோ- ஆசையினால் இந்தலோக நடனத்தைவிட்டுஉமதுபக்தனான அர்ச்சுனனையெழுப்பிவிடும்சுவாமியென்றுவீமசேனன்சொல்ல அந்தவார்த்தைகளையெல்லாங்கேட்டு கிருஷ்ணதேவரும்புன்சிரிப்பாகச்சிரித்துவீமசேனனைப்பார்த்து ஓய் வீமசேனா-உன்னுடையஎண்ணம்அப்படிக்கிருந்தால் அந்தப்படியே நடக்குமென்று சொல்லி அப்பால் விஷ்வகேதுவினுடைய சிரசையும் சரீரத்தையும் பார்த்து முட்டிக்கொண்டு அழுகின்ற குந்திதேவி முதலான ஸ்திரீஜனங்களுடைய துக்கத்தைத் தணித்து பிற்பாடு அங்கிருக்கின்ற சேனைகளால் அவிடத்தில் நடந்த சேதிகளையெல்லாஞ் சவிஸ்த்தாரமாகக்கேட்டுத் தெரிந்துக்கொண்டு இருட்டுவேளையானபடியினால் அர்ச்சுனனுடைய சிரசைத் தேடிக் காண்கிறத்திற்குக் கூடாமல் ஆலோசித்துக்கொண்டிருக்கும் பொழுது, தேவேந்திரனனவன் தன்புத்திரனாகிய, அர்ச்சுனன்தலையைக் கண்டெடுத்துவந்து உதயகிரியின்மேல் வைத்தானென்று சொல்லும்படியாகச் சூரியபகவானும் உதயமாகினர்.

அந்தச்சமயத்தில் பப்பிரவாகனும் ஆதிசேஷன் முதலான நாக

சேனைகளுடனே சகலமேளவாத்தியங்களும், தாம்தாமென்று முழங்கத்தக்கதாக, மஹாவைபவத்துடனேவந்து கிருஷ்ணபகவான் முதலானவர்களைக்கண்டு சந்தோஷித்துமஹாபயபக்தி விசுவாசத்துடனே கிருஷ்ணமூர்த்தி யண்டைக்குவந்து அவருடைய திருப்பாதத்தில் விழுந்து கோவென்றழுது பின்னையும் அந்த பகவானைப்பார்த்து, ஓய் கோபாலசூடாமணி தேவரீருடைய சந்நிதானத்திற்குமுன் பிதாத் துரோகியாகியநான்வந்துநிற்கின்றேனாதலால், தேவரீருடையதிவ்யாஸ்த்தத்தினிடமாக விளங்குகின்ற சக்கிராயுதத்தினால் -என்சிரசைக்கண்டித்து ரட்சியும் ஐயாவென்று தாபந்திரியத்துடனே சொல்ல அந்த வார்த்தைகளையெல்லாம் கிருஷ்ணபகவான் கேட்டு - மனமிரங்கி, பப்பிரவாகனையெடுத்து மார்போடணைத்துக்கொண்டு - ஓய் பப்பிரவாகா நீவிசாரப்படவேண்டாம், உன்பேரில் குற்றமில்லை- அந்தசங்காதேவியினுடையசாபத்தினால் இப்படிவந்து நேரிட்டதென்றுசொல்லி ஆதரணை செய்தருளினார். பின்பு பப்பிரவாகனும், வீமசேனனுடைய பாதத்தில் விழுந்து நமஸ்க்காரஞ்செய்து ஐயா, புண்ணியபுருஷா தகப்பனைக்கொன்றபாதகனாகிய, என்னுடையதலையை உம்முடைய கதாயுதத்தினால் உடையுமென்று விசாரமாகச்சொல்ல, அதுகேட்டுவீமசேனனும், பப்பிரவாகனையெடுத்து மார்போடணைத்துக்கொண்டு முகத்தைத் துடைத்து - ஓய் புத்திரா நீஏன் விசாரப்படுகிறாய், உன்னால் ஒருகாரியமும்நடக்கவில்லையேயென்று பிரியவசனமாகச்சொல்லி துக்கத்தைத் தீர்த்தான் அப்பொழுது ஆதிசேஷன்வந்து கிருஷ்ண மூர்த்தியைக் கண்டு நமஸ்க்காரம்பண்ணி ஓய்புராணபுருஷா-கோபிகாரமணா, அச்சுதாவென்றுசஹஸ்ரநாமங்களாலும்அநேகவிதமாகத் தோத்திரஞ்செய்து- தான் கொண்டுவந்த மிருதசஞ்சீவி ரத்தினத்தையும் அமிர்த கலசத்தையும் அந்தபகவானுக் கெதிரேவைத்து - ஓய்புருஷோத்தமா இந்தட்சணமே அர்ச்சுனனையும் விஷ்வகேதுமுதலான சேனைகளையும் எழுப்பி ரட்சியும் ஐயாவென்று விண்ணப்பஞ்செய்தான் அதுகேட்டு அந்த பகவானும் அப்படியேநல்லதென்று சம்மதித்து அர்ச்சுனனுடையசிரசைத்தேடிக்காணாமல் ரணக்களமுழுதும் சோதித்துப்பார்த்து இல்லை யென்று நிச்சயம்பண்ணிக்கொண்டு அர்ச்சுனனுடைய தலைஎங்கேபோய்விட்டதோ எவர்களெடுத்துக்கொண்டு போனார்களோ என்னகாரணமோநாம் இனி அர்ச்சுனனைக் காணப்போகிறோமோவென்று தாபந்திரியமாகச் சொல்லுகின்ற - ஸ்ரீகிருஷ்ணபகவானுடையவார்த்தைகளை ஆதிசேஷனும் வீமசேனனுங் கேட்டு - ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தியைப் பார்த்து ஐயா - ஜநார்த்தனா தேவரீர் என்னயோசனை செய்கிறீர் அந்தத்தலை யெங்கேயிருந்தபோதிலும் உம்முடைய மகிமையினால் அழைப்பிக்கவேண்டுமென்றுசொல்ல,

அதுகேட்டு அந்தபகவானும் அப்படியே நல்லதென்று - அங்கிருக்கின்ற சகலசேனைகளும் அறியத்தக்கதாக அவர்களைப்பார்த்து நான்

நித்தியபிரமசாரியாயிருப்பது உண்மையானால் அர்ச்சுனனுடைய த
லையானது - எங்கே யிருந்தபோதிலும் இங்கேவரக்கடவதென்றுபிரதி
க்கினை செய்தவளவில்-சத்தசமுத்திரங்களுக்கும் அப்புறத்திலிருந்தஅ
ர்ச்சுனராஜனுடைய தலையும் - கிறு கிறு வென்று ஆகாய மார்க்கத்தி
லெழும்பி ஓய்கிருஷ்ணா - வாசுதேவா - பரமாத்துமா-பரந்தாமா-அப்
பிரமேயா - ஹரிமுகுந்தா - அடைக்கலம் - அடைக்கலமென்றுமுறை
யிட்டுக்கொண்டு ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய பாதத்தில்வந்து விழுந்த
து - அவிடத்தில் அந்தச் சிரசை எடுத்துக் கொண்டு போய் ஒளித்து
வைத்திருந்த நாககுமாரர்க ளிருவருடைய தலையும் ஆயிரஞ்சுக்கலாக
வெடித்து - இவிடத்தில் ஸ்ரீ கிருஷ்ணபகவானும் தம்முடைய பாதத்
தில்வந்து விழுந்த அர்ச்சுனனுடைய சிரசைக் கையில் எடுத்துக்கொ
ண்டு தமது பீதாம்பரத்தினால் முகத்தைத்துடைத்து சிகையை முடி
ந்து மீசையைத்திருத்தி-கிரீடத்தையும்நன்றாயமர்த்தி பிற்பாடு அந்தச்
சிரசைநாட்டி அர்ச்சுனனுடைய சரீரத்தின்பேரில் அமிர்தத்தைத்தடவி
மிருதசஞ்சீவி ரத்தினத்தால் ஒருதரம் துடைத்த மாத்திரத்தில் அர்ச்
சுனராசனானவன் ஆயாசமாய் மூர்ச்சித்திருந்தவன்போல் எழுந்திருந்
தான் பின்பு விஷ்வகேதுவினுடைய சிரசையும்அவன்சரீரத்திற்பொரு
த்திவைத்து மிருதசஞ்சீவி ரத்தினத்தினால் துடைத்தமாத்திரத்தில் வி
ஷ்வகேதுவும் எழுந்திருந்தான். அப்பொழுது ஸ்ரீகிருஷ்ணபகவானும்
அந்த மிருதசஞ்சீவி ரத்தினத்தைத் தமது திவ்யாஸ்த்தத்தினாற்பிடித்
துக் காண்பித்த மாத்திரத்தில் ரணக்களத்தில் அடிபட்டுநொந்து மூர்ச்
சையாய் விழுந்துகிடக்கின்ற பிரத்தியுமனன், அனுசாலுவன், எவ்வர்ணா
சுவன், நீலத்துவசன், அம்சத்துவசன், சாத்தகி, கிருதவர்ம்மன், மேகவ
ர்ணன், சுவேகன், முதலான த்ராதுனாகளெல்லாரும் எழுந்திருந்தார்க
ள். பின்னையும் ரதகஜதுரகபதாதிகளெல்லாம் எழுந்திருந்ததுகள் அப்
பொழுது தேவர்களெல்லாம் புஷ்பவருஷம் பொழிந்தார்கள். தேவதுந்
துமியும் திம்திம்மென்று முழங்கியது குளிர்ந்த காற்றடித்தது பின்னு
ம் நல்ல சகுனமாச்சுது, அந்தவேளையில் விஷ்வகேதுவும்,வில்லையெடுத்
துக்குணத்தொனிபண்ணிஆக்கிரவியாக்கிரமநிக்குரோதனைகப்பற்களைப்
படபடவென்று கடித்துக்கொண்டு அதிககோபத்துடனே பப்பிரவாக
னைப்பார்த்து அடா பப்பிரவாசா உன்னை நான்கொல்லாமல் விடுவேனோ
என்னுடைய பாணாக்கினியினால் உன்னைப் பஸ்மீகரப் படுத்துகிறே
னென்றுசொல்லி முனையும்பொழுது ஸ்ரீகிருஷ்ணபகவான் கண்டு சி
ரித்து விஷ்வகேதுவைப்பார்த்து ஓய் விஷ்வகேதா போதும்போதும்
சும்மாயிரு சண்டையைநிறுத்து, அந்த பப்பிரவாகன் அன்னியனோ
அவனும் உன்னைப்போல அர்ச்சுனனுடைய குமாரனல்லவோ விதியை
ஒருவராலும் தள்ளிநடக்கக்கூடாமையினால் இப்படிக்குவந்து நேரிட்ட
து. இனிமேல் சண்டைபண்ணவேண்டாம் சமாதானமாய்த் திரும்பெ
ன்றுசொல்ல, அந்தவார்த்தையைக்கேட்டு விஷ்வகேதுவும் மனங்கொண்

டயானையானது அங்குசத்தினால் அடங்கிநிற்பதுபோல குரோதத்தைத் தணித்து அடங்கிநின்றான்-அப்பொழுது அர்ச்சுனனும், விஷ்வகேதுவும், எழுந்திருந்து பயபக்த்தி விசுவாசத்துடனே ஸ்ரீகிருஷ்ணபகவானுக்கும், வீமசேனனுக்கும், பிரதக்ஷண நமஸ்க்காரஞ்செய்து அவர்களுடைய ஆசீர்வாதத்தைக் கைக்கொண்டு பிற்பாடு குந்திதேவியையும், தேவகிதேவியையும், அசோதையையுங் கண்டு தெண்டனிட்டார்கள். அவர்களும் இவர்களையெடுத்துமார்போடுதழுவிக்கொண்டு ஆசீர்வாதம் பண்ணினார்கள். பிரத்தியுமனன், அனிருத்திரன், முதலான ராஜகுமாரர்களெல்லாரும்வந்துமஹாபயபக்த்திவிநயத்துடனே கிருஷ்ணபகவான், வீமசேனன், குந்திதேவி, தேவகிதேவி, அசோதை, இவர்களுக்கு நமஸ்க்காரம்பண்ணி இவர்களுடைய ஆசீர்வாதத்தைக்கைக்கொண்டார்கள்.

அப்பொழுது கிருஷ்ணமூர்த்தியாருடைய அனுமதியின் பேரில் ஜெயபேரிகை யறைவித்து பதினெட்டுவகை மேளவாத்தியங்களும் தாம்தாமென்று முழங்கத்தக்கதாக ரதகஜதுரகபதாதிகளாகிய நால்வகைச்சேனைகளுடனும், அம்சத்துவசன், நீலத்துவசன், முதலான ராஜவர்க்கங்களுடனும், ஆதிசேஷன் முதலான நாகசேனைகளுடனும், கிருஷ்ணார்ச்சுனர்களுடனும், பப்பிரவாகனனவன் ரதாரூடனாய் ரணக்களத்தைவிட்டுப் புறப்பட்டு மணிபுரத்திற்கு வந்துசேர்ந்து சகல சம்பிரமத்துடனே அவரவர்களுக்குத்தகுந்தவிடுதிகள்விடுத்து துராதுனாகளுக்கெல்லாம் வெவ்வேறு விசித்திரமான விடுதிகள்விடுவித்து அதின்பிறகு கிருஷ்ணபகவான் அர்ச்சுனன், வீமசேனன், ஆதிசேஷன்-இவர்கள் நால்வரையுங் கொலுமண்டபத்திற்கு அழைத்துக்கொண்டுபோய் நவரத்நபீடங்கள்போடுவித்து அவர்களை அதன்பேரில் உட்காரவைத்து தான் கீழே உட்கார்ந்திருந்தான்.

அப்பொழுது ஆதிசேஷனனவன் அர்ச்சுனன் தலையிறங்கிக்கொண்டிருக்கின்றதைக்கண்டு அர்ச்சுனனைப்பார்த்து ஓய்அர்ச்சுனா நீயேன் விசாரப்படுகிறாய் உன்குமாரன்றானே உன்னோடெதிர்த்து யுத்தம் பண்ணினவன் அன்னியனல்லவே கைவிரல்வந்து கண்ணிற்பட்டால் திரும்பவும் அந்தக்கைவிரலைத்தறித்துப் போடுகிறவர்களுண்டோ ஆகையினால் உன்குமாரனும்நீர்பேசவில்லையென்று துக்காக்கிரந்தனாய் இமோர்பர்வதத்திற்குப்போய் பிராணத்தியாகம் பண்ணிக்கொள்ளுகிறேனென்று ஆலோசனையாயிருக்கிறான். அப்படி நீர் கோபமாயிருக்கலாகாது பூலோகத்தில் பிள்ளையானவன் தகப்பனுக்கு ஒருகுற்றஞ்செய்தால் அதைப்பொறுத்து ரக்ஷிக்கிறது பிதாவினுடைய கடமையல்லவோ ஆதலால், நீர்கோபத்தைத்தணித்து உம்முடைய குமாரனை ஆதரணைசெய்து ரக்ஷியுமென்றுசொல்ல அதுகேட்டு அர்ச்சுனனும், நம்முடைய பிள்ளையினால் நமக்கு இத்தனை அவமானம்வந்ததேயென்று வெட்கத்துடனேயிருக்க அதுதெரிந்து பின்னையும் ஆதிசேஷனனவன் கிருஷ்ணபகவானைப்பார்த்து ஐயா, ஜநார்த்தனா, அச்சுதா, வரதா, புருஷோத்தமா,

தேவரீர் இப்படி உபேக்ஷையாயிருந்து பார்த்துக்கொண்டிருப்பது தர்மமாயிருக்கின்றதோ அப்படி செய்யவேண்டாம் அர்ச்சுனனையும், பப்பிரவாகனையும், உறவுபண்ணிவையுமென்று சொல்ல அதுகேட்டு அந்த பகவானும் நகைத்து ஆதிசேஷனைப்பார்த்து ஓய் அனந்தா நாம் ஒரு வார்த்தைசொன்னால் யாருங்கேட்கமாட்டார்கள் இதோ எல்லாருக்கும் பெரியவர் வீமசேனனிருக்கிறார் அவரையல்லாமல்ஒருகாரியமும் நடக்கமாட்டாது அவரே காரணகர்த்தர் நமக்கொன்றுந்தெரியவராது ஆகையால் சகலநன்மைதீமைகளும் அவருக்கேயல்லாமல் நமக்கு வந்ததென்னவென்று சொல்லியருளினார்.

அந்தவார்த்தைகளையெல்லாம் வீமசேனன்கேட்டுச்சிரித்து கிருஷ்ணமூர்த்தியைப்பார்த்து ஐயா, தேவகிநந்தனா நீர் என்னைப்பரிகாசம்பண்ணவோவந்தீர் உம்மாலாகாதகாரியமொன்றுண்டோ ஓய்கபடநாடக சூஸ்த்ராவதாரீ நீர்அப்படிசொல்லாமல் அர்ச்சுனனுடையகோபத்தைத்தீர்த்துப்பப்பிரவாகனைரக்ஷித்தருளுமென்றுசொன்னான். இந்தவார்த்தைகளையெல்லாம் பப்பிரவாகன்கேட்டு மஹா துக்காக்கிராந்தனாய்பிதாத்துரோகியாகியநாம் பூமியிலிருக்கலாகாது நமக்கு மகத்தாகியபாதகம்வந்துசம்பவித்தது ஆதலால்,இந்தச்சரீரத்தைவைத்திருக்கக்கூடாதுஇதுசாரியத்திற்கு இமோர்ப்பர்வதமட்டுக்கும் போகவேண்டுமோ, இவிடத்தில்தானே சீவனைவிட்டுவிடுகிறது யுக்தமென்றுதீர்மானித்துஅவிடத்தில்தானே தர்ப்பாசனம்பரப்பி அதன்மேரில் உட்கார்ந்துகொண்டு பிராணத்தியாகம் பண்ணிக்கொள்ளப்போம்பொழுது அதுதெரிந்து ஆதிசேஷனும், கிருஷ்ணபகவானும்,வீமசேனனும், திடுக்கென்றெழுந்தோடிவந்துபப்பிரவாகனைப்பிடித்துக்கொண்டுஅவனுடைய துக்கத்தைத்தீர்த்து அவனை அழைத்துக்கொண்டுபோய்அர்ச்சுனனுடைய பாதத்திற்போட்டுகிருஷ்ணமூர்த்தியானவர் அர்ச்சுனனைப்பார்த்துஓய்,அர்ச்சுனா-உன்கோபத்தைவிட்டு உன்குமாரனை ஆதரணை பண்ணென்றுசொல்லஅதுகேட்டு அர்ச்சுனனானவன்தனக்குள்ளிருந்தகோபத்தையும் வெட்கத்தையும்விட்டுவிட்டு சந்தோஷகரமாய்பப்பிரவாகனையெடுத்துமார்போடு தழுவிக்கொண்டு ஓய் குமாரகா, பப்பிரவாகா, இத்தனைவிபரீதமும் கங்காதேவிசாபத்தினால் வந்ததேயல்லாமல்வேறல்ல எனக்குக் கீர்த்தியேயல்லாமல்அபகீர்த்தியல்ல நீஇதைக்குறித்துவிசாரப்படவேண்டாம் சந்தோஷமாயிருவென்று பிரியவசனமாகச்சொல்ல, அதுகேட்டுபப்பிரவாகனும்சந்தோஷசமுத்திரத்தில் முழுகினவனாய்ப்பிதாவினுடையஅனுமதியின்பேரில் கிருஷ்ணபகவான்முதலானவர்களுக்கெல்லாம்போஜனமுதலான சர்வ உபசாரங்களும் நடப்பித்து பிற்பாடு நாட்டியப்பெண்களையும் பதினெட்டுவகை மேளவாத்தியங்களையும், அழைப்பித்து சகலமானபேருக்கும் பொழுதுபோக்கிக்கொண்டிருக்கும்படி திட்டம் பண்ணினான்.

இந்தப்பிரகாரம் கிருஷ்ணபகவானும் அர்ச்சுனராஜனுடனே கூட-
மணிபுரத்தில் ஐந்துநாளிருந்து ஆறுநாள்காலமே அந்தபகவானானவர்
அர்ச்சுனனைப்பார்த்து ஓய்அர்ச்சுன நான் அஸ்த்தினபுரத்திற்குப்போ
கவேண்டும்எனக்குச் செலவு கொடுத்தனுப் பென்று கேட்டருளினார்,
அதுகேட்டு அர்ச்சுனனும் அந்த பகவானைப்பார்த்து - ஐயா,கிருஷ்ண
நான்இனிமேல் ஒருநிமிஷமாகிலும் தேவரீரைவிட்டுப் பிரிந்து அப்பு
றம் இப்புறம் போகமாட்டேன் தேவரீர் என்னிடத்தல்தானே யிருக்க
வேண்டும்ஆதலால்என் தமையனுகிய வீமசேனமஹாராசனை அஸ்த்தின
புரத்திற்கு அனுப்பிவையுமென்றுசொல்ல அதுகேட்டுஅந்தபகவானு
ம்வீமசேனனையழைத்துஓய்வீமசேனநீ அஸ்த்தினபுரத்திற்குப்போய்
தர்ம்மபுத்திர ரண்டையில் பத்திரமாய்க் காத்துக்கொண் டிருமென்று
சொல்லியனுப்ப அதுகேட்டு வீமசேனனும்-அப்படியே நல்லதென்
று சம்மதித்து - தேவகிதேவி - குந்திதேவி - அசோதை - உலுவசி-
சித்திராங்கதை - இவர்களெல்லாரையும் ரதத்திலேற்றிக் கொண்டு தர்ம
புத்திரருக்குக் காணிக்கைஇரண்டாயிரம்ஒட்டகத்தின்பேரில் நவரத்நங்
களை எடுப்பித்துக்கொண்டு கிருஷ்ணர்ச்சுனர்களிடத்தில் செலவுபெற்று
க்கொண்டு அஸ்த்தினபுரத்திற்குப் போனன்-பிற்பாடு ஆதிசேஷனும்கி
ருஷ்ணர்ச்சுனர்களிடத்தில் செலவு வாங்கிக்கொண்டு நாகசேனைகளுட
னே பாதாளலோகத்திற்குப்போனன்.

அப்பொழுது அர்ச்சுனமஹாராஜனனவன் ஸ்ரீகிருஷ்ணபகவானு
டைய அனுமதயின்பேரில் - பப்பிரவாகன் - விஷ்வகேது-அம்சத்துவ
சன்-முதலான துணைகளுடனேயும் ரதகஜதுரக பதாதிகளாகிய சதுர
ங்கபல சேனைகளையும் பிரயாணப்படுத்தி அந்தமணிபுரத்தையும்மந்தி
ரிகள் வசத்தில் ஒப்புவித்து அஸ்வமேதக்குதிரையும் வீதிமார்க்கமாகப்
பூசைபண்ணி முன்னுதாக நடத்திதானும் கிருஷ்ணபகவானுடனே யு
த்தசன்னத்தனாய் ரதாரூடனாய்ப் புறப்பட்டுபதினெட்டுவகைமேளவா
த்தியங்களும் தாம்தாமென்றுமுழங்கத்தக்கதாகமகாவுச்சாகத்துடனே
நடந்தான். கேட்டீரோஜெனமேஜெய மஹாராஜாவே அப்பால் அந்
தக் குதிரையானது தன்னிச்சையாகநடந்து- காடுகள் - செடிகள்- வன
ங்கள் -வனாந்திரங்கள் கடந்து வடதிசைநோக்கி ரத்தினபுரமென்கிற ப
ட்டணத்திற்குச்சமீபமாகவந்தது அவ்விடத்தில் அந்தப்பட்டணத்தைப்
பரிபாலனம்பண்ணுகின்றவன் மயூரத்துவச மஹாராஜனென்னும் பெ
யரையுடையவன் மஹா வீராதிவீரன்-வீரப்பிர தாபன்-சத்தியசந்தன
ன்- கனவிலும் பொய்சொல்லாதவன்-அரிபக்தி மறவாதவன்- துஷ்டநி
க்கிரக சிஷ்டபரிபாலனன்-அஷ்டஐஸ்வரியங்களும்நிறைந்துள்ளவன்-
சோடசமஹாதானகெம்பீரன் - அப்படிப்பட்ட ராஜாதி ராஜனானவன்
அஸ்வமேதயாகஞ்செய்யநினைத்து தான்யாக தீக்ஷையைக்கைக்கொண்
டுகுதிரையைப் பூசைபண்ணிவிட்டு அந்தக்குதிரையின் பிறகே வீரா
திவீரனான தன்புத்திரனாகிய தாமனாத்துவசனையனுப்பி அதிசீக்கிரத்தி

ல் பூமிப்பிரதட்சணஞ்செய்வித்துக்கொண்டு வரும்படி கட்டளையிட்ட
னுப்ப அந்தப்படியே தாமரைத்துவசனானவன் - நகுலத்துவசனென்
கிற சேனாதிபதியுடனும் ரதகஜதுரக பதாதிகளாகிய நால்வகைச் சேனை
களுடனும் ரணரங்கசூரனாய்ப் புறப்பட்டு அந்தக்குதிரையின் பிறகே
நடந்து அங்கே அந்த அஸ்வமேதக் குதிரையைப்பிடித் தெதிர்த்தவ
ர்களையெல்லாம் போராடிக்கெலித்து காணிக்கை சப்பங்களைப் பெற்
றுக்கொண்டு பூமிமுழுதும்பிரதக்ஷணம்பண்ணி முடித்து தன்னுடைய
ரத்தினபுரத்திற்குச் சமீபமாகவந்து தண்டுவிட்டிறங்கினான். அந்த
அஸ்வமேதக்குதிரையும்-ரத்தினபுரத்துக் கோட்டைவாசலி லோரமாய்
ப் பச்சென்றபுல்லைக்கண்டு மேய்ந்துக்கொண்டிருந்தது, அப்பொழுது
அர்ச்சுனனுடையகுதிரையும்வந்து - தாமரைத்துவஜனுடைய குதிரை
யைக்கண்டு சேரப்போச்சுது அதுகண்டு தாமரைத்துவசனுடையகுதி
ரையும் அர்ச்சுனராஜனுடைய குதிரையைக்கண்டு சேரவந்து அதன்
முகத்துடனேமுகத்தைவைத்து முகந்துக்கொண்டு ஏழாசவாரங்களைச்
செய்தது.

அதுகண்டு தாமரைத்துவசனும் - நகுலத்துவசனைப்பார்த்து இது
அஸ்வமேதக்குதிரை இது எங்கேயிருந்து வந்ததென்றுசொல்ல, அது
கேட்டு நகுலத்துவசனும் அந்தக்குதிரையின் சமீபமாகப்போய் குதி
ரையைப் பிடித்துக்கொண்டுவந்துதாமரைத்துவசனிடத்தில் ஒப்புவித்
தான், அப்பொழுது தாமரைத்துவசனும் அந்தக் குதிரையினுடைய
லலாடத்திற் கட்டியிருக்கின்ற விருதாவொளியை வாசித்துப் பார்த்து
புன்சிரிப்பாகச் சிரித்து தலையையசைத்து சேனாதிபதியைப் பார்த்து
ஓய் சேனாதிபதியே, இந்த அதிசயத்தைக் கேட்டாயோ, அஃதென்ன
வென்றால், அஸ்தினாபுரத்தையரசாக்ஷிசெய்கின்றதர்ம்மராஜாவானவர்ப
யித்தியம்பிடித்து தானேவீராதிவீரனென்றுகெர்வித்து,அஸ்வமேதயா
கஞ்செய்துமுடிக்கநினைத்து குதிரையைவிட்டிருக்கிறான், அந்தராஜன்
இனிமேல் யாகம்பண்ணிமுடிக்கிறது தெய்வத்திற்கேதெரியும், அதுவு
மல்லாமல்இந்தக்குதிரையின்பிறகே யுத்தசன்னத்தனாய்வருகிறவன்மே
ட்டானமேட்டியாகியஅர்ச்சுனனாம்,அவன்நமதுகுருஸ்வாமியாகியகோ
பாலகிருஷ்ணமூர்த்திக்கு மைத்துனனாம், ஆகையால்நாம்அந்த அர்ச்சு
னனைமடக்கிக்கொண்டு சாக அடித்துநோகப்பண்ணினால் அவனுக்குச்
சகாயமாய் கிருஷ்ணபகவான்வந்தருளுவார்,நாமவரைப்பிடித்துக்கொள்
ளலாம்,இன்றையத்தினமல்லவோநம்முடைய எண்ணம்நிறைவேறியது
அதல்லாமலும் இந்தத்தண்டுடனேகூடஅர்ச்சுனன்மகனானபப்பிரவாக
னும்வருவான்-அவனைப்பலசாலியென்று சிலர்சொல்லுவார்கள்-ஆனாலு
மாகட்டும் இந்தக்குதிரையைக் கொண்டுபோய்நம்முடையதண்டுடனே
கூடகட்டிவையென்றுசொல்ல, அதுகேட்டு அந்தசேனாதிபதியும்- தாம
ரைத்துவஜனைப்பார்த்து ஐயா, ராஜநந்தனா, அந்தவர்ச்சுனன் எம்மாத்தி
ரம் அவனைச்சட்டைபண்ணிதேவரீரவனுடனே சண்டைபண்ணவேண்

டுமோ, அப்படி நீர்யோசிக்கவேண்டியதில்லை, அவன் இவிடத்திற்குவருவானாகில் அவனையுமவன்சேனைகளையும், என்னுடையபாணாக்கினியினால் நாமனகண்டித்துவிடுகிறேன், நீர் அதற்கு எவ்வளவுஞ் சந்தேகிக்கவேண்டாம்-அல்லது அந்தப்பப்பிரவாகனை மஹாபலசாலியென்று மதித்திருக்கிறீரோ, அவன்வந்தாலென்ன-அவன் நம்முடைய நாடகசாலைப்பெண்களில் புஷ்பபாஞ்சாலியென்பவளுக்குவருஷத்திற்கொருதரம்ரத்தினங்கொண்டுவந்து கொடுக்கிறவனல்லவோ, அவன்எம்மாத்திரம் அவன் நமக்கு ஈடானவனோவென்றுசொல்ல, அதுகேட்டு-தாமரைத்துவஜனும் சந்தோஷித்து தனதுசேனாதிபதியைப்பார்த்து-ஓய்-நகுலத்துவஜா-நமக்கே ஜெயகாலமிருக்கின்றது-நீசீக்கிரத்தில்குதிரையைக்கொண்டுபோய்பத்திரப்படுத்திவிட்டு நமதுசேனைகளையெல்லாம் யுத்தஞ்செய்கிறதற்குமுஸ்தீதுபண்ணிவையென்றுகட்டளையிட்டனுப்பினான்.

---

## தாமரைத்துவஜன் யுத்தம்.

அதுகேட்டு நகுலத்துவஜனும் அப்படியேநல்லதென்றுகுதிரையைக்கொண்டுபோய்கட்டிவைத்துவிட்டுதங்களுடையசேனைகளையெல்லாம்எச்சரிக்கைபண்ணிஅர்த்தசந்திர வியூகமாகநிறுத்திவைத்து ரணபேரிகையையறைவித்துச்சண்டைக்குமுஸ்தீதாயிருந்தான்இங்கே அர்ச்சுனராசனும்குதிரைபிடிபட்டுப்போனசேதியைக்கேட்டுஸ்ரீகிருஷ்ணபகவானுடனேசொல்ல,அவரும்ஆலோசனைசெய்து அர்ச்சுனனைப்பார்த்து-ஓய்-அர்ச்சுனா,இப்போது நமதுகுதிரையைப் பிடித்துக்கொண்ட தாமரைத்துவஜமகாராஜனோமெத்தவும்பலவந்தன்-அவன்தர்மசொரூபன்-சத்தியசந்தனன்-விஷ்ணுபக்தன்-வீராதிவீரன் - அவனைச்செயிக்கமுடியாது, ஆகையினாலவனுடனே எவ்விதத்திலாகிலுஞ் சிநேகம்பண்ணிகுதிரையைமீட்டுக்கொள்ளவேண்டுமேயல்லாமல் சண்டையினால்குதிரையைமீட்டுக்கொள்ளக்கூடாதென்றுசொல்ல; அதுகேட்டுஅர்ச்சுனனும்அந்தபகவானைப்பார்த்துஐயா,கிருஷ்ணமூர்த்தி-அப்படியானால்நாமேபோய்எங்கள்குதிரையைவிட்டுவிடென்றுபிரியவசனஞ் சொல்லுகிறதுவீரத்தன்மையோ,சுவாமியென்று தடுத்துச்சொல்ல,அதுகேட்டுகிருஷ்ணதேவரும்-ஓய்-அர்ச்சுனா, நாம்அப்படி பகையாளிக்குப்பிரியவசனஞ்சொல்லவேண்டியதில்லை,நாமும்பின்னிடாமல்சண்டைபண்ணலாம்நீயும்ஹரிபக்தியுள்ளவனல்லவோ, நீயுங்கெலிக்கிறாயென்றுசொல்லிவிஷ்வகேதுவையழைத்து-ஓய்-விஷ்வகேதா,நீநமதுசேனைகளையெல்லாஞ்சண்டைக்குமுஸ்தீதாகவியூகங்கட்டிநிறுத்தென்று கட்டளையிட்டருளினார்அதுகேட்டுவிஷ்வகேதுவும்அந்தப்படியேசேனைகளைச்சிருத்திவியூகமாகநிறுத்திவைத்து-பிரத்தியுமனனையும்,அனுசாளுவனையும், பக்ஷிக்குக்கண்களாகநிறுத்தி,எவ்வர்ணசுவனையும் பப்பிரவாகனையுஞ்-செட்

டைகளாய்நிறுத்தி, சாத்தகி-கிருதவர்ம்மன்-மேகவர்ணன் - இவர்களைவா லாகநிறுத்தி,கிருஷ்ணர்ச்சுனர்களைக்கெர்ப்பத்தில்நிறுத்தி. தானும் உக்கி ராகாரனுய்பக்ஷிக்குமூக்காகநின்றுரணபேரிகை-வெண்சலப்பேரிகை-மு தலானதுகளையும்,சகலலோகங்களும்,நடுநடுங்கத்தக்கதாக முழக்குவித் தான். அப்பொழுதுகிருஷ்ணபகவானும்அர்ச்சுனனைப்பார்த்து- ஓய்-அ ர்ச்சுனு, நான்உனக்குச்சாரதியாயிருக்கவோ, ரதிகனுயிருக்கவோ சொ ல்லென்றுகேட்க, அதற்கு அர்ச்சுனனும் அந்தபகவானைப்பார்த்து- ஐயா, தேவரீர் ரதிகனுய்த்தானே யிருமென்றுசொல்ல, அதுகேட்டு கிருஷ்ணபகவானும் தாரகனைநினைத்தருளினர், அதுதெரிந்துஅந்தக்ஷ ணமே தாரகனும் சகலசஸ்த்திரஅஸ்த்திர மூஸ்தீதுகளுடனேவைகுண் டரதத்தைக்கொண்டுவந்து நிறுத்தினன் அதுகண்டு அந்த பகவானும் அந்தரதத்திலேறிக்கொண்டுதமதுபாஞ்சசன்னியத்தையெடுத்துப்பம் பம்மென்று ஊதியருளினர்-அந்தசத்தத்துடனே அர்ச்சுனனும்தனது தேவதத்தத்தையெடுத்துஅண்டகடாகமதிரும்படிமுழக்கஞ்செய்தான் அந்தஓசைகளினல் அர்ச்சுனனுடைய சேனைகளெல்லாம்சந்தோஷகர மாய் மஹாஉச்சாகத்தைப் பொருந்தினர்கள் தாமரைத்துவசனுடைய சேனைகளெல்லாம் உச்சாகமடங்கி திகிலடைந்தார்கள்.

அப்பொழுது கிருஷ்ணபகவானும் மஹாசந்தோஷத்துடனேசா ர்ங்கமென்கிற வில்லையெடுத்துத் தமது திவ்வியாஸ்தத்திறற் பிடித்து க்குணத்தொனிபண்ணி தமதுரதத்தைச் சகலசேனைகளுக்குமுன்னுதா கத்தாமரைத்துவசன்பேரில் நடத்தியருளினர் - அதுகண்டு தாமரைத் துவசனுஞ்சிரித்து அந்ததேவனுக்குமனேபூசையாய் அர்க்கியபாத்தி ரமுதலான சர்வவுபசாரங்களுஞ் செய்து தன்னுடையரதத்தைச் சமீ பமாகத்துரத்தி அந்தபகவானைப்பார்த்துஐயா ருக்மணிமனேகரா,சத் தியபாமைவல்லபா,கோபிசாரமணு, தேவகிநந்தனு, பரமபுருஷா, ஓய் சுவாமி,நில்லும்-நில்லும்-ஏன்-இத்தனை துரிதமாய் வருகிறீர் நீர்என்னை அறியீரோ- அறியமாட்டீரோ - இப்போது என்னுடைய பாணுக்கினி யென்கிற துளசியினல் உம்மைப்பூசைபண்ணுகிறேன் சற்றுநேரம் ப தராமல்நில்லும் அந்தஅர்ச்சுனன் எப்படிபோகிறுனே - நீர்எப்படி போகிறீரோபார்ப்போம் உம்முடைய பாணமானது என்னை என்ன செய்யக்கூடும். அதைநான்சற்றே அறிகிறேனென்றுசொல்லிக் கொண் டிருக்கையில் அர்ச்சுனனுடைய சேனைகளெல்லாரும் மனேவுச்சாகசந் தோஷ கெம்பீரத்துடனே கிருஷ்ணபகவானுக்குமுன்னுதாகப்போய் தாமரைத்துவசனுடைய சேனைகள்பேரில் விழுந்துஅதிகோரமானயுத் தம்பண்ணினர்கள்.

அதுகண்டு தாமரைத்துவசனும்ஆக்கிரவியாக்கிரமநிற்குரோதனு ய்த் தன்னுடையசோதண்டத்தைக் கையிலெடுத்து குமுகுமுவென்று குணத்தொனிபண்ணி அந்தவில்லினிடமாகஅநேகமாயிரம்பாணங்களை ச்சந்தித்துப் பிரயோகஞ்செய்து அர்ச்சுனனுடைய சேனைகளை யெல்

லாருஞ்சின்னபின்னமாகக்கண்டித்துரத்தப்பிரவாகமாக்கித் துரத்திவிட் டான். அதுகண்டு அம்சத்துவசனும்-நலத்துவசனும்-ரோஷ தாம்பிரா க்ஷதர்களாய் தங்களுடைய ரதத்தைத் தாமரைத்துவசன்பேரில்துரத்தி அநேகமாயிரம்பாணங்களைப் பிரயோகம்பண்ணினார்கள் - அதற்குத்தா மரைத்துவசனானவன் எவ்வளவுஞ் சஞ்சலப்படாமல்தன்னுடையவில்லி லிடமாக அளவிறந்த நாராசங்களைத்தொடுத்து அவர்கள்விட்ட பாண ங்களையெல்லாம் தும்சப்படுத்தி அவர்களுடைய சரீர முழுதுஞ் சல்ல டைக்கண்களாகத்துளைத்துச் சதைசதையாகப் பேர்த்தெறிந்தான் - அ தனால் அவர்கள்மெத்தவுங்கஸ்திப்பட்டுரதத்தின்பேரில்விழுந்து மூர் ச்சையடைந்தார்கள் அதுகண்டு அனுசாலுவனும் கோபதீப்தனாய் எரி ந்துவிழுந்து தாமரைத்துவசனைப்பார்த்து ஓய் ராசகுமாரகா நில்லு நி ல்லுவென்றுசொல்லி தன்னுடையரதத்தைத்துரத்தி அநேக மாயிரம் குரூரபாணங்களை எடுத்துத்தொடுத்து திவ்வுதிவ்வுமென்று பிரயோகம் பண்ணினான் அதுகண்டு தாமரைத்துவசனும் தன்பேரில்வந்து விழுந் தபாணங்களையெல்லாங் கண்டித்துத்தள்ளி உடனே ஆயிரம் பாணங்க ளைப் பிரயோகம்பண்ணி அனுசாலுவனுடைய சரீரமுழுதும் தைக்கு ம்படிசெய்ய - அதற்கு அவன்நிர்வாகம் பண்ணமாட்டாமல் தேரைவி ட்டு பூமியிற்குதித்து ஓடிப்போனான் - அதுதெரிந்து சாத்தகி-கிருதவ ர்ம்மன்-மேகவர்ணன் இவர்கள் மூன்றுபேரும்வந்து சண்டப்பிர சண் டர்களாய் ஆக்கிரகித்து தங்களுடைய தூணிரத்தில் பாணமில்லாமல் போகத்தக்கதாக எங்கேபார்த்தாலும்பாணமயமாகநிரப்பினார்கள்.

அந்தபாணங்கள் அதிவேகமாகவந்து சுறுக்குசுறுக்குமென்றுதா மரைத்துவசனுடைய சாரதிகுதிரைகள்பேரில் தைத்து ரத்தமயமாக்கி விட்டு அவனையும் வருத்தும்பொழுதுஅதனால்தாமரைத்துவசன்மெத் தவும் நொந்து காலாக்கினிருத்திரனைப்போலச்சீறிவிழுந்து அநேகமா யிரம் பாணங்களைஎடுத்து வில்லினிடமாகத்தொடுத்துப் பிரயோகம்ப ண்ணி-அந்தமூன்றுபேருடைய ரதங்களையும் பொடியாக்கி அவர்களு டையகைவில்லையுங் கண்டித்து பின்னையும் அவர்களுடைய மார்பினிட மாகத்தைக்கும்படி பத்துநாராசங்களை யெடுத்துப் பிரயோகம் பண் ணினான் - அதுகளும் திகுதிகுவென்று வடவாமுகாக்கினிபோலஎரிந்து கொண்டுவந்து மூன்றுபேருடைய மார்பிலும்பட்டு முதுகி லுருவிப் போய்விட்டது - அதனால்அவர்கள் மெத்தவும் நொந்து தலைவிரிகோல மாய் ஒருவர்போனவழி ஒருவர்போகாமல் அந்தமூன்றுபேரும்ஓடிப் போய்விட்டார்கள். அதுகண்டு பிரத்தியுமனனும் அனிருத்திரனும் ம ஹாகோப தீப்தர்களாய் இரண்டுகண்களிலும்நெருப்புப்பொறிகள்கு பீல்குபீலென்று பறக்கும்படியாக ஆக்ருஷித்துடனேவந்து தாமரை த்துவசனைப்பார்த்து ஓய்ராசகுமாரகா நீமிஞ்சவேண்டாம் நில்லு நில் லு உன்னை இன்னஞ் சற்றுநேரத்தில் இந்தபூமிக்குப்பலியிடுகிறோமெ ன்றுசொல்லி வில்லைவளைத்து அநேகமாயிரம் பாணங்களைப் பிரயோகி

த்துதாமனாத்துவசனுடைய ரதத்தைக் கண்ணுக்குத் தெரியவொட்டா மல்சரகூடங்கட்டினதுபோல மறைத்து அட்டகாசஞ்செய்து நின்றார் கள்-அதுகண்டு தாமனாத்துவசனுங் காலாக்கினி ருத்திரனைப்போல சீ றிவிழுந்து சூரியகிரணங்களைப்போல அதிதீக்ஷண்யமாய் விளங்குகின்ற பாணங்களைஎடுத்து வில்லினிடமாக சந்தித்துப் பிரயோகம்பண்ணிஅ ந்த இரண்டுபேருடையகைவில்லையும் ஒடித்துஅவர்கள் சரீர முழுதும் ஊசிநாட்ட இடமில்லாமல் சல்லடைக்கண்களாகத் துளைத்து மார்பையு ம்பத்தலாகக்கிழிக்க அதனால் மெத்தவும் நொந்து இரண்டு பேரு ம் வாயினாலும் நாசியினாலும் ரத்தங்களைக் குபீல்குபீலென்று கக்கிக் கொண்டும் தேரின்பேரில்மூர்ச்சையாய் விழுந்துவிட்டார்கள்.

அதுகண்டு பப்பிரவாகனும் மிகுந்த கோபாந்தகனாய் ஆக்கிரகித் து பற்களை நெறநெறவென்று கடித்துக்கொண்டு மீசைகள் படப டவென்று துடிக்கும்படியாகத் தன்னுடைய ரதத்தைத் தாமனாத்துவ ஜன்பேரில்அதிகவேகமாகத்துரத்திமகாஉக்கிராகாரனாய்அந்தராஜகுமா ரனைப்பார்த்து அடா-தாமனாத்துவஜா, எண்டா நீதலைகீழாய்விழுகிறாய் இப்போது ஓடிப்போகாமல் நின்று என்னோடுபோராடென்றுசொல்லி தன்கையிலிராநின்ற வில்லைவளைத்துக் குணத்தொனிபண்ணி அந்தவில் லினிடமாக அதிதீக்ஷண்யமான அநேக பாணங்களைத்தொடுத்துப் பிர யோகஞ்செய்து தாமனாத்துவஜனுடைய தேனாச்சாரதிகுதிரைகளுட னேபொடிபொடியாக்கி அவன்கையிலிராநின்றவில்லைக்கண்டித்துகவச த்தைக்கிழித்துமார்பையும்பத்தலாக்கினான்-அதனால் தாமனாத்துவஜனு ம் மிகுந்தஆயாசமடைந்து எவ்வளவும்பின்னிடாமல், வேறே ஒரு தே ரிலேறிக்கொண்டு மற்றொருவில்லை எடுத்துக் குணத்தொனிபண்ணி அ நேகமாயிரம் குரூரபாணங்களைத்தொடுத்துப் பிரயோகஞ்செய்து பப் பிரவாகனுடையசாரதியுங்குதிரைகளையுங்கொன்று அவன்கைவில்லையுங் கண்டித்து கவசத்தையுங்கிழித்துபின்னையும்அந்தபப்பிரவாகனைப்பார் த்து அடா,பப்பிரவாகா,நான்இந்தட்சணமே உன்னைக்கொன்றுவிடுவே ன், அப்படிகொல்லாமல்விட்டுவிட்டது எதினாலென்றால் எங்களுடைய நாடகசாலைப்பெண்களில் புஷ்பபாஞ்சாலியென்கிறபெண்ணுக்குவருஷ த்திற்கொருதரம் ரத்தினங்கள்கொண்டுவந்துகொடுக்கிறவனாகையால்ம ன்னித்துவிட்டேனென்றுசொல்லி சரீரமெல்லாஞ்சதைசதையாகப்பே ர்த்தெறிந்து அவனைக்கைகால்ஆடவொட்டாமல்பிர்மிக்கப் பண்ணினான்.

அதனால்பப்பிரவாகனும் மிகுந்த ஆயாசத்தையடைந்துமகாவெ ட்கத்துடனேகைகால்களைஉதறிக்கொண்டுநிர்வாகம்பண்ணமாட்டாமல் ஓடிப்போனான்அதுகண்டுதாமனாத்துவஜனும்அர்ச்சுனன்பேரில்முனை ந்துநடக்கையில் அதுதெரிந்துகர்ணன்குமாரனானவிஷ்வகேதுவும்ஆக் கிரகித்துதன்னுடையரதத்தைக் குறுக்கேதுரத்தி அந்த வீரனைப்பார்த் து-அடா-தாமனாத்துவஜா நீஎங்கேபோகிறாய்சற்றேநில்லுநில்லென்று ட்டிதன்னுடைய வில்லிலே கோடையிடிக்குச்சமானமான அநேக

பாணங்களைத்தொடுத்து அதிவேகமாகப் பிரயோகம்பண்ணிதாமனாத்துவஜனுடையரதத்தைச் சாரதிகுரைகளுடனே அதம்பண்ணிஅவனது கைவில்லையுங்கண்டித்துமார்பையும் பத்தலாகக்கிழித்துவிட்டான்அது கண்டு தாமனாத்துவஜன் உடனேஒருரதத்திலேறினான் அதையும் விஷ்வகேது கண்டித்துவிட்டான்பின்னையும் ஒருரதத்திலேறினான் அதையுங்கண்டித்துவிட்டான்,இப்படி நூறுரதமட்டுக்கும் விஷ்வகேது கண்டிக்க அதனால் தாமனாத்துவஜன்மெத்தவும்வருத்தமடைந்து வேறேஒரு திவ்வியரதத்தின்பேரிலேறிக்கொண்டுவில்லைக்குணத்தொனி பண்ணிஅந்தவில்லினிடமாக அக்கினிப்பொறிகளைக் கக்குகின்றபாணங்களை அபரிமிதமாகத்தொடுத்து விஷ்வகேதுவினுடைய மார்பிலேதைத்துமுதுகிலுருகிப்போகும்படி பிரயோகித்து அவன்ஏறியிருக்கின்றரதத்தையும்பொடியாக்கி அவன்கைவில்லையும் ஒடித்துகவசத்தையுங் கிழித்தான் அதனால்விஷ்வகேதுமெத்தவும்நொந்து அடியற்றமரம்போலரதத்தின் பேரில்விழுந்துமூர்ச்சையடைந்தான்.

அப்பொழுதுதாமனாத்துவஜன் மகாஉக்கிராகாரனாய் தனதுவில்லினிடமாக அக்கினிக்குச்சமானமானபாணங்களைத்தொடுத்துஎங்கேபார்த்தாலும்சரவருஷம் பொழிவித்ததுபோலப்பிரயோகஞ் செய்துவேறொருரதத்தின்பேரிலேறிக்கொண்டு அந்தசதுரங்கபல சேனைகளையெல்லாம் சின்னபின்னமாகக்கண்டித்து அதம்பண்ணும்போது அந்தசேனைகளெல்லாம்பயந்து ஓடிப்போய் அர்ச்சுனனிடத்திற் சரணமடைந்து அர்ச்சுனனைப்பார்த்து ஐயா - கிரீட்டி - எங்களைக்காப்பாற்றிரட்சியுமென்று முறையிட்டார்கள் - அதுகேட்டு அர்ச்சுனனும் அவர்களுக்கு அபயஸ்தங்கொடுத்து பிற்பாடு ஸ்ரீகிருஷ்ணபகவானுடனேகூடவந்து தாமனாத்துவஜன்பேரிலெதிர்த்து காண்டீபத்தைக் குணத்தொனிபண்ணி அதனிடமாகதேவேந்திராதி தேவர்கள்கொடுத்த திவ்யபாணங்களைத்தொடுத்துப் பிரயோகம்பண்ணினன் அதுகளையெல்லாம் தாமனாத்துவசனனவன்மிஞ்சிவரவொட்டாமல் நடுபாதியில் பஸ்மீகரப் படுத்திவிட்டு பின்னையும் தன்னுடைய அஸ்திரங்களினால்கிருஷ்ணார்ச் சுனர்களிருவருடைய சரீரத்தையும் வசந்தகாலத்தில்புஷ்பித்த வனமுருக்குவிருட்சம்போலச்செய்துமெத்தவும்நோகப்பண்ணினன் அதனால்அவ்விரண்டுபேரும் மிகுந்தபிரயாசமடைந்து காற்றுந்தீயுங்கூடினதுபோல மகாஉக்கிராகாரனாய்தங்களுடையஅஸ்திரங்களினால்தாமனாத்துவஜனுடையசரீரமுழுதும் ரத்தமயமாக்கினார்கள் இப்படிஅர்ச்சுனனும் தாமனாத்துவஜனும்எழுநாள்இராத்திரியும்பகலும்போராடினார்கள்.

அப்படிபோராடுகிறபோது அர்ச்சுனனும் தாமனாத்துவஜனுடைய ரதத்தைப் பொடியாக்கினன் - அவன்பின்னையும் - ஒருதேரின் பேரிலேறினன்- அதையும்அர்ச்சுனன் பொடியாக்கிவிட்டான் - அது கண்டு தாமனாத்துவஜனும் மகாகோபங்கொண்டு - அர்ச்சுனனைப்பார்த்து-ஓய்-அர்ச்சுனா, பளாபளா நீமெத்தவுங் கெட்டிக்காரன்றான் நான்

உன்னைமெச்சினேனென்று சொல்லி - அதிசீக்கிரத்தில் வேறே ஒரு தேரிலேறிக்கொண்டு வில்லைக்குணத்தொனிபண்ணி - அந்தவில்லினிடமாக இரண்டு அர்த்தசந்திர பாணத்தைத் தொடுத்துப் பிரயோகம் பண்ணி - அர்ச்சுனனுடைய காண்டீபத்திலும் ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய சாரங்கத்திலுங் கட்டியிருக்கின்ற நாணியை அறுத்தெறிந்தான் - அது கண்டு அர்ச்சுனனும், ஸ்ரீகிருஷ்ணபகவானும், ஒருவர்முகத்தை ஒருவர் பார்த்துக்கொண்டிருக்கையில் தாமரைத்துவஜனும், தேரைவிட்டுப் பூமியிற்குதித்து ஓடிவந்து கோழிக்குஞ்சைப் பருந்தறைந்துகொண்டுபோகிறதுபோல அர்ச்சுனனைத் தேரோடே தூக்கிக்கொண்டு ஆகாசவீதியிற்போய் நின்று கிறுகிறுவென்று அந்த ரதத்தைச்சக்கிராகாரமாய்ச்சுழற்றிப் பூமியில்விட்டெறிந்தான் - அதுவுஞ் சுழன்றுகொண்டு வருகிறபோது ஸ்ரீகிருஷ்ணபகவான் கண்டு திகிலடைந்து-ஆ-ஆ-மோசம்வந்ததேயென்று கொப்பென எழுந்திருந்து அந்தத்தேருக்கு நேராய்நின்று தம்முடைய திவ்வியாஸ்தத்தை நீட்டிப் பூமியில் விழப்போகின்ற தேரைப்பிடித்து எப்பொழுதும்போல நிறுத்தியருளினார்.

அதுகண்டு தாமரைத்துவசனுஞ் சிரித்து அந்தப்பகவானைப்பார்த்து-ஓய் திருட்டுகிருஷ்ணா, நீர் இப்படி செய்யலாமோ ரணக்களத்தில் என்கையில் அர்ச்சுனன் விழுகிறான் நான் அவன்கையில் விழுகிறேனென்று நீர் சும்மாயிராமல் அர்ச்சுனனுக்குச் சகாயம்பண்ணினீர் இது உமக்கு நியாயமோ பூர்வகாலத்தில் வேதங்களைத் திருடிக்கொண்டுபோன சோமுகாசுரனிமித்தம் ஒரு மீனாகப்பிறந்து அவனைக்கொன்றவர் நீரல்லவோ, அதுவுமல்லாமல் தேவர்களும் ராக்ஷதர்களுங்கூடி பால்சமுத்திரத்தில் முழுகிப்போகவொட்டாமல் ஆமையாகப்பிறந்து மலையைச்சுமந்தவர் நீரல்லவோ இரணியாக்ஷதனென்பவன் பூமியைப்பாயாகச்சுருட்டிக் கக்கத்திலிடுக்கிக்கொண்டு பாதாளலோகத்துற்குப்போய் ஒளித்துவைத்துக்கொண்டபோது ஒரு பன்றியாகப்பிறந்து அவனைக்கொன்று பூலோகத்தை எப்பொழுதும்போல நிலைநிறுத்திவைத்தவர் நீரல்லவோ இரணியனென்பவன் ஹரிநமோஸ்த்துவென்று எவர்களையுஞ் சொல்லவொட்டாமல் அடக்கி இரணியநமோஸ்த்துவென்று எவர்களையுஞ்சொல்லும்படி பயமுறுத்தி வைத்துக்கொண்டு மகா கெர்வத்துடனே இருக்குங் காலத்தில் அவன்பிள்ளையாகிய பிரகலாத ஆழ்வானையும் அங்ஙனேசொல்லென்றுசொல்ல, அந்த மகானுபாவன் அப்படியேசொல்லாமல் ஹரிநமோஸ்த்துவென்று திடச்சித்தமாகச்சொல்ல, அதுகேட்டு மெத்தவுங் கோபங்கொண்டு நீ சொல்லுகின்ற ஹரி எந்தயிடத்தி லிருக்கின்றானென்று இரணியன்கேட்க, தூணிலும், துரும்பிலும், மற்றுமுள்ள எந்தயிடங்களிலும் பிர்ம்மாமுதல் பிபீலிகா பரியந்தமுள்ள சகல சீவர்களிடத்திலும் சர்வவியாபகனாய் சர்வாந்திரியாய்ப் பிரகாசித்துக்கொண்டிருக்கிறானென்றுசொல்ல,

அப்படி சொல்வாயானால் இந்தத்தூணிலும் இருப்பானோவென்று இரணியனானவன் தன்னுடைய கையினால் ஓங்கி அறைந்தமாத்திரத்தில் அந்த பாகவத சிகாமணியாகிய பிரகலாதஆழ்வானிமித்தம் அந்தத் தூணினிடத்தில் நரசிங்கமாகப்பிறந்து இரணியனைச் சங்கரித்து பிரகலாத ஆழ்வானை ரக்ஷித்தருளினவர் நீரல்லவோ, அதுவுமல்லாமல் திரிலோகத்தையும் ஒருகுடை நீழலின்கீழ் அரசாக்ஷிசெய்த மாவலிச்சக்கிரவர்த்தியினிடத்திற்குப் பிரமசாரியாகப்போய் மூன்றடிநிலம் தானமாகக்கேட்டுவாங்கி அவன்குடியைக்கெடுத்தவர் நீரல்லவோ, இன்னமும் சார்த்தவீரியார்ச்சுனனிமித்தம் பரசுராமனாகப்பிறந்து பூமியெல்லாம் நிர்மூலம்பண்ணினவர் நீரல்லவோ, இதுவுமல்லாமல் ஸ்ரீராமனாகப்பிறந்து குரங்குகளைச் சேனையாகக்கூட்டிக்கொண்டு ராவணாதி ராக்ஷதர்களையெல்லாம்வேரறுத்தவர் நீரல்லவோ, கடைசியில் கோபால கிருஷ்ணனாகப்பிறந்து இடைச்சிகள் வீடுகள்தோறும் பால், தயிர், வெண்ணெய்களைத் திருடியுண்டு இன்னம் அம்மானாகிய கஞ்சன்முதலான அநேகராக்ஷதர்களைக் கொன்று மகாகீர்த்திப் பிரகாசத்தையடைந்த அந்தக் கீர்த்தியையெல்லாம் இப்போது இந்த அர்ச்சுனனுக்குச் சாரத்தியம்பண்ணிப் போக்கடித்துக்கொண்டீரோ உம்முடைய திருட்டுக்குணம் எப்போதும்போகிறதில்லையே நல்லது உம்மைநான் கொஞ்சத்திலே விடுகிறதில்லையென்றுசொல்ல அந்த வார்த்தைகளையெல்லாம்கிருஷ்ணபகவானனவர்தோத்திரமாகக்கொண்டு திருவுளமகிழ்ந்து பிற்பாடு கோபங்கொண்டவர்போல தமது திருப்பாதத்தினால் தாமனாத்துவசனைஉதைத்து தமதுகையிற் பிடித்திராநின்ற கதையினால் அவன் தலையின்பேரில் அடித்தார் அந்த அடியினால் தாமனாத்துவசனும் பூமியில்விழுந்து மூர்ச்சையடைந்து சற்றுநேரத்தில் தெளிந்தெழுந்திருந்து வேறே ஒரு ரதத்திலேறிக்கொண்டு வில்லைக் குணத்தொனிபண்ணி அர்ச்சுனராஜனுடனே எதிர்த்து நின்றான்.

அப்பொழுது அர்ச்சுனனும் கிருஷ்ணபகவானைப்பார்த்து ஐயா, கிருஷ்ணா, தேவரீர், ரதிகனாயிருப்பதைவிட்டு எனக்குச் சாரதியாயிருந்து குதிரைகளை ஓட்டுவீரானால் நானிந்த துன்மார்க்கனை அவசியங் கண்டிக்கிறேனென்றுசொல்ல அதுகேட்டு அந்த பகவானும் அப்படியே சம்மதித்து தமது வைகுண்டரதத்தைக் கொண்டுபோம்படி தாரகனுக்குச் சொல்லிவிட்டு முடிக்கோலைக் கையிற்பிடித்துக்கொண்டு பார்த்தனுடைய ரதத்திலேறி அந்த ரதத்திலிருக்கின்ற சாரதியைப்போகச் சொல்லி தாம் உட்கார்ந்துக்கொண்டு சவுக்கினால் குதிரைகளை அதட்டி அந்த ரதத்தை நடத்தியருளினார்.

அப்பொழுது அர்ச்சுனனுந் தன்னுடைய காண்டீபத்தைக்குணத்தொனிபண்ணி அதிலே அநேகமாயிரந்திவ்யபாணங்களைத்தொடுத்துப் பிரயோகித்து தாமனாத்துவசனை மெத்தவுங்கஷ்டப்படுத்தி ஒருபாணத்தினால் அவன் சாரதியினுடைய சிரசையுங்கண்டித்து பத்துபாணத்தி

ளுல் அவனது ரதத்தையும் பொடியாக்கினன். அதுகண்டு தாமளாத்து வசனும், மகாகோபதீப்தனாய் எரிந்து விழுந்து பளா பளா நன்ருயிரு ந்ததென்று கறுவிக்கொண்டு வேறே ஒரு தேரிலேறி வில்லைக் குணத் தொனிபண்ணி, அந்த வில்லிலே சூரிய கிரணங்களைப்போல, அதிதீக்ஷண்யமான பாணங்களைத்தொடுத்துப் பிரயோகித்து கிருஷ்ணார்ச்சுனர்களிருவருடைய சரீரமுழுதையுஞ் சதைசதையாகப் பேர்த்தெறிந்து எங்கே பார்த்தாலும் ரத்தவெள்ளமோடும்படி செய்துவிட்டான் அதனாலந்த பகவானுடைய திருமேனியானது மெத்தவும் இளப்படைந்து இனி அர்ச்சுனனுடையகையினு லிவனைக்கெலிக்கமுடியாது நாமே கொல்லவேண்டுமென்றுநிச்சயித்து தம்முடையசக்கிராயுதத்தைநினைத்தருளினர் அப்படிநினைத்தமாத்திரத்தில்கோடி சூரியப்பிரகாசமாய்விளங்குகின்றஅந்தசக்கிராயுதமானதுவந்துகிருஷ்ணபகவானுடையகையில்நின்றது அதுதெரிந்துகிருஷ்ணமூர்த்தியானவர்அந்தசக்கரத்தை தமதுவலக்கரத்திலேற்றுங்கிக்கொண்டுஇவனைக் கொல்லுகிறேனென்றுமலையைவிட்டுக்குதித்தோடிவருகின்றஒருசிங்கம்போல தேரைவிட்டுக்குதித்து ஓடிவருகின்றவேகத்தினுல்வயிற்றிலடங்கியிருக்கின்ற பிர்ம்மாண்டகடாகங்களெல்லாங்குலுங்கினதுபூமியெல்லாங்கிடுகிடுவென்று நடுங்கினது இந்தப்படிஓடிவருகின்ற கோலாகலத்தைக்கண்டுதாமளாத்துவஜன் சிரித்து தானுந்தேரைவிட்டுக்குதித்து அந்தபகவானுக்கெதிரே நடந்து வந்து அவரைப்பார்த்து ஒய்பரந்தாமா,வாரும்வாரும் எதோஉம்முடைய சுறுக்கைப் பார்ப்போமென்றுசொல்லி தாமளாத்துவஜனனவன் கிருஷ்ணமூர்த்தியை அசையவொட்டாமல் கெட்டியாகப்பிடித்துக்கொண்டான்.

அதுதெரிந்து அர்ச்சுனனும் மஹா கோபத்துடனே தனதுகாண்டீபத்தில்ஒருபாணத்தைத்தொடுத்துகிருஷ்ணமூர்த்தியினுடையதிருமேனியிற் படவொட்டாமல் தாமளாத்துவஜன்பேரில் பிரயோகம்பண்ணினன்அதுகண்டுதாமளாத்துவஜனும்மஹாகோபத்துடனேகிருஷ்ணமூர்த்தியைவலதுபக்கத்திலிடுக்கிக்கொண்டுஓடிவந்துஅர்ச்சுனனைத்தூக்கிஇடதுபக்கத்திலிடுக்கிக்கொண்டு ஆகாசமார்க்கத்திலெழும்பி இரண்டுகக்கத்தையுமரைக்கும்பொழுது அதனால் கிருஷ்ணமூர்த்தியானவர் மெத்தவும்வருத்தமடைந்து இனிநம்மால் இவனைச்செயிக்கமுடியாது லகுவாய் தப்பித்துக்கொள்ளவேண்டுமென்று இரண்டு கண்களையும் மூடிக்கொண்டுகைகாலசைக்காமல் ஒருபிரதமைப்போலிருந்தார். அதுதெரிந்து அர்ச்சுனனும் அப்படியேயிருந்தான். அதுகண்டு தாமளாத்துவஜன் அந்தஇரண்டுபேரையும்பார்த்து இவர்களிறந்துபோனர்கள் இனிமேல் இவர்களால் சாரமில்லையென்று பூமியின்மேலெறிந்துவிட்டு இரண்டு அஸ்வமேதக்குதிரையையும் பிடித்துக்கொண்டு நகுலத்துவஜனுடனே சலந்து ரத்தினபுரத்தைச்சேர்ந்து தன்னுடையபிதாவாகிய மயூரத்துவஜமஹாராஜனண்டைக்குப் போனன்.

கேட்டீரோ ஜெனமேஜெயமஹாராஜாவே, அப்போது சூரியபகவானும் தாமதாத்துவஜனுடைய சவுரியபராக்கிரமத்திற்குப்பயந்து ஒளித்துக்கொண்டதுபோல மேற்குத்திசையில்அஸ்தமானமாகினர். அப்பால் அர்ச்சுனன்சேனைகளுடைய முகவிலாச மொடுங்கினதுபோலத் தாமரைகளெல்லாம்மூடிக்கொண்டது, எங்கேபார்த்தாலுங்காடாந்தகாரமான இருள்நிறைந்து கம்மிக்கொண்டது. அந்தவேளையில் தாமதாத்துவஜன்போய் தன்னுடையபிதாவைக்கண்டு அவருக்குப்பிரதக்ஷண நமஸ்க்காரம்பண்ணி எழுந்துநின்று கைகளைக்கட்டி வாய்பொத்திக்கொண்டு அவரைப்பார்த்து ஓய்பரமபுருஷா, தேவரீருடைய அஸ்வமேதக்குதிரையைவிட்டுப் பூமிப்பிரதக்ஷணஞ் செய்வித்துக்கொண்டுவருகையில் அஸ்த்தினாபுரத்தையாளுகின்ற தர்மபுத்திரர்விட்ட அஸ்வமேதக் குதிரைவந்தது அதைக்கண்டு நான்பிடித்துக்கட்டிவைத்தேன், அதையறிந்து ஸ்ரீகிருஷ்ணார்ச்சுனர்களிருவரும் சகலசேனாசமேதர்களாய் என்பேரில் எதிர்த்துவந்து இதுவரையிலும் போராடினார்கள், நான் அவர்களுடைய சேனாசமுத்திரங்களையெல்லாம் தும்சப்படுத்திவிட்டு அந்த கிருஷ்ணார்ச்சுனர்களுடனேபோராடி அவர்களிருவரையும் பிடித்துக்கொண்டு தேவரீரிடத்திற்குவருவோமென்று நினைத்து வருகையில் அவர்களிறந்துபோனார்கள் அதுதெரிந்து நான்அவர்களைரணக்களத்திலெறிந்துவிட்டு குதிரையைமாத்திரம் பிடித்துக்கொண்டு நமது சேனைகளுடனேவந்தேனென்றுசொல்ல, அதுகேட்டு அந்த ராஜனவன் புத்திரன்பேரில் கோபித்துக்கொண்டு அடாபயித்தியக்காரா நீ என்னவேலைசெய்துவந்தாய் விருதாவான காரியஞ்செய்துவந்தாயே ஒருகொப்பரிகையுடனே திரவியம்அகப்பட்டால் அந்தத்திரவியத்தை இறைத்துவிட்டு கொப்பரிகையைமாத்திரம் எடுத்துக்கொண்டுவந்ததுபோலவும், அமிர்தத்தைவிட்டு விஷத்தைக்கொண்டுவந்ததுபோலவும், அந்த அகிலாண்டகோடி பிர்ம்மாண்டநாயகரான ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியை விட்டுவிட்டு இந்தக்குதிரையை ஏன்பிடித்துக்கொண்டு வந்தாயென்றுகூறி பின்னையும் தன்குமாரனைப்பார்த்து ஓய் குமாரகா நீபோய் அந்த பகவானைப் பொழுதுவிடிந்தபின்பாவது இவடத்திற்கு அழைத்துக்கொண்டுவா, நான் அவரைப் பூசைபண்ணுகிறதற்கு வேண்டிய பூசாதிரவியங்களும் காணிக்கைகப்பணங்களும்நவரத்நமுதலானசகலவஸ்த்துக்களும்முஸ்த்தீது பண்ணிவையென்றுசொல்லிதிட்டம்பண்ணி யனுப்பிவிட்டு பிற்பாடு அந்த மயூரத்துவசமஹாராசனும் எப்போது பொழுதுவிடியப் போகின்றதென்றுயாகசாலையிலிருந்து வழிபார்த்துக்கொண்டிருந்தான்.

அங்கே தாமதாத்துவசன் கையினலடிபட்டு மூர்ச்சையாய்விழுந்துகிடந்த ஸ்ரீகிருஷ்ணார்ச்சுனர்களிருவரும் மூர்ச்சைதெளிந்து மெள்ள மெள்ளக்கண்களைத்திறந்து தாமதாத்துவசன் போனானோ இல்லையோ வென்று தலையை எடுத்துப்பார்த்தவளவில் அவனையும் அவன் சேனைக

னையும் காணுதபடியினால் குதிரையைப்பிடித்துக்கொண்டுபட்டணத்தி
ற்குப் போய்விட்டானென்று நிச்சயம் பண்ணிக்கொண்டு, எழுந்திரு
ந்து ஒருவர்க்கொருவர் சரீரத்தைத்தடவி துடைத்துக்கொண்டு, பின்
பு அர்ச்சுனனானவன் தன்சேனைகள் மடிந்துபோனதையும் தனக்கு
வந்துசம்பவித்த ஆபத்தையும் அஸ்வமேதக்குதிரையைப் பிடித்துக்
கொண்டுபோனதையும் நினைத்துவிசாரப்பட்டுகிருஷ்ணதேவரைப்பா
ர்த்து ஐயா,ஜநார்த்தனா, பார்த்தீரோ தேவரீரிருந்தும் எனக்குவந்த ஆ
பத்துகளோ மட்டுமிதமில்லை, என்னுடையசேனைகளெல்லாம் மடிந்து
போய்விட்டது, குதிரையும் பிடிபட்டுப் போச்சுது, தர்மபுத்திரர் செ
ய்கிறயாகமும் நிறைவேறாமற் போய்விட்டது, எனக்கோவென்றால் மி
குந்த ஆயாசமா யிருக்கின்றது, பேசுகிறதற்கேசக்தியில்லை நானென்
ன செய்வேன் சுவாமியென்றுசொல்ல, அதுகேட்டுஅந்ததேவனும்அர்
ச்சுனனைப்பார்த்து ஓய்அர்ச்சுனா உனக்கு குதிரைபோச்சுதென்றும் ச
ரீரமெல்லாங்காயமாச்சுதென்றும் என்னுடனேசொல்லி விசாரப்படுகி
றாயே, நான் என்னுடையதுக்கத்தை ஆருடனே சொல்லியாற்றப்போ
கிறேன் நானிதுவரையிலும் அநேகயுத்தத்திற்போராடி அநந்தமாயிர
சஸ்த்திர அஸ்த்திரங்களினாலும்நொந்திருக்கிறேன்இப்படிப்பட்டபி
ரயாசமடைந்ததில்லை முன்பு பாரதயுத்தத்திலே உனக்குச்சாரத்தியம்ப
ண்ணினபொழுது பீஷ்மர்-துரோணர்-முதலான பிரமுகருடையபா
ணங்களினாலும் நொந்திருக்கிறேன், அப்போது இவ்வளவு வருத்தங்க
ண்டதில்லைஇப்பொழுதுசரீரமுழுதுங்காயமாச்சுதுமனஞ்சிதறிப்போ
ய்விட்டது எழுந்திருந்து நடக்கிறதற்கே சீவனில்லை, என்னுடைய
துக்கத்தை என்னசொல்லப்போகிறேன் விஜயாவென்றுசொல்ல- அது
கேட்டு அர்ச்சுனனும் மஹாஉக்கிராகாரனாய் அந்த பகவானைப்பார்த்து
ஓய் அநாதரக்ஷகா தேவரீருடைய திருமேனியை இத்தனைஉபத்திரவம்
பண்ணினஅந்ததுன்மார்க்கனை இந்தட்சணமேகொன்றுஅஸ்வமேதக்கு
திரையையும் விடுவித்துக்கொள்ளுகிறேன் சற்றே அவனுடைய பட்ட
ணத்தைக்காண்பியும் ரதத்தைநடத்துமென்று ஆக்ருஷமாகச்சொல்ல,
அதுகேட்டுகிருஷ்ணமூர்த்தியும் புன்சிரிப்பாகச்சிரித்து அர்ச்சுனனை
ப்பார்த்து- ஓய் அர்ச்சுனா, அந்த தாமராத்துவசனைப் பரமசிவனாலும்,
பிரமனாலும்,அக்கினிதேவனாலும்,வாய்வுபகவானாலும்,ஜெயிக்கமுடியா
து-அப்படிப்பட்ட சாமர்த்தியபுருஷனை உன்னால் - ஜெயிக்க முடியு
மோ- நீ அவனுடைய பலத்தை இன்னம் அறியவில்லையோ அவன் தர்
மசொரூபன்-சத்தியசந்தனன்- ஹரிகிருபையுள்ளவன்-அவன்பிதாவோ
வென்றால், அவனைப்பார்க்கிலும் பரமோத்தமன்-தர்மக்கியானி- ஹரிபூ
ஜாதுரந்தரன்-அவனுடையபட்டணமோவென்றால் ஸ்ரீவைகுந்தம்போ
லநித்தியகலியாணமாய் ஹரியினுடைய பிரதாபத்துடனே விளங்கப்ப
ட்டது அப்படிப்பட்டவர்களுடன்எதிர்த்து நிற்கிறதற்குஎன்னாலுமாகா
து-அவனுடைய மகிமையை உனக்கு அறியப்பண்ணுகிறேன்வாவென்

றுசொல்லி தாம் ஒருசந்நியாசிபோல கோபிசந்தனத்தினால் நெற்றியில்
ஊர்த்தபிண்டந்தரித்துதலையில்லசகலாத்துகுல்லாய்ப்போட்டுக்கொண்
டு,அதன்மேலில் காவிவஸ்த்திரங்கட்டிக்கொண்டு,அரையில் நார்மடிகட்
டிக்கொண்டு,தோளின்மேலில் ஒரு உத்தரீகத்தைப் போட்டுக்கொண்டு,
கழுத்திலே துளசிமாலையைத்தாழ்வடமாகத்தரித்துக்கொண்டு,கக்கத்தி
லேபஞ்சாங்க புத்தகமிடுக்கிக்கொண்டு, கையிலே தண்டுகோல்பிடித்து
க்கொண்டு, பாதத்திலே பாதக்குறடு தரித்துக்கொண்டு, தொண்ணூற்
றொன்பதுவயதுள்ள பெரியசந்நியாசியாகி,அர்ச்சுனனையும் பிரமசாரி
யாக்கிஅவனிடத்தில்பூசைப்பெட்டியும்மடிஞ்சியும் அங்கவஸ்த்திரமு
ங்கொடுத்து அவனையுஞ் சிஷனாக அழைத்துக்கொண்டு அந்தபகவானா
னவர் பொழுதுபோன ஒருஜாமத்தின் பிறகு ரத்தின புரத்திற்குள்ளே
போய் கடைவீதியில்நின்று வேடிக்கை பார்க்கும்பொழுது அங்கே பு
ஷ்பமாலைவிற்கிற ஒருபெண்ணானவள் நல்லபுஷ்பமாலையைக் கையிற் பி
டித்துக்கொண்டிருக்க, அதைக்கண்டுஒருபுருஷன்வந்துஅந்தஸ்திரீயை
ப்பார்த்து ஓய்அம்மாபாக்கியவதி உன் கையிலிருக்கிற புஷ்பமாலையை
ப்பார்த்தவுடனே லட்சுமீகடாட்சமுண்டான புருஷன் எப்படிசந்தோ
ஷமடைவானோ அப்படிப்பட்ட சந்தோஷம் எனக்குண்டாயிருக்கின்ற
து, இந்த புஷ்பமாலை லட்சுமீகடாட்சம்போலவே யிருக்கின்றதென்று
சொல்ல, அதுகேட்டு அந்த பாக்கியவதியும் அந்த புருஷனைப்பார்த்து
ஐயா,இந்தபுஷ்பமாலையும் உம்முடையமார்புக்குச் சரியா யிருக்கின்றப
டியினால் உம்மைப்பார்த்தால் வைசந்தி வனமாலிகாபரணராகியஸ்ரீமகா
விஷ்ணுவைப்போ லிருக்கின்றதென்றுசொன்னாள்.

அந்தவார்த்தைகளைக்கேட்டு கிருஷ்ணபகவானானவர் அர்ச்சுனனை
ப்பார்த்து ஓய் அர்ச்சுனா இந்த ஸ்திரீபுருஷாள் பேசின வார்த்தைகளை
க்கேட்டாயோஎத்தனை ஆனந்தமாயிருக்கின்றது.கொள்ளல்-விற்றல்-மு
தலானயிடங்களிலும் இப்படி ஹரிநாமஸ்மரணையே - பிரகாசிக்குமா
னால் மற்றயிடங்களில் எப்படி யிருக்குமென்றுசொல்லி அப்புறம் சில
தூரம்போகையில், அங்கே உப்பரிகையின்மேலில் ஒரு ஸ்திரீபுருஷா
ள்-சங்கீதம் பாடிக்கொண்டிருக்கும்போது அந்த புருஷனானவன் ஸ்தி
ரீயைப்பார்த்து ஓய் நாயகி நீபாடுகிற ஸ்திரீராகத்திற்கு மலையானாலும்
உருகிப்போகும்- என் செவிகளுக்கு மஹா இன்பமா யிருக்கின்றதெ
ன்றுசொல்ல, அதற்கு அந்தஸ்திரீயும் நாயகனைப்பார்த்து ஓய் நாதா உ
ன்னுடைய இருதயத்திற் சதாகாலமும் பகவானேயிருந்து விளங்குகின்
றபடியினால் நான்பாடுகின்ற ஸ்திரீராகமும் உமக்குப் பிரீதியா யிருக்கி
ன்றதென்று சொன்னாள். அந்த வசனங்களையுங் கிருஷ்ணபகவான் கே
ட்டு அர்ச்சுனனைப்பார்த்து ஓய் அர்ச்சுனா இவர்கள் பேசுகின்றதையுங்
கேட்டாயோவென்றுசொல்லி அப்புறம் இரண்டடிதூரம் நடந்துபோ
கையில்- அங்கே ஒருமேடையின்மேலில் ஒருஸ்திரீயும் புருஷனும் கே
ளிவிலாசமாய் சம்போகசௌக்கியங்களை அனுபவித்துக் கொண்டிருக்

கும்போது புருஷனானவன் நாயகியைப்பார்த்து ஓய் பெண்ணே உன்னுடைய ஸ்தன்னியத்து நுனியில் கறுத்திருக்கின்றபடியினால்ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியானவர் உன்னுடையஸ்தன்னியத்து நுனியில் விளங்குகின்ற பாவனேபோ லிருக்கின்றது-அல்லாமலும், உன்னுடைய தலைமயிரிலும், அந்தபகவான் விளங்குகின்றதென்றுசொல்ல,அதற்கு அந்த ஸ்திரீயானவள் புருஷனுடைய இரண்டுகைகளையும் பிடித்துக்கொண்டு ஓய்-நாதா, உம்முடைய அஸ்த்தத்தில் பத்மரேகை சங்கரேகைக ளிருக்கின்றபடியால் நீரெனக்கு மகாவிஷ்ணுவுக்குச் சரியென்றுசொன்னாள்.

அந்த வார்த்தைகளையும் கிருஷ்ணபகவான்கேட்டு சந்தோஷித்து அர்ச்சுனனைப்பார்த்து ஓய் அர்ச்சுனா, சம்போகவேளையிலும் ஸ்ரீஹரியை மறவாமலிருக்கிறார்களே மற்றவ்வேளையில் எப்படி யிருப்பார்களோ அதை நீயே யறிந்துக்கொள்ளென்றுசொல்லி, அப்பால், சிலதூரம் நடந்துபோகையில் அந்த பகவானானவர் அர்ச்சுனனைப்பார்த்து ஓய் கிரீட்டி, ஸ்ரீவைகுந்தத்திற்குச் சரியான இந்தப்பட்டணத்திலுள்ள பிரஜைகளே இப்படி யிருப்பார்களானால், இதை அரசாக்ஷிசெய்கின்ற அரசன் எப்படி யிருக்கவேண்டும் இந்தப்பட்டணத்தில் மகாலட்சுமீ சமேதராக அந்த விஷ்ணுவே குடியிருக்கின்றார். இப்படிப்பட்ட மகிமையுள்ள ராஜனை நாம் எப்படி ஜெயிக்கிறதென்று சொல்லிக்கொண்டு அந்த ராத்திரிமுழுதும், அந்தப்பட்டணமெல்லாஞ்சுற்றி அங்கங்கேயுண்டான விநோத விச்சித்திரங்களைக்கண்டு சந்தோஷித்துக்கொண்டிருக்கையில்-சூரியபகவானும், கிழக்குத்திசையில் உதயமாகினார். அதுதெரிந்து கிருஷ்ணார்ச்சுனர்களிருவரும் பட்டணத்திற்கு வெளியே நர்ம்மதா தீர்த்தத்திற்குவந்து காலோசிதமான கர்ம்மானுஷ்டான ஜெபதபங்களைமுடித்துக்கொண்டு எப்போதும்போல் கிருஷ்ணபகவான் பிராமண சந்நியாசியாகவும், அர்ச்சுனன் பிரமசாரியாகவும், வேஷங்கொண்டு புறப்பட்டுவந்து அந்த நர்ம்மதா நதிக்கரையில் யாகசாலையேற்படுத்தி அதினிடமாக யிருந்து யாகதீக்ஷைவகித்து ஸ்ரீமந் நாராயணமூர்த்தியை மனதினிடமாக நிறுத்தி இரண்டுகண்களையுமூடி தியானம்பண்ணிக்கொண்டிருக்கின்ற மயூரத்துவஜமகாராஜனையும் அவன் குமாரனாகிய தாமரைத்துவஜனையுங்கண்டு அவர்களுக்குச் சமீபமாகப்போய் கிருஷ்ணபகவானானவர் தமது அஸ்த்தத்தை நீட்டி, தீர்க்காயஸ்த்து, வச்சிரசரீரஸ்த்து, விஜயாஸ்த்துவென்று ஆசீர்வாதஞ்செய்தருளினார்.

அதுகேட்டு அந்தராஜனும், கண்ணைவிழித்துப்பார்த்து, அந்தபகவானுக்கு நவரத்தினபீடம்போடுவித்து அதன்பேரில் அவரை எழுந்தருளப்பண்ணி தான்கீழே நின்றுகொண்டு அந்த தேவனைப்பார்த்து ஓய் சுவாமீ,இதுநியாயமோ நான் நமஸ்க்காரஞ்செய்தபிறகு நீர் ஆசீர்வாதம் பண்ணவேண்டுமெல்லாமல் இப்படிசெய்யலாமோ சுவாமீயென்றுசொல்ல, அதுகேட்டு அந்ததேவனும்மயூரத்துவஜனைப்பார்த்து ஓய்ராஜேந்திரா, நாம் ஒருகாரியமாய்வந்து உமக்கு ஆசீர்வாதம்பண்ணினோம்அதனு

ல் தோஷமில்லையென்றுசொல்ல அதுகேட்டு அந்தராஜனும் அவனைப் பிரதக்ஷணம்பண்ணி பக்திவிநயத்துடனே அர்க்கியபாத்திய முதலான உபசாரங்களினாற்பூஜித்து நமஸ்க்காரஞ்செய்து அநேகவிதமாகத்தோத்திரம்பண்ணி அஞ்சலியஸ்த்தனாய்நின்று அந்ததேவனைப்பார்த்து ஓய்புருஷா, நீர் எந்தவூர் உம்முடைய நாமமென்ன நீர் என்னகாரியமாய்என்னைக்குறித்துவந்தீர் அதைச்சொன்னால் நான் அந்தக்காரியத்தை ஆசப்பண்ணுகிறேன்சுவாமீயென்றுகேட்கஅதுகேட்டு கபடநாடக சூஸ்த்ராவதாரியான பிராமணசந்நியாசியும்,அந்தராஜனைப்பார்த்து-ஓய்ராஜேந்திரா நாம்தர்ம்மாபுரமென்கிற பட்டணத்திற்குடியிருக்கிறது நம்முடைய பெயர் கிருஷ்ணனென்றுசொல்லுவார்கள் நமக்கு இந்தச்சீஷனும் ஒருபிள்ளையுமுண்டு அந்தப்பிள்ளைக்கு உம்முடைய புரோகிதரான ஹரிவாசுதேவசாஸ்த்திரியாருடைய குமாரத்தியைக்கேட்கும்படி அந்தப்பிள்ளையை அழைத்துக்கொண்டு இந்த சீஷனுடனேகூடஉம்முடையபட்டணத்தைநோக்கிக் காட்டுவழியாகவருகையில் ஒரு சிங்கமானது ஓடிவந்து எங்களிருவரையும்விட்டுவிட்டு என்பிள்ளையைமாத்திரம் பிடித்துக்கொண்டுதின்னப்போச்சுது அதுகண்டுநான்பயந்துஅந்தச்சிங்கத்தைப்பார்த்து,ஓய்சிங்கராஜாவே என்பிள்ளையைவிட்டுவிடு உனக்குவேறே இரைகொடுக்கிறேன்எனக்குப்புத்திரசந்தானங்கொடுத்து ரக்ஷியென்றுஅநேகவிதமாகவேண்டிக்கொள்ளுகையில் அச்சிங்கத்துர்க்குத்தயவுவந்து நம்மைப்பார்த்து ஓய்பிராமணோத்தமா, உனக்கு ஒரேபிள்ளையென்றாய்,அதற்குப்பதில் இரைகொடுக்கிறேனென்றும்,நீவேண்டிக்கொள்ளுகிறாயல்லவோ நல்லது இந்தச்சிறுபிள்ளையைத் தின்னால்தான் எனக்கு லாபமென்ன என்பசிதீருகிறதேகாரியம் ஆதலால், எனக்கு வேறொருவர் மாமிசம்வேண்டாம் இந்தரத்தினபுரத்தையாளுகின்ற மயூரத்துவச மகாராஜனுடைய பாதிசரீரத்தை அறுத்துக்கொண்டுவந்து கொடுத்தாயானால் நான்உன்பிள்ளையை விட்டுவிடுகிறேனென்றுசொல்ல,அதற்குநான் அப்படியேகொண்டுவந்து தருகிறேனென்று சொல்லிவிட்டு உம்மிடத்திற்குவந்து ஆசீர்வாதம்பண்ணினேன் நீரும்கேட்டதைத் தருகிறேனென்றுசொன்னீராதலாலும் நீர் சத்தியசந்தனானதலாலும் நான்கோறிவந்ததைக்கொடுத்து என்பிள்ளையை விடுவித்து என்னைச் சந்தோஷப்படுத்துமென்றுசொல்ல, அதுகேட்டு அந்தராஜனும், பிராமண சந்நியாசியைப்பார்த்து ஓய்சுவாமீ, தேவரீருடைய குமாரனை ரக்ஷிக்கிறநிமித்தம் என்சரீரத்தைப் பகவானுக்குப் பிரீதிசெய்கிறேனென்றுசொல்லி, அப்பொழுதே அந்த ரத்தினபுரத்தைத் தாமரைத்துவசனுர்க்குப் பட்டாபிஷேகம் பண்ணுவித்து தான் பரிசுத்தனாய் யாகசாலைமண்டபத்தில்வந்து கிழக்குமுகமாய் உட்கார்ந்துகொண்டு அநேகமாயிரம் பிராமணர்களுக்குத் தானதர்ம்மங்கள் செய்வித்து மகா விஷ்ணுவை இருதய கமலத்தில் தியானித்துக்கொண்டு அதிக சந்தோஷத்துடனே அந்த பிராமணசந்நியாசியைப்பார்த்துஓய்சுவாமி என்சரீரத்தைரம்பத்தினாலறுத்து

க்கொண்டுபோமென்றுசொல்ல, அதிலே அந்தராசனுடையமனைவியா
கிய குமுத்துவதிதேவியார்வந்து அந்தசந்நியாசியைப்பார்த்துஐயா-பி
ராமணோத்தமா, தேவரீர் என்புருஷனுடைய சரீரத்திற் பாதிசரீரமல்ல
வோகேட்டீர் அப்படிவேண்டாம் என்னையே கொண்டுபோய் அந்தசி
ங்கராஜனுக்கு இரையாகக்கொடு மென்றுசொல்ல;அதுகேட்டு அந்தபக
வானும்குமுதவதியைப்பார்த்து-ஓய்-அம்மா, அந்தசிங்கராசன்சொன்ன
து-புருஷனுடையசரீரத்திலும் இடப்புறம் பெண்பக்கமாயிருக்கும் அ
தைவிட்டுவலப்புறத்தைக் கொண்டுவாவென்று சொல்லியிருக்கபிரத்தி
யட்சமாய் ஸ்திரீயையேகொண்டுபோவேனுனல்அதுசம்மதிக்குமாவெ
ன்றுசொல்ல,அதுகேட்டுதாமரைத்துவசனும்அவளைப்பார்த்துஓய்சுவா
மீ தகப்பனுக்குஆபத்துவந்தபோது பிள்ளையானவன்காப்பாற்றவேண்
டுமாதலால் என்னைக் கொண்டுபோய் அந்தச் சிங்கத்திற்குக் கொடுமெ
ன்றுசொல்ல; அதுகேட்டுஅந்தபகவானும்தாமரைத்துவசனைப்பார்த்து
ஓய்-ராசநந்தனநீங்கள் அந்தசிங்கராசன் சொன்னவார்த்தையைச் செவ்
வையாகக்கேளுங்கள் அஃதென்னவென்றால்,

அந்தசிங்கராஜாவானவன் பிள்ளையைஒருபுறத்திலும் பெண்சாதியை
ஒருபுறத்திலும்உட்காரவைத்துக்கொண்டு அவர்களும்சஞ்சலப்படாமல்
தானும் சஞ்சலப்படாமல் சந்தோஷசித்தர்களாக ஒருமனதாயிருந்து
பாதிசரீரத்தைப்பகுந்துக்கொடுக்க அதை நீர்வாங்கிக்கொண்டுவந்தால்
நான்ஒத்துக்கொள்ளுவேன் இல்லாவிட்டால் எனக்குவேண்டாமென்று
சொல்லியதென்றுசொல்ல, அந்தவார்த்தையைக்கேட்டுமயூரத்துவஜனு
ம் பிராமணோத்தமரைப்பார்த்து ஓய்சுவாமி, தேவரீர்கருத்தின்படியே
நடப்பிக்கிறேன் நீங்களவர்கள் வார்த்தையைக்கேளாமல் தயவுபண்ணு
மென்று இரக்கமாச்சொல்லி பின்பு பெண்சாதியையும் பிள்ளையையும்
பார்த்து நீங்கள் ஒன்றுக்கும் யோசனைபண்ணமல் என்பாதி சரீரத்தை
அறுத்துக்கொடுங்களென்றுசொல்ல - அதுகேட்டு அவர்களும் அப்ப
டியேநல்லதென்று சம்மதித்து ஏகமனதாய் பகவானைத் தியானித்துக்
கொண்டு பிரம்மாதிதேவர்களெல்லாரும் ஆகாயவீதியில்நின்று இதுஎ
ன்னஆச்சரியமென்றுபார்த்துக்கொண்டிருக்க, குமுத்துவதியாரும்தா
மரைத்துவஜனும்இரண்டுபக்கத்திலிருந்துரம்பத்தைஎடுத்துராஜனுடை
ய சிரசின்பேரில்வைத்து ஹரி ஹரீ கோவிந்தா உனக்கே அற்புதமெ
ன்றுசொல்லி இரண்டுபேரும் ரம்பத்தைப்பிடித்துக்கறகறவென்றுநெ
ற்றிமட்டுக்கும்அறுத்தார்கள் அப்போது இடதுகண்ணிலிருந்து ஜலமா
னது தாரைதாரையா யொழுகியது அதுகண்டுபிராமணர்கோபித்து ஷீ
ஷீனை அழைத்து இந்தப்பாவியினிடத்தில் தானம்வாங்குகிறதற்கு என்
னை அழைத்துக்கொண்டுவந்தாய் போதும்போதுமென்று தண்டினல்
அங்கேயிருக்கிறவள்பேரில் விசிறி பஞ்சாங்கத்தை எறிந்துவிட்டு மகா
கோபத்துடனே எழுந்துபோகிறபோது குமுத்துவதியும் தாமரைத்து
வஜனுங்கண்டு அறுக்கின்றதைநிறுத்தி, பிராமணோத்தமர் கோபித்துக்

கொண்டுபோகிறகாரியம் என்னவென்றுராஜனுடனேசொல்லஅந்தராஜனுங் கண்ணைவிழித்துப்பார்த்து மந்திரிகளுடனேசொல்லியனுப்பி அப்பிராமணனை அழைப்பித்து ஓய்சுவாமி தேவரீர்கோபித்துக்கொண்டு போகிறகாரியம் என்னவென்றுகேட்கஅதற்குஅந்தபகவானும்ராஜனைப் பார்த்து ஓய்ராஜனே நீ அழுதுக்கொண்டு தானங்கொடுத்தால் எனக்கு வேண்டியதில்லைஉனக்குப்பெண்சாதிபிள்ளைகள்பேரில் ஆசையாயிருந்தால்முன்பேஇல்லையென்று சொல்லலாகாதோவென்றுசொல்ல அதற்கு அந்தராஜனும்ஓய்சுவாமி,நான் துக்கப்பட்டால் இரண்டுகண்களிலும்ஜலம்வடியாதோதானென்னைப்பாரும்இடதுகண்ணில்மாத்திரம்வடிகின்றது.

அம்மேதினென்றால்வலதுபுறமாத்திரம் பகவத்பிரீதியாகின்றதேநமக்கு அந்தபாக்கியங்கிடைக் கவில்லையேயென்று இடதுபுறந்துக்கப்படுகின்றதென்றுசொல்லி பின்னையும் அந்ததேவனைப்பார்த்துஓய்சுவாமி எப்படியாகிலும் தயவுபண்ணி என்னுடையதானத்தைக்கைக்கொண்டு ரட்சியுமையாவென்று வேண்டிக்கொள்ளுகின்ற பரமபாகவதசிரேஷ்டனாகியும்,சத்தியசந்தனாகியும்,தர்மசொரூபனாகியும்,விளங்குகின்றஅந்தராஜனுடைய பக்திக்குமெச்சி கிருஷ்ணபகவானும்அர்ச்சுனனைப்பார்த்து ஓய்பக்தா, இவனுடையபக்திவிநயத்தைக்கண்டாயோவென்று எச்சரித்து ரம்பத்தைவாங்கிஎறிந்துவிட்டு தமதுதிவ்யாஸ்தத்தினால்அந்தராஜனுடையசிரசைச் சேர்த்துப்பிடித்தமாத்திரத்தில் அந்தச்சிரசுஎப்போதும்போல ஒட்டிக்கொண்டது. அப்பொழுது அந்தபகவானும் திவ்வியமங்களவிக்கிரகமாய் கோடிசூரியப்பிரகாசத்துடனே சங்குசக்கிராயுதபாணியாய் சதுர்ப்புஜங்களும்,வைசந்திவனமாலிகையும்,கௌஸ்துவாபரணமும் பிரகாசிக்கும்படி பிரசன்னமாய் விளங்கியருளினார்.

பிரமசாரியும் அர்ச்சுனனானான், அதுகண்டு அந்தராஜனும் பெண்சாதி பிள்ளையுடனே அதிகசந்தோஷகரமாய் இரண்டுகண்களிலும் ஆனந்தபாஷ்பம் பொழியத்தக்கதாகப் புளகாங்கிதனாய் அந்த தேவனுக்கும்பிரதக்ஷணம்பண்ணி, சாஷ்டாங்கதெண்டன்சமர்ப்பித்து வேதவாக்கியங்களினால் அநேகவிதமாகத்தோத்திரம்பண்ணி, பிரம்மாதிதேவர்களுடைய இருதயகமலத்தில் வாசமாயிருக்கப்பட்ட அவரது ஸ்ரீபாதாரவிந்தங்களை கந்தபுஷ்பதீபதூபநைவேத்தியமுதலான உபசாரங்களாற் பூசைபண்ணி அந்தத்தீர்த்தத்தைத் தன்னுடைய சிரசிலே புரோக்ஷித்துக்கொண்டு அந்தபகவானைப்பார்த்து ஓய்-சுவாமீ,இன்றைக்கல்லவோ என்னுடையகோரிக்கை யீடேறிற்று-நானுங் கிருதகிருத்தியனானேனென்றுசொல்லி,அப்பால் அர்ச்சுனனையும் ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு, ஓய் புண்ணியபுருஷா-நான் என்னுடைய சீர்மை பூமிகளையும் பண்டிபண்டாரங்களையும்,அஸ்வமேதக்குதிரையையும் தர்மபுத்திரருக்கே கொடுத்தேன் அவரைச்சுகமாய் இரண்டு அஸ்வமேதயாகம் பண்ணச்சொல்லும் எனக்கு இந்த யாகபலனைப்பார்க்கிலும் அதிகபலன்கிடைத்ததென்றுசொல்லி,

அப்பால் கிருஷ்ணர்ச்சுனர்களையும் அவிடத்திலிருந்த பப்பிரவாகன்முதலானவர்களையும், சகலசேனைகளுடனே பட்டணத்திற்குள்ளே அழைத்துக்கொண்டுபோய் சகலசம்பிரமத்துடனே மூன்றுநாள்வைத்துக்கொண்டிருந்து பிறகு நாலாநாள் காலமே இரண்டுஅஸ்வமேதக்குதிரைகளையும்விட்டு அதின்பிறகு கிருஷ்ணர்ச்சுனர்களும்- மயூரத்துவசன்-தாமரைத்துவசன்-அம்சத்துவசன்-நீலத்துவசன்-பப்பிரவாகன்-விஷ்வகேதுமுதலான துராதுரைகளும்-ரதாரூடர்களாய்ப்புறப்பட்டு- சதுரங்கபலசேனைகளுடனே நடந்தார்கள்.

அப்பால் அந்தக்குதிரைகளானது காடுகள், மேடுகள், வனங்கள், வனந்திரங்கள், மலைகள், குகைகள், ஆறுகள், நதிகள், பட்டணங்கள், சீர்மைகள், பூமிகள், இதுகளையெல்லாந் தாண்டி அநேகந்தூரம்போய் அங்கே சரஸ்வதிபுரமென்கிற பட்டணத்திற்குச் சமீபமாகப்போய்ச் சேர்ந்தது-அந்தப்பட்டணத்தைப் பரிபாலனம்பண்ணுகின்ற வீரவர்ம்ம மஹாராஜனனவன் அந்தக் குதிரைகள்வந்ததும், கிருஷ்ணர்ச்சுனர்கள்வந்ததும், வேவுகாரர்களால் கேள்விப்பட்டு தன்மருமகனாகிய, எமதர்ம்மராஜனுடனும், சதுரங்கபலசேனைகளுடனும் ஆயுதவகைகளுடனே சண்டைக்கு முஸ்த்தீதாகப்புறப்பட்டுப் பட்டணத்திற்கு வெளியேவந்து தண்டுவிட்டிறங்கி அஸ்வமேதக் குதிரைகளைப்பிடித்துக் கட்டிவிட்டு யுத்தசன்னுத்தனயிருந்தான்.

## வீரவர்ம்மன்யுத்தம்.

இவிடத்தில் குதிரைபிடிபட்டுப் போனசேதியை அர்ச்சுனராஜன் தண்டுக்குள் பப்பிரவாகன்தெரிந்து கோபதீப்தனாய் தன்னுடைய ரதத்தை அதிவேகமாகத் துரத்திக்கொண்டு தனது சேனைகளுடனே வீரவர்ம்மனுடைய தண்டுக்கெதிராக வந்துசேர்ந்து வீரவர்ம்மனைப் பார்த்து ஓய் வீரவர்ம்மா, எங்கள் குதிரைகளை விடுகிறாயோ அல்லது என்பாணத்துக்கினிக்கு இரையாகிறாயோவென்றுகேட்க - அதுகேட்டு வீரவர்ம்மனுங்கோபங்கொண்டுபப்பிரவாகனுடைய சேனைகள்பேரில் விழுந்து காலாக்கினி ருத்திரனைப்போல எதிர்த்துச் சின்னபின்னப்படுத்தும்போது விஷ்வகேது முதலான துரைகளெல்லாரும்வந்து பப்பிரவாகனுடனே கலந்துக்கொண்டு வீரவர்ம்மனுடைய சேனைகள்பேரில் எதிர்த்து தங்கள் தங்களுடைய வில்லைவளைத்துக் குணத்தொனிபண்ணி அநேகமாயிரம் பாணங்களைப் பிரயோகஞ்செய்து சதுரங்கபல சேனைகளுடனேயும் தும்சப்படுத்தினார்கள்-அதனால், வீரவர்ம்மனுடைய சேனைகள்நின்று நிர்வகிக்கமாட்டாமல் ஓடத்தலைப்பட்டது-அதுகண்டு எமதர்ம்மராஜனுங் கோபங்கொண்டு கதாயுதத்தைக் கையிலெடுத்துக்கொண்டு அர்ச்சுனனுடையசேனைகள்பேரில்விழுந்து நாசப்படுத்தும்பொழுது அர்ச்சுனனுடைய சேனைகளெல்லாம் நின்று நிர்வாகம்பண்ணமா

ட்டாமல் நாலுதிக்கிலுஞ் சிதறி ஓடிப்போனார்கள்-அதுகண்டு அர்ச்சுன ராஜன் மெத்தவுந்திகிலடைந்து ஸ்ரீகிருஷ்ணபகவானைப்பார்த்து ஐயா, கிருஷ்ணா, அதோபார்த்தீரோ ஒருமகாபுருஷன் கையிலேயொருகதாயுதத்தை யேந்திக்கொண்டு மஹாஉக்கிரத்துடனே நமதுசேனைகள்மேபேரில் விழுந்து அதஞ்செய்து பண்ணுகிறான் அவனுக்குமுன்னே நான்நிர்வகிக்கிறதாய்த்தோற்றவில்லை, எனக்கு மெத்தவும் பயங்கரமாயிருக்கின்றது-ஆதலால் அந்தபுருஷன்யாவன் அதைஎனக்குச் சற்றே தெரியச்சொல்லவேண்டும் ஐயாவென்றுகேட்க-அதுகேட்டு அந்தப்பகவானும்அர்ச்சுனனைப்பார்த்துஓய்அர்ச்சுனா அந்தப்புருஷன் வீரவர்ம்மனுடைய மருமகனான எமதர்ம்மராஜன் வீரவர்ம்மனுக்குமருமகனானதலால் அவனைச்செயிக்கக்கூடாது அதுவல்லாமலும் அந்த வீரவர்ம்மனேவென்றால் கனவிலும் பொய்ச்சொல்லாதவன் சத்தியமே ஜெயமென்று நம்பி யிருக்கிறவன் (ஸ்ரீமஹாவிஷ்ணுவினுடைய) பாதபத்மங்களை எப்போதும் இடைவிடாமல் தியானம் பண்ணுகிறவன் அந்தப் புண்ணிய புருஷனானவன் பிராமணர்களுக்குத் தானங்கொடுத்து தாரைவார்க்கின்ற ஜலமானது கால்வாய்களாயோடிப் பூமியிலுள்ள பயிர்களுக்குப்போய் பாயும் ஆகையால் அந்தராசனை நாம் சண்டையினால் ஜெயிக்கமுடியாது மெள்ளச்சிநேகம்பண்ணிநமது குதிரையை விடுவித்துக்கொள்ள வேண்டுமென்று சொல்ல;

அதுகேட்டு அர்ச்சுனனும் ஸ்ரீகிருஷ்ண மூர்த்தியைப் பார்த்து ஐயா, ஜநார்த்தனா-இந்த எமதர்ம்மராசனானவன் வீரவர்ம்மனுக்கு மருமகனான விதமெப்படி அதைச் சற்றே தெரியச் சொல்லும் ஐயாவென்றுகேட்க அதற்கு அந்த பகவானும் அர்ச்சுனனைப்பார்த்து ஓய் கிரீட்டி அந்த வீரவர்ம்மனுக்கு மாலினியென்னும் பெயரையுடைய ரூபலாவண்ணியமுள்ள ஒருபெண்ணுண்டு - அந்தப்பெண்ணானவள் எமதர்ம்மராசனே தனக்குப்புருஷனாகவேண்டுமென்று நினைத்து அநேகந் தானதர்மங்கள் ஜெபதபங்கள் விரதஹோமங்கள் முதலானதுஞ் செய்துக்கொண்டிருக்கும்போது ஒருநாள் அவிடத்திற்கு நாரதமுனீஸ்வரர்வந்து அந்தப்பெண் செய்யப்பட்ட பூசையைக் கைக்கொண்டு அந்தப்பெண்ணைப்பார்த்து ஓய்பெண்ணே நீ விவாகம்பண்ணிக்கொண்டு சகலபோக பாக்கியங்களையும் அனுபவிக்கிற காலமாச்சுதே அதைவிட்டுவிட்டு இப்படிவிரதங்களை அனுஷ்டித்துக்கொண்டு காலம் போக்குகிறவிதம் என்னவென்றுகேட்க அதுகேட்டு மாலினியும் நாரதருக்குநமஸ்காரம்பண்ணி ஐயாமுனிநாதா எனக்குஎமதர்ம்மராஜன்புருஷனாகவேண்டுமென்று நினைந்து இப்படி விரதங்களைச் செய்துக்கொண்டிருக்கிறேனென்றுசொல்ல அதற்கு நாரதமுனிவர் சந்தோஷப்பட்டு மாலினியைப்பார்த்து ஓய்மாலினீ அப்படியானால்நான் உன்கருத்தின்படியே அனுகூலம்பண்ணி வைக்கிறேனென்றுசொல்லி அவள்கையில் செல

வுவர்ங்கிக்கொண்டுஎமபுரத்திற்குப்போய்எமதர்ம்மராஜனைக்கண்டுஅவனிடத்திற்பூசைகொண்டு அந்த எமதர்ம்மராஜனைப்பார்த்து ஓய்எமதர்ம்மராஜனே பூலோகத்தில் வீரவர்ம்மனுடைய குமாரத்தியாகியமாலினியென்கிறவள் உனக்குப்பெண்சாதியாக வேண்டுமென்று நினைத்து அநேகந்தானதர்ம்மங்கள் விரதஹோமங்கள்செய்துக்கொண்டிருக்கிறாள், ஆகையால் நீர்அவிடத்திற்குப்போய்அவளைப்பாணிக்கிரகணஞ் செய்துக்கொண்டு சகல சவுக்கியங்களையும் அடையுமென்றுசொல்லஅதுகேட்டு எமதர்ம்மராஜனும் நாரதனைப்பார்த்து ஐயா நாரதமுனிவரே நான் அப்படியேசெய்கிறேன் உம்முடைய வார்த்தையைத்தள்ளி நடக்கிறதில்லையென்று சொல்ல அதுகேட்டு நாரதரும் சந்தோஷமாய் எமதர்ம்மராஜனிடத்திற் செலவுபெற்றுக்கொண்டு தம்முடைய ஆசிரமத்திற்குப் போய்விட்டார். அதின்பிறகு எமதர்ம்மராசனும் அந்தப் பெண்ணுக்கெதிரே பிரசன்னமாகவந்துநின்று என்னவரம்வேண்டுமென்று கேட்க அதுகண்டு அந்தமாலினியும் எமதர்ம்மராசனுக்குச் சாஷ்டாங்க நமஸ்க்காரம்பண்ணி தேவரீர் எனக்குப்புருஷனாகின்றவரம் வேண்டுமென்றுகேட்க அதற்கு அந்த எமனும் அப்படியேநல்லதென்று சம்மதித்துவீரவர்ம்மனுடைய அனுமதியின்பேரில் மாலினியைக் கலியாணஞ் செய்துக்கொண்டுபின்பு மாமனாராகிய வீரவர்ம்மனைப்பார்த்து எனக்குச் சந்தோஷமாச்சுது உமக்கு என்னவரம்வேண்டுமென்று கேட்க,

அதற்கு வீரவர்ம்மனுஞ் சந்தோஷித்து மருமகனைப்பார்த்து ஓய் ஐயா, உன்னுடைய கிருபையினால் எனக்குச் சகல பாக்கியங்களுங் குறைவில்லாமலிருக்கின்றது ஆனால் ஒன்றுண்டு அஃதென்னவென்றால், நான் ஹரியினிடத்தில் பத்தியுள்ளவனாயிருந்துமரணதிசையில்ஸ்ரீமந்நாராயணாவென்கிறசத்தத்துடனே சீவன்விடவேண்டும்அதுவுமல்லாமல் என்சரீரமுள்ள பரியந்தமும் நீர் என்னிடத்தில்தானே யிருந்து எனக்குவந்தஆபத்துகளைத் தீர்க்கவேண்டுமென்று வரங்கேட்கஅதற்குஎமதர்ம்மராஜனுஞ்சந்தோஷப்பட்டு அப்படியேநல்லதென்று சம்மதித்துவரங்கொடுத்து அன்றுமுதல் இதுபரியந்தமும்மாமனார்வீட்டில்தானேதன்னுடைய ஸ்திரீயுடனே கூடிச்சகலசவுக்கியங்களையும் அனுபவித்துக்கொண்டிருக்கிறானென்றுசொல்லிக் கொண்டிருக்கையில்அதிலே வீரவர்ம்மனும்மகாஉக்கிராகாரனாய்த் தன்மருமகனாகிய எமதர்ம்மராஜனைமுன்னதாக நடத்தித் தன்னுடைய ரதத்தையும்பின்னே நடத்திவில்லையெடுத்துக் குணத்தொனிபண்ணி அளவிறந்த பாணங்களைப் பிரயோகஞ்செய்து அர்ச்சுனனுடையசேனைகளையெல்லாம்சிக்குப்படுத்துகையில்அதுகண்டுமயூரத்துவசன்தாமரைத்துவசன்-பப்பிரவாகன்-அம்சத்துவசன்-நீலத்துவசன்-விஷ்வகேது-பிரத்தியுமனன்- அனுசாளுவன்-எவ்வர்ணசுவன்-மேகவர்ணன்-கிருதவர்ம்மன் - அனிருத்திரன்- சாத்தகி முதலான சுத்தவீரர்களெல்லாம் வந்து வீரவர்ம்மன்பேரில் எதிர்த்து மகா ரோஷத்துவேஷங்களுடனே தங்கள்தங்களுடைய வில்லைவளைத்து

அநேகமாயிரம் பாணங்களைத்தொடுத்துப் பிரயோகம்பண்ணினார்கள்-
அதுகளையெல்லாம் வீரவர்ம்மன் கண்டித்துத்தள்ளி பின்னையுந்தன்னு
டைய வில்லினிடமாக ஒவ்வொருத்தருக்கு ஐந்துவிழுக்காடு அளவிறந்
தபாணங்களைத்தொடுத்துப் பிரயோகஞ்செய்துதன்பேரிலெதிர்த்தரா
ஜாக்களையெல்லாஞ் சற்றும்நரத்தில் மகா கஸ்திப்படுத்தி மூர்ச்சித்துவி
ழும்படிசெய்துசதுரங்கபலசேனைகளுடனுஞ்சிதறஅடித்துபிற்பாடுஅ
ர்ச்சுனன்பேரில் தன்னுடைய ரதத்தைத் துறத்தினான் அதுகண்டு அர்
ச்சுனனும் கிருஷ்ண பகவானைப்பார்த்து ஓ புண்டரீகாக்ஷா நீர் சண்
டைசெய்யவேண்டியதில்லை எனக்குச் சாரதியாயிருந்து குதிரைகளை
மாத்திரம் நடத்துமென்றுசொல்ல அதற்கு அந்தத்தேவனும் அப்படி
யேநல்லதென்று சம்மதித்து அர்ச்சுனனுடைய தேரின்பேரில் உட்கா
ர்ந்து குதிரைகளை அதட்டித் தேரைநடத்தியருளினார்.

அப்பொழுது அர்ச்சுனனுங் காண்டீபத்தைத்குணத்தொனிபண்
ணிஅதிலே திவ்யபாணங்களைத்தொடுத்து வீரவர்ம்மன்பேரில் பிரயோ
கம்பண்ணினான் அதுகளையெல்லாம் வீரவர்ம்மன் கண்டித்துவிட்டு த
ன்னுடையவில்லிலே அநேகமாயிரங் குரூரபாணங்களைத் தொடுத்து
ப் பிரயோகஞ் செய்து கிருஷ்ணார்ச்சுனர்க ளிருவரையும் நோகப்பண்
ணிசரீரமுழுதும் ரத்தமயமாக்கி கை கால் ஆடவொட்டாமல் செய்து
குதிரைகளையெல்லாஞ் சல்லடைக்கண்களாகத் துளைத்து கொடியாகிய
அனுமாரையும் நோகப்பண்ணியாவென்று அட்டகாசம்பண்ணினான்
அதனால்கிருஷ்ணபகவாவான்மெத்தவும்நொந்து அர்ச்சுனனால்சாரமில்
லையென்று தெரிந்து கொடியாகிய அனுமாரைப்பார்த்து எச்சரிக்கை
பண்ணிஓய்வாய்வுகுமாரகா நீ கொடியை விட்டிழிந்து இந்தவீரவர்
ம்மனை அதம்பண்ணென்றுசொல்ல அதுகேட்டு அனுமாரும்தேரைவி
ட்டுப் பூமியிற்குதித்து மகாஉக்கிராகாரமாய்வந்து தன்னுடைய வாலி
னால்-வீரவர்ம்மனுடைய தேரைச்சுற்றிஎடுத்துக்கொண்டு ஆகாசமார்க்க
த்தி லெழும்பிப்போனார் அப்பொழுது வீரவர்ம்மனும் அனுமாருக்கு
த்தெரியாமல் பூமியில்லதுவாய்க்குதித்து ஓடிவந்து அர்ச்சுனனுடைய
தேரைத்தூக்கி எடுத்துக்கொண்டுஆகாசமார்க்கத்திலெழும்பிஇடதுகை
யினால்-அந்தத்தேரைத் தூக்கிக்கொண்டு வலதுகையில்அனுமாருடைய
நெற்றியின்பேரிலறைந்தான் அதனால் அனுமாரும் பூமியில் விழுந்து
மூர்ச்சையடைந்தார் அப்பொழுது தங்களுடைய ரதத்தைப் பிடித்
துக்கொண்டிருக்கிற வீரவர்ம்மன் தலையின்பேரில் தமது திருப்பாதத்
தைநீட்டி ஸ்ரீகிருஷ்ணபகவான் உதைத்தருளினார்- அந்த உதையோடே
சாம்பவமூர்த்தி காலினால் உதைப்பட்டு விழுந்த - எமதர்ம்மராஜனைப்
போல் பூமியில்விழுந்துமூர்ச்சையடைந்தான்-அப்போது கிருஷ்ணபக
வானும் அர்ச்சுனனுடையரதத்தைப்பூமியிற்கொண்டுவந்துநிறுத்தினார்
வீரவர்ம்மனுடைய சாரதியும் தன்னுடைய ரதத்தைக் கொண்டுவந்து
பூமியில்நிறுத்தினான் அதிலே வீரவர்ம்மனும் மூர்ச்சைதெளிந்தெழு

ந்திருந்து அந்தபகவானுடையபாதம்பட்டபடியினால்அஞ்ஞானம்நீங்கி மெய்ஞ்ஞானம்பெற்றுமகாபயபக்தி விசுவாசத்துடனேகிருஷ்ணமூர்த்தியண்டைக்குவந்து நமஸ்க்காரம்பண்ணிஇரண்டுகைகளையும்அஞ்சலியாகச் சிரசின்மேல்வைத்துக்கொண்டுஅந்தபகவானைப்பார்த்து-ஓய்-புண்ணியபுருஷோத்தமா, துவாரகாபுரிவாசா,ஜநார்த்தனா, கஜேந்திரவரதா,சுவாமியென்று அநேகவிதமாகத்தோத்திரம்பண்ணி பிற்பாடுமுனீஸ்வரர்களுடனேயிருந்து அநேககாலந்தவஞ்செய்தாலுங் கிடையாததேவரீருடைய சரணாரவிந்தத்தைக்கண்டேன்-இப்போதுதான் என்னுடையகோரிக்கை ஈடேறிற்று, நான் இந்தக்குதிரைகளினால் வெகுலாபப்பெற்றேன்-இதுவேஎனக்குப்போதும் இந்தக்குதிரைகளைப்பிடித்துக்கட்டினலாபம்ஒன்றுக்குஆயிரம்பங்காய்க்கிடைத்தது, அல்லாமலும் பஞ்சாசத்கோடிபூமண்டலத்திற்கு அரசனானாலும் உம்முடையபாதாரவிந்தத்தைக்கண்ட சந்தோஷத்திற்கு ஈடல்ல, நான்வேண்டுமென்றால்இந்த அர்ச்சுனன்முதலானராஜாக்களைக்கெலிக்கிறது அருமையல்ல, தேவரீருடைய பாதாரவிந்தத்தைக்கண்டதே எனக்குப் போதுமென்றுசொல்லிவீரவர்ம்மனானவன் கிருஷ்ணமூர்த்திக்குக் காணிக்கையாக ஐம்பதினாயிரம் வெள்ளையானையும் அஸ்வமேதக்குதிரைகளான பஞ்சலக்ஷணமுள்ளஎண்பதினாயிரங்குதிரைகளும் நாலாயிரம் ஸ்திரீஜனங்களும் ஒன்பதுமலைப்பிரமாணம் நவரத்நராசிகளுங்கொண்டுவந்துசமர்ப்பித்து அர்ச்சுனனையும்ஆலிங்கனம்பண்ணிக்கொண்டு பிற்பாடு கிருஷ்ணார்ச்சுனர்களையும்மயூரத்துவஜன்-தாமரைத்துவசன்முதலான துரைகளையும்-சகலசேனைகளையும்தன்னுடையபட்டணத்திற்கு அழைத்துக்கொண்டுபோய் சர்வாடம்பரத்துடனே மூன்றுநாள்வரைக்கும் வைத்திருந்து பிற்பாடு நாலாநாள் காலமே அஸ்வமேதக்குதிரைகள் இரண்டையும்விட்டுஅதுகளின்பிறகே கிருஷ்ணார்ச்சுனர்களிருவரும்ரதாரூடர்களாய்ப்புறப்பட்டு வீரவர்ம்மன் கொடுத்தகாணிக்கைகளைப்பொதிபொதியாகஅஸ்த்தினாபுரத்திற்குஅனுப்பிவிட்டு வீர்வர்ம்மன்-மயூரத்துவஜன்-அம்சத்துவசன்-பப்பிரவாகன்-முதலான சுத்தவீரர்களுடனே சகலசேனாசமேதர்களாய் சரஸ்வதிபுரத்தைவிட்டு பதினெட்டுவகைமேளவாத்தியங்களும் தாம்தாமென்றுசகலலோகங்களுமதிரும்படி முழங்கத்தக்கதாக நடந்தார்கள்.

கேட்டீரோஜெனமேஜெயமகாராஜாவே- அப்பால்அந்தக்குதிரைகளானது அநேகம்பூமிகள்கடந்துபோய் அப்புறம் ஐந்துயோசனையகலமுள்ள ஒருபிர்ம்மாண்டமான மடுவிலிறிந்து நீந்தி அந்தக்கரையிலேபோய்ச்சேர்ந்தது, அந்தக்குதிரைகளின் பின்னாகநடந்த ஸ்ரீகிருஷ்ணார்ச்சுனர்கள் முதலான சகலசேனைகளும் அந்தமடுவினிடத்தில் வந்துசேர்ந்துகுதிரைகளையுங்காணாமல்தாங்களும்அந்தமடுவைக்கடக்கமாட்டாமல் ஆலோசனைபண்ணிக்கொண்டிருக்கையில் அதிலே வீரவர்ம்மனானவன் அநேகம்படகுகளையும்ஓடங்களையும்அழைப்பித்துகிருஷ்ணார்ச்சுனர்கள் முதலான வீரர்களையும் ஏற்றிக்கொண்டுஇரண்டுநாழிகைக்குள் அக்கரை

பேபோய்ச்சேர்ந்து குதிரைகளைப்பார்க்குமளவில் அவிடத்திலுங் குதி
ரைகளைக்காணுமல் அர்ச்சுனனுனவன் கிருஷ்ணபாவானைப்பார்த்துஜயா
ஜநார்த்தன-நமது குதிரைகள் எங்கேபோய்விட்டதோ தெரியவில்லை-இ
தற்கெப்படியென்றுவிசாரப்படுகிறபோது பிரமன்குமாரனுன நாரதமக
காமுனிவர் நாராயணுநாராயணுவென்றுவீணை பாராயணம்பண்ணிக்கொ
ண்டுவந்துமுன்னேநின்றுர் - அதுகண்டு கிருஷ்ணுர்ச்சுனர்களிருவரும்
எழுந்திருந்து நமஸ்க்காரம்பண்ணி அந்தமுனீஸ்வரரைஒருபொற்பீடத்
தில்உட்காரவைத்துகிருஷ்ணமூர்த்தியும் அர்ச்சுனனைப்பார்த்துஓய்கிரீட்
டி, நமது குதிரைகள்போனசங்கதி இவரைக்கேட்டால் தெரியுமென்று
சொல்ல, அப்படியே அர்ச்சுனனும் நாரதரைப்பார்த்து-ஓய்ஐயா, முனி
நாதா- எங்கள்குதிரைகளானது இந்தமட்டுக்குந் தப்பிவந்தது-இந்தமடு
வைத்தாண்டினவளவில் எப்படியோ மாய்கையாய்ப்போய்விட்டது-அ
துகள் எங்கேயிருக்கின்றது அதைச்சொல்லவேண்டுமென்றுகேட்க, அத
ற்கு நாரதரும் கிருஷ்ணுர்ச்சுனர்களைப்பார்த்து - ஓய் நர நாராயணர்க
ளே - உங்களுடைய குதிரைகளைக் குந்தலதேசத்தைப் பரிபாலனம்பண்
ணுகின்ற சந்திரகாச மகாராஜனென்பவன் பிடித்துக் கட்டிவிட்டான்
அவனை உங்களால் ஜெயிக்கமுடியாது மயூரத்துவசன் - தாமரைத்துவச
ன்- வீரவர்ம்மன்- பப்பிரவாகன்- அம்சத்துவசன் - முதலான வீரர்களு
டனே போராடினதுபோலல்ல- அவனுடைய மகிமையானது ஆதிசே
ஷசயனத்திற் பள்ளிகொண்டிருக்கிற ஆதிநாராயண மூர்த்திக்கே தெ
ரியவரும்- அதுவல்லாமலும், மனுமாந்தாதி-சிபி அரிச்சந்திரன் முதலா
னராஜாக்களைப்பார்க்கிலும் இவனுடைய அமிசைஆயிரம்பங்கதிகமாயி
ருக்கும் அதுஎப்படியென்றுல்,

## நாரதமகாமுனிவர்

### அர்ச்சுனராஜனுக்கு-சந்திரகாசமஹாராஜன் வரலாறு கூறுதல்.

அதற்கொருகதையுண்டு அஃதென்னவென்றுல், கோளுகைதேசத்
தை யாளுகின்ற கோளுகை மஹாராஜனுக்கு அநேககாலம் புத்திரசந்
தானமில்லாமல்அதன்பிறகு அளவிறந்த தானதர்மங்களைச்செய்து பெ
ரியோர்களை அனுசரித்திருந்தபடியினுல் அவர்களுடைய ஆசீர்வாதத்தி
னுல் அந்தராஜனுக்கு மூலநட்சத்திரத்தில் ஒருபிள்ளைபிறந்தது- அது
கண்டு அந்தராஜனும் மகாசந்தோஷசித்தனுய், சர்வசாஸ்த்திரசம்பன்ன
ர்களான பிராமணுேத்தமர்களை அழைப்பித்து அவர்களைப் பூசைபண்
ணி ஓய் சுவாமிகளே இந்தப் பிள்ளைக்குச் சாதகர்மம் விதித்துச்சொல்
லவேண்டுமென்றுசொல்ல அதுகேட்டு அவர்களும் அந்தராஜனைப்பார்
த்து ஓய்ராஜேந்திரா இந்தப்பிள்ளைப் பிறந்த லக்கினம் ஆகாது மாதா
க்களுக்கு மரணமுண்டாகும் ராச்சியத்திற்கு ஆனிவரும் சகலசம்பத்து
களும்சத்துருக்கள் பங்காகிப்போம் இந்தப்பிள்ளையோவென்றுல்மஹா

யோகசாலியாய் விஷ்ணுபக்தனாய் பிர்ம்மாதிதேவர்களாலும் ஜெயிக்கக்கூடாத சாமார்த்தியபுருஷனாய் மஹாகீர்த்திப்பிரதாபத்துடனே யிருப்பான் ஆனையினால் இந்தப்பிள்ளையை நீங்கள் பரிகரித்து விட்டீர்களானால் சுகமாயிருப்பீர்களென்றுசொல்ல அதுகேட்டு அந்தராஜனும் பிராமணர்களைப்பார்த்து ஓய் ஐயமாரே, நீங்கள் இந்தப் பிள்ளையைக் கொல்லச்சொல்லுகிறீர்களோ நாங்கள்போனாலும்போகட்டும் அப்படி செய்கிறதில்லை யென்றுசொல்ல அதற்கு அந்தப்பிராமணர்களும் ராஜனைப்பார்த்து உங்கள் இஷ்டமென்று சொல்ல அதுகேட்டு ராஜனும் தலையையசைத்து அவர்களைப்பார்த்து ஓய் ஐயமாரே நாங்கள்நெடுநாளாய்ப்புத்திரனில்லாமலிருந்து இப்பொழுது எங்களுடைய பூசாபலத்தினால் கிடைத்தபிள்ளையைக் கொன்று எங்களைப்பிழைத்திருக்கச் சொல்லுகிறீர்களோ நாங்களிறந்துபோனாலும் நல்லதே அந்தப்பிள்ளைமாத்திரம் தீர்க்காயசுடையவனாக யிருந்தால் அந்தக் கீர்த்தியே போதுமென்றுசொல்ல,

அந்தப்பிராமணர்களுக்கெல்லாந் தட்சணைதாம்பூலங் கொடுத்துச் சந்தோஷமா யனுப்பிவிட்டு பிற்பாடு செய்யவேண்டிய முறைப்படி புத்திரோச்சவங்களைச் செய்வித்து அந்தப்பிள்ளையைநாளொருமேனியும் பொழுதொரு வர்ணமுமாய் அதிகசெல்வத்துடனே வளர்க்கின்ற காலத்தில் ஆறுமாதத்தினுள் அந்தராஜன்பேரில் மறுமண்டலத் தரசனான, ரசிவிந்தனென்கிறவனும் மிலேச்சராஜாக்களும் எதிர்த்துவந்து போராடி அந்தராசனைக்கொன்று பட்டணத்தையுங்கொள்ளைகொண்டார்கள் - அப்பொழுது அவன்பெண்சாதியும் புருஷனோடுகூடவே இறந்துபோனாள் - அந்தப்பிள்ளையை இரண்டுதாதிகளெடுத்துக்கொண்டு குந்தலதேசத்திற்குப்போய் ஒரு பிராமணன் வீட்டிற்சேர்ந்துஒருபுறந்திண்ணையிலிருந்து அவர்களுக்குநல்லவார்த்தைகளைச்சொல்லிக்கொண்டு அன்புவரும்படியிருந்து ஒருதாதியானவள் அந்தப்பிள்ளையைப்பாதுகாத்துக்கொண்டிருக்க மற்றொருதாதியானவள் அந்தப்பட்டணத்திற்போய் சகலபதார்த்தங்களையும் யாசகம்பண்ணிக்கொண்டுவந்துதினந்தோறும் அந்தப்படியேகாலத்தைக் கழித்துக்கொண்டு அந்தப்பிள்ளையைச் சுகமாய்வளர்த்துக்கொண்டுவருகையில் ஒருவருஷமாச்சுது அதிலே ஒருதாதி மரணமடைந்தாள் பிற்பாடுமற்றொருதாதியானவள் அந்தப்பிள்ளையை போஷித்துக் கொண்டு வருகையில் அவளும் ஆறுமாதத்தில்மரணமடைந்தாள் - அதன்பிறகு அந்தப்பிள்ளைக்குவேறேதிக்கில்லாதபடியினால் அந்தவீட்டு அம்மையாரும்விசாரப்பட்டுமஹாதயவுடனே தன்பிள்ளைகளில் இதுவுமொருபிள்ளையாய் நினைத்துப் போஷித்துக்கொண்டுவந்தாள் - அந்தப்பிள்ளையும் ஐந்துவயதாய் வளர்ந்துசிலபிராமணப் பிள்ளைகளுடனே கூடிவிளையாடிக்கொண்டு அவர்கள் படிக்கின்ற வேதசாஸ்த்திரங்களைத்தானும்படித்துக்கொண்டுபட்டணத்திற்போய் வீடுகள்தோறும் அழுதுபடி யாசகம்பண்ணிக்கொண்டுவந்து அந்தஅ

ம்மையார்கையில் கொடுக்க-அந்த அம்மையாருந் தயவுடனே பேதமி
ல்லாமல் தன்பிள்ளையைப்போல போஷித்துக்கொண்டுவருகிற காலத்தி
ல் ஒருநாளந்தப் பிள்ளையானது சிறுபிள்ளைகளுடனே சேர்ந்து வீதி
யிலேதிரிந்து விளையாடிக்கொண்டிருக்கையில் - அந்த குந்தலதேசத்
தையாளுகின்ற குந்தலராஜனுக்குப் பிள்ளையில்லாமல் தன்னிடத்திலிரு
க்கும் துஷ்ட புத்தி யென்கிற மந்திரி குமாரனை மதனனென்கிற பி
ள்ளையைத் தன்னிடத்தில் வைத்துக்கொண்டு சர்வ அதிகாரமும் பண்
ணுவித்துக்கொண்டிருப்பான் - அதுகண்டு அந்ததுஷ்டபுத்தியும் மஹா
சந்தோஷ சித்தனாய் ராஜாவினிடத்திற்கு ஒருவேளை போயிருந்து மற்
றவேளையெல்லாந் தன்னுடையவீட்டில்தானே சுகமாயிருப்பான் - இ
ப்படியிருக்கின்றநாளையில் ஒருநாள் தெருத்திண்ணையின்மேலில் அந்
தமந்திரியும் சகலசம்பிரமத்துடனே கேளி விலாசமாய் உட்கார்ந்திருக்
கும்போது தெருவில்விளையாடுகின்ற அந்த ராஜகுமாரனைப்பார்த்து அ
க்கிருந்தவர்களை யழைத்து இந்தப்பிள்ளையாருடையபிள்ளை இதுமகாலட்
சணங்களுடனும்ராஜஅம்சையுடனும்விளங்குகின்றதென்ன,அதுகேட்
டுஅவர்களும் அந்தமந்திரியைப்பார்த்து ஓய் ஐயா இதுகோளுகைராச
னுடையபிள்ளை அவனுடையபட்டணத்தைப் பகையாளிகள்கைக்கொ
ண்டுஅவனையுங்கொன்று விட்டபடியினால்இரண்டுதாதிமார்கள் இந்தப்பி
ள்ளையைஎடுத்துக்கொண்டுவந்து (எல்லம்பட்டனு) என்கிறபிராமணன்
வீட்டிலிருந்துகொண்டு போஷித்துவருங்காலத்தில் அவர்களும் இறந்
துபோனார்கள் அதின்பிறகு அந்தவீட்டு அம்மையார்எடுத்துப்போஷி
த்துவருகின்றாள்-இந்தப்பிள்ளையும் பட்டணத்தில் முஷ்டிஎடுத்துக்கொ
ண்டுபோய் அந்தஅம்மையார்கையில்கொடுக்க அவ்வம்மையாருந் தன்
பிள்ளைகளிலொன்றாய் இந்தப்பிள்ளையையும் போஷித்து வருகிறளென்
றுசொல்ல- அதுகேட்டுதுஷ்டபுத்தியும் ஆலோசனைசெய்துஇந்தப்பி[ள்]
ளையிருந்தால் நமக்குக்கேடுவரும் ஆகையால்இதை உபாயத்தினால்[illegible]
டித்துப்போடவேண்டுமென்று நினைத்து கோசிங்கிக ளென்கிறவர்[illegible]
யழைப்பித்துஅவர்களுக்குச்சிறிதுதிரவியத்தைக்கொடுத்துஅந்தப்பிள்
ளையைக்காண்பித்து நீங்கள் இந்தப்பிள்ளையை உபாயமாகக் காட்டுக்க
ழைத்துக்கொண்டுபோய்க் கொன்றுவிட்டுவாருங்களென்றுசெலவுகொ
டுத்தனுப்ப அவர்களும்மந்திரியினுடையசொல்லைக் தள்ளப்போகாதெ
ன்று மகாபிரசாதமென்று மந்திரியினிடத்தில் செலவுவாங்கி கொண்ட
ப்புறம்போயிருந்து சமயம்பார்த்துக்கொண்டிருக்கையில் அந்தப்பிள்ளை
யும்மறுநாள்காலமே எழுந்திருந்து நதிக்குப்போய்ஸ்நானம்பண்ணி ஒ
ருசிறிய சாளக்கிராமத்தைவைத்துப் பூசைபண்ணிசபதடங் களைமுடித்து
க்கொண்டுவீட்டுக்குத்திரும்பிவரும்போதந்த கோசிங்கிகள்கண்டுஅந்தப்
பிள்ளையின்சமீபத்தில்வந்துலகுவாய்பேச்சைக்கொடுத்தழைத்துக்கொ
ண்டேகாட்டுக்குப்போய் அங்கேஉட்காரவைத்து வெட்டுகிறதற்குக்கத்
தியைஉருவிக்கொண்டார்கள் அதுகண்டு அந்தப்பிள்ளையானவன் பயந்

துசாளக்கிராமத்தை விழுங்கி ஹரிஹரீ-கிருஷ்ண- நாராயண - வாசுதே
வா- அச்சுதா-பரந்தாமா- பரமபுருஷாவென்று ஸ்ரீமந்நாராயணமூர்த்தி
யைத் தியானம்பண்ணினான்.

அதுகண்டு அவர்களும் மனமிரங்கி தப்புபிறந்து இந்தப்பாலகன்
பேரில் ஒருகுற்றமில்லையே இவன் நல்ல சவுந்தரிய முள்ளவனா யிருக்
கின்றானே இவனை நாம் எப்படிகண்டிக்கிறது அந்ததுஷ்டபுத்தியுங்கெ
மெதிநினைத்து நரகத்தில்விழுந்தால் நாமும்கெடுமதிநினைக்கிறதோவெ
ன்றுசொல்லி உருவினகத்தியை உறையில்போட்டுவிட்டு அந்தச்சிறுவ
னுக்கு உபசாரம்பண்ணி அவனுடைய காலின் சுண்டுவிரலைமாத்திரம்
அறுத்துக்கொண்டு அந்தப்பாலகனை அவிடத்தில்விட்டுவிட்டுஅவர்கள்
போய்துஷ்டபுத்தியைக்கண்டு கொன்றுவிட்டுவந்தோமென்றுசொல்லி
சுண்டுவிரலையுங்காண்பித்தார்கள் - அதுகண்டுதுஷ்டபுத்தியுஞ் சந்தோ
ஷிப்பட்டுஅவர்களுக்குவெகுமதிபண்ணியனுப்பிவிட்டிருந்தான்அப்பா
ல்அந்தக்காட்டினிடத்தில் அந்தப்பிள்ளையானவன்மகாபயங்கரத்துடனு
ம் கால்வேதனையுடனும்-ராமா-கேசவா-கோவிந்தா-ஜனார்த்தனா- நாராய
ணாவென்றுதோத்திரம்பண்ணிக்கொண்டுவிசாரமாயிருக்கையில்அவிட
த்தில்கொங்கணதேசாதிபதியானகொங்கணராஜாவானவர்வேட்டைக்கா
ரர்களுடனேகூடிவேட்டைவிளையாடுகிறதற்குஅந்தவனத்திற்குவந்துஅ
ங்கே பிரலாபித்துக்கொண்டிருக்கிறசிறுபிள்ளையின்குரலைக்கேட்டுதயவு
பிறந்துசமீபமாகவந்து அந்தபிள்ளையைப்பார்த்துஓய்புத்திரகா நீயாரு
டைய குமாரன் உன்பெயரென்ன நீயேன்விசனப்படுகிறாயென்றுகேட்
க,அதற்கு அந்தப்பிள்ளையும் ராஜனைப்பார்த்து ஐயா,நான்அநாதை என்
னுடைய தாயுந்தகப்பனும் மிறந்துபோனார்கள் எனக்குஒருவருந்திக்கில்
லை,அந்தப்பரப்பிரம்ம சொரூபமே எனக்குத்துணை எனக்கு இன்னம்
பெயரிடவில்லை நான்இந்தக்காட்டில் வருகிறபோது ஒருபெரியகற்பட்
டுசுண்டுவிரலை அடித்துக்கொண்டுபோச்சுது அதற்கு வியசனப்படுகி
றேனென்றுசொல்லி பின்னையும்அந்தராசனைப்பார்த்து ஐயா,என்னை இ
ந்தக்காட்டிலுள்ள புலிமுதலான மிருகங்கள் ஆதரணைபண்ணுகின்றது
பக்ஷிகளெல்லாம் அதுகளின் இறகினால் வெய்யிலை மறைக்கின்றதென்று
சொல்ல அதுகேட்டு அந்தராசன்மெத்தவும் மகிழ்ச்சியடைந்து நாம்பு
த்திரனில்லாமல்வியசனப்படுகிறோமென்று பகவான் கட்டளையிட்டரு
ளினானென்றுதனக்குத்தானேசந்தோஷப்பட்டுக்கொண்டு அந்தப்பிள்ளை
யைப்பார்த்து அப்பா,புத்திரகா,எனக்குப்பிள்ளையில்லை நீஎனக்குப்பிள்
ளையாயிருக்கிறாயாவென்றுகேட்க,அதற்குஅவனும் அப்படியேயிருக்கி
றேனென்றுசொல்ல அதுகேட்டு அப்பொழுது அந்தராசனும் அவனை
அழைத்துக்கொண்டுபோய் தன்னுடையபட்டதேவியாகிய சந்திராவ
தியினிடத்தில் ஒப்புவித்தான் அந்தராசபத்தினியும் அவனைப் பெற்ற
பிள்ளையைப் பார்க்கிலும் மிகுந்த அருமையாய்ப் புத்திரோச்சவ முத
லானதுகளும் பண்ணுவித்து சந்திரகாச னென்னும் பெயரை வைத்

து வித்தியாப்பியாச முதலானதுஞ் செய்வித்து சகல சம்பிரமத்துட
னே அந்தராசனும் சந்திராவதியும் வளர்த்து வருங்காலத்தில் சந்திர
காசனும் மாதா பிதாக்களிடத்தில் மகாபயபக்திவிநயத்துடனே நட
ந்துகொண்டு வில்வித்தை முதலானதுகளில் அதிக சாமார்த்திய முள்ள
வனாய்ப்பதினாறுவயதளவும்வளர்ந்து பிற்பாடு அங்கங்கேயுள்ளராசாக்க
ளிடத்திற்கு யுத்தசன்னத்தனாய்ப்போய் சண்டைபண்ணி அவர்களைக்
கெலித்து அவர்களிடத்தில் காணிக்கைகப்பங்கள் பெற்றுக்கொண்டு
வந்து பிதாவினிடத்திலொப்புவித்து பிதாவின் கையினால் அநேகமாயி
ரம் பிராமணர்களுக்குத் தானதர்ம்மங்கள் பண்ணுவித்து தானும் ஸ்ரீம
ந்நாராயண மூர்த்தியினிடத்தில் அந்தரங்க பக்தனாயிருந்து பூததயவு
டனே அநாதைகளையெல்லாம் ஆதரித்துக்கொண்டு திக்குவிஜய துரந்த
ரனாய்ப் பெரியோர்களுடைய ஆசீர்வாதமுள்ளவனாயிருக்குங் காலத்தில் அ
ந்தக் கொங்கணராசனுந் தன்பிள்ளையினால் கிடைத்திருக்கின்றதிரவியங்க
ளைக்கண்டுஇதுசேதியைத் துஷ்டபுத்தியறிந்தால் அவன் குந்தலராசனு
க்குச் சொல்லுவானே அதும்கட்டு அந்தராசனும் நமக்கு வருஷாவ
ருஷங்கப்பங்கட்டுகிற கொங்கணராசனுக்கு இவ்வளவுதிரவியம் எங்கே
யிருந்துவந்ததென்று ஆலோசித்துப் பொறாமையினால் நமது பட்ட
ணத்தின்பேரில்தண்டெடுத்துவந்தாலும்வருவானேயென்று தனக்குள்
ளே தானேயோசித்துக்கொண்டுபிரபலமாயிராமல் முன்னிருந்ததுபோ
லவே அடக்கமா யிருந்துகொண்டுபுத்திரனைப்புகழ்ந்து கொண்டாடி
சிலசேவகர்களையழைத்து அவர்கள்கையில் குந்தலமகாராசாவுக்கு வெ
குமானமாகச்சிறிதுவாகனவஸ்துக்கள்முதலானதிரவியங்கள்கொடுத்து
பின்னையுந்துஷ்டபுத்தியென்கிற மந்திரிக்குஞ்சிறிது காணிக்கை கப்ப
ங்களுங் கொடுத்தனுப்பினான்-அவர்களும் அப்படியே கொண்டுபோய்
அந்தராசனிடத்திலும் மந்திரியினிடத்திலுங் கொடுக்க அதுகண்டு அ
வர்கள் அந்தச்சேவகர்களைப்பார்த்து ஓய்சேவகர்களே, இதேது ஆச்சரி
யகரமாயிருக்கின்றது அந்தராஜன் கப்பங்கட்டுகிறதே மகாபிரயாசமா
யிருக்குமே அத்தன்மைப்பட்டவனுக்கு இத்தனை அயிஸ்வரியம் எங்கே
யிருந்துவந்ததென்றுகேட்க அதற்கு அந்தசேவகர்களும் ஐயா, அந்த
ராசனுடையகுமாரன் தேசங்கள்தோறும்போய் திக்குவிஜயம், பண்ணி
சம்பாதித்துக்கொண்டுவந்தான். ஆகையினால் உங்களுக்கு வெகுமான
முங் கொடுத்தனுப்பினானென்றுசொல்ல அதுகேட்டு துஷ்டபுத்தியாகி
ய மந்திரியும் அவர்களைப்பார்த்து ஓய்சேவகர்களே அந்தராசனுக்குப்
பிள்ளையில்லையே பிள்ளையெப்படி வந்ததென்றுகேட்க அதற்கு அவர்
களும் மந்திரியைப்பார்த்து ஐயா, எங்கள்ராஜனானவர் வேட்டைக்கு
ப்போனவிடத்தில் காட்டிலே ஒருபிள்ளையைக் கண்டெடுத்துக் கொ
ண்டுவந்துசந்திரகாசனென்று பெயரிட்டு வளர்த்துக்கொண்டாரென்று
சொல்ல அதற்கு மந்திரியும் ஆலோசனைபண்ணி காட்டிலே பிள்ளையை

க்கண்டெடுத்தானென்று சொல்லுகிறதேது நாம் முன்னே கோசிங்கி களுக்குச் செல்வுகொடுத்தனுப்பினோமே அவர்கள்கொண்டுபோய் கா ட்டில் கொல்லாமல் விட்டுவிட்டு விரலைமாத்திரங் கொண்டு வந்துகாண் பித்தார்கள்போலிருக்கின்றது நாமெல்லாம் அங்கேபோய் அறியவேண்டி யதென்று நினைத்து ராசனிடத்திற்குப்போய் ஐயா, ராசேந்திரா நான் கொங்கண தேசத்திற்குப்போய் அவனிடத்துச் சேதிகளெல்லாந்தெரி ந்துவருகிறேனென்று அந்தராசனிடத்திற் செலவுபெற்றுக் கொண்டு சதுரங்கபலசேனைகளுடனே புறப்பட்டு கொங்கணதேசத்திற்கு வந் தான்.

அதையறிந்துகொங்கணராசனும் எதிர்கொண்டுபோய்ஆலிங்கன ம்பண்ணிக்கொண்டு சகல பரிவாரங்களுடனேயும் அவனே அரண்மனைக் குஅழைத்துக்கொண்டுபோய் சாலசம்பிரமத்துடனே வெகுமானங்க ள்பண்ணினான் அப்பொழுதுசந்திரகாசனும்வந்து துஷ்டபுத்தியைக் கண்டு தெண்டனிட்டான்-அந்த துஷ்டபுத்தியும் சந்திரகாசனைப் பார்த் துஇந்தப்பிள்ளையேதென்றுகேட்க பிள்ளைவந்த சவிஸ்த்தாரமெல்லாம் பூர்வோத்திரமாகக்கொங்கணராசன்சொல்ல அதுகேட்டு துஷ்டபுத்தி யும்நாம்கோசிங்கிகளிடத்தி லொப்புவித்துக் கொல்லும்படி செலவு கொடுத்தனுப்பின பிள்ளைதானென்று நிச்சயம்பண்ணிக்கொண்டு இ ந்தப்பிள்ளையினுடைய சவுரியபராக்கிரமத்தைநமதுராசன் கேள்விப்ப ட்டால்தன்னுடையகுமாரத்தியையுங்கொடுத்துராச்சியத்தையும்பட்டா பிஷேகஞ்செய்துவைப்பானே அப்புறம் நம்முடைய பிள்ளைக்கு ஒ ன்றுமில்லாமற்போகின்றதே யென்று வியசனப்பட்டு இப்பொழுது தானேஇவனைக்கொன்றுவிட்டால் நல்லதென்று ஆலோசித்துக் கொண் டுஅங்கிருந்தபடியே ஒரு கடிதாசி யழைப்பித்து அதில் தன்புத்திரனு கியமதனனுக்கு எழுதுகின்றான் அஃதெப்படி யென்றால் - சிரஞ்சீவி குமாரனாகியமதனன்பார்த்துக்கொண்டு இந்தக் கடிதாசியைக் கொண் டுவருகின்றசந்திரகாசனுக்கு அதிசீக்கிரத்தில் விஷத்தைக் கொடுத்துக் கொல்லவேண்டியது இதற்கு அட்டி பண்ணவேண்டாம் இப்படிக்கு துஷ்டபுத்தி கையெழுத்துஎன்று விவரமாயெழுதி ஒருவருக்குந் தெரி யவொட்டாமல்மடித்துஅரக்குமுத்திரை போடுவித்து சந்திர காசனை அழைத்து அப்பா சந்திரகாசா இந்தக் கடிதாசியைக் கொண்டுபோய் என்புத்திரனாகிய மதனனிடத்திற் கொடுத்து விட்டுவா பின்னையெவர் களிடத்திலுங் கொடுக்கவேண்டாமென்றுசொல்ல அதுகேட்டுச் சந்தி ரகாசனும்அப்படியேயநல்லது ஐயாவென்றுஅந்தக்கடிதாசியை இரண்டு கையினாலும் வாங்கிக்கொண்டு ஒருகுதிரையின்பேரிலேறிக்கொண்டுத ன்பட்டணத்தைவிட்டுப்புறப்பட்டு நடந்துகுந்தலதேசத்திற்குச்சமீப த்திலிருக்கிறஒருசிங்காரவனத்திலிறங்கி அங்கேஒருமரத்தில்குதிரையை க்கட்டிவிட்டு ஆயாசமாயிருந்தபடியினால்சந்திரகாந்தச்சாலையில்குளிர்ந் தகாற்றிலேபடுத்துக்கொண்டு நித்திரைபோய்விட்டான்.

அப்பொழுது அந்தப் பட்டணத்தி லிருந்து ராசகுமாரத்தியான சண்பகாவதியும், மந்திரி குமாரத்தியான விஷையையும், சிறிது கன்னிகைகளுடனே கேளிவிலாசமாய்ப் புறப்பட்டு அந்தச் சிங்காரவனத்திற்குவந்து அங்குள்ள ஒருதாமரைத் தடாகத்தில் ஜலக்கிரீடைபண்ணி, அவிடத்திலுண்டான நல்லபுஷ்பங்களைப்பறித்து முடித்துக்கொண்டு பழங்களையறுத்துச்சாப்பிட்டுக்கொண்டுமகா உல்லாசத்துடனே அந்தவனத்திலுள்ள சகலவேடிக்கைகளும்பார்த்துக்கொண்டுபின்பு ஒருமண்டபத்தில்வந்து சண்பகாவதிமுதலான அந்த கன்னிகைகளெல்லாம் படுத்துக்கொண்டுநித்திரைபோனார்கள் - அவர்களில் மந்திரிகுமாரத்தி யான விஷையையென்கிறவள் மாத்திரம்நித்திரைபண்ணமல்எழுந்திருந்து உலாவிக்கொண்டிருக்கையில் சந்திரகாந்தச்சாலையில் சயனித்திருக்கின்ற சந்திரகாசனைக்கண்டு அவனுடைய சவுந்தரியத்தைப்பார்த்து மோகங்கொண்டு இப்படிப்பட்ட ரூபலாவண்ணியமுள்ள புருஷனையல்லவோ நாம்சேரவேண்டுமென்றுநினைந்துஅவனுடைய சமீபத்திற்போய் முகத்தைப்பார்க்கும்போதவன்போட்டிருக்கின்ற உத்தரீயத்தில் முடிந்திருக்குங்கடிதாசியைக்கண்டு அதையவிழ்த்துகடிதாசியைக்கையிலெடுத்து தன்னுடைய விரலிலுள்ளமுத்திரையைவாங்கிஅப்புறம்வைத்துவிட்டு கடிதாசியைவிரித்து வாசித்துப்பார்க்கையில் அதில்விஷத்தைக் கொடுத்துக்கொல்லும்படி தன்தகப்பனானவன் - தமயனுக்கு எழுதியிருக்கிறானென்று தெரிந்துகொண்டு தலையை யசைத்து தன் தகப்பனுடைய புத்தியைக்குறித்துதூஷித்து இந்த மகானுபாவனைக் கொல்லவொட்டாத வயணஞ் செய்து நாம் இவனையே கலியாணம் பண்ணிக்கொள்ளவேண்டு மென்று நிச்சயித்து அந்த கடிதாசியில் விஷம் என்கிற அக்ஷரத்தை மாற்றி விஷையைக் கொடுக்கிறது என்கிற அக்ஷரத்தைப் போட்டு எப்போதும்போல் அதைமடித்து முத்திரைவைத்து அவன்உத்தரீயத்தில்தானேமுடிந்துவிட்டு மண்டபத்திற்குப்போய் சண்பகாவதியையும் அந்தக்கன்னிகைகளையும் எழுப்பிக்கொண்டு பட்டணத்திற்குப்போய் விட்டாள். அப்பால்சந்திரகாசனும் சற்றுநேரத்தில் நித்திரைதெளிந்தெழுந்திருந்துஅந்தத்தாமரைத்தடாகத்திலிறங்கிகைகால்சுத்திசெய்துமறுபடியுங்குதிரையின்மேரிலேறிக்கொண்டு பட்டணமேபோய்ச்சேர்ந்து ராஜவீதியிற்போகையில் எதிரேவருகிறமந்திரிகுமாரனைக்கண்டு அங்கிருக்கிறவர்களைப்பார்த்து அதோவருகிறவர்யாரென்றுகேட்க அதற்கு அவர்களும்மந்திரிகுமாரனாகிய மதனனென்றுசொல்ல அதுகேட்டு சந்திரகாசனுங்குதிரையைவிட்டிழிந்து மதனனுக்கெதிரேபோகையில் அதுகண்டுமதனனும்இதோவருகிறராஜகுமாரன்யாவனென்றுபார்க்கும்பொதுசந்திரகாசனுங்கடிதாசியைக்கொண்டுபோய்க்கொடுத்தான்மதனனும் அதைவாங்கிவாசித்துப்பார்த்துச்சந்தோஷமடைந்துகுந்தலராஜனிடத்தில் அழைத்துக்கொண்டுபோய் சந்திரகாசனுடையசவிஸ்தாரமெல்லாஞ்சொல்லி தன்தகப்பனெழுதியிருக்கிறகடிதாசியையுங்காண்பித்தான். அ

துகண்டு அந்தராசன்மெத்தவுஞ்சந்தோஷமடைந்துமதனனைப்பார்த்து-
ஓய்மதனா, இந்தப்பிள்ளைக்கு என்னுடைய பெண்ணைக்கொடுத்து கலி
யாணஞ்செய்விக்கவேண்டுமென்கிற விருப்பமிருக்கின்றது, ஆதலால்
முன்னமே உன்னுடைய தங்கையைக்கொடுத்துக்கலியாணம் பண்ணி
வையென்று சொல்லியனுப்ப அப்படியேமதனனுஞ் சந்திரகாசனைத்த
ன்னுடையஅரண்மனைக்கழைத்துக்கொண்டுவந்துஅன்றையத்தினமேந
ல்லமுகூர்த்தமிருக்கிறபடியினாலுஞ் சந்திரகாசனுடைய நல்வினையொத்து
க்கொண்டபடியினாலும் சகலசம்பிரமத்துடனே சந்திரகாசனுக்குவிஷ
யையைக் கலியாணஞ்செய்துவைத்து பிறகு தன்னுடைய தகப்பனிட
த்திற்கு விஷயையினுடையகலியாணசேதியும் எழுதியனுப்பினான்.

அதற்குமுன்னமே துஷ்டபுத்தியென்கிறமந்திரியும் இதுவரையில்
சந்திரகாசன் மரணமடைந்திருப்பானென்று சந்தோஷமடைந்து கொ
ங்கணராஜனைப்பிடித்து விலங்குபோட்டுஅந்தப்பட்டணத்தையெல்லா
ங்கொள்ளைகொண்டு பிரயாணமாய்ப் புறப்பட்டு பாதிவழியில் வருகிற
போது மதனனனுப்பிவைத்தவோலையைச்சேவகர்கள்கொண்டுவந்து கொ
டுக்க, அதைவாங்கிவாசித்துப்பார்த்து ஐயையோ,நாமொருநினைவுநினை
த்தால் தெய்வமொருநினைவுநினைத்ததேயென்று திகிலடைந்து சற்றுநே
ரத்தில்தன்மனதைத்தானேதேற்றிக்கொண்டு அந்தக்கொங்கணராஜனை
ப்பார்த்துஐயா, நான் உம்முடைய மனதைச்சோதிக்கவேண்டிஇப்படி
செய்தேன். அதைமனதில் வைக்கவேண்டாமென்று உபசாரஞ்சொல்லி
விலங்கையும்விடுவித்து கொள்ளைகொண்டபொருள்களையுங் கொடுத்து
நீர்சுகமாய் உம்முடைய பட்டணத்திற்குப் போமென்றுசொல்லிலகுவா
யனுப்பிவிட்டு தன்னுடையசேனைகளுடனே குந்தலதேசத்திற்குவந்து
சேர்ந்துதன்னுடைய அரண்மனைக்குட்போய்நுழைந்தான்- அதுகண்டு
மருமகனுங் குமாரத்தியும்வந்துதெண்டனிட்டார்கள் - அவர்களை ஆசீர்
வாதம்பண்ணி தன்குமாரத்தியைப்பார்த்து ஓ அம்மாமகளே உனக்கு
இந்தபுருஷன்பேரில் சம்மதமிருக்கின்றதல்லவோவென்றுகேட்க,அதற்
கு அந்தவிஷயையும் பிதாவைப்பார்த்துஐயா- தேவரீருடைய அநுக்கி
ரகத்தினால் இந்தப்புருஷன்பேரி லெனக்கு அபேக்ஷையிருக்கின்றதெ
ன்றுசொல்ல அதுகேட்டுஅப்புறம் தன்னிடத்திற்குவந்துதெண்டனிட்
டகுமாரனைக்கண்டு ஆசீர்வாதம்பண்ணிஅவனைப்பார்த்து ஓய்குமாரகா
நானொருகாரியம் எழுதியனுப்பினால்நீயொருகாரியஞ்செய்தாயேஅது
என்னவென்றுகேட்க,

அதுகேட்டுமதனனுந் திகிலடைந்து பிதாவைப்பார்த்து - ஐயா,
தேவரீரெழுதினபடிக்கு நடந்தேனேயல்லாமல் வேறில்லையே யென்
றுதகப்பனெழுதியனுப்பின கடிதாசியைக் கொண்டுவந்து கொடுக்க
அதைவாங்கிவாசித்துப்பார்த்து தலையையசைத்து - இது நம்முடைய
கையெழுத்துத்தானே இது எப்படிவந்து நேரிட்டதென்ன ஆனாலும்
நாம் மறந்து எழுதினோமோ எப்படியோவென்று மனதில்நினைந்துமன

காவிசனத்துடனே முன்பின் ஒன்றுந்தோற்றாமல் நாம் நினைத்தகாரி
யமெல்லாம் விருதாவாய்ப்போச்சுதே இதற்குஎன்னசெய்வோம் இந்த
ச்சந்திரகாசன் இவிடத்திலிருந்தால் நம்முடையராசன் தன்பெண்ணை
யுங்கொடுத்து ராச்சியத்தையும் அவனுக்கே பட்டாபிஷேகஞ்செய்து
வைப்பான் அப்பால் நம்முடைய புத்திரனுந் தள்ளுண்டு போவான்
ஆகையினால் இவனை உயிரோடேவைக்காமல்உபாயத்தினால் கண்டித்துவி
டவேண்டுமென்று ஆலோசித்து அந்தக் கோசிங்களை யழைப்பித்து
ஓய் துன்மார்க்கர்களே சிலநாளைக்கு முன் நாம் ஒரு சிறுபிள்ளையைக்
கொல்லும்படி உங்களுக்குச்சொல்லி யனுப்பினால் நீங்கள்அப்படிசெ
ய்யாமல் சூதுசெய்து காட்டிலே உயிரோடேவிட்டுவிட்டு வந்தீர்கள்அந்
தக்குற்றத்திற்கேஉங்களைஆக்கினைபண்ணவேண்டியது.

அதைநாம் மன்னித்தோம் இப்போதாகிலும்நமது சொல்லைத்தத
ள்ளாமல் இந்தப்பட்டணத்திற்குப்புறம்பாக இருக்கின்ற பத்திரகாளி
யினுடைய கோயிலினிடத்தில் இன்றிராத்திரி பதினைந்துநாழிகை வே
ளையில் நீங்களிருந்துகொண்டு அப்போது அவிடத்தில் வருகின்றவனை
முன்பின் யோசித்துப்பாராமல் கண்டித்து விடுங்கோளென்று திட்ட
ஞ்செய்து அவர்களுக்குச் சிறிதுதிரவியங்களை வெகுமானமாகக் கொ
டுத்தனுப்பினான் அவர்களும் அதற்குச்சம்மதித்து துஷ்டபுத்தியினிட
த்திற்செலவுபெற்றுக்கொண்டு அந்தப்பத்திரகாளியம்மன் கோயிலினி
டத்திற்போய் ஆர்வருகிறார்களோவென்று மிகுந்த எச்சரிக்கையாய்க்
கத்தியையுருவிக்கொண்டு முஸ்தீதாக யிருந்தார்கள் இவிடத்தில் துஷ்
டபுத்தியும் தன் மருமகனான சந்திரகாசனையழைத்து ஓய், சந்திரகாசா
நாம் ஒரு அந்தரங்கமான ரகசியஞ்சொல்லுகிறோம் அதை என் குமார
ன் முதலானவர்களும் அறியப்படாது அஃதென்னவென்றால், இந்தப்
பட்டணத்திற்கு வெளியேயிருக்கிற பத்திரகாளியம்மனுக்கு வருஷத்
திற்கொருதரம் பூசைகொடுத்து நமஸ்க்காரம்பண்ணிவருவேன் அதனா
ல், எனக்குச் சகலசம்பத்துகளும், உண்டாச்சுது, நான் இப்படி பூசை
பண்ணுகிறது என்குமாரன் முதலானவர்களும், அறியமாட்டார்கள்-அ
ந்தநினைவு இன்றையத்தினம்வந்தது - ஆகையால் இன்றையத்தினம் ரா
த்திரி பதினைந்து நாழிகைக்குமேல் கந்தபுஷ்ப அக்ஷதைகளும், பண்டு
பலாதிகளும் எடுத்துக்கொண்டுபோய் பூசைபண்ணுகிறதற்கு எனக்
குத்தள்ளாது என்மகனேயென்றால், ராஜாவினுடைய அரண்மனையிலி
ருக்கிறான் அவனுக்குப் போகக்கூடாது ஆகையினால் எனக்குப்பதிலா
ய் நீபோய் பூசைசெய்துவாவென்றுசொல்ல, அதுகேட்டுச் சந்திரகாச
னும் மெய்யாகநினைந்து அரண்மனைக்குப்போனான்-அதிலே சூரியபக
வானும், அஸ்தமானமாகினார்.அப்பொழுது சந்திரகாசனும், ஸ்நானம்
பண்ணி, ஜபதபங்களை முடித்துக்கொண்டு மகாபரிசுத்தனாய் தனது
மாமனிட்ட கட்டளைப்படியே தங்கத்தட்டுகளில் பூசாதிரவியங்களை
எடுத்துக்கொண்டு தனியேபுறப்பட்டு அந்த இருட்டுவேளையில் பட்ட

ணத்துவீதியே போகும்போது அங்கே குந்தலமஹாராஜனிடத்திற்கு காலவமஹாரிஷியென்கிறவர் வந்தருளினர் - அந்த முனீஸ்வரருடைய வரவுகண்டு குந்தலராஜனும், சிம்மாதனத்தைவிட்டெழுந்திருந்து எதிரேபோய் அழைத்துக்கொண்டுவந்து ஒரு நவரத்தினபீடத்தில் உட்காரவைத்து அந்த மஹாரிஷிக்கு அர்க்கியபாத்திய முதலானவைகளால் பூசைபண்ணி அவரைப்பார்த்து ஓய் ஐயா, முனிநாதா அடியேனுடைய மனதில் ஒருசந்தேகமிருக்கின்றது. அஃதென்னவென்றால், அடியேனுக்கு ஒருமாதமாய் கைகால்கள் அசந்துபோகின்றது சரீரந் தளர்ந்துவருகின்றது, மனங்கலக்கமாயிருக்கிறது முன்பின் ஒன்றுந்தோற்றவில்லை, சூரியனைப்பார்த்தால், வளையமேலோடுபோல மழுங்கிக்காணுகின்றது-என்சரீர நிழலைப்பார்த்தால் சிரசுமாத்திரமில்லாமல் முண்டமாத்திரங்காணுகின்றது- அந்த முண்டத்திலும், அநேகரத்நங்கள் தோன்றுகின்றது-ஆகையினால், இந்த ராச்சியத்தின்பேரில் எனக்குச் சற்றாகிலும் விருப்பமில்லை அப்படி யிருக்கின்றபடியால் தேவரீர் அடியேனுடைய கருத்தைத்திருத்தி கிருதகிருத்தியனாக்கி ரக்ஷிக்கவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தான்.

அதுகேட்டுகாலவமஹாரிஷியும் அந்தராஜனைப்பார்த்துகேளுமையா குந்தலபூபாலகா, பூலோகத்தில் மனிதர் மரணமடையுங்காலத்தில் காணப்படுகின்ற அவசகுனங்களைச் சொல்லுகிறோம். அஃதெப்படியென்றால், மனிதர் நடக்கும்போது அவர்கள்நிழல் அவர்களுக்குத்தெரியாமலிருந்தால் ஒருவருஷத்தில் மரணமடைவார் - சூரியப்பிரகாசம்மழுங்கினதுபோலக் கண்டவர்கள் பத்துமாசத்தில் மரணமடைவார்-ஒருபுருஷன் நடக்கும்போது சிரசானது இரண்டுபிறிவாகப் பிறிந்துதோன்றினால் அவன் எட்டுமாசத்தில் மரணமடைவான் - ஒருபுருஷன் சொர்ப்பனத்திசையில் குரங்குகளையுங், கழுதைகளையுங், காண்பானாகில் அவன் ஆறுமாதத்தில் மரணமடைவான்- ஒருபுருஷனுடைய கண்களுக்கு முன்னே தோற்றுகின்றதுகளெல்லாம் பலவாகிச் சிதறித்தோற்றுமாகில் அவன் ஒருமாசத்தில் மரணமடைவான் - ஒருபுருஷன் ஸ்நானம்பண்ணி வஸ்திரத்தையெடுத்துத்துடைத்துக்கொள்ளுமுன்னமேமார்பில் ஈரமில்லாமற் சுவறிப்போகுமாகில், அவன் பதினைந்துநாளையில் மரணமடைவான் - ஒருவன் எண்ணெய்த்தலையுடனே சிவப்புப்பூவை முடித்துக்கொண்டு தெற்குமுகமாய்ப் போகிறதுபோலக் கனவுகண்டால் அவன் பத்துநாளையில் மரணமடைவான்- தீபம்பிரகாசமாய் எரிகிறபோது அந்தப்பிரகாசம் துண்டித்துப்போகிறதுபோலக் கனவுகண்டால், அவன் ஐந்துநாளையில் மரணமடைவான் - பக்ஷிகள்வந்து முகத்திலே கொத்தினால் அவன் நாலுநாளையில் மரணமடைவான் - ஒருபுருஷன் தன்னுடைய காலடி தனக்குத்தெரியாமற் காணுவானாகில் அவன் இரண்டுநாளையில் மரணமடைவான் - கறுத்தசரீரத்தோடு தலையைவிரித்துக்கொண்டு ஒருஸ்த்திரீயானவள்வந்துதன்பிடரியிலே குத்தினாற்போலக்

கனவுகண்டால் அவன் ஒருநாளையில் மரணமடைவான். இன்னம் இப்ப
டிப்பட்ட அவசகுனங்கள் அநேகவிதங்களுண்டு, அதுபோலநீரும் அ
வசகுனங்களைக்கண்டீரல்லவா ஆகையால் இன்றுமுதல்ராச்சியத்தினுடை
யஆசையைவிட்டுகாட்டுக்குப்போய் மரவுரியுடுத்திக்கொண்டு சருகுச
லபக்ஷணம்பண்ணிக்கொண்டுசர்வேஸ்வரனைநோக்கித்தவஞ்செய்துபுண்
ணியலோகத்தை யடையுமென்றுசொல்ல, அதுகேட்டு குந்தலராஜனும்
சந்தோஷப்பட்டு அப்பொழுதுதானே தன்னிடத்திலிருக்கிற மந்திரிகு
மாரனை அழைத்து ஓய்மதனா, இந்தராச்சியத்தை உன்மைத்துனனாகிய
சந்திரகாசனுக்குப்பட்டாபிஷேகம்பண்ணுவித்து நான்தபசியாகப்போ
கவேண்டும்-ஆதலால், உன்மைத்துனனை அதிசீக்கிரமா யழைத்துக்கொ
ண்டுவாவென்று சொல்லியனுப்ப அதுகேட்டு மதனனும் தன்னுடைய
அரண்மனைக்குவந்து சந்திரகாசனை தேடிக்காணாமல் பட்டணமெங்குந்
தேடித்திரிந்து ராஜவீதியில்வருகையில் அங்கே ஒரு தங்கத்தட்டில்பூசா
திரவியங்களை எடுத்துக்கொண்டு பத்திரகாளியம்மன் சந்நிதியைநோக்
கிப்போகின்ற சந்திரகாசனைக்கண்டு ஓய் ராஜகுமாரகா, குந்தலராஜனவ
ர் உனக்கு ராச்சியத்தைப் பட்டாபிஷேகம்பண்ணிவைக்கநினைத்து அ
ழைத்துவரச்சொன்னாரென்றுசொல்ல அதுகேட்டுச்சந்திரகாசனும்சந்
தோஷப்பட்டு மைத்துனனைப்பார்த்து ஓய்மதனா உன்னுடையபிதாவா
னவர் பத்திரகாளி கோவிலுக்கு வருஷத்திற் கொருதரம்போய் பூசை
பண்ணுகிறதென்றும், இன்றையதினம்போகிறதற்குத்தனக்குச்சரீரப்
பிரயாசமாயிருக்கின்றதென்றுஞ்சொல்லி என்னையனுப்பிப்பூசைசெய்
துவரும்படி கட்டளையிட்டார் - ஆதலால் நான்பிரயாணப்பட்டுபோகு
ம்போதே இத்தனைஅயிஸ்வரியம் வந்ததல்லவோ- ஆகையினால்நான்அ
திசீக்கிரத்திற்போய் அந்த மாதேவியைப் பூசித்துவருகிறேனென்று
சொல்ல - அதுகேட்டு மதனனும் சந்திரகாசனைப்பார்த்துஐயாராஜநந்
தனா- அவிடத்தில்ராஜனவர் அதிசீக்கிரப்படுத்துகின்றபடியினால்நீரா
ஜனிடத்திற்குப்போம் நான்போய் அந்தஅம்மனைப் பூசித்துவருகிறே
னென்றுசொல்லஅதற்குச்சந்திரகாசனுஞ்சம்மதித்து தன்கையிலிருந்த
தங்கத்தட்டைமதனன்கையில்கொடுத்தனுப்பிவிட்டு அதிவேகமாய்வந்
து குந்தலராஜனைக்கண்டு நமஸ்காரம்பண்ணி அந்தமுனிநாதனுக்குப்ப
யபக்தி விநயத்துடனேபிரதட்சணநமஸ்க்காரஞ்செய்து அவர்களுக்
குமுன்பாக கைகட்டிக்கொண்டு நின்றான்.

அதுகண்டுகுந்தலராஜனுஞ் சந்தோஷமடைந்து அந்தட்சணமே
தன்னுடையகுமாரத்தியான சண்பகாவதியையழைத்துச்சந்திரகாசனு
க்குக்கலியாணம்பண்ணுவித்து தன்னுடையகுந்தலபுரத்தையும்அவனு
க்கேபட்டாபிஷேகஞ்செய்வித்துசகலசேனைகளையும் அவன்வசத்திலொ
ப்புவித்து தன்னுடையமுத்திரைமோதிரத்தையும் அவன்கையிற்கொ
டுத்துவிட்டுஅந்தராஜனவர்காலவமகாரிஷியுடனேகூடிக்கொண்டுதவ
சுக்குப்போய்விட்டார் - இப்பால் சந்திரகாசமஹாராஜனும்சந்தோஷத்

துடனே அன்று ராத்திரியில் சண்பகாவதியுடனே சகல சௌக்கியங்
களையும் அனுபவித்துக் கொண்டிருந்தான் - அங்கேமதனனும் அதி
வேகமாய்நடந்துபத்திரகாளியம்மன்கோயிலுக்குப்போய் அந்தமஹா
தேவியினுடைய சமீபமாகவந்துநின்றுபூசைசெய்யும்படி ஆயுத்தப்ப
டுகிறபோது அதுதெரிந்தந்தக்கோசிங்கிகள்வந்து முன்பின்யோசித்து
ப்பாராமலவர்களுடைய கையிலிருந்த கத்தியினால் நாலைந்து துண்டாய்
வெட்டிப்போட்டு அவிடம்விட்டுப்பட்டணத்திற்குள்வந்து துஷ்டபுத்
தியைக்கண்டவுடனே சொல்லிப்போனார்கள்- அதுகேள்விப்பட்டுதுஷ்
டபுத்தியாகியமந்திரியுஞ்சந்தோஷமடைந்து இந்தராச்சியம் இனிநம்மு
டையவசமாகிவிட்டது- இனிஎவர்களும்நமக்கெதிரில்லையென்றுஉள்ளே
பூரித்து மஹாஉச்சாகத்துடனேயிருந்தன்றிரவுபரியந்தமும்தன்குமார
னாகிய மதனன்வீட்டுக்கு வாராமையைப்பற்றி அரண்மனையில்விசாரிக்
கும்பொழுது குந்தலராஜனுஞ்சந்திரகாசனுக்குப்பட்டாபிஷேகஞ்செய்
வித்து சண்பகாவதியையுங் கலியாணம்பண்ணிக்கொடுத்துதபசுக்குப்
போய்விட்டானென்றசேதியறிந்து திகிற்பட்டுநம்முடைய குமாரனெங்
கேபோனான்ராஜாவினிடத்திலிருந்தவன் காணமற்போகவேண்டியகார
ணமென்ன- கோயிலுக்குப்பூசைபண்ணப்போன சந்திரகாசன்அரண்
மனையில்மஹாவைபவத்துடனிருக்கிறானேகோசிங்கிகள்கையில்வெட்டு
ண்டு விழுந்தவன் இன்னானென்று தெரியவில்லையே - நாம்இதையாரிட
த்திற்சொல்லிக் கொள்ளுகிறதென்று தனக்குத்தானே விசாரப்பட்டு
க்கொண்டு பட்டணத்திற்குப் புறம்பிலிருக்கின்ற பத்திரகாளியம்மன்
கோயிலண்டைக்கு ஒரு தீவட்டி வெளிச்சத்துடனேபோய்ப் பார்த்து
அங்கேவெட்டுண்டு கிடக்கிறவன் தன்குமாரனென்று தெரிந்து ஐயோ
மகனே - நீயோவெட்டுண்டு விழுந்தாய் நானொருநினைவு நினைத்தால்
(தெய்வம்) ஒருநினைவு நினைத்துவிட்டதே இதற்குநான்என்னசெய்வே
னென்றுவெகுவாகப்பிரலாபித்தழுது இனிநம்முடைய பிள்ளையையிழ
ந்துநாம் பூமியிலிருக்கின்றதா- நாமும்இறந்துவிடுகிறதேஉத்தமமென்
றுஅந்ததுஷ்டபுத்தியென்கிறமந்திரியும்அங்கிருந்த ஒருகுத்துக்கல்லின்
பேரில் தலையையுடைத்துக்கொண்டு செத்தான்- அதுலே சூரியபகவா
னுங் கிழக்குத்திசையில் சந்திரகாசனுடைய கீர்த்திப்பிரகாசம்போலப்
பிரகாசித்தருளினார்.

அப்பொழுது சந்திரகாசனும் பள்ளியறையைவிட் டெழுந்திருந்
து நித்தியகர்மானுஷ்டான சபதபங்களை முடித்துக்கொண்டு ஹரிபூ
சை-குருபூசை-தேவதாபூசைகள்செய்து அநேகம் பிராமணர்களுக்குத்
தானதர்மங்கள்கொடுத்து பிற்பாடு அரண்மனையைவிட்டுப்புறப்பட்டு
நானாவிதசம்பிரமத்துடனே சகல சேனைகளும்புடைசூழ்ந்துவரத்தக்க
தாகக் கொலுமண்டபத்திற்குவந்து நவரத்ந கசிதமான சிங்காசனத்தின்
பேரிலுட்கார்ந்து அந்தச்சபையிலுள்ள மந்திரி பிரதானிகளைப் பார்த்
து துஷ்டபுத்தியென்கிற பெரிய மந்திரியும் அவன் குமாரனாகிய மத

னனும்வந்து சேராமையினால் அங்கிருந்த பொற்றடிக்காரரை யனுப்பி அவர்களைத்தேடி அழைத்துக்கொண்டு வரும்படி உத்தாரம்பண்ணினான். அவர்கள்போய்அரண்மனையிலும் பட்டணத்திலுந் தேடிக்காணாமல்பட்டணத்திற்குப் புறம்பாக விருக்கின்ற பத்திரகாளியம்மன் கோயிலினிடத்திற்போய் அவர்களிருவரும் இறந்து கிடப்பதைப்பார்த்து அதிசீக்கிரத்தில்வந்து சந்திரகாசனிடத்திற் சொன்னார்கள். அதுகேட்டுச் சந்திரகாசனுந் துகிலடைந்து வெருவாகப்பிரலாபித்து குந்தலராஜனுக்குப்பின்பு சந்திரகாசனென்கிறவன் அரசனாயிருந்து பூர்வீகமாயிருந்த மந்திரிகளைக் கொல்லுவித்தானென்கிற அபகீர்த்தி யுண்டாச்சுதேஇதற்கென்ன செய்யப்போகிறோம் இந்த அபகீர்த்திக்காளா யிருப்பதைப்பார்க்கிலும் அந்தபத்திரகாளியம்மன் கோயிலினிடத்திற்போய் சீவனைவிட்டுப் புண்ணியலோகத்தைச் சேருகிறதே கீர்த்தியென்று தீர்க்கயோசனைசெய்து சகலசேனைகளையும் நிறுத்திவிட்டு அந்தச் சந்திரகாசன்மாத்திரந்தனியே புறப்பட்டுப் பத்திரகாளியம்மன் கோயிலுக்குப்போய் அங்கே விழுந்துகிடக்கிறமதனனையுந் துஷ்டபுத்தியையுங்கண்டுவிசாரப்பட்டுமகா தயிரியத்துடனே நின்று அந்த பத்திரகாளியம்மனைப்பார்த்துசஹஸ்த்திரநாமங்களாலும் அநேகவிதமாகத்தோத்திரம்பண்ணிஅந்தஅம்மனுக்குப்பிரீதியாய்த்தன்னுடையசந்திராயுதத்தையுருவிக்கொண்டுதன்சரீரத்திலிருந்த மாமிசத்தையெல்லாம்அறுத்துக்கும்பலாய்ப்போட்டுகடைசியில்தன்னுடையசிரசை வெட்டிவைக்கும்படி ஆயுத்தமாய் அந்தச்சந்திராயுதத்தைக் கழுத்தின்பேரில்வைத்தான்- அதுகண்டு அந்தமகாபரமேஸ்வரியும் பயந்து நடுநடுங்கிச் சந்திரகாசனுக்கெதிரேபிரத்தியக்ஷமாகிநின்று அவன்கையிலிருக்கிற சந்திராயுதத்தைக்கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு ஓய் குமாரகா.சந்திரகாசா, உன்னுடையதயிரியத்திற்குமெச்சினேன்இனிஉனக்குவேண்டியவரத்தைக்கேளென்றுசொல்ல அதுகேட்டுச் சந்திரகாசனுஞ் சந்தோஷித்து தன்கையிலிருந்த சந்திராயுதத்தை உறையில்போட்டுவிட்டு அந்த மகாதேவிக்குப்பிரதட்சண நமஸ்காரங்கள்பண்ணிஅநேகவிதமாகக்கொண்டாடிஅந்தத்தேவியைப்பார்த்து ஓய்அம்மா சகலலோகநாயகி- சர்வசீவதயாபரி- துர்க்கி-கௌமாரி-திரிபுரசுந்தரி இதோ உன்னுடைய சந்நிதானத்தில்வெட்டுண்டு கிடக்கிறவர்களை எழுப்பித் தரவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய அதற்கு அந்த மகாதேவியுஞ் சந்திரகாசனைப்பார்த்து ஓய்குமாரகா இந்தத் துஷ்டபுத்தியானவன் உன்னை. அநேகவிதத்திலுங் கொல்ல நினைத்தவனாதலால் அவனைஎழுப்பவேண்டாம்-அவன் குமாரனைமாத்திரம் எழுப்பிவிடுகிறேனென்றுசொல்ல அதுகேட்டுச் சந்திரகாசனும் அந்த அம்மனைப்பார்த்து ஓய்அம்மா அவன் என்னசெய்தாலுஞ் செய்யட்டும்எனக்குமாத்திரம் அபகீர்த்திவாராமற்படிக்குஅவனையும் எழுப்பித்தரவேண்டுமென்று வேண்டிக்கொள்ள அதற்

குஅந்தமகாதேவியுஞ் சந்தோஷமடைந்து தன்னுடையவிபூதியை ய
ள்ளி அவர்களிருவர்மேரிலுந்தெளித்து இவர்களிருவரும் எழுந்திருக்க
க்கடவதென்று ஆசீர்வாதம்பண்ணின மாத்திரத்தில் துஷ்டபுத்தியும்-
மதனனும்- நித்திரைதெளிந்து எழுந்திருந்தவர்போ லெழுந்திருந்தா
ர்கள்-அப்பொழுது துஷ்டபுத்தியும் தன்னெதிரே நிற்கின்ற சந்திர
காசனைக்கண்டு வெட்கப்பட்டு அவனைத்தழுவிக்கொண்டு அப்பாசந்திர
காசா உன் மகிமையையறியாமல் என்னுடைய அஞ்ஞானத்தினால் இ
துவரையிலும் உனக்கு அநேகந்துன்பங்களைச்செய்வித்தேன் அதுகளை
யெல்லாம்பொறுத்து என்னைரட்சிக்கவேண்டுமென்று வேண்டிக்கொ
ண்டான் அதற்குச்சந்திரகாசனும் துஷ்டபுத்தியைப்பார்த்து-ஓய் ஐயா,
நீர்எத்தனைகாரியஞ்செய்தாலும் என்னை என்னசெய்யும்ஹரிபக்தியுள்
ளவர்களுக்கு ஒருநாளுங் குறைவுவருகிறதில்லை யென்றுசொல்லி மைத்
துனனையும் மாமனையும் ஆதரணைபண்ணி அரண்மனைக்கு அனுப்பிவி
ட்டு அந்தமகாதேவிக்கு மறுபடியும் பிரதட்சண நமஸ்காரம்பண்ணி
அந்த அம்மனிடத்தில்சகலவரங்களையும் பெற்றுக்கொண்டு பட்டணத்
திற்குவந்து கொலுமண்டபத்திலிருக்கிற சிம்மாசனத்தி லுட்கார்ந்து
துஷ்டபுத்தி மதனன்முதலான மந்திரிகளுடனே கொலுவாயிருந்து
கொண்டு பட்டணத்திலுள்ள சனங்களையெல்லாம் அழைப்பித்து அவ
ர்களைப்பார்த்து ஹரிபக்தர்களாகவும் ஹரிபூஜா துரந்தரர்களாகவும்
இருக்கும்படி கட்டளையிட்டு அப்படியே நடவாதபேர்களை ஆக்கினைப
ண்ணிவிப்போமென்று பறையறைவித்து அந்தச் சந்திரகாச மஹா
ராசனானவன் சத்தியசந்தனாய் சகல ஜனங்களையும் தன்னைப்போலப்
போஷித்துக்கொண்டு சொப்பனத்திலும் பொய்சொல்லாமல் குடி
களுக்குப் பத்துக்கொன்பது பங்குவிழுக்காடு கொடுத்து தான் ஒரு
பங்குவிழுக்காடு வாரம் எடுத்துக்கொண்டு தர்ம்மசொரூபனாய் தன்னு
டையசத்தியத்தினால்தனதுராச்சியத்தில் மும்மாரிபெய்வித்துசகலபயி
ர்களையும் அபிவிர்த்தியாய் விளைவித்துக்கொண்டுஒருகாலத்திலும்குடிக
ளுக்குத் துன்பம்வரவொட்டாமல் பாதுகாத்துக்கொண்டுபிரம்மாதிதே
வர்களும் தன்னுடைய கீர்த்தியை மெச்சும்படி அநேகம்யாகங்கள் எக்
கியங்கள் ஹோமங்கள்பண்ணிபிராமணபூசையும்தேவபூசையும்வழுவா
மற்செய்து கனவிலும் ஹரியைமறவாமல் சண்பகாவதி -விஷயையென்கி
ற இரண்டுதேவிமாருடனுங்கூடிச் சகல சௌக்கியங்களையும் அனுபவி
த்துக்கொண்டு குந்தலதேசத்தைப்பரிபாலனஞ்செய்கின்ற (சந்திரகாச
மஹாராசனானவன், உங்களுடையகுதிரைகளைப் பிடித்துக் கட்டிவிட்டு
உங்களுடனேபோராட நினைத்திருக்கிறான்-நீங்களும் அந்தராசனைஇந்த
ராசாக்களிலொன்றாய் நினைத்துச்சண்டைபண்ணி குதிரைகளை விடுவித்
துக்கொள்ளுவோமென்று, நினைத்தீர்களானால் உங்களால் முடியாது ஆ
கையினால் லகுவாய் அந்தராசனைச்சிநேகம்பண்ணிகுதிரைகளைவிடுவித்
துக்கொண்டு அஸ்தினாபுரத்திற்குப்போய் தர்ம்மபுத்திரர் செய்கிறயாகத்

லைதநிறைவேற்றிவையுங்களென்று சொல்லிப்பிற்பாடு அந்தநாரதமுனி வரானவர் ஸ்ரீகிருஷ்ணார்ச்சுனர்களிடத்திற்செலவுபெற்றுங்கொண்டு தன்னுடைய ஆசிரமத்துக்குப்போய்விட்டார்.

அதன்பின்பு கிருஷ்ணார்ச்சுனர்களிருவரும் தங்கள்மனதிலிருந்த சந்தேகந்தீர்ந்து சந்தோஷசித்தர்களாய் சகல துராதுரைகளுடனும் சதுரங்கபலசேனைகளுடனும் அவிடத்திலிருந்து ரதாரூடர்களாய்ப்புறப்பட்டுநடந்து குந்தலதேசத்திற்குச் சமீபமாகப்போய்தண்டுவிட்டிறங்கினார்கள்- அங்கே அதற்குமுன்னமேதானே அந்த அஸ்வமேதக்குதிரைகளிரண்டும் குந்தலதேசத்தைச் சேரவருகையில்சந்திரகாசமஹாராசனானவன் வேவுகாரர்களால் கேள்விப்பட்டு அந்தக்குதிரைகளைப் பிடித்துவரச்சொல்லி அர்ச்சுனராசன்விட்ட குதிரையினுடைய நெற்றியிலிருக்கின்ற லிகிதாவொளியை வாசித்துப்பார்த்து புன்சிரிப்பாகச் சிரித்துஇந்தக்குதிரையின்பின்னேவருகிறவன் சாம்பவமூர்த்தியையுங் கெலித்த மேட்டானமேட்டியாகிய மேட்டியாம்,அப்படிப்பட்டரணரங்கசூரனை இன்றையத்தினம் ரணக்களத்திலே அறிகிறேன்அவன் நம்மையெல்லாம் (பெண்களாக்கினானே) அவனுடைய ஆண்பிள்ளைத் தன்மையை இப்போது அறிகிறேனென்று ஆக்கிரகித்து பற்களை நெறநெறவென்றுகடித்து கண்களில்நெருப்புப்பொறிகள்பறக்கவும், புருவங்கள்நெறிக்கவும், மீசைபடபடவென்று துடிக்கவும், அதிககோபத்துடனே அங்கிருந்த சேவகர்களையழைத்து அந்தக் குதிரைகளிரண்டையும், குதிரைச்சாலையில் கட்டிவைக்கும்படி திட்டம்பண்ணி அந்தக்ஷணத்தில் தானே சந்திரகாசமஹாராஜனானவன் யுத்தசன்னத்தனாய் நவரத்தினமயமான தேரிலேறிக்கொண்டு மந்திரி- பிரதானிகள்- சாமந்தர்கள்- குமாரவர்க்கங்கள்- பந்துவர்க்கங்கள் - மகுடவர்த்தனர்கள் - கிரீடாதிபதிகள் - தண்டநாயகர்கள் - சேனாதிபதிகள் முதலான துராதுரைகளும்,சதுரங்கபலசேனைகளும், புடைசூழ்ந்துவரத்தக்கதாகப் புறப்பட்டு வெண்கலபேரிகை ரணபேரிகைமுதலான பதினெட்டுவகை மேளவாத்தியங்களுந் தாம்தாமென்று முழங்க அட்டகாசங்கள் பண்ணிக்கொண்டு பட்டணத்திற்கு வெளியேவந்து தண்டுவிட்டிறங்கிச் சகலசேனைகளையும், அணிஅணியாக நிறுத்தி அந்தச்சேனைகளுக்கு முதன்மையாய் சந்திரகாசமஹாராஜனும், எமதர்மராஜனைப்போல பார்க்கப் பயங்கரமாய் ஆக்ருஷித்து நின்றான். அதுகண்டு தேவர்களெல்லாரும் ஆச்சரியப்பட்டு இந்தச்சந்திரகாசன் விஷ்ணுபக்தன்-வீராதிவீரன்-இவனைத் திருஷ்டித்துப்பார்க்கிறதற்கு நம்மாலுமாகாது அப்படியிருக்க இந்த அர்ச்சுனன் எந்தவிதத்தினாற் கெலிக்கப்போகிறான் குதிரைகளையும் எப்படி விடுவித்துக்கொள்ளப்போகிறான் தர்மபுத்திரரும், எந்தவிதத்தில் யாகம்பண்ணி நமக்கு அவிர்ப்பாகங் கொடுக்கப்போகிறார் ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய தந்திரங்கள் எங்கே நடக்கப்போகின்றது இதை நம்பவேண்டியதில்லையென்று தங்கள் தங்களுக்குள்ளே எண்ணங்கொண்டு பயப்பிராந்தரானார்கள்.

கேட்டீரோ ஜெனமேஜெய மஹாராஜாவே அப்படிபார்க்கப்பய ங்கரமாய் முனைந்து நிற்கின்ற சந்திரகாசமஹாராஜனுடைய சேனைகளை அர்ச்சுனன்கண்டு ஆச்சரியப்பட்டு நாம் இந்தராஜனை எப்படி ஜெயிக் கப்போகிறோம் நாரதமுனிவர் சொன்னதெல்லாம் மெய்யாயிருக்கின்ற தேயென்று பயந்து உச்சாகபங்கமாய் நாம் இன்றையத்தினம் இந்தரா ஜன்கையில் தப்பிப்பிழைக்கப் போகிறோமோவென்று சிந்தாக்கிரந்த ராய் சூரியனைக்காணாத தாமரைப்போல முகம்வாடி நின்றான்- அப்படி முகம்வாட்டமாய் நிற்கின்ற அர்ச்சுனனைப்பார்த்து, அகிலாண்டகோடி பிர்ம்மாண்ட நாயகராகிய ஸ்ரீ கிருஷ்ணபகவானுஞ் சிரித்துத் தலையை யசைத்து ஓய்கிரீட்டி, நீயேன் தயிரியத்தைவிட்டாய் நாம் இருக்கும் பொழுது உனக்கென்ன குறையிருக்கின்றது நீ ஒன்றுக்கும் அஞ்சவே ண்டாம் உச்சாகமாய்நின்று காண்டீபத்தைவளைத்துஅஸ்திரங்களைப்பிர யோகஞ்செய், நாம் அந்த சந்திரகாசனைக் ஜெயிப்போமென்று அர்ச்சு னனை உச்சாகப்படுத்தி அந்த பகவானானவர் புன்சிரிப்புடனே முடிக் கோலினால் குதிரைகளை யதட்டி அர்ச்சுனனுடைய தேரைச் சந்திரகாச னுக்கு நேராக நடத்தியருளினார் - அதுகண்டு அர்ச்சுனனும், ஸ்ரீகிருஷ் ணதேவரைப்பார்த்து-ஐயா, ஜநார்த்தனா, தேவரீர் ரதத்தைமாத்திரம்மெ துவாய்நடத்தும் இதோ பாணங்களைப் பிரயோகிக்கிறேனென்றுசொல் ல, அதுகளையெல்லாஞ் சந்திரகாசன் கண்டுசிரித்து ஆனந்தசமுத்திரத் தில் மூழ்கிச் சகல உக்கிரமுமடங்கி இந்த பகவானே அர்ச்சுனனுக்குச் சாரதியாயிருந்து அடிமைத்தொழில் செய்யும்போது நாம்இந்த அர்ச் சுனனுக்கு அடிமையல்லவா, ஆகையினால் நாம் அர்ச்சுனனுடனேபோ ராடவேண்டியதென்ன நமக்கு அதனால் வருகிற பிரயோசனமென்ன இகபரசவுக்கியங்களைக்கொடுத்து ரக்ஷிக்கப்பட்ட தேவனைவிட்டு வீணா னகாரியத்தை நாமேன்செய்யவேண்டுமென்று நினைந்து அதிக சந்தோ ஷித்துடனே தன்கையிலெடுத்தவில்லைத் தேரின்பேரி லெறிந்துவிட்டு கவசத்தைக் கழற்றிப்போட்டுத் தேரைவிட்டுப் பூமியிற்குதித்து ஓடிவ ருகையில் அதுகண்டு அந்த பகவானும் புன்சிரிப்புடனே தேரைவிட் டிழிந்து பூமியின்பேரில் நின்றருளினார். அப்பொழுது தர்ம்மசொரூப னான சந்திரகாசனும்வந்து அந்த பகவானைக்கண்டு பிரதக்ஷணஞ்செய்து சாஷ்டாங்க தெண்டனிட்டெழுந்து நின்று கைகளைச்சிரசின்பேரில் அஞ் சலியாகவைத்துக்கொண்டு அந்த தேவனைப்பார்த்து- ஓய், தேவாதிதே வா, புருஷோத்தமா, புண்டரீகாக்ஷா, ஆபத்பாந்தவா, அநாதரக்ஷகா, கோவிந்தா, கோபாலா, கோபிகாரமணா, தேவகிநந்தனா, பரந்தாமா, விஸ்வரூபா, ஓய்சுவாமி, என்னை ரக்ஷியும், ரக்ஷியும், இந்தச்சமுசார மெ ன்கிற மாயாசமுத்திரத்தில்மூழ்கி மோட்சமாகிய கரையைக் காணாமல் வருந்துகின்றஅடியேனுக்குத் தேவரீருடைய திருவடியாகிய தெப்ப த்தைத்தந்து கரையேற்றி ரக்ஷியும் ரக்ஷியும், உமது கிருபாநோக்கத்தி னிற்பார்த்தருளும் இன்றைக்கல்லவோ என்னுடையகோரிக்கை யீடேறி

ற்று இன்றைக்கல்லவோ என்னுடைய பூஜாபலம்பலித்தது,என்னுடைய் கீர்த்திப்பிரகாசம் பூலோகமுழுதும்நிறைந்தது-இன்றைக்கல்லவோ பரமசுகத்தைப்பெற்றேன்-என்னுடைய ஜென்மசாபல்லியமாச்சுது-தேவரீருடைய திருஷ்டியாகிய அங்குசம் பட்டமாத்திரத்தில் மனமாகிய காட்டில் சஞ்சரிக்கின்ற பாவமாகிய ஆனைக்கூட்டங்களெல்லாம்மடிந்துவிழுமே அப்படிப்பட்ட மகிமையையுடைய கபடநாடக சூஸ்த்ராவதாரியான முகுந்தா ரக்ஷியும், ரக்ஷியும், பசுவானது கன்றுகளைப்போஷிக்கிறதுபோல் பக்தஜனங்களைப்போஷிக்கின்றதயாநிதிரக்ஷியும்,ரக்ஷியும்,உம்மைக்கண்டமாத்திரத்தில் என்னுடைய சரீரங்குளிர்ந்தது பிரமானந்தமேலிட்டது-அதல்லாமலும்,நான்காணவேண்டியிருக்கின்ற பாக்கியத்தினுலல்லவோ அந்த தர்மபுத்திரரும் அஸ்வமேதயாகம் பண்ணநினைத்தார்.

இந்த அர்ச்சுனராஜனும் தேவரீரால் சகலபிரதிஷ்டையும் பெற்றான் - இவனுடைய புண்ணியந்தான் எப்படிப்பட்டதோ தெரியாதென்றுசொல்லி திரும்பவும் அந்தபகவானுக்குப் பிரதட்சண நமஸ்காரம்பண்ணிபிற்பாடு அர்ச்சுனனையும் ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு வீரவர்ம்மன் முதலானராஜாக்களையும் சதுரங்கபலசேனைகளையும் ஆதரணைசெய்து அந்தட்சணத்திலேதானே பதினெட்டுவகைமேளவாத்தியங்களும் தாம்தாமென்றுமுழங்கத்தக்கதாகக்கிருஷ்ணார்ச்சுனர்கள்முதலான சகல சேனைகளையும் பிரயாணப்படுத்திக்கொண்டு தன்னுடைய சேனைகளுடனேகுந்தலதேசத்திற்கு அழைத்துக்கொண்டுவருகையில் தேவர்களெல்லாருங்கண்டுசந்தோஷப்பட்டுசந்திரகாசனுடைய பக்திக்குமெச்சிசந்திரகாசன்பேரில் பாரிசாத புஷ்பங்களைச் சலசலவென்று வருஷித்தார்கள்- அப்பொழுது ஸ்ரீகிருஷ்ணபகவானும்புன்சிரிப்புடனேஅர்ச்சுனனைப்பார்த்துக் கண்சைகைபண்ணி,ஓய்அர்ச்சுனா,நாம்இருவரும்நல்லபூஜாபலன் பண்ணினபடியினால் இன்றைக்குத்தப்பிப்பிழைத்தோம்இனிமேல் நமக்கு ஒருவரும் எதிரில்லையென்றுசொல்லி மகாசந்தோஷத்துடனே நடந்து சகல துராதுரைகளுடனும் சேனைகளுடனும் குந்தலபுரத்தைச்சேர்ந்து அந்தச்சந்திரகாசமஹாராஜனுடைய அனுமதியினால் சர்வாடம்பரத்துடனே அந்தப்பட்டணத்தில் மூன்றுநாளிருந்தார்கள்.

அப்பால் நாலாநாள்காலமே சந்திரகாசனும் அஸ்வமேதக்குதிரைகளையுஞ் சிறிதுதிரவியங்களையுங் கிருஷ்ணார்ச்சுனர்களுக்குக் காணிக்கைகளாகக் கொடுத்தனுப்பிவைத்து பிற்பாடுசகலசேனைகளையும் பிரயாணப்படும்படி உத்தரவுபண்ணி தன்னுடையபட்டணத்தையும் மந்திரிமார்களின்வசத்தில் ஒப்புவித்துதானும் ரதாரூடனாய் சதுரங்க பலசேனைகளுடனே புறப்பட்டுவந்து அர்ச்சுனனுடைய சேனைகளுடனே கலந்துகொண்டான் - அதுகண்டு அர்ச்சுனனும் அஸ்வமேதக் குதிரைகளிரண்டையும்விட்டு அதுகளின்பிறகே கிருஷ்ணமூர்த்தி சமேதனாய் சந்திரகாசன்- வீரவர்ம்மன்- மயூரத்துவசன்- தாமரைத்துவசன் -அம்சத்துவசன் - நீலத்துவசன்- எவ்வர்ணசுவன்- பப்பிரவாகன்- அனுசாருவன்பிரத்

தியுமனன்- அனிருத்திரன்- விஷ்வகேது- மேகவர்ணன்- சாத்தகி-கிருத வர்ம்மன்- முதலான துராதுரைகளுடனும் சதுரங்கபலசேனைகளுடனும்ரதாருடனும்ப்புறப்பட்டு மஹாஆடம்பரத்துடனே பூமியானது கிடுகிடுவென்று நடுங்கத்தக்கதாக நடந்தான்- அப்பால்அந்தக் குதிரைகளானது வடக்குநோக்கி அநேகந்தூரம் நடந்து- காடுகள்- செடிகள்- சிர்மைகள்- பூமிகள்- வனங்கள்- வனாந்தரங்கள்- மலைகள்- குகைகள் - அக்கிராரங்கள்- பட்டணங்கள்- ஆறுகள்- நதிகள்-தேசங்கள்-ராச்சியங்கள்- சாலைகள் - சோலைகள், இதுகளெல்லாங் கடந்து போகையில் அங்கங்கே யிருக்கிற அரசர்களிற் சிறிதுபேர் அந்த அஸ்வமேதக் குதிரைகளைக் கண்டுபயந்து நடுநடுங்கினார்கள் - சிறிதுபேர் பயப்பிராந்தர்களானார்கள்- சிறிதுபேர் தங்கள் தங்கள் விருதுகளைவாங்கி யெறிந்தார்கள் - சிறிதுபேர் அந்தத்துரைகளை யெல்லாம் திருஷ்டித்துப் பார்க்கமாட்டாமல் விலகிப்போனார்கள் - சிறிதுபேர் அந்தக் குதிரைகளுக்குத் தெண்டனிட்டார்கள் - சிறிதுபேர் காணிக்கை சப்பங்களைக்கொண்டுவந்துகொடுத்து ஸ்ரீகிருஷ்ணார்ச்சுனர்களைக் கண்டார்கள்-சிறிதுபேர்அந்தக் குதிரைகளையும் அர்ச்சுனனுடைய சேனைகளையுங் கண்டுபயந்து ஓடிப்போனார்கள். கேட்டீரோ ஜெனமேஜெயமகா ராஜாவே இப்படி அர்ச்சுனனுடைய சேனைகளானது சமுத்திரம்புரண்டு வருவதுபோல்எங்கும்பரவிநடக்கையில் அதுகண்டு எவ்வகைப்பட்ட ராசாக்களும் திருஷ்டித்துப்பார்க்கமாட்டாமல் ஓடிப்போனார்கள் - சந்திரகாசனைக்கூடவணங்கப்பண்ணிக்கொண்ட அர்ச்சுனராஜனுக்கு இனி எந்தலோகத்திலும் எதிராளிகளில்லையென்று சிறிதுபேர் சொல்லிக்கொண்டார்கள் - அர்ச்சுனனுடைய சேனைகள்நடக்கிற அதிர்ச்சியினால் பூமிதேவியும் நடுங்கினாள் - ஆதிசேஷனும் விஷங்களைக்குமீல்குமீலென்று கக்கிக்கொண்டு ஆயிரம் பண முடிகளையுஞ் சாய்த்துக்கொண்டான்- இப்படி அநேகவைபவத்துடனே அர்ச்சுனனானவன் சகலசேனாசமுத்திரங்களுடனே நடக்கும்போது அந்தக்குதிரைகளும்வடதிசையில் அநேகந்தூரம்நடந்துபிறகு கீழ்த்திசைநோக்கித் திரும்பி கிழக்குசமுத்திரக் கரையோரமாகவந்து அங்கேசற்றுநேரம்நின்று அப்பால் சமுத்திரத்தின் பேரில் நடந்துமாய்கையாய்ப்போய்விட்டது அதிலே அர்ச்சுனனும்சகலசேனைகளுடனே கிழக்குசமுத்திரக் கரையோரமாய் வந்துசேர்ந்து குதிரைகளைக்காணாமல் திகிலடைந்து ஸ்ரீகிருஷ்ணபகவானைப்பார்த்து-ஐயா- கிருஷ்ணா - இந்தக் குதிரைகள் சமுத்திரத்தில் நடந்துபோக மாட்டாதல்லவோஅதுகள் எங்கேபோச்சுது இனிஎன்னசெய்வோம் இத்தனைபிரயாசைப்பட்டுவந்தகுதிரைகள் மாய்கையாய்ப்போனகாரணமென்ன-அதுகளை ஆர்கொண்டுபோனார்களென்று தெரியவில்லையே இதுவரையில் பெரியசமுத்திரங்களையெல்லாங் கடந்து கடைசியில்ஒருசிறிய கால்வாயில்முழுகிவிடலாச்சுதே இதற்கு எப்படி ஐயாவென்று சொல்ல அது கேட்டுஸ்ரீகிருஷ்ணபகவானும் தம்முடைய ஞானதிருஷ்டியினாற்பார்த்

து குதிரைகளிருக்குமிடத்தையறிந்துகொண்டு ஓய் அர்ச்சுனா, குதிரைகள்போய்விட்டதென்று நீ பயப்படவேண்டாம்- அந்தக்குதிரைகளிருக்கின்ற இடத்தைநாம்சொல்லுகின்றோம் - அஃதென்னவெனில், மைநாக பர்வதம்- சுவேதபர்வதம்- முதலான- பர்வதங்களுக்கு மிருப்பிடமாய், ஆமைகள்- முதலைகள்- சர்ப்பங்கள்- பட்சிகள்-முதலானஜீவராசிகளுக்கு மிருப்பிடமாய், கற்பகத்தரு-பாரிசாதம்-சிந்தாமணி-காமதேனுமுதலான வஸ்துகளுக்குந் தாய்வீடாய், ஸ்ரீமந்நாராயண மூர்த்திக்குஞ்சிங்காரமாளிகையாய், இவ்வளவு அவ்வளவென்று அகலம்-நிகளம்- ஆழம் அறியப்படாததாய் விளங்கப்பட்ட திருப்பாற்கடலுக்கு மத்தியில்சுவேத தீபமென்றொன்றிருக்கின்றது- அந்தச்சுவேததீபத்தில் நமது குதிரைகள்போய் பச்சென்றபுல்லைக்கண்டு மேய்ந்துக்கொண்டிருக்கின்றது- ஆகையால் நாம் அவிடத்திற்குப்போய்க் குதிரைகளைக்கொண்டுவருவோம்நீசற்றாகிலுங் கவலைப்படாமல் இந்தச்சேனைகளையெல்லாம் இவ்விடத்தில்தானே நிறுத்திவிட்டு உன்னுடையதேரும் உதவாதென்று அர்ச்சுனனுக்குச்சொல்லிவிட்டு அந்தக்ஷணமே தாரகனை நினைத்தருளினார். அந்தபகவான் நினைத்தமாத்திரத்தில் தாரகனும் காந்தர்வகுதிரைகளுடனும் கருடக்கொடியுடனும் சங்குசக்கர முதலானபஞ்சாயுதங்களுடனும் கோடிசூரியப்பிரகாசமாய் விளங்குகின்ற வைகுந்த ரதத்தைக்கொண்டுவந்து நிறுத்தினான் அதுகண்டு அந்தபகவானுஞ் சந்தோஷமாய் சேனைகளையெல்லாமங்கேதானே நிறுத்திவிட்டு சந்திரகாசன் - வீரவர்ம்மன்- மயூரத்துவசன்- அம்சத்துவசன்- பிரத்தியுமனன்- அர்ச்சுனன்- இவர்களைமாத்திரம் அந்தரதத்திலேற்றி தாமும் ஏறிக்கொண்டுதாரகனையெச்சரிக்கைப்பண்ணி ரதத்தைத்திருப்பாற்கடல்மத்தியிற் கொண்டுபோம்படி கட்டளையிட்டருளினார்- அதுகேட்டு தாரகனும் மகாப்பிரசாதமென்று முடிக்கோலினால் குதிரைகளைதட்டி ரதத்தை ஆகாசமார்க்கமாகக்கொண்டுபோய் சுவேத தீபத்திற்கு நடுவேநிறுத்தினான்- அப்பொழுது கிருஷ்ணமூர்த்தியானவர் அர்ச்சுனனுடனும் ஐந்து துரைகளுடனும்தேரைவிட்டிழிந்து அவிடத்தில் சுற்றிப்பார்த்துவருகையில் அங்கே ஆகாயத்திற்கும் பூமிக்கும்ஒன்றாயிலக்ஷம்யோசனை விஸ்தாரமுள்ள ஒரு ஆலவிருக்ஷத்தின் கீழிருந்து தவஞ்செய்கிற பகதலப்பிரிய மஹாமுனீந்திரனைக்கண்டுகிருஷ்ணார்ச்சுனர்களிருவரும்சந்தோஷமடைந்தார்கள்- சந்திரகாசன் முதலான ஐந்துபேரும் அந்தமுனிநாதனைக்கண்டு பிரதக்ஷிண நமஸ்காரஞ்செய்து நின்றார்கள்- அப்பொழுது அந்தமுனீஸ்வரரும் கண்ணைவிழித்துப்பார்த்து கிருஷ்ணார்ச்சுனர்களையும் அந்தராசாக்களையும் ஆதரணைபண்ணிஅப்பால் கிருஷ்ணார்ச்சுனர்களைப்பார்த்து ஓய் நரநாராயணர்களே நீங்கள்புண்ணியபுருஷர்களாச்சுதே நாம்உங்களைப்பார்க்கும்படி எத்தனைபுண்ணியம்பண்ணினோமோ நமதுகோரிக்கை இன்றல்லவோ ஈடேறியது உங்களைத்தரிசனம் பண்ணுகிற நிமித்தம் அந்தக்குதிரைகளை இவிடத்திற்கழைப்பித்தோம்இதோசிங்காரவனத்தில்மேய்ந்து

கொண்டிருக்கின்றது பிடித்துக்கொண்டு போங்கோளென்று சொல்ல அதுகேட்டுகிருஷ்ணார்ச்சுனர்களிருவரும்சந்தோஷமடைந்தார்கள்- பின்னையும் அர்ச்சுனராஜன் அந்தமுனிநாதனைப்பார்த்து ஓய்- ஐயா,உம்மைப்பார்த்தால் எனக்குமெத்தவும் நகைப்புவருகின்றது- அஃதெதினாலென்றால்,தேவரீர் அநேகநாளாய் தவஞ்செய்கிறபடியினால் சரீரமுழுதுஞ் சர்ப்பங்கள் புற்றுவைத்துக்கொண்டுகுடியாயிருக்கின்றது-அதுவுமல்லாமல் பலவிதமான விருக்ஷங்கள் முளைத்திருக்கின்றது,இரண்டுசெவிகளிலும் பக்ஷிசாதிகள் கூண்டுகட்டி முட்டையிட்டு குஞ்சுபொரித்திருக்கின்றது-சொக்குகளுங்குருவிகளும் எச்சமிட்டிருக்கின்றது பின்னையும்வெயிலையுங்காற்றையுங்குளிரையுஞ்சட்டைபண்ணாமல்ஒருபயித்தியக்காரனைப்போல் உட்கார்ந்துக்கொண்டு தவஞ்செய்கிறீர்-இப்படி இருப்பதைப்பார்க்கிலும் ஒருபர்ண்ணசாலை கட்டிக்கொண்டு அதிலே சுகமாயிருந்து தவஞ்செய்யலாகாதோவென்று கேட்க, அதுகேட்டு அந்த முனிநாதனுஞ் சிரித்து அர்ச்சுனனைப்பார்த்து,ஓய் பற்குணா, என்னைக் காற்றுக்கும் மழைக்கும் வெய்யலுக்கும் மறைவாய்குடிசைபோட்டுக் கொண்டிருக்க லாகாதாவென்று சொன்னாயல்லவோ, இந்தச் சரீரம் நீர்மேற்குமிழிபோல் நிலையில்லையே நான் இந்தக்கோலமாயிருந்து பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதேஇருபதுபிர்ம்மாக்கள்பிறந்துஇறந்துபோனார்களேஅப்படிப்பட்ட அற்பாயுசைநம்பிபர்ண்ணசாலைக்கட்டிக்கொள்ளலாமோ வென்றுசொல்ல அதுகேட்டு கிருஷ்ணமூர்த்தியும் அந்தராஜாக்களுஞ் சிரித்தார்கள்- அர்ச்சுனனுங் கலீலென்று சிரித்து அந்த முனிவனைப்பார்த்து ஓய் முனிநாதா, நீர் நல்லவிசேஷஞ் சொன்னீர் உம்மைப்பார்க்கிலும் அந்தப் பிர்ம்மாக்களுக்கு ஆயுசுகொஞ்சமோ அதைச்சொல்லுமென்றுகேட்க அதுகேட்டு அந்த முனிநாதனுஞ் சிரித்து அர்ச்சுனனைப்பார்த்து ஓய்கிரீடி, அந்தப் பிர்ம்மாக்களுடைய ஆயுசைச்சொல்லுகிறோம் அஃதெப்படியென்றால்,

கிரேதாயுகம்-திரேதாயுகம்-துவாபரயுகம்-கலியுகம்-என்கிற சதுர்யுகங்கள் ஒருதரம்திரும்பினால் மஹாயுகமென்றுபெயர் அப்படிப்பட்ட மஹாயுகம் ஆயிரங்கொண்டது ஒருநாள் அப்படிப்பட்டநாள் பதினைந்துகொண்டது ஒருபக்ஷம்-அப்படிப்பட்டபக்ஷம் இரண்டுகொண்டது ஒருமாதம்-அப்படிப்பட்ட மாதம் ஆறுகொண்டது ஒரு ரிது-அப்படிப்பட்ட ரிது இரண்டுகொண்டது ஒரு வருஷம் - அப்படிப்பட்டவருஷம் நூறுகொண்டது பிர்ம்மாக்களுக்குச்சரியானகாலம்-அப்பொழுது சகல பிரபஞ்சங்களும் ஜலப்பிரளயத்தினால் நாசமடைந்துபோம் அப்போது ஆதிமூலமாகியஸ்ரீமந்நாராயணமூர்த்தியானவர் ஒரு சிறுபிள்ளையாய் தம்முடைய உதரத்தில் சகல பிரபஞ்சங்களையும் அடக்கிக்கொண்டிருப்பார் இந்தப்படி நூறுமஹாவருஷம் ஜலப்பிரளயமாயிருக்கும்போது அந்த மஹாபுருஷன் உத்தாரப்படி துவாதசாதித்தர்கள் பிறந்து அந்த ஜலங்களை வற்றடித்து எப்போதும்போல பூமண்டலத்

தை திருமிப்பார்கள்- இப்படி இருபது பிர்ம்மாக்களைக் கண்டேனென்
றுசொல்ல. அதுகேட்டு அர்ச்சுனனும் ஆச்சரியப்பட்டு அந்த முனிவ
னைப்பார்த்து ஓய் முனிநாதா, அப்படி பிர்ம்மாக்களும் மடிந்துபோய்
சத்த சமுத்திரம் ஒன்றாகக்கோர்த்துக்கொண்டு பிரளயமா யிருக்குமெ
ன்று சொன்னீரே அந்த மஹா பிரளயத்தில் நீ ரெப்படி யிருந்தீர்
அதையும் எனக்குத் தெரியச்சொல்ல வேண்டுமென்றுகேட்க, அதற்கு
அந்த முனீஸ்வரருஞ் சிரித்து அர்ச்சுனனைப்பார்த்து ஓய் புண்ணியபு
ருஷா நூறாயிரா வருஷபரியந்தம் ஜலப்பிரளயமா யிருக்கும்போது
அந்த ஜலத்தின்மேலில் ஆதிகர்த்தாவாகிய பகவான் ஒரு சிறுபிள்ளையாய்
சகலலோகங்களையும் தம்முடைய குக்ஷியில் வைத்துக்கொண்டு சற்றாகி
லும் ஆயாசம் இளைப்பில்லாமல் ஒரு ஆலிலையின்மேலில் பள்ளிகொண்
டிருப்பாரென்று சொன்னேனல்லவா நானும் அந்தப் பிரளயகாலத்தி
ல் பயப்படாமல் ஜலத்தின்மேலில் மிதந்துபோய் அந்தப் பகவானிடத்
திற்சேர்ந்து அவருடைய பாதாரவிந்தங்களைக் கெட்டியாகப்பற்றிக்கொ
ண்டிருந்து திரும்பவும் அவருடைய அனுக்கிரகத்தினால் பிர்ம்மாக்கள்
பிறந்து உலகங்களைச் சிருஷ்டித்தால் நானும் இந்த யிடத்தில்வந்துசேர்
ந்து தவஞ்செய்வேன் அப்படி இருபதுபிர்ம்மப்பிரளயத்திற்கும் அந்
த பகவானுடைய கிருபையினால் தப்பிப்பிழைத்தேன் அந்த பகவான்
ஆரென்றும் அவர் எங்கேயிருப்பாரென்றும் கேட்கிறாயோ அவர் இங்
கேதானேயிருக்கிறார் அவர் இங்கே எந்தயிடத்தில் இருக்கிறாரென்று
கேட்கிறாயோ ஆனால் அதையுஞ் சொல்லுகிறேம் அதெப்படியென்
றால் உனக்குப் பந்துவாகியும் சிநேகராகியும், மைத்துனராகியும், சார
தியாகியும், ஆப்தராகியும், ஆசாரியராகியும், தெய்வமாகியு மிருக்கப்பட்
ட கபடநாடக சூத்திராவதாரியான இந்தக் கிருஷ்ணமூர்த்திதான் அப்
போதும் ஆலிலையின்மேற் பள்ளிகொண்டிருந்தவர் இப்போதும் இவ்வி
டத்தில் நம்மிலொருவராய் ஒன்றுமறியாதவரைப்போலிருக்கிறார்-இதுக
ளெயெல்லாம் அவரையேகேட்டுத் தெரிந்துகொள்ளென்றுசொல்ல அ
துகேட்டு அர்ச்சுனனும் சந்தோஷசித்தனாய் அந்த பகவானைப்பார்த்து
ஐயா, கிருஷ்ணா, இந்த முனீஸ்வரர்சொன்ன வசனங்களெல்லாம் மெய்
தானோவென்றுகேட்க, அதற்கு அந்தபகவானுஞ் சிரித்து அர்ச்சுனனை
ப்பார்த்து ஓய் அர்ச்சுனா, இவர்சொன்ன வசனங்களெல்லாம் மெய்யே
அந்தக்காலத்தில் நாம் சிறுபிள்ளையாயிருந்து உலகங்களையெல்லாம் ரக்ஷி
த்ததுமெய்யே அது பொய்யல்லவென்றுசொல்ல அதுகேட்டு அர்ச்சு
னனும் நடுநடுங்கி அந்தப்பகவானுக்குப் பிரதக்ஷிணஞ்செய்து சாஷ்டா
ங்கமாகத்தெண்டனிட்டெழுந்துநின்று அந்த நாதனைப்பார்த்து ஓய்பர
ந்தாமா-பக்தவச்சலா ஓய் சிநேகா, மைத்துனா, ஓய்சுவாமி உம்முடைய
மகிமையை பிர்ம்மாதி தேவர்களாலும், அறியப்படாதேயென்று அநே
கவிதமாகக்கொண்டாடினான். அப்போது ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியுஞ் சிரித்

து அந்த முனீஸ்வரருக்கு நமஸ்க்காரம்பண்ணி ஒய்-புண்ணியபுருஷா, உம்முடைய திவ்வியசொரூபத்தைக் கண்டமாத்திரத்தில் எங்களுக்குச் சந்தோஷமுண்டாச்சுது நாங்கள் பரமபவித்திரர்களானோமென்றுசொல்ல அதுகேட்டு அந்த முனிநாதருஞ்சிரித்து அர்ச்சுனனைப்பார்த்து நாம் ஒரு சிறியகதை சொல்லுகிறோம் அதையுஞ் சாவதானமாய்க்கேள் அஃதென்னவென்றால்,

நாம் பார்த்துக்கொண்டிருக்கும்போதே பிறந்து இறந்துபோன இருபதுபிர்ம்மாக்களில் பதினோராம் பிர்ம்மாவானவர் சிருஷ்டிகர்த்தாவாயிருக்கும்போது அவர் என்னிடத்திற்குவந்து என்னைப்பார்த்து நீர் அநேகநாளாய்த் தவஞ்செய்கிறீரே நீர் என்னவரம்வேண்டித் தவஞ்செய்கிறீர் உம்முடைய தவத்திற்குமெச்சிப் பிரத்தியக்ஷமாய்வந்தேன் ஆகையால் உமக்குவேண்டிய வரத்தைக்கேளும் நான் தருகிறனென்று சொன்னார்- அந்தவார்த்தையைக்கேட்டுச்சிரித்து அந்தப்பிர்ம்மாவைப் பார்த்து ஒய் சதுர்முகப்பிர்ம்மாவே நீ என்னவார்த்தைசொன்னாய் நீ எனக்கு வரங்கொடுக்கிறேனென்று சொன்னாயல்லவோ நீ அற்ப ஆயுசுள்ளவன் நீயோ எனக்குக்கர்த்தன் நான் பார்த்துக்கொண்டிருக்கும்போதே உனக்கு முன்னே பத்துப்பிர்ம்மாக்கள்பிறந்து கர்த்தர்களாயிருந்து இறந்துபோனார். அவர்களிலே நீயுமொருவன்தானே நீ இன்னம் இரண்டுமூன்று நாளையில் இறக்கப்போகிறாய்-அப்படியிருக்க நீயோஎனக்கு வரங்கொடுக்கிறவன் உன்னுடையலோகத்திற்குப்போவென்றுசொல்ல அதுகேட்டு அந்தப் பிர்ம்மாவுஞ்சிரித்து என்னைப்பார்த்து உனக்குப் பயித்தியம்பிடித்து நல்லவார்த்தைசொன்னாய் என்னைப்பார்க்கிலும் வேறே ஒரு தெய்வமுண்டோ இந்தப்பதினாலுலோகங்களுக்கும் நானே சிருஷ்டிகர்த்தாவாய் எண்பத்துநாலுலக்ஷம் சீவகோடிகளுக்குந் தெய்வமாய் சகலதேவர்களுக்கும் ரிஷிகளுக்கும் வரங்களைக்கொடுக்கின்றவனாயிருக்கும்போது என்னையல்லாமல் வேறே ஒரு தேவன்வந்து உனக்கு வரங்கொடுக்கப் போகிறானோ பார்ப்போமென்றுசொல்லிக்கொண்டிருக்கும்போது கேட்டீரோ நரநாராயணர்களே அந்தவேளையில் பூமியானது படாலென்றுவெடித்து அதிலிருந்து ஒரு பேய்க்காற்றுண்டாகிப் பிரளயகாலத்துச் சண்டமாருதம்போலெழும்பி இப்படி வாதித்துக் கொண்டிருக்கிற எங்களிருவரையுந் தூக்கிக்கொண்டு இந்த அண்டத்தைவிட்டு வேறொருஅண்டத்திற்கொண்டுபோய்விட்டது. அங்கேஒரு சிம்மாசனத்தில் அஷ்டமுகப் பிர்ம்மாவானவர் சகல தேவர்களுடனுங் கொலுவாயிருந்தார். அவர் எங்களிருவரையும்பார்த்து நீங்களார் நீங்கள் எங்கேயிருந்துவந்தீர்கள் நான்சிருஷ்டிகர்த்தாவாயிருந்து சகலலோகங்களையும்நிருமித்தேன் நீங்கள்என்சிருஷ்டிக்குள் அகப்படவில்லையேஉங்களைப்பார்த்தால் விந்தைரூபமாய்க் காணுகின்றதேயென்றுகேட்க அதுகேட்டுச் சதுர்முகப் பிர்ம்மாவுஞ்சிரித்து அந்த அஷ்டமுகப் பிர்ம்மாவைப்பார்த்து ஐயா நான் சதுர்முகப்பிர்ம்மாவாயிருந்து சகலலோகங்க

ளையுஞ் சிருஷ்டிக்கப்பட்டவன் இவன் என்னுடைய சிருஷ்டியிலகப்ப
ட்ட சீஷனென்றுசொல்ல,

அதுகேட்டு அந்த அஷ்டமுகப் பிர்ம்மாவுஞ்சிரித்து ஓய்பிரஷ்டர்
களே நீயோபிர்ம்மா அதுபொய்வார்த்தை நானேபிர்ம்மா நங்களிருவரு
ம் என்னுடைய சீஷர்களென்று தர்க்கித்துக்கொண்டிருக்கையில்அவிடத்
திலும் அந்தக்காற்றுண்டாகிவந்து எங்கள் மூன்றுபேரையும் அடித்துக்
கொண்டுபோய்வேறொரு அண்டத்தில்விட்டது- அவிடத்தில்பதினாறு
முகமுள்ள பிர்ம்மாவானவர்சகலதேவர்களுடனும் சிம்மாதனத்தின்மே
ரில்கொலுவாயிருந்தார்- அந்தபிர்ம்மாவானவர்எங்கள் மூன்றுபேரையு
ம்பார்த்துஇதேது ஆச்சர்யகரமாயிருக்கின்றது நீங்களார்விந்தையாயி
ருக்கிறீர்கள் உங்களில் ஒருவர்எட்டுத்தலையாகவும்ஒருவன்நாலு தலையாக
வும்ஒருவன் சந்நியாசியாகவு மிருக்கிறீர்கள் நீங்கள் என்சிருஷ்டிக்குள
கப்படவில்லையே நீங்கள்யாவரென்றுகேட்கஅதுகேட்டுஅஷ்டமுகப்பி
ர்ம்மாவும்அவரைப்பார்த்து ஐயாநான் அஷ்டமுகப்பிர்ம்மா நான்சகல
லோகங்களுக்குஞ் சிருஷ்டிகர்த்தா அந்தமூன்றுபேரும் என்னுடையசீ
ஷர்களென்றுசொல்ல அதுகேட்டு அந்தப்பதினாறுமுகப் பிர்ம்மாவுஞ்
சிரித்துநீங்களோபிர்ம்மாக்கள்அதுபொய்வார்த்தைநானே சகலலோகங்
களுக்குஞ்சிருஷ்டிகர்த்தாவாகிய பிர்ம்மா என்னைப்பார்க்கிலும் வேறே
ஒருபிர்ம்மாவில்லை நீங்களெல்லாரும் என்னுடையசீஷர்களென்று வாதி
த்துக்கொண்டிருக்கையில் அவிடத்திலும் அந்தக்காற்றுண்டாகி எங்க
ளைந்துபேரையும் அடித்துக்கொண்டுபோய்வேறொருஅண்டத்தில்விட்
டதுஅவிடத்தில்-அறுபத்துநான்குதலையுள்ளபிர்ம்மாவாயிருந்து அவரு
ம்-அப்படியேசொன்னார்-அவிடத்திலும் அந்தக்காற்றுண்டாகிவந்து எ
ங்கள்ஆறுபேரையும் அடித்துக்கொண்டுபோய்வேறொரு அண்டத்தில்
விட்டது, அவிடத்தில் நூற்றிருபத்துநாலு தலையுள்ள பிர்ம்மா விருந்
துஅவருமப்படியேசொன்னார் அவிடத்திலும்அந்தக்காற்றுண்டாகி எ
ங்கள்ஏழுபேரையும் அடித்துக்கொண்டுபோய் வேறொரு அண்டத்தில்
விட்டதுஅவிடத்தில் இருநூற்றைம்பதுதலையுள்ளபிர்ம்மாவிருந்து அவ
ருமப்படியேசொன்னார் அவிடத்திலும் அந்தக்காற்றுண்டாகி எங்கள்
எட்டுபேரையும்அடித்துக்கொண்டுபோய்வேறொருஅண்டத்தில்விட்ட
து-அவிடத்தில் ஐந்நூறுமுகப்பிர்ம்மாவிருந்து அவருமப்படியேசொ
ன்னார்-அவிடத்திலு மந்தக்காற்றுண்டாகி எங்கள்ஒன்பதுபேரையு மடி
த்துக்கொண்டுபோய் வேறொருஅண்டத்தில்விட்டதுஅவிடத்தில்ஆயி
ரமுகப்பிர்ம்மாவானவர்நவரத்திநமயமானசிம்மாசனத்தின்மேரில்கொ
லுவாயிருந்துக்கொண்டுமுப்பத்துமுக்கோடிதேவர்களும் நாற்பத்தெ
ண்ணாயிரம் ரிஷிகளும் தன்னைச்சேவித்து நிற்கவும் நாலுவேதங்களும்
ஆறுசாஸ்திரங்களும் புருஷரூபமாகநின்றுசேவித்துநிற்கவும்மகாசம்பி
ரமத்துடனேயிருந்துஎங்கள்ஒன்பதுபேரையும்பார்த்துநீங்கள்யாவர்நீ
ங்கள் இவிடத்திற்கு ஏன்வந்தீர்கள் உங்களைஇதுவரையிலும் நான் கண்

டதில்லையே நீங்கள்என்னவேண்டி வந்தீர்களென்றுகேட்க அவரைப்பா ர்த்து அந்தஎட்டுபேர்களுஞ்சிரித்து ஐயா எங்களுடைய கெர்வத்தினால் நாங்கள்இத்தனை தூரம்வந்தோம் நீர்தானே லோககர்த்தாவாகியபிர்ம்மா நீர்தானே சகல லோகங்களையும் சகல சராசரங்களையும் உண்டாக்கின வரென்றுகேட்க அதுகேட்டு அவரும்சிரித்து அந்தஎட்டுப்பேர்களையு ம்பார்த்து ஓய்புண்ணியபுருஷர்களே இந்தலோகத்திற்கு நீங்களுங்கர்த் தர்களல்ல நானுங்கர்த்தாவல்ல உங்களுக்கும்எனக்கும் கர்த்தாவாகிய ப ரமேஸ்வரரானவர் தன்னுடைய லிலாவிபூதியில் சகல அண்டங்களையு ம்உண்டாக்கினர்.

அவருடைய ஆக்கினையினால் நான்இந்தலோகங்களையெல்லாம் நிர் மாணம்பண்ணி சகலலோகங்களையும் திருஷ்டித்தேன்அந்தஅகிலாண்ட கோடி பிர்ம்மாண்டநாயகரான பராபரவஸ்துவாகிய ஸ்ரீமந் நாராயண மூர்த்தியே சகலதேவர்களுக்கும் சகலலோகங்களுக்கும் சகலராஜாக்க ளுக்குங்கர்த்தன் அவருடைய திருவிளையாட்டி னிமித்தமாய் நீங்களும் நானும் இந்தஅண்டங்களைச்சிருஷ்டிக்குங் கர்த்தர்களானோமென்று சொ ல்லஅதுகேட்டு எட்டுப்பேர்களுஞ்சந்தோஷிப்பட்டு ஆயிரமுகப்பிர்ம் மாவுக்குத் தெண்டனிட்டார்கள் அதுகண்டு அவருமவர்களையெடுத்து மார்போடுதழுவிக்கொண்டு அவர்களுக்குத்தகுந்தவெகுமானங்கொடுத் தனுப்பினர் அப்பொழுது அந்தக்காற்றுண்டாகி எல்லாரையுமடித்துக் கொண்டுவந்து அவரவர்களுடைய அண்டத்தில் அவரவர்களைவிட்டுவிட் டென்னையும் இவிடத்திற்கொண்டுவந்து சேர்த்தது -கேட்டாயோஅர்ச் சுனா-அந்தஸ்ரீமந்நாராயணமூர்த்தியான பகவான் இதோ உங்களிடத்தி ற்சதாகாலமுமிருந்து உங்களை ரக்ஷித்துக்கொண் டிருக்கின்றாரென்று சொல்ல அதுகேட்டு அர்ச்சுனராஜனுஞ் சந்தோஷித்தனாய் அந்தப்ப கவானைப்பார்த்து அநேகவிதமாகக் கொண்டாடினான் - அதின்பிறகு கி ருஷ்ணார்ச்சுனர்களிருவரும் அந்தப்பகதலப்பிரீய மூனீந்திரருக்கு நம ஸ்காரஞ்செய்து ஐயா முனிநாதா தேவரீர் பெரியவராகையால்தர்மபுத் திரர்செய்கிறயாகத்திற்கு வரவேண்டுமென்று வேண்டிக்கொள்ள அது கேட்டு அந்த முனீஸ்வரருஞ்சந்தோஷிப்பட்டு அப்படியே வருகிறே மென்றுசொல்ல அப்பொழுது ஸ்ரீகிருஷ்ணார்ச்சுனர்கள் அந்த முனி நாதனையுந்தேரின்மேரி லெழுந்தருளச்செய்துபின்பு சந்திரகாசன் மு தலான ஐந்துராஜாக்களையும் ஏற்றிக்கொண்டுதாரகனை எச்சரித்தமாத்தி ரத்தில்தாரகனும் அந்தரதத்தை ஆகாசமார்க்கமாய் நடத்திக்கிழக்குச முத்திரக்கரையோரமாய்க்கொண்டுவந்துநிறுத்தினன்.

அப்பொழுது கிருஷ்ணார்ச்சுனர்களும் பகதலப்பிரீயமுனீந்திரரு ம்மற்றஐந்துராசாக்களும் அந்தரதத்தை விட்டிழிந்து தங்கள் தங்கள் ரதத்திலேறிக்கொண்டார்கள் - அப்பால் கிருஷ்ணபகவானும் தாரகனை எச்சரிக்கைபண்ணி அந்தரதத்தை தவைரநகத்திற்குக்கொண்டுபோம்ப டி கட்டளையிட்டருளினர் அப்பொழுது அர்ச்சுனனும் அஸ்வமேத

க்குதிரைகளைவிட்டு அதுகளின்பிறகே கிருஷ்ணபகவான் முதலான சே
னைகளுடனே ரதாரூடனாய் யுத்தசன்னத்தனாய்ப் புறப்பட்டுபதினெட்
டுவகை மேளவாத்தியங்களுந் தாம்தாமென்று முழங்கத்தக்கதாகமகாவு
ச்சாகத்துடனே நடந்தான் - அப்பால்- அந்தக்குதிரைகளானது சிந்து
தேசத்திற்குச் சமீபமாகநடந்துபோகையில் அங்கிருந்தவேவுகாரர்கள்
கண்டு அதிவேகமாகப்போய் அந்தச்சிந்துதேசத்தைப் பரிபாலனம்ப
ண்ணுகின்ற சயிந்தவன் குமாரனைக்கண்டு தெண்டனிட்டுஜயாராஜேந்தி
ரா - நம்முடையபட்டணத்திற்குச் சமீபத்தில் இரண்டுஅஸ்வமேதக்கு
திரைகள் வருகின்றது அதுகளின்பிறகே அஸ்திநபுரத்தை யாளுகின்
ற தர்மநந்தனருடைய தம்பியாகிய வீராதிவீரனான அர்ச்சுன மகாராஜ
னானவர் கிருஷ்ணபகவானுடனும் சகலசேனைகளுடனும் மகாஆடம்பர
த்துடனே யுத்தசன்னத்தராய்ப் புறப்பட்டுவருகிறாரென்றுசொல்ல-அ
ந்தவசனங்கேட்டமாத்திரத்தில் விருதசந்திரனுந் திகிற்பட்டுஐயோ- அ
ந்தஅர்ச்சுனராஜன் நம்முடைய தகப்பனைக் கபடத்தினாற் கொல்றவனா
ச்சுதே அப்படி நம்மையுங்கொல்லுவானேநாமென்னசெய்வோமென்
றுமகாபயப்பிராந்தனாய், நடுநடுங்கி அந்தச்சபையிலேதானே சிம்மாச
னத்திலிருந்துதொப்பென்று பூமியில்விழுந்து காலும் கையும்உதைத்
துக்கொண்டுகண்கள்சுழலமிட வாயை ஆவென்று திறந்து சாக்கூந்த
லிபோட்டு, அந்நேரமேபிராணனை விட்டான் - அப்பொழுது அந்தச்ச
பையிலிருந்தவர்களெல்லாரும் பயந்து மகாதுக்காக்கிராந்தர்களாய் விச
னப்பட்டழுதார்கள்.

அதுசேதியை அந்தப்புறத்திலிருந்தஅவன்தாயாராகிய துர்ச்சேலை
யென்பவள் கேள்விப்பட்டு, கோவென்றசத்தத்துடனேஅழுதுகொண்
டோடிவந்து கொலுமண்டபத்திற்சேர்ந்து குமாரனைப்பார்த்து ஐயோ
மகனேயென்றுவாயிலறைந்துகொண்டு புத்திரன்பேரில்விழுந்து மூர்ச்
சையாய்க்கிடந்து மறுபடியும் இரண்டுநாழிகை சென்றபிறகு அங்கிரு
ந்த மந்திரிகள்செய்த சயித்தியவுபசாரங்களினால் மூர்ச்சைதெளிந்து தி
ரும்பவும் புரண்டுபுரண்டழுது ஓய்குமாரகா, நீஎன்னநினைந்து சிவனை
விட்டாய் நீ எங்கேபோனாய்எங்கேயடங்கினாய்நீஎன்னைவிட்டுஒண்டியா
ய்ப்போனாயோ நான் உன்தகப்பனிறந்துபோனதிற்குஉன்னைப்பார்த்
து அந்ததுக்கத்தைவிட்டுச் சந்தோஷமாயிருந்தேன் அந்தச்சந்தோஷ
த்தையெல்லாம் எங்கேபோக்கடித்தாயென்று அநேகவிதமாகப்புலம்பி
பிற்பாடு மந்திரிமார்கள்சொன்ன உபசார வசனங்களில் சற்றே மனந்
தெளிந்து அர்ச்சுனராஜன் வருகிறவிர்த்தாந்தத்தைக்கேள்விப்பட்டுஅந்
தசபையைவிட்டுத்திக்கென்றெழுந்திருந்து பட்டணத்திற்குவெளியே
போய்அஸ்வமேதக்குதிரைகளின்பின்னாகவருகிற அர்ச்சுனராஜனைக்கண்
டுகண்ணீராறாய்ப்பெருக அழுதுக்கொண்டுவந்துஅர்ச்சுனனுடைய பா
தத்தில்விழுந்துபுத்திரசோபம் பொறுக்கமாட்டாமல்வெகுவாகப்பிரலா
பித்து அர்ச்சுனனைப்பார்த்து ஓய்அண்ணே- வீராதிவீரா, சுபத்திரைம

நோகரா, என்னுடைய துக்கத்தை என்னவென்று சொல்லுவேன் நீங்கள் வருகிற சேதியைக்கேட்டு என்குமாரனானவன் கொலுமண்டபத்தில் தானே மகா பயத்துடனே தகப்பனைக்கொன்றவர் தன்னையுங்கொல்வாரென்று நினைந்து சீவனைவிட்டான்-இனி எனக்கு வேறே ஒருதிக்கில்லை நான் அநாதையாய் நின்றேன் தேவரீரால் என்புருஷனானவன் பாரதயுத்தத்தில் அநியாயமாய் மடிந்துபோனபின்பு அந்த துக்கத்தையெல்லாம் இந்தபுத்திரனைப்பார்த்து நிவர்த்திசெய்து சந்தோஷமாயிருந்தேன் அந்தச்சந்தோஷமெல்லாம் இன்றோடேயடங்கிப்போய்விட்டது நான் இனி என்னவென்று நிர்வாகம்பண்ணுவேன் பூர்வத்தில் என்புருஷனானவன் உங்களுடனே கூடியிராமல் அநியாயபாதகர்களான சகுனி துரியோதனாதிகளுடனே கூடி யிருந்தபடியினால் நான் அமங்கலியாய் நின்றேன் அந்த துக்கத்தையெல்லாம் நிவிர்த்திபண்ணி உங்களையே கோரிக்கொண்டிருந்தேன் அப்படியிருக்க எனக்கு இப்படிப்பட்ட ஆபத்துகள்வந்து சம்பவித்த காரணமென்ன ஓய் அண்ணே பரமதயாளா என்னைக் காப்பாற்றும் இறந்துபோன சந்தபனென்கிற ஒரு பிராமணப் பிள்ளையை பன்னிரண்டு வருஷத்தின்பிறகு அழைப்பித்துக்கொடுத்த மகானுபாவராகிய கிருஷ்ணபகவான் உமக்குமைத்துனராகையால் அதுபோல என்பிள்ளையையும் பிழைக்கப்பண்ணி எனக்குப் புத்திரபிச்சைகொடுத்து ரட்சிக்கவேண்டும் அண்ணேயென்று அநேகவிதமாகப் பிரலாபித்து அழுகிற போது அந்த அர்ச்சுனனுந் தன்காலில் விழுந்தழுகிற தங்கையாகிய துர்ச்சேலையென்பவளை எடுத்து உட்காரவைத்து தன்னுடைய உத்தரீயத் தொங்கலினால் அவளுடைய கண்ணீரைத்துடைத்து ஓய் தங்காய், நீ அழவேண்டாம் உன்னுடைய குமாரனை நான் இறந்துபோகச் சொன்னேனோ நானென்னசெய்குவேன் அவனுக்குப் பிரமனுடையசெயல் அப்படியிருந்தது அப்படிப்பட்ட வீராதிவீரனாகியபிள்ளையைப் பெற்றாய் இப்போதும் நீ பயப்படவேண்டாம் நமக்கெல்லாங்காரண கர்த்தாவாயிருக்கின்ற கிருஷ்ணபகவானிடத்திற்போய் சரணமடைந்தால் அவர் உன்னுடைய துக்கத்தைத்தீர்த்து ரட்சிப்பாரென்று சொல்ல, அதுகேட்டு அந்த துர்ச்சேலையும் துக்கநீங்கி அப்படியே செய்கிறேனென்று கிருஷ்ணபகவானிடத்திற்போய் அந்தபகவானுக்குப் பிரதட்சண நமஸ்காரங்கள்பண்ணி கைக்கட்டிக்கொண்டுநின்று அந்தநாதனைப்பார்த்து ஓய் ஐயா, அநாதையா யிருக்கிறவர்களைக்காப்பாற்றி ரட்சிக்கின்றது தேவரீருடையகடமையாதலால் என்னைரட்சியும்ரட்சியும் பூர்வகாலத்தில் ஆதிமூலமேயென்று முறையிட்ட கஜேந்திராழ்வானைக் காத்துரட்சித்த புண்ணியபுருஷா, கபடநாடக சூஸ்த்ராவதாரீ, கோபாலகிருஷ்ணா, என்னை ரட்சியும் என்னுடைய கோரிக்கையைநிறைவேற்றும் தேவரீரால் சக்கியமாகாதகாரியம் ஒன்றுண்டோ முன்பு அஸ்வத்தாமனுடைய பாணாக்கினியினால் வெந்துநீறாய்ப்போன உத்தரையினுடைய கெர்ப்பத்தை நிறுத்திப் பரீக்ஷித்தைரட்சித்த மகாபுருஷர் நீரல்லவோ உம்முடைய மகிமை

யைப் பிரம்மாதி தேவர்களாலும் அறியக்கூடாதே இப்போது என்னு
டைய குமாரனைப் பிழைக்கப்பண்ணி ரக்ஷியும் சுவாமியென்றுஅநேக
விதமாகத் தோத்திரம்பண்ணுகின்ற துர்ச்சலையைப்பார்த்து அந்தப
கவானுஞ்சிரித்து ஓய் துர்ச்சலை நீயேன்வியசனப்படுகிறாய் நீ அழ
வேண்டாம் நீ அப்படிப்பட்ட ரணரங்கதுரந்தரனான வீராதிவீரனைப்
பெற்றாய் உனக்கு என்னகுறையிருக்கின்றது நீமகா சவுரியபராக்கிரம
சாலியான அர்ச்சுனனுடைய தங்கையல்லவா உனக்கு ஒருநாளும் தாழ்
வுவராதென்று சிறிதுபரிகாச வார்த்தைகளாகப் பேசிக்கொண்டு அந்த
பகவானானவர் அர்ச்சுனன்முதலான ராஜாக்களுடனும் சதுரங்கபலசே
னைகளுடனும் நடந்துவந்து சிந்துதேசத்துக் கோட்டைவாசலிற்சேர்ந்
து சகலசேனைகளையும் அவிடத்தில்தானே நிறுத்திவிட்டு அர்ச்சுனனையு
ம் சந்திராசன்முதலானசிறிதுதுரைகளையும் தம்மோடழைத்துக்கொ
ண்டு துர்ச்சலையானவள் பின்னே நடந்துவர அந்ததேவனும் அரண்
மனைக்குள் நுழைந்துபோய் ஆஸ்த்தானமண்டபத்திற்சேர்ந்துசிம்மாச
னத்தின்மேல் விழுந்துகிடக்கிற பிள்ளையைப்பார்த்து அந்தப் பகவா
ன்சிரித்துத் தம்முடைய வலதுகையாகிய தாமரையினால் அந்தப் பிள்
ளையினுடைய பாதாதிகேசபரியந்தம் தடவிக்கொடுத்தருளினார் - அப்
போது அந்தப்பிள்ளையும் அவருடைய அனுக்கிரகத்தினால் நித்திரைப
ண்ணியெழுந்தவன்போல் எழுந்து உட்கார்ந்து தன்னண்டையிலிருக்கி
ற கிருஷ்ணார்ச்சுனர்களைக்கண்டு திக்கென்றெழுந்திருந்து அவர்களுக்
குப் பிரதக்ஷண நமஸ்க்காரங்கள்பண்ணி அர்க்கியபாத்திய முதலான உ
பசாரங்களினால் அந்த நரநாராயணர்களைப் பூஜித்து அநேகவிதமாகத்
தோத்திரம்பண்ணினான்- அதுகண்டு கிருஷ்ணார்ச்சுனர்களிருவரும் சந்
தோஷப்பட்டு அந்தப் பிள்ளையையெடுத்துமார்போடு தழுவிக்கொண்
டுஆசீர்வாதம்பண்ணி பிற்பாடுகிருஷ்ணார்ச்சுனர்கள் சகலராஜாக்களுடனு
ம்சகலசேனைகளுடனும் அந்தபட்டணத்தில் மூன்றுநாளிருந்து பிறகு
நாலாநாள்காலமே கிருஷ்ணபகவானுடைய அனுமதியின்பேரில் அஸ்வ
மேதக்குதிரைகளைவிட்டுஅதுகளின் பிறகே அர்ச்சுனனும் கிருஷ்ணமூ
ர்த்திசமேதனாய் ரதாரூடனாய்ப் புறப்பட்டு சயிந்தவனுடைய குமார
னையும் துர்ச்சலையையு மழைத்துக்கொண்டு சகல துராதுரைகளுட
னும்சதுரங்கபலசேனைகளுடனும் பதினெட்டுவகை மேளவாத்தியங்க
ளும் தாம்தாமென்று முழங்கத்தக்கதாக மகா ஆடம்பரத்துடனே நட
ந்தான்.

கேட்டீரோ ஜெனமேஜெய மஹா ராசாவே, அப்பால்அந்தக் குதி
ரைகளானது எழாரவங்களுடனே நடந்து சிந்துதேசத்தைவிட்டு அப்
புறம் சிறிதுசீர்மைபூமிகள் கடந்து அஸ்த்தினாபுரத்திற்கு நேராய்த்தி
ரும்பினது அப்போது அர்ச்சுனராஜனும் சகலசேனா சமுத்திரங்களுட
னே அந்தக்குதிரைகளின்பின்னாகநடந்து அஸ்தினாபுரத்திற்குச்சமீபமா
கவருகையிலதுகண்டுகிருஷ்ணபகவானும், ஆலோசனைசெய்து அர்ச்சுன

னைப்பார்த்து ஓய்கிரீட்டி, இனிமேல் தர்மபுத்திரர்செய்கிற யாகத்திற்கு ஒருவிக்கினமுமில்லை இந்தமட்டுக்கும் தர்மபுத்திரர் யாகதீக்ஷையைவகித்துக்கொண்டு குதிரையைவிட்டு ஒருவருஷமாச்சுது சித்திராபர்வமும் சமீபித்திருக்கின்றது உங்கள்தமையனாகிய தர்மநந்தனருடையதர்மகுணத்தினாலும் உன்னுடைய புஜபலபராக்கிரமத்தினாலும்இந்தராசாக்களுடைய சகாயத்தினாலும்அஸ்வமேதக்குதிரையானது ஒருதடையுமில்லாமல்நேராய்வந்துசேர்ந்தது-இந்தப்பகதலப்பிரீய முனீந்திரனைக்கண்டபுண்ணியம்இவ்வளவவ்வளவென்றுசொல்லிமுடியாதுஅதுவல்லாமனும்மகாபராக்கிரமசாலிகளானமகுடாதிபதிகளையெல்லாம் வணங்கப்பண்ணிக்கொண்டாய் உன்னுடைய சவுரியபராக்கிரமத்தை என்னவென்று சொல்லுவேனென்று கிருஷ்ணபகவான்சொல்லஅதுகேட்டர்ச்சுனனும் புன்சிரிப்பாகச்சிரித்துஅந்தமூர்த்தியைப்பார்த்து ஓய்ஜகத்ரக்ஷகா, தேவரீரடியேனைப்பரிகாசம்பண்ணுகிறீர் என்னாலொருகாரியமுநடக்கவில்லை சகலமுந்தேவரீருடைய அனுக்கிரகத்தினால் இந்தமட்டும் நடந்தேறிவந்தது-இனிமேலுந் தேவரீரையல்லாமலணுவளவு மசையமாட்டாதேன்றுசொல்ல அதுகேட்டுஅந்தநாதனுஞ் சந்தோஷமாகி அர்ச்சுனனைப்பார்த்து ஓய்கிரீட்டி, இப்போதுநாம்நம்முடையபட்டணத்தைச்சேரவந்தோமல்லவோ,நம்முடையதண்டிலே அநேகம் வீராதிவீரர்களானமகுடவர்த்தனர்கள் வருகின்றார்கள்-ஆகையினால் நான் அஸ்தினாபுரத்திற்குப்போய்தர்மபுத்திரனைக்கண்டு இவிடத்துச்சங்கதிகளெல்லாம்தெரியப்படச்சொல்லி மறுபடியும்இந்தராசாக்களுக்கு எதிராக வரவேண்டுமாதலால் நான்முன்னதாகப்போகிறேன் நீயும்இந்தராஜ கூட்டங்களுமாய் இந்தச்சேனைகளுடனே கூடிக்கொண்டுமெள்ளமெள்ள நடந்து நாளையதினம் அஸ்தினாபுரத்திற்குவந்து சேருங்கோளென்றுசொல்லி அர்ச்சுனனிடத்திற் செலவுபெற்றுக்கொண்டுஅந்தபகவானுந்தனியேபுறப்பட்டுரதத்தின்பேரிலேறிக்கொண்டு நடந்தருளினார்.

அப்பால் அர்ச்சுனராசனானவன் அஸ்வமேதக் குதிரைகளுடனும் ராஜவர்க்கங்களுடனும் பகதலப்பிரீய முனீந்திரருடனும் சகலசேனாசமேதனாய்நடந்து அஸ்தினாபுரத்திற்குச்சமீபத்திலிருக்கிற ஒரு சிங்காரவனத்தினிடமாகவந்து தண்டுவிட்டிறங்கினான். அப்பொழுதுசூரியபகவானும்மேற்குத்திசையில்அஸ்தமானமாகினார் அங்கே ஸ்ரீகிருஷ்ணபகவானும்அதிவேகமாகநடந்துஅஸ்தினாபுரஞ்சேர்ந்து யாகமண்டபத்தில் யாகதீக்ஷையைவகித்துக்கொண்டிருக்கிறதர்ம்மபுத்திரனைக்கண்டு சாஷ்டாங்கமாகத்தெண்டனிட்டருளினார் அதுகண்டுதர்ம்மபுத்திரரும்சந்தோஷிதராய்அந்தபகவானையெடுத்து மார்போடுதழுவி ஆலிங்கனம்பண்ணிக்கொண்டு வெகுவாய் உபசரித்து அந்ததேவனைஒரு(நவரத்தின)சிங்காசனத்தின்பேரில்உட்காரவைத்துக்கொண்டுஅவரைப்பார்த்துஓய்கிருஷ்ணா,சுவாமீ உம்மைக்கண்டுநெடுநாளாச்சுதே நீர் சகலகாரியங்களையும் ஜெயம்பண்ணிக்கொண்டு வந்தீரோ சித்திராபர்வமுஞ் சமீபித்திருக்கி

ன்றமேதே அர்ச்சுனன் எங்கேயிருக்கிறான் குதிரை எங்கே யிருக்கின்றது
தேவரீர்மாத்திரம் தனித்துவந்தகாரணமென்ன அதைச்சொல்லுமையா
வென்றுகேட்க, அதுகேட்டுஅந்தபகவானும் தர்மநந்தனனைப்பார்த்து
ஐயா- தர்ம்மநந்தனஅர்ச்சுனனானவன் இரண்டுஅஸ்வமேதக்குதிரைகளு
டனும் வீராதிவீரர்களான அநேகமகுடமண்டலீகர்களுடனும் சகல
சேனைமேதனாய் நமதுபட்டணத்திற்குச் சமீபமாகயிருக்கின்ற சிங்கா
ரவனத்தில் தண்டுவிட்டிறங்கி யிருக்கிறான் உம்முடைய பாக்கியத்தை
நானென்னவென்று அளவுபடுத்துச் சொல்லுவேன் நீர்நினைத்தகாரியம்
முடியாமற்போகுமோ உமக்குப் பலசாலிகளான வீமார்ச்சுனர்களிரு
க்கும்போது என்னகுறையிருக்கிறதென்றுசொல்லி பின்னையும் அந்
தராஜனைப்பார்த்து ஐயா நாளையதினம் நாம்சிறிதுபேருடனே நடந்து
போய் அர்ச்சுனராஜனுடனே வருகிற ராஜாக்களையெல்லாம் எதிர்கொ
ண்டு அழைத்து வரவேண்டுமென்றுசொல்ல அதுகேட்டு தர்ம்மபுத்
திரரும்அதிகசந்தோஷத்துடனே ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியைப்பார்த்து ஐ
யா-கோபாலசூடாமணி தேவரீர்எனக்கு அபயாஸ்தங்கொடுத்துரட்சி
க்கிறேனென்று கங்கணங் கட்டிக்கொண்டிருக்கும்போது எனக்கு என்
னகுறையிருக்கின்றது சகலமுங் காலமே பேசிக்கொள்ளலாம் இப்பொ
ழுது ஆலசியமாயிராமல் அந்தப்புரத்திற்குப் போமென்றுசொல்ல அ
துகேட்டு கிருஷ்ணமூர்த்தியும், அப்படியே அந்தப்புரத்திற்குப் போ
ய் அத்தையாராகிய குந்திதேவியைக்கண்டு தெண்டனிட்டு தாம்போய்
வந்தசெய்திகளெல்லாஞ் சவிஸ்த்தாரமாகச்சொல்லி அங்கிருந்துவந்து தி
ரௌபதையையும் சுபத்திரா தேவியையுங்கண்டு அவர்களிடத்திலுஞ்
சொல்லிவிட்டு அப்பால் தம்முடைய அரண்மனைக்குப்போய் தமது
தாயாகிய தேவகிதேவியாரையும் அசோதை யம்மையாரையுங்கண்டு
அவர்களுக்குநமஸ்க்காரம்பண்ணி அவர்களிடத்திலும் தாம்போய் வந்த
சேதிகளைச்சொல்லி சற்றுநேரம் பேசிக்கொண்டிருந்து பிற்பாடு ருக்
மணி-சத்தியபாமை-முதலான ஸ்த்திரீகளையும்ஆதரணைபண்ணி அதின்
பிறகு ஸ்நானஞ்செய்து சந்தியானுஷ்டான ஜபதபங்களையும் முடித்துக்
கொண்டு அந்தப்புரத்திற்குப்போய் மகா சம்பிரமத்துடனே ஷட்சு
வைபதார்த்தவகைகளோடும் போஜனம்பண்ணி எழுந்திருந்து கைகா
ல் சுத்திபண்ணிக்கொண்டு கர்ப்பூரதாம்பூலந்தரித்துக்கொண்டு சுகந்த
புஷ்ப பரிமளாதிகளை யணிந்துக்கொண்டு சந்தோஷகரமாய் சிறிதுநே
ரம் சேளிக்கைவிநோதங்கள் பார்த்துக்கொண்டிருந்து பிற்பாடு பள்ளி
யறைக்குப்போய் புஷ்பசரங்களினு லலங்கரித்திராநின்ற சப்பிரகூடம
ஞ்சத்தின்பேரில் பவளித்துக்கொண்டு-ருக்மணி-சத்தியபாமை - இவர்க
ளிருவரும் பாதம்பிடிக்கவும்,மற்ற ஸ்த்திரீகளெல்லாரும் வெண்சாமரை-
ஆலவட்டம்-மயில்விசிறி முதலானதுகளைக் கையிலேந்திக்கொண்டு அ
னந்தவித சயித்திய உபசாரங்கள்செய்யவும், அந்தபகவானானவர் இப்

படிப்பட்ட வைபவத்துடனே பரமயோக நித்திரைசெய்தருளினர்.

அதிலே சற்றுநேரத்தில் சூரியபகவானும், கீழ்த்திசையில்உதைய மாகினர். அதுகண்டு தடாகங்களிலுள்ள தாமரைகளெல்லா மலர்ந்தது- சகல சீவராசிகளுக்கும் ஆனந்தமுண்டாச்சுது- அதற்குமுன்னமே கிருஷ்ணபகவானும், நித்திரைதெளிந்தெழுந்திருந்து காலோஜித காரியமான நித்தியகர்ம்மானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு போசனகிர்த்தியங்களையுந் தீர்த்துக்கொண்டு அரண்மனையைவிட்டுப் புறப்பட்டுவந்து தம்பிமார்களுடனும், மந்திரிமார்களுடனும், பிரதானிகளுடனும்-மகுடவர்த்தனர்களுடனும்-குருக்கள்மார்களுடனும்-கொலுமண்டபத்தில்(நவரத்திந)கஜிதமானசிம்மாசனத்தின்பேரில்கொலுவாயிருக்கின்றதர்ம்மபுத்திர மஹாராசாவைக்கண்டுதெண்டனிட்டு அவருடையஆசீர்வாதத்தைக்கைக்கொண்டு அவர்போடுவித்த ரத்திநசிம்மாசனத்தின்பேரிலுட்கார்ந்து அந்ததர்ம்மபுத்திரரைப்பார்த்து ஐயா, தர்ம்மநந்தனு, நமது அஸ்வமேதக் குதிரைகளானது இந்நேரம் நம்முடையபட்டணத்திற்குச்சமீபமாகவருமே அதுகளின்பிறகே அர்ச்சுனனும் மற்றுமுண்டான மகுடமண்டலாதிபர்களும், வருகின்றார்களே நாமுஞ் சிறிதுபேர்களுடனே எதிர்கொண்டுபோய் அவர்களையெல்லாம் அழைத்துக்கொண்டு வரவேண்டியிருக்கின்றதே அதற்கு ஆலோசனைசெய்து எவர்களை அனுப்பவேண்டுமோ அவர்களை அனுப்பிவையுமென்றுசொல்ல, அதுகேட்டு, தர்ம்மநந்தனருஞ்சிரித்து கபடநாடக சூஸ்த்ராவதாரியான கிருஷ்ணபகவானைப்பார்த்து அநேகவிதமாகத் தோத்திரம்பண்ணி அவரைக்கொண்டாடி. ஓய்சுவாமீ, பூதேவிநாயகா, தேவரீர்லோகநடனஞ்செய்கிறீரோஉம்மைப்பார்க்கிலும்ஆப்த்தானவர்கள் நமக்குஆரிருக்கின்றார்கள்எங்களுக்குமைத்துனரும், சிநேகிதரும், ஆப்த்தரும், ஆசாரியரும், தெய்வமும், தேவரீரேயாகையால், நீரெஙகள்பேரில்கிருபைவைத்துவீமசேனன், நகுலன், விதுரன், சஞ்சயன், கிருபாசாரி, இவர்களையும் உம்முடனேகூட அழைத்துக்கொண்டுபோய் அர்ச்சுனன்முதலான அந்தராசாக்களையெல்லாம் அழைத்துக்கொண்டு வாருமையாவென்று அநேகவித உபசாரமாகச்சொல்ல, அதுகேட்டுஅந்தபகவானுஞ்சந்தோஷகரமாய்அந்தச்சபையைவிட்டெழுந்திருந்து தர்மபுத்திரர் உத்தாரப்படி வீமசேனன் முதலானவர்களைப் பிரயாணப்படுத்தி அவர்களையெல்லாந்தம்முடனேகூட ரதாரூடர்களா யழைத்துக்கொண்டு தாமும் ரதாரூடராய் சிறிது சேனைகளுடனே பதினெட்டுவகை மேளவாத்தியங்களும், தாம்தாமென்று முழங்கத்தக்கதாக அஸ்திநபுரத்தைவிட்டு புறப்பட்டு நடந்து அப்பால்சிறிது தூரம்போகையில் தங்களுக்கெதிராய்வருகிறஅர்ச்சுனராஜன் முதலான சகல ராஜவர்க்கங்களையும், சேனைகளையுங்கண்டு ஒருவர்க்கொருவர் தழுவிக்கொண்டு யோகக்ஷேமங்களை விசாரித்துக்கொண்டு மகா சந்தோஷகரமாய் இரண்டுசேனைகளும் ஒன்றாகக்கூடிக்கொண்டு மகாவைபவத்துடனே நல்லசுபமுகூர்த்தவேளையில் அஸ்திநபுரத்திற்குட்புகுந்துசத்த

சமுத்திரங்களும் புரண்டுவந்ததுபோல சதுரங்கபல சேனைகளுடனும் நடக்கின்றவேகத்தினால் எழும்புகின்ற பாததூளிகள் ஆகாசமுழுதும்ப ரவி சூரியனை மறைக்கும்படியாக நடந்து பட்டணத்துவீதியில் வருகிற போது அவிடத்திலிருக்கப்பட்ட பிராமணஸ்திரீகள்- ராஜஸ்திரீகள்முத லானவர்களெல்லாம் தங்கள்தங்கள் உப்பரிகையின்பேரிலும் - மேடை யின்பேரிலும் - திண்ணையின்பேரிலும்- தலைவாசற்படியிலும்-இருந்து கொண்டு மங்களவாழ்த்துகள்பாடிக்கொண்டு அநேகமாயிரந்தங்கத்தட் டுகளில் முத்தாலாத்தி-பவழாலாத்தி ரத்தினாலாத்தி-கர்ப்பூராலாத்தி-முத லானதுகளைக் கையிலேந்திக்கொண்டுஅர்ச்சுனனைப் பார்த்து ஆ-வீராதி வீரா- ஆ- வீரபராக்கிரமா- ஆ- புண்ணியபுருஷா -ஆ-சுபத்திரைமநோ கரா, எனக்குளஎந்தத்திசையிலும் ஜெயம்பொருந்தக்கடவது உன்னுடை ய கீர்த்திப்பிரதாபந் திரிலோகங்களும் பிரகாசிக்கக்கடவதென்று ஆசீர் வாதம்பண்ணி சகலதிருஷ்டிகளும் சகலதோஷங்களும் பரிகாரமாகக்கட வதென்று ஆலாத்திகள் சுற்றி விஷ்வகேதுமுதலானவர்களுக்கும் அப்ப டியேசெய்து அதுகளைக்கொண்டுபோய் பட்டணத்திற்குப் புறம்பாய் எறிந்துவிட்டார்கள்.

இப்படிப்பட்டசம்பிரமத்துடனே அர்ச்சுனராஜனானவன்சகலரா சவர்க்கங்களுடனும் சதுரங்கபலசேனைகளுடனும் பட்டணத்து வீதியி ல் நடந்துபோய் அரண்மனைக்குச் சமீபத்தில்வந்து ரதத்தைவிட்டிழி ந்து விஷ்வகேது பிரத்தியுமனன்முதலானவர்களும்சிறிதுராசாக்களும் கைலாகுகொடுக்கும்படி பாதசாரியாய்நடந்துஆஸ்தானமண்டபத்திற் குவந்து அவிடத்தில்கொலுவாயிருக்கின்றதர்ம்மபுத்திரமஹாராஜாவை க்கண்டு அவருக்குப்பிரதட்சணஞ்செய்து சாஷ்டாங்கநமஸ்க்காரம்பண் ணினன் அதுகண்டு தர்ம்மபுத்திர மஹாராசாவும்சந்தோஷசித்தராய்த ம்பியாகிய அர்ச்சுனனை எடுத்து மார்போடணைத்துக்கொண்டு ஆசீர்வா தம்பண்ணினர் - அப்பால் விஷ்வகேது மேகவர்ணன்முதலானகுமாரர் களெல்லாரும்வந்துபிரதட்சண நமஸ்க்காரம்பண்ணினர்கள் அவர்களையு ம்அப்படியேஎடுத்துமார்போடணைத்துக்கொண்டு ஆசீர்வாதம்பண்ணி னர் - அதன்பின்பு அர்ச்சுனனும்-மேகவர்ணன்-விஷ்வகேது-முதலான வர்களைக்கூட அழைத்துக்கொண்டுஅந்தச்சபையிலிருந்த பெரியோர்க ளைக்கண்டுதெண்டனிட்டு அவர்களுடைய ஆசீர்வாதத்தையும் பெற்று க்கொண்டு அப்பாலந்தப் புரத்துக்குப்போய் குந்திதேவி-காந்தாரி-மு தலானதாய்மார்களுக்குநமஸ்க்காரம்பண்ணி அவர்களுடையஆசீர்வாதத் தையுங் கைக்கொண்டு அப்பால், துரௌபதையையுஞ்-சுபத்திரையையு ங்கண்டு ஆதரணைபண்ணி ருக்குமணி -சத்தியபாமை-முதலான ஸ்திரீஜ னங்களையுங்கண்டு தன்னுடைய யோக க்ஷேமங்களை யெல்லாஞ் சொல் லிக்கொண்டிருந்தான்.

இங்கேவீமசேன மஹாராஜன் அந்தஅஸ்வமேதக்குதிரைகளிரண் டையும்பிடித்துக் குதிரைலாயத்திற் கொண்டுபோய் தங்கச்சங்கிலியினு

ற்கட்டிவைத்துதர்ம்மபுத்திரமஹாராசனிடத்திற்குவந்துசேர்ந்தான். அந்தச்சமயத்தில்பகதலப்பிரீயமுனீஸ்வரரும்அந்தச்சபையில்வந்துசேர்ந்தார்-அப்பொழுதுதர்மபுத்திர மகாராஜாவும் பகதலப்பிரீய முனீந்திரனைக்கண்டுசிம்மாசனத்தைவிட்டுத் திக்கென்றெழுந்திருந்துநாலடிதூரம் நடந்துவந்து அந்தமுனீஸ்வரருக்குப் பிரதட்சண நமஸ்க்காரங்கள் செய்துசர்வஉபசாரத்துடனேஅழைத்துக்கொண்டுபோய் நவரத்நகஜிதமானஒருசிம்மாசனத்தின்பேரில் புலியாசனம்பரப்பிஅதன்பேரில் அந்தமுனிநாதனை யெழுந்தருளப்பண்ணிஅவருக்கர்க்கியபாத்தியமுதலானஉபசாரங்களினால்பூஜைபண்ணிஅவரைப்பார்த்துஅநேகவிதமாகக்கொண்டாடித்தோத்திரம்பண்ணினார்-அப்பொழுதுஸ்ரீகிருஷ்ணபகவானும்-சாத்தகி-கிருதவர்ம்மன்-இவர்களுடனேவந்து தர்மபுத்திரனைக்கண்டுநமஸ்க்காரம்பண்ணிஅவருடையஆசீர்வாதத்தைக் கைக்கொண்டு அந்ததர்ம்மபுத்திரர்தமக்குப்போடுவித்தரத்திநசிம்மாசனத்தின்பேரில்உட்கார்ந்திருந்தார் - அப்பொழுது தர்மபுத்திரரும் பலபத்திரர் முதலான பெரியோர்களுடையவரவுகண்டெழுந்திருந்து அவர்களுக்கும்வந்தனை வழிபாடுகள்செய்து ஆதரணைபண்ணினார்.

அவர்களும் சந்தோஷகரமாய்தர்ம்மபுத்திரர் போடுவித்த சிம்மாசனங்களின்பேரில் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியினுடைய சமீபத்தில்உட்கார்ந்திருந்தார்கள் அப்பொழுது மஹாசத்திய சந்தனர்களான சந்திரகாசன்- வீரவர்ம்மன்- மயூரத்துவஜன்- தாமனாத்துவஜன் முதலானவீராதிவீரர்களெல்லாரும்அந்தச்சபையினிடமாக-தாங்கள்கொண்டுவந்தகாணிக்கை கப்பங்களையெல்லாம் தர்ம்மபுத்திரமஹாராஜாவுக்குமுன்னேவைத்துஒவ்வொருவராய்த்தங்கள் தங்களுடையபெயர்களைச்சொல்லிமகாபயபக்தி விநயத்துடனே அந்ததர்ம்மபுத்திரமஹாராஜாவுக்குப்பிரதட்சணஞ்செய்து சாஷ்டாங்கமாகவிழுந்து தெண்டனிட்டார்கள். அதுகண்டு தர்மநந்தனருஞ் சந்தோஷித்தராய் ஸ்ரீகிருஷ்ணார்ச்சுனர்களைப்புகழ்ந்துகொண்டாடி அந்தராஜாக்களையெல்லாம் எடுத்துமார்போடு தழுவி ஆலிங்கனம்பண்ணிக்கொண்டு அவரவர்களுக்கு வெவ்வேறேரத்திநசிம்மாசனங்கள் போடுவித்து அவர்களையெல்லாம் அதின்பேரில் உட்காரும்படிசொல்ல, அவர்களுமந்தப்படியே கிருஷ்ணபகவானுக்குச் சமீபத்தில்உட்கார்ந்தார்கள்.

அப்பொழுதுப்பிரவாசன்-சயிந்தவன்குமாரன் -இவர்களிருவரும்வந்து நகுலச்சாதேவர்களைக்கண்டு தெண்டனிட்டு பலராமருக்கு நமஸ்க்காரம்பண்ணிஅந்தப்புரத்திலிருக்கின்ற தாய்மாருக்கும்பாட்டியாருக்கும்நமஸ்க்காரம்பண்ணிஅவர்களுடைய ஆசீர்வாதங்களையுங் கைக்கொண்டு மறுபடியுங் கொலுமண்டபத்திற்குவந்து உட்கார்ந்தார்கள், அப்பொழுதுகபடநாடகசூஸ்த்திராவதாரியான கிருஷ்ணபகவானனவர்அந்தமகாசபையிலுள்ள, சகலஜனங்களுங் கேட்கும்படி அவிடத்திலிருக்கின்றவிசித்திரவீரியன்குமாரனை திருதராஷ்டிரனைப்பார்த்து ஓய் திரு

துராஷ்டிர பூபாலகா அதோயிருக்கின்றவர்சாக்ஷாத்விஷ்ணு அம்சையி லுற்பிறந்தவர் - தர்ம்மசொரூபர்-சத்தியசந்தனர்- அகண்டிதவீரபராக்கி ரமர்-திவ்வியகுணசுந்தரர்அவர்தான் குந்தலதேசத்தைப் பரிபாலனஞ் செய்யப்பட்ட சந்திரகாசமஹாராஜனென்பவர்- அப்பால் அதோயிரு க்கிறவர்-வீராதிவீரர்-சத்தியசொரூபர்-எமதர்ம்மராசனுக்குத்தம்முடை யகுமாரத்தியைக்கலியாணம் பண்ணிக்கொடுத்துக் கீர்த்திப்பிரதாபம் பெற்றவர்தர்ம்மத்தினால் தேவர்களையெல்லாம் மெய்ப்பித்தவர்-அஷ்டா யிஸ்வரிய சம்பன்னர்-மகாதானவினோதர் -விஷ்ணுபக்த்தர்-அவர்தான்ச ரஸ்வதிபுரத்தைப் பரிபாலனம்பண்ணுகின்ற வீரவர்ம்மமஹாராஜனெ ன்பவர்- அப்பால்அதோயிருக்கின்றவர்சதாகாலமுந்தானதர்ம்மங்களைச் செய்யப்பட்டவர்-புத்திரபவுத்திர களத்திராதிகளான பிரதாபத்தை யு டையவர் - தான்யாகஞ்செய்ய நினைத்து பூமிப்பிரதக்ஷணஞ் செய்துவ ந்தஅஸ்வமேதக்குதிரையைத்தர்ம்மபுத்திரருக்குக்காணிக்கையாகக்கொ டுத்தவர் - எனக்குப் பாதிசரீரத்தைத்தானமாகக்கொடுக்கநினைத்து பெ ண்சாதிபிள்ளையினுடைய கையினால் கண்டபரியந்தம் அறுப்புண்டு ம ஹாகீர்த்திப் பிரதிஷ்டையைப் பெற்ற மகானுபாவர்- விஷ்ணுபக்தி யிலுயர்ந்தவர்-விஷ்ணுபூஜாதுரந்தரர்- சகலபோக பாக்கியங்களையுமு டையவர் - அவர்தான் ரத்தினபுரத்தைப் பரிபாலனம் பண்ணுகின்ற மயூரத்துவச மஹாராசனென்பவர்-அப்பால்அதோயிருக்கின்றவர் வீரா திவீரர்-மயூரத்துவச மஹாராஜாவினுடைய குமாரர்-சத்துருபயங்கரர்- சாம்பவமூர்த்திக்குச் சரியானபராக்கிரமமுள்ளவர்- எங்களுடைய குதி ரையைப்பிடித்துக்கட்டிவிட்டு எங்களுடைய சேனைகளை யெல்லாஞ் சின்னபின்னப்படுத்தி அர்ச்சுனனையும் நன்றாய்ப்பூசைபண்ணி எங்க ளிருவரையும் பூமியில்மூர்ச்சையாய் விழத்தள்ளி அஸ்வமேதக் குதி ரையைப்பிடித்துக்கொண்டு பட்டணத்திற்குப்போனபிறகு நாங்களும் கபடப்பிராமண வேஷங்கொண்டுபோய்அந்தராசனைக்கண்டோம்-அப் படிப்பட்ட மஹாபுருஷனாகிய தாமிரத்துவசனென்பவர். அப்பால தோயிருக்கிறவர் மஹாபலசாலி -வீராதிவீரன் -அகண்டிதவீரபராக்கிர மன்-பொறுமையும்-பூததயாளமும்-சத்தியமுமுள்ளவன் - சவுரியத்தி ல்தேவேந்திராதி தேவர்க்களையெல்லாம் மெய்ப்பித்தவன் -பிதாவாகிய அர்ச்சுனனையும் ரணக்களத்தில் ஜெயித்துதிரும்பவும்நாகலோகத்திற்கு ப்போய் ஆதிசேஷனுடையசேனைகளையெல்லாஞ்சின்னபின்னப்படுத்தி அவனது கெர்வத்தையடக்கிஅவனிடத்திலிருந்தமிருதசஞ்சீவிரத்தினத் தையும்- அமிர்தகலசத்தையும்வாங்கிக்கொண்டுவந்து அர்ச்சுனன்- விஷ வகேதுமுதலான வீரர்களையெல்லாம் பிழைக்கப்பண்ணுவித்த ரணரங் கசூரன்-அந்த அர்ச்சுனனுக்கு வந்த ஆபத்து இந்தப்புத்திரனால் வந்த தல்லகங்காதேவியினுடைய சாபத்தினால் அப்படிசம்பவித்தது- தகப் பனைப்பார்க்கிலும் வில்வித்தையில் அதிகமானவன் - பாண்டியராசனு க்குப்பேரன் - சித்திராங்கதையினுடையகுமாரன் - அவன்தான் மணி

புரத்தைப்பரிபாலனம் பண்ணுகின்றபப்பிரவாகனென்பவன் -அப்பால்அதோயிருக்கின்றவர் விஷ்ணுபக்தாக்கிரேஸ்வரன்- மகாதானவிநோதர்-சவுந்தரியத்தினால் மன்மதனைப்பழித்தவர் - பொறுமையினால்பூமிதேவியைவென்றவர் - சத்தியத்தினால்ஸ்ரீராமனைப்பார்க்கிலும்அதிகமானவர்-ஜனரக்ஷணையில்-ருக்குமாங்கதனைப்பழித்தவர்-இவர்தான் சம்பகாபுரத்தைப்பரிபாலனம் பண்ணுகின்ற அம்சத்துவசமகாராஜனென்பவவர். நான்அவருடைய பாக்கியத்தைஎன்னவென்றுவர்ணித்துச்சொல்லுவேன்.—அஃதெதன்னவென்றால் அவருடைய புத்திரர்களாகிய சுதர்ம்மனும்சுதர்த்தனும் மஹாவீராதிவீரர்களாய் நின்று சண்டைசெய்து அர்ச்சுனனுடைய சேனைகளையெல்லாங் கண்டதுண்டம்பண்ணி என்னையும்அர்ச்சுனனையும் நன்றாய்ப்பூசைபண்ணிகடைசியில்இரண்டுபேரும் மடிந்துபோனார்கள்,

அதில்சுதர்ம்மனுடைய சிரசானது சூரியபகவானுடனே அபின்னமாகக்கலந்துவிட்டது சுதர்த்தனுடையசிரசானது ஸ்ரீகயிலாசபதியான சாம்பவமூர்த்தியினுடைய மார்பிலணிந்திரா நின்ற சிரமாலிகைக்கு நடுநாயகமாகிவிட்டது அப்படிப்பட்டசுபுத்திரர்களைப் பெற்றுக்கீர்த்திப்பிரதாபம்பெற்றவர் அப்பால்நீலத்துவசன்முதலானசகலமானராசாக்களையும் அந்தப்படியே அவரவர்களுடைய சவுரியபராக்கிரமங்களையும்-பேரையும்ஊரையும்வெவ்வேறாகப்பிரித்துச்சொல்லி அந்தச்சபையினிடத்தில் எழுந்தருளியிருக்கின்ற பகதலப்பிரீயமுனீந்திரரைப்பார்த்து அவரையுமந்தத்திருதராஷ்டிரனுக்குநன்றாய்க்காண்பித்துஓய்ஐயாதிருதராஷ்டிரபூபாலகா அதோஎழுந்தருளியிருக்கின்ற முனீஸ்வரருடையமகிமையைப் பிர்ம்மாதிதேவர்களாலும் அளவிட்டுச்சொல்லிமுடியாது அவர் மகாபெரியவர் அநேகநாளாய்ஸ்ரீமந்நாராயணமூர்த்தியை நோக்கித்தபசுசெய்துக்கொண்டிருக்கிறவர் இருபதுபிர்ம்மாக்கள் பிறந்து இறந்துபோனதையுங் கண்களாற்பார்த்துக் கொண்டிருந்தவர்-காமம் - குரோதம்-லோபம்-மோகம்-மதம்-மாச்சரியமென்கிற ஆறுபகைகளையும்வென்றவர்-மெய் - வாய்-கண் - மூக்குச்-செவியென்னும் பஞ்சேந்திரியங்களையும்-நிக்கிரகம் பண்ணினவர்- ஆதிமூலமாகிய பராபரவஸ்துவை இருதயகமலமாகிய மனையில் சதாகாலமுங் குடியாகவைத்துக் கொண்டுபோஷிக்கப்பட்டவர்-திவ்வியமங்களவிக்கிரகபராக்கிரமமுடையவர்- நிர்ம்மலமானமனதையுடையவர்-அப்படிப்பட்டமகத்துவமுள்ள இந்தபகதலப்பிரீயமுனீந்திரரானவர் தர்மபுத்திரருடைய பாக்கியத்தினாலும்நாமெல்லாரும் பண்ணினபுண்ணியவசத்தினாலும், இவிடத்திற்கு எழுந்தருளியிருக்கிறார்.

இனிமேல்தர்ம்மநந்தனர் செய்யப்போகிறயாகத்திற்கு ஒருகுறைவுமில்லையென்று சொல்லி, பின்னையுமந்தத் திருதராஷ்டிரனைப்பார்த்து ஐயா-ராஜேந்திரா, அதோயிருக்கின்றவன் இப்போதுநாம்சொல்லிக்கொண்டுவந்த ராஜாக்களுடைய புஜபலத்திலும் சவுரியபராக்கிரமத்திலும்த

யிரியத்திலும் குணாதிசயத்திலும்மிஞ்சினவனாய்சத்துருபயங்கரனாய்-ரணரங்கசூரனாய் அம்நகயுத்தங்களிற் கைகண்டவனாய், மகாபலசாலியாயிருக்கப்பட்டவன் அவன்உம்முடைய குமாரத்தியான துர்ச்சேலையினுடையகுமாரன் உமக்கும்பேரன்- அவன்தான் சிந்துதேசத்தைப் பரிபாலனம்பண்ணுகின்ற விருதசந்திர னென்பவன் அவனைப் பார்த்தீரோவென்றுபரிகாசவார்த்தையாகச்சொல்லி, அந்தப்பகவான்நகைத்தருளினார்.— அந்தவார்த்தையைக்கேட்டு அர்ச்சுனராஜனுமற்றுமுண்டானமகாராஜாக்களுங் கலீலென்று நகைத்தார்கள்.— அதுகண்டு திருதராஷ்டிரனுஞ்சம்சயப்பட்டு, கிருஷ்ணபகவானைப்பார்த்து ஐயா அதையெனக்குநன்றாய்த்தெரியச்சொல்லுமென்றுகேட்க- அதற்கந்தபகவானும்நகைத்துஅவனுடைய சேதிகளெல்லாஞ் சவிஸ்தாரமாகச்சொல்லியருளினார். அதுகேட்டு திருதராஷ்டிரன் தர்ம்மபுத்திரர் முதலானவர்களுஞ் சம்சயந்தீர்ந்து சந்தோஷமடைந்தார்கள். — அப்போது சாயங்காலவேளையானபடியினால் தர்ம்மராஜாவானவர் கிருஷ்ணபகவானுடனும், தம்பிமார்களுடனும், சந்திரகாசன்முதலான ராஜாக்களுடனும் எழுந்திருந்து போய், சந்த்யானுஷ்டானஜபதபங்களை முடித்துக்கொண்டு திரும்பவுங்கொலுமண்டபத்திற்குவந்து சிம்மாசனத்தின்மேலி லுட்கார்ந்து ஆடல்பாடல்முதலான கேளிக்கைபார்த்து சந்தோஷப் பட்டுக்கொண்டு சூரியாஸ்தமான பத்துநாழிகைமட்டும் சகலசேனைகளுடனும் பொழுதுபோக்கிக்கொண்டிருந்து பிற்பாடு தர்ம்மபுத்திரமஹாராஜாவானவர்கொலுமண்டபத்தைவிட் டெழுந்திருந்து அரண்மனைக்குப்போய் கிருஷ்ணபகவானுடனும் தம்பிமார்களுடனும் சந்திரகாசன் முதலான ராஜவர்க்கங்களுடனும் உட்கார்ந்து ஷட்சுவைபதார்த்த வகைகளுடனே நல்ல திவ்விய போஜனம்பண்ணி கைகாலலம்பிக்கொண்டு அவரவர்களுக்குத்தகுந்த முறைமைப்படி கர்ப்பூரதாம்பூலமும் சுகந்தபரிமளாதிகளுங் கொடுத்து நடப்பித்து தாமும் தாம்பூலந்தரித்துக்கொண்டு அதின்பிறகு கிருஷ்ணபகவான் சந்திரகாசன் முதலானவர்களுக்கெல்லாம் வெவ்வேறவிடுதிகளமர்த்திவைத்து அவரவர்களைப்போய் சயனித்துக்கொள்ளும்படிசெல்வுகொடுத் தனுப்பிவிட்டு தாமும் தம்முடைய பள்ளியறைக்குப்போய் சயனித்துக்கொண்டார் உடனே சூரியபகவானும் கிழக்குத்திசையில் உதயமாகினார்.

அதற்குமுன்னமே தர்ம்மபுத்திரரும் நித்திரைதெளிந்தெழுந்திருந்து காலோசிதகாரியமான நித்தியகர்ம்மானுஷ்டானஜபதபங்களை முடித்துக்கொண்டுபோஜனகிர்த்தியத்தையுந் தீர்த்துக்கொண்டு சர்வாலங்காரபூஜிதராய் தம்பிமார்களெல்லாரும் பக்கத்தில்நின்று சேவிக்கவும்-மந்திரிகள் பிரதானிகள் சூழ்ந்துவரவும், வித்துவான்கள்புகழ்ந்து கொண்டாடவும், பொற்பிரம்புக்காரர்கள்பராமரிக்கைப்பண்ணவும், இப்படிப்பட்டசம்பிரமத்துடனே கொலுமண்டபத்திற்குவந்துநவரத்திநகஜிதமான சிம்மாசனத்தின்மேலி லுட்கார்ந்து கொலுவாயிருந்தார். அப்போது

திருதராஷ்டிரனும்- சஞ்சயனும்-விதுரனும்வந்து தர்ம்மபுத்திரருடைய ஆதரணையைப்பெற்றொருபுறத்தி லுட்கார்ந்திருந்தார்கள்- கிருஷ்ணபக வானும்அவருடையகுமாரர்களும்வந்து தர்ம்மபுத்திரருக்குநமஸ்க்காரம் பண்ணி அர்ச்சுனராஜனுடைய சமீபத்திலுட்கார்ந்திருந்தார்கள். பப்பி ரவாகன்-விஷ்வகேது- மேகவர்ணன்- இவர்களெல்லாரும்வந்து பிதாக்க ளுக்கு நமஸ்க்காரம்பண்ணிகிருஷ்ணமூர்த்தியையுஞ்சேவித்து ஒருபுற த்திலுட்கார்ந்தார்கள்- சந்திரகாசன்- வீரவர்ம்மன்- மயூரத்துவசன்- தாம ரைத்துவசன்-அம்சத்துவசன்- எவ்வர்ணசுவன்-அனுசாலுவன்-நீலத்துவ சன் முதலான ராஜாக்களெல்லாரும் தங்கள் தங்கள் விருதுகளுடனும் மந்திரிபிரதானிகளுடனும் வந்து கிருஷ்ணபகவான் தர்ம்மபுத்திரர்திரு தராஷ்டிரன் இவர்களுக்கு நமஸ்க்காரங்கள் பண்ணி தங்களுக்குப்போம் வித்த ஆசனத்தின்மேரில் தர்ம்மராஜாவைச்சூழ்ந்துஉட்கார்ந்திருந்தார் கள். அப்போது பரமபவித்திராகிய பகதல்ப்பிரீயமுனீந்திரானவர் அந்தக்கொலுமண்டபத்திற்கு எழுந்தருளிவந்தார். அதுகண்டு அங்கிரு ந்த ஸ்ரீகிருஷ்ணபகவான் தர்ம்மபுத்திரர் முதலானராஜாக்களெல்லாருந் திக்கென்றெழுந்திருந்து மகாபயபக்த்தி விசுவாசத்துடனே நாலடிதூ ரம் எதிர்கொண்டுபோய் அவருக்குவந்தனைவழிபாடுகள்செய்து-அவரை அழைத்துக்கொண்டுவந்து பொற்பீடத்திலெழுந்தருளச்செய்து அந்த முனீஸ்வரரை அர்க்கியபாத்தியமுதலான உபசாரங்களினால் பூஜித்து ம கா சந்தோஷாரமாய் அவரவர்களுடைய சிம்மாசனத்தின்மேரி லுட் கார்ந்திருந்தார்கள். அப்போது மகாரிஷிகளாகிய பிர்ம்மரிஷிகளும்- தேவரிஷிகளும்-ராஜரிஷிகளும்-தபோதனர்களும் அந்தக் கொலுமண் டபத்திற்குவந்தார்கள் - அவர்கள்யாவரென்றால் (வியாசமுனிவர்- நாரத முனிவர் பர்வதரிஷி- மார்க்கண்டேயர்-வான்மீகமுனிவர் -காலவாகனர்- வர்ச்சமுண்டாகவுசிகர்-பராசர்- உத்திரியர்-வசிஷ்டபகவான்-விஸ்வாமித் திரர்-கௌதமர் - வியாக்கிரமபாதர்-ஜமதக்கினிரிஷி-பரத்துவாசக்கவுண சர்-வித்திரோயர்-சவுபரிமுனீந்திரர்- பிருகுமகாரிஷி- உத்தாலகர் - சாலி கேந்திரர்-வாமதேவர்-ஆங்கிரசர்-மதங்கர்)முதலான மகாரிஷிகளும், இன் னம் மற்றுமுண்டான பிர்ம்மரிஷிகளும்-தேவரிஷிகளும்-ராஜரிஷிகளும்- அதுவல்லாமல்வாய்வுபக்ஷணிகர்களாகியும்சருகுஜலபக்ஷணிகர்களாகியும் பஞ்சாக்கினிமத்தியினின்று அகோரதவஞ்செய்கின்ற மகாத்துமாக்களா கியும் விளங்கப்பட்ட முனீஸ்வரர்களும், கூட்டமாகக்கூடி எழுந்தருளி வந்ததுகண்டு தர்மபுத்திரரானவர் சந்தோஷமடைந்து ஸ்ரீகிருஷ்ணபக வானுடனும், தம்பிமார்களுடனும், மந்திரி பிரதானிகளுடனும், விதுர சஞ்சயர்களுடனும், சிம்மாசனத்தைவிட்டுத் திடுக்கிட் டெழுந்திருந்து அந்த ரிஷிகணங்களுக்குஎதிர்கொண்டுபோய்அவர்களுக்குப்பிரதக்ஷண நமஸ்க்காரங்கள்பண்ணிஅவர்களை அழைத்துக்கொண்டுவந்துநவரத்தின சிம்மாசனங்கள் போடுவித்து அதுகளின்மேரில் அவர்களையெல்லாம் எழுந்தருளும்படி தர்ம்மபுத்திரரும்,பயபக்த்திவிநயத்துடனேகைகளை

க்கட்டிக்கொண்டு நின்று அவர்களைப்பார்த்துவிண்ணப்பஞ் செய்தார். அதுகண்டு வியாசபகவான் முதலான ரிஷிகணங்களெல்லாரும் சந்தோஷிப்பட்டு, தர்ம்மபுத்திரருடைய குணாதிசயத்தையும், பக்த்திவிசுவாசத்தையும் பிரபாவத்தையும் வர்ணித்துக்கொண்டு அவிடத்தில்அதற்குமுன்னமேவந்து எழுந்தருளி வீற்றிருக்கின்ற பகதலப்பிரீயமுனீந்திரனைக்கண்டு அந்த ரிஷிகணங்களெல்லாரும்அவருக்குப்பிரதக்ஷண நமஸ்க்காரங்கள்பண்ணி சந்தோஷித்தார்களாய் அந்த முனீஸ்வரருடைய உத்தரவின்பேரில் தங்கள் தங்களுடைய ஆசனத்தின்பேரி லெழுந்தருளியிருந்தார்கள் (கேட்டீரோ ஜெனமேஜெயமஹாராசாவே) அப்பால், தர்ம்மபுத்திரரானவர் வியாசபகவானைப்பார்த்து-ஐயா, முனிநாதா, அடியேன் செய்த புண்ணியவசத்தினால் தேவரீர், சகலமான ரிஷிகளுடனும் எழுந்தருளிவந்திருக்கிறீர் தேவரீருடைய உத்தாரப்படிக்கு அஸ்வமேதக்குதிரையும் பூமிப்பிரதக்ஷணஞ்செய்துவந்துசேர்ந்தது- ஆகையால், இனிதாமசப்படுத்தாமல் என்னுடையகையினால் இந்தயாகத்தை நிறைவேற்றிவையும் சுவாமீயென்று விண்ணப்பஞ்செய்ய அதுகேட்டு வியாசபகவானுஞ் சந்தோஷிப்பட்டு தர்ம்மபுத்திரரைப்பார்த்து ஓய் தர்ம்மநந்தனா, இதுவரையில் நீர் நினைத்தகருமங்களெல்லாம்உம்முடைய தர்ம்மகுணத்தினால் நடந்தேறிவந்ததேயல்லாமல் மற்றொருவராலும் நடந்தேறவில்லை ஆகையால், இதற்குமேலும் ஒருதாழ்வில்லை இனிசாங்கமாகயாகத்தைச்செய்யுமென்று சொல்லி அந்த வியாசபகவானானவர் தாமெழுந்தருளியிருந்த ஆசனத்தைவிட்டெழுந்திருந்து வசிஷ்டர்முதலான ரிஷிகணங்களுடனும் சந்திரசர்சன்முதலான ராஜகூட்டங்களுடனும் தர்ம்மபுத்திரர்-வீமார்ச்சுன நகுலசகாதேவர்களுடனும் - ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியாருடனும்-பகதலப்பிரீய முனீந்திரருடனும்-அந்தக் கொலுமண்டபத்தைவிட்டுப்புறப்பட்டு நடந்து யாகசாலையிற்பிரவேசித்து ரிஷிகணங்கள்முதலானசகலமானபேர்களையும் உட்காரும்படி உத்தாரம்பண்ணி தாமும் ஒருதர்ப்பாசனத்தின்பேரில்உட்கார்ந்துக்கொண்டு அங்கிருந்த ஏவலாளர்களால் அந்தயாகசாலையை நவரத்தினங்களில் அலங்காரம்பண்ணுவித்து முத்துகளாலும்-பவழங்களாலும்- கோலங்களிடுவித்து தங்கத்தினாற்செய்த வாழைமரங்களைநிறுத்திவித்து காராம்பசுவின் சாணத்தினாலும்-பூமியைமெழுகப்பண்ணி நிலக்கண்ணாடிகள் கட்டுவித்து கர்ப்பூரதீபங்கள்ஏற்றுவித்து இப்படிசர்வாலங்காரமுஞ்செய்வித்து பின்பு யாகத்திற்குவேண்டிய சமித்துமுதலான ஓமவஸ்த்துக்களெல்லாம்-வீமன்-அர்ச்சுனன்-விதுரன்-சஞ்சயன்-இவர்கள்கையினால் அழைப்பித்துக்கொண்டு அதின்பிறகு தர்ம்மபுத்திரருக்குந்- துரௌபதாதேவிக்கும்-ஸ்நானம்பண்ணுவிப்பதற்கு கங்காதீர்த்தம் வேண்டுமேயென்றுவசிஷ்டபகவானுடனும்-பகதலப்பிரீயமுனீந்திரருடனும்-ஆலோசனைசெய்துஅங்கிருந்தவர்களில் அறுபதுதொம்பதிகளையேற்படுத்தி அறுபத்து

நாலுவெள்ளையானைகளின்பேரிலேறிக்கொண்டு தங்கக்குடங்களையெடுத்
துக்கொண்டுபோய் கங்காதீர்த்தங்கொண்டுவரும்படி வியாசபகவான்
உத்தாரம்பண்ணியருளினார்.

அந்தத்தொம்பதிகள் ஆரானென்றால்,(ஸ்ரீகிருஷ்ணபகவானும்-ருக்
மணிதேவியும்-அர்ச்சுனராசனும்-சுபத்திராதேவியும்-வீமசேனனும்-நீ
லவர்ணன்தேவியும்-பிரத்தியுமனனும்-ரதிதேவியும்-பலபத்திரரும்-தே
வகிதேவியாரும்-விஷ்வகேதுவும்-மதனமஞ்சரியும்- எவ்வர்ணசுவனும்-
பிரபாவதியும்-அம்சத்துவசனும்-கோகிலாதேவியும்-மயூரத்துவசனும்-
குமுத்துவதிதேவியும்-வீரவர்ம்மனும்-குயில்மொழியாளும்-சந்திரகாச
னும்-சண்பகாவதியும்-ஆங்கீரசமுனிவரும்-அனுசுயாதேவியும் - வசிஷ்
டபகவானும்-அருந்ததியும்) இப்படி அறுபத்துநான்குதொம்பதிகளும்
புறப்பட்டு அவரவர்கள்கையில் தங்கக்குடங்களையேந்திக்கொண்டு- வெ
ள்ளையானையின்மேலேறிக்கொண்டுபோய் கங்கைக்கரையிற்சேர்ந்து ஆ
னைகளைவிட்டிறிந்து ஒவ்வொருத்தராய் அவரவர்களுடைய பத்தினிமா
ர்களுடனே நதியில்ஸ்நானம்பண்ணி ஜபதபங்களை முடித்துக்கொ
ண்டு சூரியபகவானுக்குஅர்க்கியங்கொடுத்து தங்களுடைய நேமநிஷ்
டைகள்முடிந்தபின்பு தங்கக்குடங்களில் அந்தகங்காஜலத்தைப் பூரண
மாகமுகந்துகொண்டு கரைமேல்வந்து திரும்பவும் அவரவர்களுடைய
யானைகளின்பேரில்ஏறிக்கொண்டுஅஸ்த்தினாபுரத்தைநோக்கிப்புறப்பட்
டுநாகசுரம்-பின்ளாங்குழல்-வேணுநாதம்-சங்கீதமேளமுதலானபதினெ
ட்டுவிதவாத்தியங்களும், வெண்கலப்பேரிகை, ஜெயபேரிகை, தவள
முரசு முதலானவைகளும் அண்ட கடாகங்களெல்லாம் அதிரத்தக்க
தாக தாம்தாமென்று முழங்கவும் சந்திரவம்சத் தலைவராகிய தருமபுத்
திரமகாராசாவானவர் அஸ்வமேதயாகம் பண்ணப்போகிறாரென்றுதிரு
ச்சின்னம்பணிமாறவும்-தேவதாஸ்திரீகளிலும் அதிக சவுந்தரியத்தையு
டையநாடகப்பெண்கள்பரதநாட்டியம்பண்ணிக்கொண்டுவரவும்-சிறிது
பெண்கள் வெண்சாமரை-மயில்விசிறி- ஆலவட்டமுதலானதுகளை யெ
டுத்துஉபசாரம்பண்ணிக்கொண்டுவரவும்-பாட்டகர்கள்புகழ்ந்துகொண்
டாடவும், பதிவிரதாஸ்திரீகளெல்லாம் மங்களங்கள்பாடிக்கொண்டு கந்
தபுஷ்ப அக்ஷதைகளை வாரியிறைத்து ஆசீர்வாதம்பண்ணவும்-இப்படிப்
பட்ட வைபவத்துடனே அந்தத் தொம்பதிகளெல்லாரும் யாகசாலைக்கு
ச்சமீபமாக நெருங்கிவரும்போது கேட்டீரோ (ஜெனமேஜெய பூபால
கா) அந்த வைபவங்களையெல்லாம் நாரதமுனிவர்கண்டு மனம்பொறாத
வராய் விசனமடைந்து நமக்கு நாரதக்கலகப்பிரியாவென்றுபேர்வைத்
திருக்க நாம் சும்மாயிருக்கலாமோ நமக்கு இந்த வைபத்தினால்வருகிற
பிரயோசனமென்ன கலகமுண்டானால் சந்தோஷமாயிருக்கும் இவிடத்
தில் கலகம்பண்ணலாமென்றால் ஒருசந்துமில்லையே இதற்கு என்னசெ
ய்யலாமென்று சற்றுநேரம் தனக்குத்தானே ஆலோசனைபண்ணி உட
னே அதற்குயோசனைபிரிந்து மகாசந்தோஷமாய்சிரித்தமுகத்துடனே

அந்த யாகசாலையைவிட்டுப்புறப்பட்டு கிருஷ்ணபகவானுடைய அரண்மனைக்குள் நுழைந்து சத்தியபாமையினுடைய வீட்டினிடத்திற்போய் நின்றார் அதுகண்டு சத்தியபாமையுந்திடுக்கிட்டெழுந்திருந்து மகாபய பக்தி விசுவாசத்துடனே அந்த முனிவருக்கு எதிராகவந்து தெண்டனிட்டு அவரை அழைத்துக்கொண்டுபோய் ஒரு (நவரத்ந) பீடம்போட்டுவித்து அதின்பேரில் அந்த நாரதமுனிவரை எழுந்தருளப்பண்ணி அவருக்கு அர்க்கியபாத்திய முதலானவைகளால் பூஜைபண்ணி பிரதக்ஷணநமஸ்காரஞ்செய்து அநேகவிதமாகத் தோத்திரம்பண்ணிக்கொண்டு எதிரே நின்றாள்-அதுகண்டு நாரதருஞ் சத்தியபாமையைப்பார்த்து ஓ சத்தியபாமா, நீ பூர்வகாலத்தில் என்னுடனே ஒரு ரகசியவசனஞ் சொல்லியிருந்தாயே அதை இப்போது சோதித்தறியலாமென்றுவந்தேன் அஃதென்னவென்று கேட்பாயானால்,

என்புருஷனான கிருஷ்ணபகவான் என்பேரில் பிரியமாயிருக்கிறார் என்னைவிட்டுவிட்டு எவர்களிடத்திலு மிருக்கமாட்டார் எந்தக்காரியங்களுக்கும் என்னையே அழைத்துக்கொண்டுபோவார் க்ஷணப்பொழுதாகிலும் என்னைவிட்டுப் பிரியமாட்டார் இந்தப் பதினாறாயிரத் தொருநூற்றிரண்டு ஸ்திரீகளிடத்தில்வைத்திருக்கின்றஇஷ்டத்திலும் என்னிடத்தில் அதிகஇஷ்டம்வைத்திருக்கிறார் அல்லும்பகலும் அறுபதுநாழிகையும், என்னிடத்தில்தானே வாசமாயிருக்கின்றாரென்று சொல்லியிருந்தாயல்லவோ அந்தவார்த்தையை இதுவரையிலும் மெய்தானென்றெண்ணியிருந்தேன் அது இன்றையத்தினம் பொய்யாகிவிட்டதுஇப்படிப்பட்ட பொய்வார்த்தையைப் பெரியோர்களிடத்திற் சொல்லலாமோவென்றுசொல்ல, அதுகேட்டு சத்தியபாமையும், நாரதமுனிவரைப்பார்த்து ஐயா, பிரம்மகுமாரா, இப்போது தேவரீர்சொன்ன வார்த்தையெல்லாம் மெய்தான். அதற்குச் சம்சயமென்ன நான் ஒருநாளும்பொய்சொல்லுகிறதில்லையென்று மறுபடியுஞ்சொல்ல, அதற்கந்தநாரதரும் சத்தியபாமையைப்பார்த்து ஓய் அம்மா, பாக்கியவதீ, நான்திருஷ்டாந்தமாய்ப் பார்த்துவந்திருக்கும்போதே இப்படி இரட்டித்துச்சொன்னால் உன்னுடையசொல்லை எப்படி நம்புகிறது உன்பேச்செல்லாம் அபத்தந்தான் அதெப்படியென்றால், தர்மபுத்திரருக்கும் துரௌபதாதேவிக்கும் ஸ்நானம்பண்ணுவிக்கும்பொருட்டு வியாசமுனிவரானவர் அறுபத்திநாலு தொம்பதிகளை ஏற்படுத்தி அவர்களெல்லாம் ஒவ்வொரு தங்கக்குடங்களை யெடுத்துக்கொண்டு வெள்ளையானையின்பேரி லேறிக்கொண்டுபோய் கங்காதீர்த்தங் கொண்டுவரும்படி கட்டளையிட்டனுப்பினார்.

அதிலே உன் புருஷனாகிய ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியையும், ஒருவராய் ஏற்படுத்தினபடியால் அவரும்ருக்குமணிதேவியாருடனேமகாசந்தோஷகரமாய் வெள்ளையானையின்பேரி லேறிக்கொண்டுபோய் அந்தக்கங்காநதியில் இரண்டுபேரும் ஸ்நானம்பண்ணி, நல்ல வஸ்திராபரணங்களையலங்கரித்துக்கொண்டு தங்கக்குடத்தில் தீர்த்தமுகந்துகொண்டு மகா

ஆடம்பரத்துடனே அதோவருகிறார் அவருக்கு உன்பேரில்மோகமுண்
டானால் உன்னையழைத்துக்கொண்டுபோகமாட்டாரோ இதனால் உன்னு
டையஆசையும் அவருடையஆசையும் நன்றாய்த்தெரிந்துவிட்டதுஇப்
படியே அவர் நாள்தோறும்நடந்துவருகிறார் அதுஉனக்குக்கொஞ்சமா
கிலுந் தெரியவில்லை அதைப்பார்த்து வந்ததுமுதல் எனக்கு மனது ப
தைக்கின்றது நல்லது இனிமேலாகிலும் அவர் உன்னிடத்திற்குவந்தால்
கொஞ்சத்தில் விட்டுவிடாமல் அவிடத்திற்குத்தானேபோவென்றுசண்
டைபண்ணுமம்மாவென்று சகாயமாய்ச் சொல்லுகிறவரைப்போல் சல
கப்பிரிய சிகாமணியாகிய நாரதர்சொல்ல, அதுகேட்டு நாரதரைப்பார்த்
து சத்தியபாமையுஞ்சிரித்து ஓய்-ஐயா, நாரதமுனீந்திரா, தேவரீர் என்
னைப் பொய்வார்த்தை சொன்னாயென்றுசொன்னீரல்லவா, நான்ஒருக்கா
லும் பொய்சொல்லுகிறதில்லை. தேவரீர்,பேசுகிறபேச்செல்லாம் அபத்
தம், பெரியோர்கள் பொய்சொல்லுகிறத்தினால் குற்றமில்லைபோலிருக்
கின்றது இப்பொழுது என்புருஷனை ஸ்ரீகிருஷ்ணபகவான்என்சக்களத்
தியாகியருக்குமணிதேவியுடனேமகாசம்பிரமமாய் வெள்ளையானையின்
பேரி லேறிக்கொண்டுபோய் கங்காதீர்த்தங் கொண்டுவருகிறாரென்று
சொன்னீரே இதுநிஜமோ நல்லது உம்முடையவார்த்தை பொய்யென்
றும் என்னுடையவார்த்தை பொய்யென்றுந் தெரிந்துக்கொள்ளலாம்
இப்படிதானே பூர்வத்திலும்,என்னை ஒருதிரம் ஏமாற்றினீர்அப்படிஇப்
போதும் மோசம்பண்ணவந்தீரோ ஆகட்டும்வாருமையாவென்று அந்
த முனீஸ்வரனை உட்கட்டுக்கு அழைத்துக்கொண்டுபோனாளென்றுஜெ
யமுனீந்திரர்சொல்ல, அதுகேட்டு ஜெனமேஜெய மஹாராசனுஞ்சிரித்
து சந்தோஷித்தனாய் அந்த முனீந்திரரைப்பார்த்து, ஓய்-ஐயா, ஜெய
முனீந்திரா,பூர்வத்தில் சத்தியபாமையம்மனை நாரதமுனிவர் என்னமோ
சம்பண்ணினார். அதையும் எனக்குத் தெரியச்சொல்லுமையாவென்று
கேட்க அதற்கு ஜெயமுனீந்திரரும் அந்தராசனைப்பார்த்து ஓய்ராஜேந்
திரா.பூர்வகாலத்தில் துவாரகாபுரியில்சத்தியபாமையம்மையானவள்தன்
புருஷனாகிய கிருஷ்ணபகவான் தன்னிடத்தில்தானே எப்போதுமிருக்
கவேண்டுமென்றுநினைந்து பதினைந்துநாள் மட்டுக்கும் ஒரு நோன்பு
நோற்கும்போது இந்தநாரதமுனிவர் அதற்குப்புரோகிதரா யிருந்து
வேதமந்திரங்களைச்சொல்லி அந்நோன்பை நிறைவேற்றிவைத்த பிறகு
சத்தியபாமையுஞ்சந்தோஷமடைந்து அந்த முனீஸ்வரனுக்குப் பூசை
நமஸ்க்காரங்கள்பண்ணி பிற்பாடு அவரைப்பார்த்துஓய்நாரதமுனீந்திரா
தேவரீர் எனக்குப் புரோகிதராயிருந்து என்னுடையவிரதத்தை விக்கி
னமில்லாமல் நிர்விக்கினமாய் நிறைவேற்றிவைத்தபடியால், அந்தவிரத
பலன்எனக்குச் சித்தியாகும்பொருட்டுஉமக்குத்தக்ஷிணைதாம்பூலங்கொ
டுத்து உம்முடையமனதைச் சந்தோஷப்படுத்தவேண்டும் ஆகையால்
தேவரீருக்கு இஷ்டமானவஸ்துக்களை துவோஅதைக்கேட்டால்தருகிறே
ன்சுவாமீயென்றுசொன்னமாத்திரத்தில் அதுகேட்டு நாரதருஞ்சிரித்து

சற்றுநேரம்ஆலோசித்து இதுவுமொருகாரியத்திற்கு நன்மைதானென்
றுநினைந்து அந்தஅம்மனைப்பார்த்து ஓய்சத்தியபிரஸ்தன்குமாரத்தியா
னசத்தியபாமையே நீ இப்போது கேட்கச்சொன்னபடி எனக்கு இச்
சையானபொருளைக்கேட்பேனாகில் அந்தப்பொருள்எதுவாயிருந்தாலு
ம்மறுதலியாமல் கொடுத்தால்மாத்திரம் உனக்குஅந்தவிரத பலன்சித்தி
யாகும்இல்லாவிட்டால் அபலமாய்ப்போய்விடும்அதுவல்லாமலும்பெ
ரியோர்களுக்குப் பொய்சொன்னஅபசாரமும் வந்துசேரும் அதுதெ
ரியாமல் என்னபொருளைக்கேட்டபோதிலுந் தருகிறேனென்று உன்வா
க்கினாற் சொல்லிவிட்டாயே அந்தப்படியே நான்கேட்டபொருளைத் த
டையில்லாமல் கொடுக்கமாட்டுவாயோவென்றுகேட்க அதற்குச்சத்திய
பாமையுஞ்சிரித்துஓய்-ஐயா-நாரதமுனிவரே-என்னைப்-பூலோகத்துஸ்தி
ரீகளில்-ஒருத்தியாக நினைந்துக்கேட்கிறீரோ அதுவுமல்லாமல்பொய்வா
ர்த்தைசொல்லுகின்றவர்கள் இகபர தூஷணர்களாய் அந்தத்தில் ரவுர
வாதி நரகத்திற் சேருவார்களென்கிற வேதப்பிரமாணத்தைத் தெரியா
திருந்தாலும் உலகத்தில் சாதாரணமாய்ப் பொய்சொன்ன வாய்க்குப்
போசனங்கிடையாதென்று சொல்லிக்கொள்ளுகிற வழக்கச்சொல்லையா
கிலுங் கேட்டிருக்கமாட்டேனோ ஆகையினால் உமக்குவேண்டுமென்ற
பொருளைச்சம்சயப்படாமல் கேளும் சுவாமீயென்று அந்தஅம்மனும்
இவர்எந்தப்பொருளைக்கேட்கப்போகிறார்- பண்டி பண்டாரங்கள்-ரொ
க்கரோசனங்கள் -சீர்மைபூமிகள்- ஆனைகுதிரைகள்-ஸ்திரீஜனங்கள் முத
லானபொருள்களில் எதையாகிலுங்கேட்கப்போகிறார். அதைநாம் கொ
டுக்கமாட்டோமோவென்று லேசாய்நினைத்து நாரதருடையமனக்கருத்
தையறியாமற் சொன்னபோது அதுகேட்டு நாரதபகவானுஞ் சிரித்து
ஓஅம்மா பாக்கியவதீ நீஎனக்கு அபேக்ஷையாகியபொருளைத்தருகிறே
னென்றுவாக்குதத்தம் பண்ணிவிட்டாயல்லவா ஆனால்சொல்லுகிறேன்
அஃதென்னவென்றால் நான்பதினாலுலோகங்களிலும் எந்த வேளையும்
ஓய்வில்லாமல் திரிகிறபடியால்சரீரப்பிரயாச மிகுந்து இரண்டு பாதங்க
ளும்வலிகொண்டு ராத்திரிக்கெல்லாம் நித்திரைவராமல் வருத்தப்படுகி
றேன்ஆகையினால் ஒருசிறுபிள்ளையைச் சீஷனாகச்சம்பாதித்துக்கொண்
டால் ராத்திரிவேளையில் கைகால்பிடித்துக்கொண்டிருப்பானென்றுநெ
டுநாளாய்ப் பூமிமுழுதுந் தேடிக்கொண்டுதிரிகிறேன் எனக்குத்தகுந்
தசீஷன்அகப்படவில்லை அப்படியிருக்கஇப்போது என்னுடையபுண்
ணியவசத்தினால் கேட்டபொருளைத் தருகிறேனென்றுநீவாக்குதத்தம்
பண்ணினையல்லவே ஆதலால் கெட்டிக்காரனாய் பலசாலியாய் திவ்விய
சரீரனாயிருக்கின்ற உன்னுடையபுருஷனாகிய கிருஷ்ணதேவனை நமக்கு
தக்ஷிணையாகக்கொடுமென்றுகேட்க அந்தவார்த்தையைக்கேட்டுச் சத்தி
யபாமையுஞ்சிரித்து ஓய் ஐயா நாரதரே நீர்நல்ல தக்ஷிணைகேட்டீர் அத
ற்கு நான் பின்னிடாமல் உம்முடையகருத்தின்படியே தருகிறேனென்
றுசொல்லிதன்னுடைய பக்கத்திலிருந்த கிருஷ்ணதேவரைப் பார்த்து

ஓய் பிராணநாதா தேவரீரை நாரதருக்குத்தானமாகக்கொடுத்தேன் ஆத லால்நீரும் அவருக்குச்சிஷனாகப்போமென்றுசொல்ல அதுகேட்டுஅந் தக்கபடநாடகசூஸ்த்ராவதாரியும் புன்சிரிப்பாகச்சிரித்துஓய்சத்தியபா மாநான் இந்த நாரதருக்குச் சிஷனாகும்படி நேரிட்டது என்னுடைய புண்ணியவசந்தான் ஆதலால்நான் உன்னுடையசொற்படியே செய்கி றேனென்று அந்தமேதவனும் லோகநாடகந் தப்பிநடக்கக்கூடாதபடியி னாலே அந்தமுனிவருக்குநமஸ்க்காரம்பண்ணிஅவருக்குப்பின்னாகத்தொ டர்ந்துநடக்க அதுகண்டுநாரதரும் தனக்குள்ளேதானே சந்தோஷப் பட்டுக்கொண்டு நமக்கு இப்படிப்பட்டசிஷன் திரிலோகங்களிலுமகப் படமாட்டான்-நமக்குநல்லசிஷன் அகப்பட்டான் - எப்படிப்பட்ட த போதனர்களுக்கும் அகப்படாதபுருஷன் நமக்குஅகப்பட்டானே நம் முடையபாக்கியமேபாக்கியமென்று மகிழ்ச்சியடைந்து தம்முடைய கிருஷ்ணசலம் தண்டுகமண்டலம் ஜபமாலிகை இதுகளையெல்லாஞ் சிஷ னாகியஅந்தகிருஷ்ணமூர்த்தி கையிற்கொடுத்து எடுத்துவரும்படி உத் தாரம்பண்ணி அந்தநாரதரும் நடந்துக்கொண்டிருந்தார்.

அப்பொழுதுசத்தியபாமையும் ஆலோசனைபண்ணி நாமென்ன வேலைசெய்துவிட்டோம் நம்முடையபுருஷனைவிட்டு நாம்எப்படி தனி த்திருப்போம் புருஷனில்லாத பெண்களுக்கு என்னசந்தோஷ மிருக் கின்றது- அந்தநாரதருங் கேளாதபொருளைக்கேட்டார் நாமுங் கொடுத் துவிட்டோம் - சத்தியவசனமுந் தப்பக்கூடாது இதற்குஎன்னசெய்ய லாம்அல்லாமலும் நம்முடைய சக்களத்திகளான பதினாறாயிரத்தொ ரு நூற்றிரண்டுபேர்களும் இந்தச்சேதியைக்கேட்டால் நம்முடனேபோ ராடி விசாரப்படுவார்களே என்ன அனர்த்தம் பண்ணிக்கொண்டோம் ஹரிகிருஷ்ண- கோவிந்தா-பக்தவச்சலா-பரமதயாளா- ஆதிமூலமே யெ ன்று அந்தசத்தியபாமையும் விசாரப்பட்டுதன்னுடைய மனதைத்தா னேதேற்றிக்கொண்டு ஜாமெலன் றெழுந்துமுன்னே நடந்துபோகிற நாரதபகவானண்டைக்குவந்து அவருக்குப்பிரதட்சண நமஸ்க்காரம்ப ண்ணிஅவரைப்பார்த்து ஓய்தயாநிதிநாரதமுனீந்திரா, தேவரீர்இப்போ துநான்கோரிவந்த கோரிக்கையை ஈடேற்றும்நான்செய்தஅபசாரத்தை மன்னித்துரட்சியும் நான்தேவரீருடையமகத்துவத்தையறியாமல் மோ சம்போனேன் என்பேரில் கிருபைசெய்து என்னுடையபுருஷனை என க்குக்கொடுத்தனுப்பும் அவரால்உமக்கு என்னகாரியம்நடக்கப்போகிற து அவரெங்களண்டையிலிருந்தால் எங்களுக்குஅநேகங்காரியங்க ளெல் லாம் நடக்கும்ஆகையினால் தானஞ்செய்தபொருளைத்திரும்பவுங்கேட் கிறேனென்று திருவுளத்தில் ஆயாசங்கொள்ளாமல்என்புருஷனைஅனுப் பிவையுமிசுவாமியென்று வெகுவாய்விசனப்படுகிறசத்தியபாமையைப் பார்த்து அந்தநாரதருஞ்சிரித்து சற்றுநேரம் ஆலோசனை பண்ணி இந் தக்கிருஷ்ணனையழைத்துக்கொண்டுபோனால் இவன்நமக்குஎன்ன பணி விடைசெய்யப்போகிறான் இவன்நமக்குத் தகுந்தசிஷனல்லஇவனுடை

யபெருவயிறுக்கு நாம் எங்கேபோய் போஜனஞ்சம்பாதிக்கப் போகி
றோம்ஆகையினால் இவனை உபாயதந்திரங்களைச்சொல்லி சத்தியபாமை
யின்பின்னே அனுப்பிவிட்டு இவனுக்குச்சரியானநிறையாய்தங்கத்தை
வாங்கிக்கொண்டு போகலாமென்று நினைந்து அந்தச்சத்தியபாமையை
ப்பார்த்து ஓ அம்மாபாக்கியவதீ நீயேன்விசனப்படுகிறாய் சந்தோஷ
மாயிரு இந்தக்கிருஷ்ணனால் நமக்குஎன்னஆதாயம்இருக்கின்றது நீதா
னங்கொடுத்தபடியினால்தள்ளப்போகாதென்று சம்மதித்துவாங்கிக்கொ
ண்டேன் இனி அப்புறத்தே கொண்டுபோய் விற்றுப்போடுவேன் ஆத
லால்அந்தத்திரவியத்தைநீ கொடுத்தபோதிலும் உனக்கேகொடுத்துவி
டுகிறேன் நீ அந்தகிருஷ்ணனுடைய நிறைக்குச்சரியாய் தங்கத்தை தவை
த்து நிறுத்துக்கொடுத்தால் வாங்கிக்கொண்டுபோகிறேனென்றுசொல்ல
அந்தவார்த்தையைக்கேட்டுச் சத்தியபாமையுஞ்சந்தோஷித்துஐய்சுவா
மிநான்அப்படியே தருகிறேனென்று சம்மதித்துதன்னுடைய அரண்
மனைக்குட்போய் ஒருபெரிய[illegible]ராசைக்கொண்டுவந்துகொடுத்துஅந்தத்
தராசினுடைய ஒருதட்டில்ரொக்க முதலான சகலமான உடமைகளை
யுங்கொண்டுவந்து வைத்து ஒருதட்டில் லோகநாயகராகிய கிருஷ்ணமூ
ர்த்தியை உட்காரவைத்து நிறுக்கும்போது அந்தக்கிருஷ்ண மூர்த்தியு
ஞ்சத்தியபாமையினுடைய பிரியத்தைக்கண்டு சந்தோஷித்தாய்இவ
ளைப்பயங்கரப்படுத்தவேண்டுமென்றுதிருவுளத்தில்நினைத்துதாமிருந்த
தட்டைப்பெருவிரலினால் அழுத்தினமாத்திரத்தில் அந்தத்தட்டானது
கொஞ்சமாகிலும் உயரஎழும்பாமல் அப்படியேயிருந்ததுஅதுகண்டு
சத்தியபாமையும் ஆச்சரியப்பட்டு பின்னையுந் தன்னுடைய உடமை
களையுந் தோழிமாருடைய உடமைகளையுங் கழற்றிக்கொண்டு வந்து
அந்தத்தட்டிலேவைத்தாள்- அப்போது அந்தப்பகவானும்உட்கார்ந்திரு
க்கிறதட்டானதுஎழும்பவில்லை அதுகண்டுசத்தியபாமையும் இதுவெ
ல்லாம் கிருஷ்ணதேவருடைய திருவிளையாட்டென்று நினைந்து ஆச்சரி
யப்பட்டுக்கொண்டுதன்னுடைய சக்களத்திமார்களிற்சிலபேர்களுடை
யஅரண்மனைக்குப்போய் அவர்களுக்கெல்லாம் அந்தசங்கதியைத்தெரி
வித்து அவர்களுடைய உடமைகளையும் ரொக்கங்களையும் வாங்கிக்கொ
ண்டுவந்து அந்தத்தட்டிலேபோட்டாள், அப்போதும் அந்தத்தட்டான
துமுன்னிருந்ததுபோலிருக்க அதுகண்டு சத்தியபாமையும் மிகுந்த
விசனமடைந்து மற்றசக்களத்தி மார்களுடைய உடமைகளையும், ரொ
க்கங்களையுங்கேட்டுவாங்கி ஆனைகள்பேரிலும்ஒட்டகங்கள்பேரிலும்எடு
த்துக்கொண்டு அவர்களையுங் கூட்டிக்கொண்டுவந்து அந்தப்பொருள்
களையெல்லாம் அந்தத்தட்டிலேபோட்டாள்- அப்போதும் அந்தத்தட்
டானது உயர எழும்பாமலிருந்தது, அதுகண்டுசத்தியபாமையும்விசா
ரப்பட்டு இனிஎன்னசெய்வேனென்று தன்னுடையகையை நெரித்து
க்கொண்டுகண்களில்ஜலமானது தாரைதாரையாய்வடியும்படியாகப் பிர
லாபிக்கத்தொடங்கினாள்-அதுகண்டு - சாம்பவதி- காளிங்கி-லட்சணமுத

லான்பட்டபுஸ்திரீகளும் பின்னுமுண்டான பதினாறாயிரத் தொருநூ
ற்றிரண்டு தேவிமார்களும் மற்றுமுண்டான புரஜனங்களும் கோவென்
றுபுலம்பி விசாரப்படத்தொடங்கினார்கள்- அவர்களிற்சிலர் சத்தியபா
மையைநிந்தித்தார்கள்- சிலர் நாரதமுனிவரை நிந்தித்தார்கள்- சிலர் கிரு
ஷ்ணதேவருடைய மாயாவிலாசமென்றெண்ணிக்கொண்டார்கள்-இந்தக்
கோலாகலங்களையெல்லாம்பார்த்து கிருஷ்ணதேவரும் புன்சிரிப்பாகச்
சிரித்துக்கொண்டு இன்னம் இவர்களுடைய நினைவை அறிவோமென்று
அந்தத்தட்டிலேதானே அசையாம லுட்கார்ந்திருந்தார்-அப்பொழுது
அந்தப்புரத்திலிருந்த ஆதிலட்சுமியாகிய ருக்குமணிதேவியாரும்இந்த
ச்சவிஸ்தாரமெல்லாந்தோழிமார்களால்கேள்விப்பட்டுவந்துதன்னுடை
ய சக்களத்தியான சத்தியபாமையை நிந்தித்து நாரதர்பண்ணினசூதுக்
கும், கிருஷ்ணமூர்த்தியாருடைய தந்திரத்திற்கும் சந்தோஷப்பட்டுபு
ன்சிரிப்புடனே அந்தச்சத்தியபாமை முதலானஸ்திரீக ளெல்லாரையும்
அப்புறத்தே விலகியிருக்கச்சொல்லி தன்னுடையமனதில் ஒருபொரு
ளைஉத்தேசம்பண்ணிக்கொண்டு பின்பு நாரதமுனிவரைப்பார்த்து - ஓய்
முனீந்திரா- உமக்குஎன்புருஷனுக்குச்சரியானநிறையுள்ள மஹாவிசே
ஷமானபொருளைக்கொடுக்கிறேன் நீர்சுகமாய்வாங்கிக்கொண்டுபோமெ
ன்றுசொல்லிஅந்தலோகமாதாவாகிய ருக்குமணிதேவியாருஞ்சிரித்துஒ
ருதுளசிதளத்தைக்கையிலெடுத்துக்கொண்டு அஷ்டாக்ஷர மந்திரத்தை
உச்சரித்து அநேகமாயிரங்கணக்கில்லாததிரவியப்பொதிகளைப்போட்டு
மெழும்பாத அந்தத்தட்டின்பேரில்வைத்தாள்- அதுகண்டுமகத்துக்குமக
த்தாகவும்-அணுவுக்குஅணுவாகவும் விளங்குகின்ற ஸ்ரீகிருஷ்ணபகவா
னுஞ்சிரித்து அந்தத்துளசிதளந் தமக்குப் பிரீதியானபடியினால் சத்தி
யபாமைமுதலான தேவிமார்களுக்குமுன்ருக்குமணிதேவியாரைமேன்
மைப்படுத்தவும், நாரதமுனிவருடைய கபடத்தையடக்கவுந் திருவுள
த்தில்நினைந்து தம்முடையபலத்தையடக்கி தாமெழுந்தருளியிருக்கின்
றதட்டைமேலெழும்பச்செய்து துளசிதளமிருக்கின்ற தட்டைக் கீழா
கச்செய்துவிட்டார். அதுகண்டுஅந்தஸ்திரீகளெல்லாரும்ருக்குமணிதே
வியைமெச்சிக்கொண்டாடினார்கள். அப்பொழுதுருக்குமணிதேவியா
ரும் புன்சிரிப்புடனே அந்தத் துளசிதளத்தையெடுத்து நாரதமுனி
வருடைய கையிற்கொடுத்துப் போய்வாருமென்றுசொல்லி அந்தநா
ரதருக்கு நமஸ்க்காரம்பண்ணி அனுப்பிவிட்டு தன்புருஷனை அழைத்
துக்கொண்டு தன்னுடைய அரண்மனைக்குப்போய்விட்டாள். அதுகண்
டுசத்தியபாமைமுதலான தேவிமார்கள்விசனப்பட்டு நாமெல்லோரும்
நம்பியிருக்க, அந்தருக்குமணிதேவிவந்து ஏதோசூதுபண்ணி நமதுபு
ருஷனைஅழைத்துக்கொண்டுபோனாள். நம்முடையபாக்கியம் இப்படி
யிருந்துவிட்டதென்று சொல்லிக்கொண்டார்கள். நாரதமுனிவரும் அந்
தத்துளசிதளத்தை வாயில்போட்டுக்கொண்டு தம்முடைய ஸ்தானத்
திற்குப்போய்விட்டார். கேட்டீரோஜெனமேஜெயமஹாராசாவேயென்

றுசொல்லி அப்பால், சத்தியபாமைவீட்டில் நடந்த சவிஸ்த்தாரத்தை ச்சொல்லுகின்றார். கேளுமையா ராசேந்திரா, அப்படி சத்தியபாமை யும்நாரதரைப்பார்த்து ஐயா, நீர்பூர்வத்திலொருதரம்வந்து மோசம்ப ண்ணினதும்போல இப்போதும் ஏதோ மோசம்பண்ண வந்திருக்கிறீர். நல்லதுஎல்லாந்தெரியுமென்றுசொல்லி தன்னுடைய அரண்மனைக்குள் ளே அழைத்துக்கொண்டுபோனாள்-அப்பொழுது சப்பிரகூடமஞ்சத்தி ன்மேரில் பவளித்துக்கொண்டு பீதாம்பரத்தினால் முக்காடிட்டுக்கொ ண்டு குறுகுறுமென்று கொறுக்கையிட்டு நித்திரை செய்கிறதுபோலி ருக்கின்ற அந்த கபடநாடக சூஸ்த்திராவதாரியான ஸ்ரீகிருஷ்ணதேவரா னவர்நாரதர் சொன்ன கபடவார்த்தைகளெல்லாங் கேட்டுக்கொண்டிருந் துதனக்குள்ளே தானே சிரித்து அந்தநாரதமுனிவர் சமீபத்தில்வந்தபோ து அதிகமாக கொறுக்கைவிட்டுச் சற்றேதிரும்பிக்கண்ணைத்திறந்துபா ர்த்து ஒன்றுந்தெரியாதவனைப்போல நாரதமுனிவந்தாரென்றுதிடுக்கிட் டுமஞ்சத்தைவிட்டெழுந்திருந்து நமஸ்க்காரம்பண்ணி வாருமையாவெ ன்றுநாரதரை அழைத்துஇரத்நபீடத்தின்மேரில்உட்காரவைத்துஅ ந்தநாரதருக்கு அர்க்கியபாத்திய முதலான உபசாரங்களாற் பூஜைபண் ணி அவரைவெகுவாசத்தோத்திரம்பண்ணிக்கொண்டாடினார் அதுகண் டு நாரதரும் தமக்குள்ளேதாமே சிரித்து சர்வாந்திரியாமியான இந்தப் பகவானுடைய மகிமையைநம்மாலறியக்கூடுமோநாம் இவருடைய மகி மையை யறியாமல்இவடத்திற்குவந்து வெட்கப்பட்டோம் இந்தப்பக வான் எந்தயிடத்திலும் சர்வபரிபூரணமாய் வியாபித்திருப்பாரென்றுத ம்முடைய உள்ளத்தி லெண்ணிக்கொண்டுசற்றுநேரம் அவிடத்தில் பே சிக்கொண்டிருந்து பிற்பாடு அந்தச் சத்தியபாமை கிருஷ்ணதேவர்இவ ர்களிருவரிடத்திலும் செலவுவாங்கிக்கொண்டு வெளியேவந்து அந்தநா ரதரானவர் இன்னும்மற்றுமுண்டான தேவிமார்கள்வீட்டிலும் நுழை ந்துபார்க்கையில், ஒருவீட்டில் சாப்பிடுகிறதும், ஒருவீட்டில் பேசுகி றதும், ஒருவீட்டில் திருநாமந்தரித்துக்கொள்ளுகிறதும், ஒருவீட்டில் ஸ்நானம்பண்ணுகிறதுமாக அந்தத்தேவன் எந்தயிடத்திலும் வியாபித் து அந்தத்தேவிமார்களுடைய இருதயத்தில் நம்முடையபுருஷன் நம் மைவிட்டுப்பிரிந்து எங்கேயும்போகிறதில்லையென்று நினைத்திருக்கும் படிதிருவிளையாடல் பண்ணிக்கொண்டிருக்கின்ற கிருஷ்ணபகவானைப் பார்த்து நாம்இவருடைய மகிமையைக்கொஞ்சமாகிலும் யோசித்துப் பாராமல் இவரிடத்தில்வந்து கலகம்பண்ணவந்தோம் நம்முடைய கல கம் இங்கேசெல்லமாட்டாது வீணாகவந்துவெட்கப்பட்டோம்,இனிமே ல் இங்கேவரப்போகாதென்று நினைத்துக்கொண்டு மறுபடியும் தர்ம்ம நந்தனருடைய யாகசாலைக்குவந்துவிட்டார். கேட்டீரோ ஜெனமேஜெ யமஹாராஜாவே இப்பால், அந்தத்தாம்பதிகள் அறுபத்துநால்வரும் வெள்ளையானையின்மேரி லேறிக்கொண்டு தங்கக்குடங்களிற் கங்காதீர்த்

தத்தைவந்திக்கொண்டு மகாசம்பிரமத்துடனேவந்துயாகசாலையிற்சே
ர்ந்துஆனைகளைவிட்டிழிந்து அவரவர்கள்கொண்டுவந்த தீர்த்தக்குடங்க
ளை வேதவியாசபகவானிடத்தில் ஒப்புவித்தார்கள். அதுகண்டு அந்தவி
யாசபகவானும் அந்தத்தங்கக்குடங்களையெல்லாம் மந்திரபூர்வகத்துட
னேவாங்கி யாகசாலைக்குள்ளே வைக்கச்சொல்லி ஒருபக்கத்தில் பதி
னெட்டுவகைமேளவாத்தியங்களும்-தாம்தாமென்றுமுழங்கவும், ஒருப
க்கத்தில்-பிராமணர்களும்-ரிஷியீஸ்வரர்களும்-இருந்துக்கொண்டு- வேத
பாராயணம்பண்ணவும், இப்படிப்பட்ட வைபவத்துடனே அந்தவியா
சபகவானனவர் பகதலப்பிரீயமுனீந்திரருடைய உத்தாரப்படிக்கு தர்
ம்மபுத்திரரையும் துரௌபதைதேவியையும் அழைப்பித்து நல்லசுப
முகூர்த்தத்தில் அவர்களிருவரையும் கிழக்குமுகமாய் உட்காரவைத்து
கங்காதீர்த்தத்தினால்இரண்டுபேருக்கும்ஸ்நானஞ்செய்வித்து நல்லவஸ்த்
திராபரணங்களினால்அவர்களைஅலங்காரம்பண்ணிகந்தபுஷ்ப அக்ஷதைக
ளினால்சிங்காரித்துப்பிற்பாடுயாகசாலைக்குட்பிரவேசித்துஅங்கேஅத்தி
ப்பலகையால்ஓராசனம்போடுவித்துஅந்தஆசனத்தின்மேரில்தர்ம்மநந்
தனரைத்துரௌபதைசமேதராய்உட்காரப்பண்ணி தர்ம்மபுத்திரருக்கு
த்தெர்ப்பையினால்பவித்திரம்போடுவித்துஅந்தத் தர்ம்மநந்தனருடை
யகையினால்சகலசமித்துகளையும்மந்திரபூர்வகத்துடனேயாககுண்டத்தி
ல்போடுவித்துஅப்பால்,அக்கினிதேவனைப்பிரார்த்தனைபண்ணி அந்த
யாககுண்டத்தில்நிறுத்திஅநேகமாயிரம்நெய்க்குடங்களை அழைப்பித்
துஅந்தநெய்கள்முழுதும்ஆனைத்தும்பிக்கையிலிருந்து ஜலம்பொழிகிற
துபோலத்தர்மபுத்திரருடையகையினால்அந்தஹோமகுண்டத்தில்பொ
ழிவித்து பஞ்சதிரவியங்கள் நவதானியங்கள்முதலான வஸ்துக்களையும்
அந்தஹோமகுண்டத்தில்ஏராளமாய்நிறைவித்து தேவகோஷ்டமானது
சமுத்திரகோஷ்டத்திலும்அதிகமாய்முழங்கப்பண்ணிவைத்து அந்தச்ச
மயத்தில்வியாசபகவானும்பகதலப்பிரீயமுனீந்திரரைஅந்தயாகத்திற்கு
ப்பிர்ம்மாவாக்கி,வசிஷ்டர்முதலான பிர்ம்மரிஷிகள்ஒன்பதுபேரைச்சுத்
தகரிஷியர்களான ரித்துவீசர்களாகச்செய்து சோமயாதிகளாய்ஆறுரிஷி
களைஏற்படுத்திவைத்து தாம்புரோகிதராகத் தவுமியருடனே சகாயமா
யிருந்துக்கொண்டு அஸ்வமேதயாகத்திற்கு எத்தனைவிதத்தினால்ஓமஞ்
செய்விக்கவேண்டுமோ அத்தனைவிதத்தினால்அந்ததர்ம்மநந்தனருடைய
கையினால் ஹோமம்பண்ணுவித்தார்கள்- அப்பொழுது அக்கினிதேவ
னும் மகா சந்தோஷகரமாய் அந்தஹோமகுண்டத்திற் பிரகாசித்து வி
ளங்கினன். அந்தஹோமப் புகையானது ஆகாசமுழுதும்பரவிச்சொர்
க்க லோகத்திலும்போய்ப் புகுந்தது அதுகண்டு தேவேந்திராதிதேவர்
களெல்லாருஞ் சந்தோஷமடைந்து ஆகாயவீதியில் வந்துநின்றார்கள்-
இப்படிசகலவைபவங்களுடனே அந்ததர்ம்மநந்தனரும்வியாசபகவானு
டைய சொற்படிக்கு யாககுண்டத்திற் பிரகாசிக்கின்ற அக்கினியில் சமி
த்துமுதலானவஸ்துக்களையெல்லாம்ஆகுதிபண்ணிவைத்துபிற்பாடுவி

யாசபகவானுடைய உத்தரவின்பேரில் அஸ்வமேதக்குதிரையைவீமசே
னாலழைப்பித்து அவிடத்தில் ஒருகாட்டுமுருக்கமரத்தையழைப்பித்த
தைச்சிற்பாசாரிகளால் இழைப்பித்து ரதமாகநிறுத்தி அந்தரதத்தைக்
கந்தபுஷ்ப அக்ஷதைகளினால்பூஜைபண்ணி பிற்பாடு எருக்கநாராலாகிய
கயிற்றினால் அஸ்வத்தை அந்தரதத்தில்கட்டிவைத்து அதின்பிறகு அந்த
அஸ்வத்தைத் தர்ம்மநந்தனரும்வேதமந்திரங்களினால் கந்தபுஷ்ப அக்ஷ
தைகளாற் பூஜித்து இரண்டுகைகளையும் சிரசின்பேரில் அஞ்சலியாகக்கூ
ப்பிக்கொண்டு அந்தஅஸ்வத்தைப்பார்த்து ஓய் உத்தம அஸ்வமே!நீஎ
ன்னுடைய விண்ணப்பத்தைக்கேள், அஃதென்னவென்றால், நான் இ
ந்த ஹோமாக்கினியில் ஆவாகனம் பண்ணி தேவர்களுக்குப் பிரீதியாய்
அவிர்ப்பாகங்கொடுத்துநான் பரிசுத்தமாகவேண்டும்அதுவல்லாமலும்
நான்உன்னுடைய சகாயத்தினால் திவ்விய சரீரத்தைப்பெற்றுக் கீர்த்தி
ப்பிரதாபத்தை யடையவேண்டும் இப்படிசெய்தால்நீயும்உன்னுடைய
அஸ்வமேகத்தை இந்த ஹோமாக்கினியிற்பிரீதிபண்ணுவித்து வேறே
திவ்வியசரீரத்தைப்பெற்று என்றைக்கும்அழிவில்லாத பதவியிற்சேரு
வாய் ஆகையால்,நீ சந்தோஷமாகஉத்தாரம்பண்ணினால் நான் அப்படி
செய்கிறேன் இதுஉனக்குச் சம்மதமாயிருப்பதும் இல்லாததும் எனக்
குத் தெரிவிக்கவேண்டும், ஓய் அஸ்வமேயென்று சொல்ல,அதுகேட்டு
அஸ்வமுஞ் சந்தோஷப்பட்டு இரண்டுசெவியும் அசைந்தாட முன்னங்
காலிரண்டையும் உயர எடுத்துக்கொண்டுபவளம்போற் பிரகாசிக்கின்ற
வாயைத்திறந்து ஏழாவரங்களைச்செய்தது-அதினுடைய இரண்டுகாதின்
வழிகளிலும்அமிர்தமான துகுபீல்குபீலென்று தாரைதாரையாய்வடிந்த
து- அதினுடைய முகமலர்ச்சியானது பூரணச்சந்திரவிம்பம்போற்பிர
காசித்தது- அதுகண்டு அந்தச் சபையிலிருந்தஸ்ரீகிருஷ்ணபகவான் மு
தலானவர்களெல்லாம் இது என்னகாரணமோவென்று சொல்லிக்கொண்
டார்கள்- அந்தச்சமயத்தில், அங்கிருந்த நகுலராஜனானவன் அஸ்வலக்ஷ
ணமும் அஸ்வத்தினுடைய இருதயமும் அஸ்வபாஷையும் அறிந்திருக்
கின்றவனாதலால், அந்தஅஸ்வத்தினுடைய சைகைகளெல்லாந் தெரிந்து
சந்தோஷித்தனாய் அந்தச் சபையைப்பார்த்து ஓய் பிர்ம்மரிஷிகளே,
தேவரிஷிகளே,ராஜாக்களே அந்த அஸ்வத்தினுடைய கருத்தைக்கேளு
ங்கள் - அஃதென்னவென்றால்,தர்ம்மநந்தனரானவர் இந்த அஸ்வத்தை
வேண்டிமனுவுபண்ணிக்கொண்டகாரியத்தைப்பற்றிஇந்தஅஸ்வமும்த
ர்ம்மநந்தனைப்பார்த்துச்சந்தோஷப்பட்டு ஓய்தர்மபுத்திரமஹாராஜா
வே!தேவரீர்சொன்னவார்த்தை எனக்குச்சந்தோஷமாச்சுதுஎன்னுடை
யவம்சமெல்லாம்புண்ணியலோகத்தைப்பெறுகின்றகாலமுண்டாச்சுது
ஆதலால், தேவரீர் தாமசப்படுத்தாமல் என்பேரில் கிருபைசெய்துஇந்
தஹோமகுண்டத்தில் என்னை ஆவாகனம்பண்ணி தேவர்களுக்குப்பிரீ
தியாய் அவிர்ப்பாகங்கொடுத்துஎன்னைரக்ஷித்துநீர்இந்தப் பூமண்டலத்
திற் சுகமாயிருந்து கீர்த்திப்பிரதிஷ்டையையடையவும் நானும்சுவர்க்க

லோகத்திற்குப்போய்ச்சேருகிறேன். நீர்இப்போதுஇவ்வளவு உபகாரம் பண்ணி ரக்ஷியுமையாவென்று சொல்லினதென்று சொல்ல, அதுகேட்டு அந்தச்சபையி லிருந்தவர்க ளெல்லாரும் மிகுந்தசந்தோஷத்தையடைந்துநகுல னுடைய சாமர்த்தியத்தைப்புகழ்ந்துகொண்ட ரடினார்கள்.

அப்பொழுது ஸ்ரீகிருஷ்ணபகவானும் நகுலராஜனைட்டிபாய் தழுவிக்கொண்டு ஓய்மைத்துனா, நீர்சகலபாஷைகளும் அறிந்திருக்கிறீரென்றுபரிகாசம்பண்ணுவதும்பாலக்கொண்டாடினார் அப்போதுதர்ம்மநந்தனரும் தம்பியாகிய நகுலராஜனுடைய வல்லபத்திற்கு மெச்சிச்சந்தோஷமடைந்து வியாசபகவானுடையஉத்தாரப்படி அந்த அஸ்வத்திற்குத்தூபதீபங்கொடுத்துஅநேகவிதமாய் பூஜைபண்ணிதோத்திரநமஸ்காரங்கள்செய்து பிற்பாடு அந்தஅஸ்வத்தைக் கண்டிக்கும்படி வீமசேனனைப்பார்த்து சைகையாகச்செலவுகொடுத்தார்- அந்தச்சமயத்தில்அதினுடைய இரண்டு காதிலுமிருந்து அமிர்தமானது குபீல்குபீலென்று கெங்கையாய்வடிந்தது - அதுகண்டுவீமசேனனும் மகாஉச்சாகத்துடனே எழுந்துநின்று அந்தச்சபையிலிருக்கிற ரிஷியீஸ்வரர்களிடத்திலும்ஸ்ரீகிருஷ்ணபகவானிடத்திலும்தர்ம்மநந்தனரிடத்திலும்உத்தாரம்பெற்றுக்கொண்டுகோட்டு முருக்கமரத்தினாற் பண்ணின கத்தியை உருவிக்கொண்டுஅந்த அஸ்வத்தினுடைய சிரசில்வைத்து ஒருதிரம்ஓங்கி வீசினமாத்திரத்தில், அந்தஅஸ்வத்தினுடைய சிரசானது அறுபட்டுப்பூமியில்விழாமலும், உதிரம்வடியாமலும், அமிர்தம்வடியும்படிஜிவ்வென்றுஆகாயவீதியிலெழும்பி ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியைக் கொண்டாடிக்கொண்டு சூரியமண்டலத்திற்குச்சமீபமாகப்போய்விட்டது - அந்த-அதிசயத்தையெல்லாந் தேவகணங்களும்-ரிஷிகணங்களும் - ராஜகணங்களும் பார்த்துஆச்சரியப்பட்டு இந்த அஸ்வத்தினுடைய பாக்கியந்தான்எப்படிப்பட்டதோவென்றுசொல்லி சந்தோஷமடைந்தார்கள் ஆகாயவீதியில்தேவதுந்துமியும் திம்திம்மென்று முழங்கியது- தேவர்க்களுஞ் சந்தோஷகரமாய்ப்பாரிசாதபுஷ்பங்களைச் சலசலவென்று வருஷித்தார்கள்-கந்தர்வர்கள்பாடினார். ஊர்வசி-ரம்பை-மேனகை-திலோர்த்தமை-முதலானதேவர்க்களெல்லாம் அவிர்ப்பாகம் வாங்கவேண்டுமென்கிறசந்தோஷத்தினால்உச்சாகத்துடனே தேவதாமஹோச்சவங்களையெல்லாம்நடத்திவிட்டு எங்கே மிஞ்சிப்போகின்றதோ வென்று ஒருவர்க்கொருவர்முன்னிட்டுவந்து கண்களைச்சிமிட்டாமல்தர்ம்மபுத்திரருடையயாகசாலையை நோக்கிக்கொண்டுநின்றார்கள்- பிர்ம்மா - ருத்திரன் - முதலானவர்களும் அந்தப்படியே எச்சரிக்கையாய் வந்திருந்தார்கள் - அப்போது கபடநாடகசூஸ்த்திராவதாரியான ஸ்ரீகிருஷ்ணபகவானும் தம்முடையபாகத்தைக்கொடாமல் எங்கேஏமாற்றி விடுகிறார்களோவென்று நினைத்து எல்லாருக்குமுன்னுதாகப்போய் அஷ்டதிக்குப் பாலகருடனேயிருந்து மஹாராஜாக்கிருதையாய் தர்ம்மபுத்திரருடையமுகத்தையேபார்த்துக்கொண்டிருந்தார்.

கேட்டீரோஜெனமேஜெய மஹாராஜாவேஅப்பால்;தர்ம்மபுத்திரருடையஉத்திரவின்பேரில் அந்தபாகசாலைக்குநடுவேமுருக்கமரத்தில்எருக்கநாராலாகியகயிற்றினால்கட்டியிருக்கின்றஅஸ்வத்தின்சரீரத்திலுள்ள மாமிசத்தைவிமசேனனால் துண்டந் துண்டமாய் வயிரம்போலும்-பவளம்போலும் - புஷ்பம்போலும்-துண்டித்து தர்ம்மபுத்திரர் கையிற்கொடுக்க அவரும் அதுகளைவாங்கி வியாசபகவான் சொல்லுகிறமந்திரபூர்வகத்துடனே வடவாமுகாக்கினிபோல தகத்தகாயமாய்ஆகாசபரியந்தம் கொழுந்துவிட்டுப்பிரகாசித்து எரிகின்ற அக்கினியிற் போட்டுக்கொண்டிருந்தார்-அக்கினிதேவனும் அதுகளைமகாபிரியமாய் எற்றுக்கொண்டுதம்முடைய பக்கத்தில் ஒருகும்பலாகச்சேர்த்தார்- அதுகளிலிருந்துமகாதெய்வீகமான பரிமளமுண்டாச்சுது,அப்போது- தர்ம்மநந்தனரும் அந்த அஸ்வத்தினுடைய சரீரத்திலுள்ள எலும்புகளையும் அப்புறம் இப்புறம் சேதமாய்ப்போகவொட்டாமல் துண்டித்துஅக்கினியிற்போட்டுமுடிவில் சகலமுந் தேவதா பிரீதியாக்கிச் சுவாகாவென்று ஹோமம்பண்ணினார்-அந்தப்புகையானது ஆகாயமட்டாயெழும்பிச் சுவர்க்கபூமியையுங் கடந்து அப்பால்,பிர்ம்மலோகத்திலும்போய் நிறைந்தது-அப்போதுவியாசபகவானும் தர்ம்மபுத்திரருடையகையினால்முறைமைப்படி சகலதேவர்களுக்கும் அந்தஅவிர்ப்பாகத்தைக்கொடுக்கும்படிஉத்தேசித்து தம்முடையசமீபத்திலிருக்கின்ற பகாலப்பிரிய முனீந்திரருடையஅனுமதியின்பேரில் முதலாவதுசாம்பவமூர்த்தியை அழைக்க அதுகேட்டு அவரும் மஹாசந்தோஷகரமாய் சிவகணங்களுடனேபுறப்பட்டு விக்கினேஸ்வரர், குமாரஸ்வாமி, நந்திகேஸ்வரர், பிரங்கிரிஷி,முதலானவர்களும் புடைசூழத்தக்கதாக ரிஷபவாகனரூடராய் வந்து அங்கே அக்கினிதேவன்வசத்திலிருக்கிற தம்முடையபங்காகிய அவிர்ப்பாகத்தை வியாசபகவானெடுத்து தர்ம்மபுத்திரருடையகையினாற்கொடுப்பிக்க அதை அந்தசாம்பவமூர்த்தியுஞ் சந்தோஷகரமாய்வாங்கிக்கொண்டு தர்ம்மபுத்திரனைப் பார்த்து இந்த தர்ம்மராசாவானவர் எந்தநாளுஞ் சுகசீவியாய் வாழ்ந்திருக்கக்கடவரென்று ஆசீர்வாதஞ் செய்துவிட்டு தம்முடையகயிலாசத்திற்கு எழுந்தருளிப்போனார்.

அப்பால்இரண்டாவதுகிருஷ்ணமூர்த்தியையழைத்துஅவருக்கும் அந்தப்படியே அவிர்ப்பாகத்தையெடுத்துத்தர்ம்மபுத்திரருடையகையினாற்கொடுப்பிக்க அதைஅவரும்வாங்கிக்கொண்டுசந்தோஷமாய்தர்ம்மபுத்திரனைப்பார்த்துஇந்தத்தர்ம்மநந்தனர்சதாகாலமும் பல்லாண்டு பல்லாண்டாய் வாழக்கடவரென்று ஆசீர்வாதம்பண்ணியருளினார்-அப்பால், மூன்றாவது சத்தியலோகநாயகரான பிர்ம்மதேவனை யழைத்து அவர்பங்காகிய அவிர்ப்பாகத்தையெடுத்துக் தர்ம்மநந்தனருடைய கையினாற்கொடுப்பிக்க அதை அவரும்வாங்கிக்கொண்டுஆனந்தசித்தராய்தர்ம்மபுத்திரனைப்பார்த்துஇந்தத்தர்ம்மபுத்திரர்எந்நாளுஞ்சிரஞ்சீவியாயிருக்கக்கடவரென்றுஆசீர்வாதம்பண்ணிவிட்டு தம்முடைய ஸ்தானமாகி

யபிர்ம்மலோகத்திற்கு அம்சவாகனரூடராய் எழுந்தருளிப்போனார்-இந்தப்பிரகாரம்-பிர்ம்மா-விஷ்ணு-ருத்திரன்- என்கிறமும்மூர்த்திகளுக்கும் அவிர்ப்பாகங்கொடுத்து அவர்களுடையஆசீர்வாதங்களையுந்தர்ம்மநந்தனர்கைக்கொண்டபின்பு வியாசபகவானுஞ் சந்தோஷித்து இந்திரன்முதலான அஷ்டதிக்குப் பாலகர்களையும் முறைமைப்படிவரிசைக்கிரமமாயழைத்து அவரவர்களுடைய பங்கைஎடுத்து அவரவர்களுக்குத் திருப்தியாகும்படி தர்மபுத்திரருடைய கையினாற் கொடுப்பித்து அவர்களையெல்லாஞ்சந்தோஷகரமாயனுப்பிவிட்டு பிறகு-யக்ஷர்- கின்னர்-சருக்ஷர் காந்தர்வர்-சித்தர்-வித்தியாதரர்-பன்னகர்-அசுவனிதேவதைகள் - ஏகாதசருத்திரர்கள்-துவாதசாதித்தர்கள்-நவக்கிரகங்கள்-நவப்பிர்ம்மாக்கள்-அஷ்டவசுக்கள்முதலானமுப்பத்துமுக்கோடி தேவர்க்களையும் அழைப்பித்து அவரவர்களுடைய பங்குப்பிரகாரம் அவிர்ப்பாகத்தைஎடுத்துதர்ம்மபுத்திரருடைய கையினால் அவரவர்களுக்குக் கொடுப்பித்து அவர்களையெல்லாஞ் சந்தோஷப்படுத்தி யனுப்பிவிட்டு, யாககுண்டத்தில் ஆவாகனமாயிருக்கின்ற அக்கினி புருஷனையும், அதிக சந்தோஷப்படுத்தியனுப்பிவிட்டார். பிற்பாடு தர்மபுத்திரரும், வெகுசந்தோஷத்தையடைந்து, தன்னுடைய கையினால் அஸ்வமேதயாகத்தைச் செய்துமுடித்துப் பரமபவித்திரனைப்பண்ணின வேதவியாச முனிவரையும், பூஜைபண்ணி அவருக்குப் பிரதக்ஷணநமஸ்க்காரங்கள்செய்து அந்தமுனீஸ்வரருக்குத் தக்ஷணையாகத் தாம் அரசாக்ஷிசெய்கின்ற பூமிமுழுதுந் தாரைவார்த்துக்கொடுத்து அவரைச் சந்தோஷப்படுத்திவைத்து பிற்பாடு யாககிருதவ்வியாகிய பகதலப்பிரீய முனீந்திரரையும் பூஜைபண்ணி அவருக்குப் பிரதக்ஷண நமஸ்க்காரங்கள்செய்து அவருக்குத் தக்ஷணையாகப் பத்துயானைகளும், இருபது அஸ்வங்களும், ஆயிரம்பாரந் தங்கமுங்கொடுத்து அவரைச் சந்தோஷப்படுத்திவைத்து, பிற்பாடு ரித்துவிசர்களாகிய ஒன்பதுபேருக்குந்தக்ஷணையாக ஒவ்வொருத்தருக்கு ஐந்து ஐந்துயானைகள், பத்துபத்து அஸ்வங்கள், கோடிவராகன் இதுகளெல்லாங்கொடுத்து அவர்களைச் சந்தோஷப்படுத்திவைத்து பிற்பாடு சோமயாதிகள் ஆறுபேருக்குந் தக்ஷணையாக எவ்வேழானைகள் பதினாலுகுதிரைகள், அறுபது பாரந்தங்கம் இந்தப்பிரகாரங்கொடுத்து அவர்கள்மனதைச்சந்தோஷப்படுத்திவைத்து பிற்பாடு மற்ற ரிஷிகளுக்கெல்லாம் தக்ஷணையாய் ஒவ்வொருயானை, ஒவ்வொருகுதிரை, ஐந்துபாரந்தங்கம், இந்தப்பிரகாரமாகக் கொடுத்து, அவர்களையெல்லாஞ் சந்தோஷப்படுத்தி, அதிற்சிறிது ரிஷீஸ்வரர்களுக்குத் தக்ஷணையாக ஒட்டகங்கள் - தண்டிகைகள்கொடுத்து அதின்பிறகு பிர்ம்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர்களாகிய நான்குவருணத்தார்களுக்கும் ஆசைதணியத்தக்கதாக அநேகதிரவியங்கள்-ஆனைகள்-குதிரைகள்- தாசிஜனங்கள்-நவரத்திநங்கள்-வராகன்கள்-மோராக்கள்-ஆபரணங்களும் போதும்போதுமென்னத்தக்கதாகக்கொடுத்து தானம்பண்ணினார்.

அப்போது தேவர்க்களெல்லாம் ஆகாயவீதியில்நின்று தர்ம்மபுத்திரனைப்பார்த்துக்கொண்டாடி ஒய்தர்ம்மநந்தனு, உன்னுடைய கீர்த்தியேகீர்த்தி, உன்னுடைய பிரதாபமே பிரதாபம், உன்னுடைய தர்ம்மமே தர்ம்மம், உன்னுடைய பிரதிஷ்ட்டையே பிரதிஷ்ட்டையென்றுபுகழ்ந்து பாரிசாதபுஷ்பங்களைச் சலசலவென்று வருஷித்தார்- தேவதுந்துபியும் திம்திம்மென்று முழங்கியது- அப்போது சகலமானபேர்களுந் தர்ம்மநந்தனைக்கொண்டாடிச் சந்தோஷப்பட்டார்கள் - அப்போது வியாசபகவானும், தர்ம்மராஜாவைப்பார்த்து - ஒய் - தர்ம்மநந்தனு, நீர் நமக்குக்கொடுத்த பூமியெல்லாம் நமக்கென்னசெய்ய அந்தப்பூமிமுழுதும், நீரே கைக்கொண்டு அதற்குத் தகுந்தவிலையைக் கொடுமென்று சொல்ல அதுகேட்டு தர்ம்மபுத்திரரும், மகமேருவைப்போல திரவியத்தைக்கொண்டுவந்து கும்பலாய்ப்போட்டு இதைக்கைக்கொள்ளும், சுவாமீயென்றுசொல்ல, அதுகண்டு, வியாசபகவானுஞ் சந்தோஷப்பட்டு தர்ம்மநந்தனை மெச்சிக்கொண்டாடி அவரிடத்தில் வாங்கின திரவியத்தையெல்லாம் குந்தாதேவிக்குக் கொடுத்துவிட்டார்.

அந்த அம்மாளும், அந்த திரவியங்களையெடுத்துப் பிராமணர்களுக்குத் தானமாகக்கொடுத்துவிட்டார், இப்படியாக தர்ம்மபுத்திரரும், அநேகமாயிரம்பேர்களுக்குத் தக்ஷிணைகொடுத்து, மூன்று அஸ்வமேதயாகபலனைப்பெற்று மகாசந்தோஷமாய் கிருஷ்ணமூர்த்தியைப்பார்த்து அநேகவிதமாகத் தோத்திரம்பண்ணி, ஒய் ஜநார்த்தனு, ஒய்ஜகத்ரக்ஷகா, ஒய்ஜகநாதா- ஒய்சுவாமீ, நான் அஸ்வமேதயாகஞ் செய்துமுடித்ததும், கீர்த்திப்பிரதாபம்பெற்றதும், தேவரீருடைய பரிபூரணகிருபையாலல்லவோவென்று வெகுவாகக்கொண்டாடி நமஸ்க்காரம் பண்ணினர். அப்போது கிருஷ்ணபகவானும், புன்சிரிப்பாகச்சிரித்து தர்ம்மராஜாவைப்பார்த்து ஒய் தர்ம்மநந்தனு, நீரேன் இப்படி நம்மைக்கொண்டாடுகிறீர் நம்மாலொருகாரியமும் நடக்கவில்லை, எல்லாம் இந்த வியாசபகவானுடைய அனுக்கிரகத்தினுலும், ஸ்ரீமந்நாராயணமூர்த்தியினுடைய கிருபையினுலும், உம்முடைய தர்ம்மகுணத்தினுலும், நடந்ததென்று அந்த பகவான்சொல்ல, அதுகேட்டுச் சகலமானபேர்களுஞ்சந்தோஷப்பட்டார்கள்- அப்போது தர்ம்மநந்தனரும், ஆனந்தபரவசராய் கிருஷ்ணபகவானுடனும், மற்றுமுண்டான ராஜாக்களுடனும், சற்றுநேரம்பேசிக்கொண்டிருந்து பிற்பாடு சகலமானபேர்களையுஞ் சந்தோஷகரமாய் போஜனம் பண்ணுகிறதற்கு வாருங்களென்று போஜனசாலைக்குள் அழைத்துக்கொண்டுபோய் அவர்களுக்கெல்லாம் கைகால் சுத்திபண்ணிக்கொள்ளுகிறதற்குப் பனிநீர்கொடுத்துப் பிற்பாடு சகல பிராமணர்களுடனும், ரிஷிகணங்களுடனும், ராஜகூட்டங்களுடனும். மந்திரிபிரதானிகளுடனும், தண்டநாயகர்களுடனும், திருதராஷ்ட்டிரன்-சஞ்சயன்-விதுரன்- முதலானவர்களுடனும், தேவாதிதேவனுன கிருஷ்ணபகவான் பலராமர்-சாத்தகி-கிருதவர்ம்மன்-முதலான யாதவவீரர்களுடனும், பின்

ளைகள் பேரமார் தம்பிமார்களுடனும், தர்ம்மபுத்திரரானவர் மகா சம்பிரமத்துடனே போஜனம்பண்ண உட்கார்ந்தார்கள்.

கேளுமையா ஜெனமேஜெய மஹாராஜாவே, அஃதெப்படியென்றால், மிகுந்த வெண்மையும்- மூன்றுமுழ வகலமும்- நாலுமுழ நிகளமுமுள்ள தலைவாழையிலைகளைப்போட்டு அந்த இலைகளின்பேரில் சுத்த ஜலந்தெளித்து பிற்பாடு முல்லையரும்புகள்போல வெண்மையுள்ள சன்னசம்பா அரிசி சாதத்தைப் பரிமாறி அந்தச் சாதமாகிய வெள்ளிமலைக்குப் பொன்மலையாற் சிகரம் வைத்ததுபோல அந்தச் சாதத்தின்பேரில் துவரம்பருப்பைப்போட்டு அரைப்படி புத்துருக்கு நெய்விட்டு அந்த இலைகளைச்சுற்றிலும் ஷட்ருசிவகையாகிய ஆறுவகைப்பொறியலும், நான்குவகைக்கறியலும்,இரண்டுவகை தப்பளமும்,பதினெட்டுவகை பச்சடியும், ஐந்துவகை ஊறுக்காய்களும், அதுவுமல்லாமல் பஞ்சகச்சாயமும், பணியாரவகைகளும், ஆமைவடை முதலானதுகளும் நல்லருசிகரமான பழவகைகளும்சீனிச்சருக்கரை கற்கண்டுமுதலானதுகளும் இளந்தோய்ச்சலாகிய தயிரும், பரமான்னமும் பரிமாறச்செய்து தர்ம்மநந்தனரானவர் கிருஷ்ணபகவான்முதலானபேர்களைப்பார்த்து நீங்கள் எல்லாரும் சந்தோஷகரமாய்வேண்டியமட்டுக்கும்போஜனம்பண்ணுங்களென்று உபசாரமாகச்சொல்லி அவர்களுக்குப் போஜனம்பண்ணும்படி செலவுகொடுத்து தாமும் அவர்களுடனே போஜனஞ்செய்து பிற்பாடு இளநீர் நீர்மோர் வெந்நீர்முதலானதுகளை விருப்பத்தின்படி அவரவர்கள் தாகத்துக்குச் சாப்பிட்டு மகாசந்தோஷத்துடனே எழுந்திருந்து பன்னீரினால் சகலமானபேருங்கைகால் சுத்திபண்ணிக்கொண்டுமகா ஆடம்பரமாய்முகமல்பட்டினலாகிய திண்டுகளின்பேரிலும்பில்லைத்தலையணைகளின்பேரிலும்சார்ந்துக்கொண்டு சுகந்தபுஷ்பபரிமளாதிகளையணிந்துக்கொண்டு கர்ப்பூரதாம்பூலம்போட்டுக்கொண்டு ஒருவர்க்கொருவர் சந்தோஷமாய் பேசிக்கொண்டு நாககரம் புள்ளாங்குழல் துத்தி திருச்சின்னம் சங்கீதமேளம் இதுமுதலான பதினெட்டுவிதவாத்தியங்கள்முழங்கவும்வெண்பா கலிப்பா-கொச்சகப்பா-விருத்தப்பா-அகவற்பாமுதலானபலபாக்களையு மெடுத்துச் சங்கீதவித்வான்கள் கல்லியாணி - பைரவி-கேதாரகௌளை முதலான முப்பத்திரண்டு விதராகங்களிலும் அதுகளுக்கிசைந்த தாளங்களிலுந் தொடுத்து யாழ்வீணைகின்னரி முதலான கருவிகளைக்கொண்டு பாடவும்,ரம்பையூர்வசிதிலோர்த்தமைக்குச் சரியான நாட்டியஸ்திரீகளெல்லாம் மகா அபிநயத்துடனே நாட்டியம்பண்ணவும்வேடிக்கைபார்த்துக்கொண்டுமகாஉல்லாசமாயிருந்தார்கள்.

கேட்டீரோஜெனமேஜெயமஹாராஜாவே அப்போது அவிடத்தில் ஒருகீரிப்பிள்ளைவந்து அந்தச்சபையி லிருக்கின்றவர்களைப்பார்த்து ஓய் சபையார்களே இந்ததர்ம்மநந்தனர் செய்துமுடித்த அஸ்வமேத யாகமானது பூர்வகாலத்தில் (சத்துப்பிரஸ்தனென்கிற) முனீஸ்வரன் செய்த பரிமாதானத்திற்கு ஈடல்ல-அஃதெப்படியென்றால் அந்தச்(சத்துப்

(பிரஸ்த்தனும்) அவன்பெண்சாதியும் பிள்ளையும் மருமகளும் ஒருவிரத
மாம். பவர்ணமிகழித்த பிரதமைமுதற்கொண்டு அமாவாசை பரியந்
தம்தினந்தோறும் உதயகாலத்தில் எழுந்திருந்து வயல்களுக்குப்போய்
சூரியாஸ்தமான மாகிறபரியந்தம் பூமியி லுதிர்ந்துகிடக்கிற நெற்களை
ப்பொறுக்கிக்கொண்டுவந்துசேர்த்துஇரண்டுமரக்காலானவுடனே அன்
றையத்தினம்-அந்தநெல்லையுலர்த்தி அரிசியாகக்குத்தி பிற்பாடு அந்த
அரிசியை வறுத்தரைத்து மாவாக்கி அந்தமாவை ஐந்துபங்காக்கி அதி
திக்கு ஒருபங்கைக்கொடுத்து மற்ற நாலுபங்கை அந்த நாலுபேருஞ்
சாப்பிட்டுஅதின்பிறகும் அந்தப்படியே பக்ஷமட்டும் நெல்லைப் பொ
றுக்கிக்கொண்டுவந்துசேர்த்து உபவாசமாயிருந்து அந்தநெல்லை முன்
சொன்னபடியே மாவாக்கி ஐந்துபங்காகப் பங்கிட்டு ஒருபங்கை அதி
திக்குக்கொடுத்து மற்றநாலுபங்கையெடுத்துத்தாங்கள்சாப்பிடுவார்கள்
இந்தப்படிக்கு அந்தமுனீஸ்வரன் நடந்துவரும்காலத்தில்ஒருநாள்பக்ஷ
த்தினன்று சேர்ந்தநெல்லை உலர்த்தி அரிசியாக்கி வறுத்தரைத்தால் குறு
ணிமாவாச்சுது அதைஐந்துபங்காகப்பங்கிட்டு ஒருபங்கை அதிதிக்குக்
கொடுத்து அவனையனுப்பிவிட்டு,பிறகு அந்தநாலுபேரும்வரிசையாய்
உட்கார்ந்து இலைகளில் அந்தபொரிமாவைப் பரிமாறிக் கொண்டார்கள்,
அந்தச்சமயத்தில் அவிடத்தில் வேறே ஒருஅதிதிவந்தார்-அவனைக்கண்
டு(சத்துப்பிரஸ்தமுனிவரும்) எழுந்திருந்து நமஸ்க்காரம்பண்ணி அவ
ருக்குத்தன்பங்குமாவைக்கொடுத்தார்அதைவாங்கி அதிதியானவர் சாப்
பிட்டு பசிநீங்கவில்லையேயென்றுசொல்ல அதுகேட்டுச்சத்துப்பிரஸ்த்
தமுனிவனும் நானெங்கேபோவேனென்று விசாரப்படும்போது அவ
னுடையபிள்ளைகண்டு ஓய்பிதாவே நீரேன்விசனப்படுகிறீர் நீர் விசார
ப்படவேண்டாம் இதோஎன்னுடையபங்குமாயிருக்கின்றதென்று தன்
பங்குமாவையுமெடுத்து அந்த அதிதிக்குக்கொடுத்தான்அதைச்சாப்பி
ட்டும் அந்த அதிதியானவர் இன்னமும் என்பசி தணியவில்லை யென்று
சொல்ல, அதைக்கேட்டுச் சத்துப்பிரஸ்த்தனும்ஐயாஅதிதியே- இன்ன
முந்தேவரீருடைய பசிதீரவில்லையென்றுசொன்னால் நான் எங்கேபோ
ய்கேட்கிறதென்று விசனப்படுகையில், அதைக்கேட்டிருந்த குணவதி
யான அவன்மருமகளும் ஐயாநீங்களேன் ஆலோசனைபண்ணுகிறீர் இ
தோஎன்பங்குமா விருக்கிறதென்றுமாமனாராகியசத்துப்பிரஸ்த்தமுனி
வனுக்குத் தேறுதல்சொல்லி தன்பங்குமாவையும் எடுத்துஅந்த அதிதி
கையிற்கொடுத்தாள்,அதைவாங்கி அந்த அதிதியானவர்சாப்பிட்டு சந்
தோஷமடைந்துசத்துப்பிரஸ்த்தமுனிவனைப்பார்த்து-ஓய்சத்தியசம்ப
ன்னா,தர்ம்மகுணளா,நான்தர்ம்மதேவன் -நான் உங்களுடைய இருதயத்
தைச்சோதிக்க ஒரு அதிதியைப்போலவந்தேன் - இப்போது உங்களு
டையதயாளகுணத்தைக்கண்டு மெச்சினேன் நீங்களெல்லாரும்இந்தச்
சரீரத்துடனே இந்ததிவ்வியவிமானத்திலேறிக்கொண்டுசுவர்க்கலோகத்

திற்குப்போங்கோள் இதோவிமானம்வந்திருக்கின்றதென்று சொல்லி
அந்த அதிதியானவர் மாய்கையாய்ப்போய்விட்டார்அப்போதுதானே
தேவேந்திரனுடைய சாரதியாகிய மாதலியானவன் ஒருதெய்வவிமான
த்தைக்கொண்டுவந்து அவர்களுக்குமுன்னேநிறுத்தி அந்தச்சத்துப்பிர
ஸ்த்தமுனிவனைப்பார்த்துஓய்ஐயா நீங்களெல்லாரும் இந்த விமானத்தி
ன்மேலேறுங்கோளென்றுசொல்ல,அதுகேட்டுச் சத்துப்பிரஸ்த்தமுனி
வனும்சற்றுநேரம் ஆலோசனைசெய்து மாதலியைப்பார்த்து ஓய்தேவ
சாரதியேஎன்னுடைய வார்த்தையைக்கேள் பூலோகத்திலிருக்கப்பட்ட
பிர்ம்ம-க்ஷத்திரிய-வைசிய- சூத்திரரென்று சொல்லப்பட்ட நான்குவரு
ணத்தார்களில்எவர்களாகிலும் ஒருவர்அவர்கள்செய்த புண்ணியபலத்
தினால் தெய்வலோகத்திற்குவந்துசேர்ந்து அவிடத்திலுண்டான தேவ
தா சவுக்கியங்களை யனுபவித்துக்கொண்டு தேவரிஷிகளுடனே கூடிக்
கொண்டிருக்கும்போது சிறிதுநாளையில் தேவர்கள் வந்து நீங்கள் பண்
ணின புண்ணியமெல்லாம் அனுபவித்துத்தீர்த்து இனிமேல் பூலோகத்
திற்குப்போங்கோளென்று அவர்களைப்பிடித்துப் பலவத்காரமாய்த்தலை
கீழாய்விழும்படி பூமியிற்றள்ளி விடுவார்களல்லவா! ஆகையினால்அப்ப
டிப்பட்ட அற்பகாலசுகத்திற்கு நான்வரமாட்டேன் இன்னஞ்சிலகாலம்
இவிடத்தில்தானே வானப்பிரஸ்த்தனாயிருந்துகொண்டு தவஞ்செய்துஎ
ன்றைக்கும் அழியாத பதவியான பிர்ம்மலோகத்தை யடைகிறேன்ஆத
லால் நீஇந்தவார்த்தையெல்லாந் தேவேந்திரனிடத்திற்போய் சொல்லெ
ன்றுசொல்ல அதுகேட்டு அந்தமாதலியும் அப்படியே அந்தவிமானத்
தைத் திருப்பிக்கொண்டு அமராவதிபட்டணத்திற்குப்போய் அந்தவார்
த்தையையெல்லாந் தேவேந்திரனுடனே சொன்னான். அதுகேட்டுதே
வேந்திரனும் சத்துப்பிரஸ்த்த முனிவனுடையவார்த்தைக்குமெச்சிஅந்
தமாதலியைப்பார்த்து அப்படியானால் தர்ம்மதேவனுடைய சொல்லுக்
குப் பிசகுவரலாகுமோ நல்லது நீபோய் அந்தச்சத்துப்பிரஸ்த்தமுனி
வனைக் குடும்பத்துடனே விமானத்திலேற்றிக்கொண்டு சத்தியலோகத்
திற் கொண்டுபோய் விட்டுவாவென்று செலவுகொடுத் தனுப்பினான் அ
துகேட்டு மாதலியானவன் மறுபடியும்பூலோகத்திற்குவந்து சத்துப்பி
ரஸ்த்த முனிவனைக்கண்டுதெண்டனிட்டுஐயா, உங்களுடைய கருத்தின்ப
டியே மேகவாகனனாகியதேவேந்திரன் செலவுகொடுத்தார் ஆதலால்தே
வரீர்குடும்பத்துடனே அதிசீக்கிரத்தில் இந்த விமானத்திலேறிக்கொண்
டு பிர்ம்மலோகத்திற்கு வாருங்கோளென்றுசொல்ல, அதுகேட்டுச் சத்
துப் பிரஸ்த்தமுனிவருஞ் சந்தோஷித்து பெண்சாதி,பிள்ளை,மருமகள்,
இவர்களோடேகூட அந்தவிமானத்தின்மேரி லேறிக்கொண்டு சகலதே
வகணங்களும்புடைசூழ்ந்துவரத்தக்கதாகச் சத்தியலோகத்திற்குப்போ
னார் அதுதெரிந்துசத்தியலோகவாசிகளாகிய தேவரிஷிகள்- பிர்ம்மரிஷி
கள்-ராஜரிஷிகள்-முதலானவர்களும்எதிரேவந்துசத்துப்பிரஸ்த்தமுனிவ
னை ஆலிங்கனம்பண்ணிக்கொண்டு மங்களவைபத்துடனே பிர்ம்மலோகத்

திற்கு அழைத்துக் கொண்டுபோனார்கள் அந்த இந்திரசாரதியாகிய மாதலியும் அவர்களைக்கொண்டுபோய் பிர்ம்மலோகத்தில் விட்டுவிட்டு விமானத்தைத் திருப்பிக்கொண்டு மறுபடியுஞ் சுவர்க்கலோகத்திற்குப் போனான். கேட்டீர்களோசபையார்களே அந்தச்சத்துப்பிரஸ்த்தமுனிவன் தானம்பண்ணின பொரிமாவில்ஓர் அணுமாத்திரம் என்சரீரத்தில்விழுந்தபடியினால் என்னுடைய சரீரம் ஒருபுறம் பொன்னாச்சுது மற்றஒருபுறமும் எப்போது பொன்னாகுமோவென்று தர்ம்மபுத்திரர் செய்கிற யாகத்தைக் கேள்விப்பட்டுவந்தேன் இந்த யாகத்தினால் என்னுடைய சரீரம் பொன்னாகாமற்போச்சுது ஆகையினால் அந்தச் சத்துப்பிரஸ்த்த முனிவன்செய்த தானத்திற்குமுன் இந்த தர்ம்மநந்தனர் செய்த தானம் சரியல்லவென்றுசொல்லி அந்தக் கீரிப்பிள்ளையானது அங்கேகிடக்கின்ற எச்சிலைகள்பேரில் விழுந்து புரண்டு அதுகளால் ஒருபயனையும் பெறாமல் கடைசியில் ஸ்ரீகிருஷ்ணபகவான் போஜனம்பண்ணின இலைமேல் விழுந்து புரண்டு இரண்டுபுறமும் பொன்னாகிமறுபடியும்அந்தச்சபைக்குவந்து இந்த தர்ம்மநந்தனர்செய்த தானமுஞ் சரிதானென்று சொல்லிப்போய்விட்டது.

அதுகேட்டு தர்ம்மநந்தனரும் ஆச்சரியமடைந்து கிருஷ்ணமூர்த்தியைப்பார்த்து-ஐயா, கிருஷ்ணா, தேவகிநந்தனா, சிசுபாலமர்த்தனா, காளிங்கநிர்த்தனா, கம்சசம்மாரா, பக்தவத்சலா, பரமதயாளா, கோபிகாரமணா, கோவிந்தா, யாதவகுலேஸ்வரா, அந்தக்கீரிப்பிள்ளைசொல்லிப்போன வசனத்தைநன்றாய்ஆலோசித்துப்பார்க்குமிடத்தில்-பசு-பக்ஷிகள் - ஜலஜெந்துக்கள்முதலானசீவவதைசெய்துதர்ம்மம்பண்ணுகிறதைப்பார்க்கிலும்தபோவிரதமார்க்கமே உத்தமமென்றுதோற்றுகின்றதல்லவோ அதல்லாமலும் பூர்வத்தில் அகஸ்த்தியமகாமுனிவரும் அன்னதானம்பண்ணி அதனால்அவரும்மகிமையைப்பெற்றார், திலீபன்-மாந்தாதா-முதலானமகாராஜாக்களெல்லாரும்அன்னதானம்பண்ணிஅதனால்மகிமையையடைந்தார்கள். ஆகையினால் பூலோகத்தில் எவ்வகைப்பட்ட தானதர்ம்மங்கள் செய்கிறதைப்பார்க்கிலும் அன்னதானஞ்செய்கிறதே முக்கியமாய்க்காணுகின்றது, இதுவல்லாமல் எந்தத்தானங்களிலும் அன்னதானமேயதிகமென்று (அன்னதாதா சுகீபவாவென்றும்) சர்வத்திர சாதாரணமாய்ச் சொல்லுகின்றார்கள் அல்லது ஒருகாலத்தில் லக்ஷம் பிராமணர்களுக்கு அன்னதானஞ் செய்விக்கும்போது பேரிகையானது சற்றேற ஒரு நிமிஷம் அடிபடும் அப்படிக்கிருக்க நாம் இந்த அஸ்வமேதயாகஞ் செய்யத் தொடங்கின நாள்முதல் இதுபரியந்தமும்- இராத்திரியும் பகலும், இடைவிடாமல் அநேகமாயிரம் பேரிகைகள் அடிபட்டு முழங்கிக்கொண்டேயிருந்து நம்முடைய யாகத்திற்கு வந்த நாலு வர்ணத்தார்களிலேயவர்களும் போஜன பக்ஷணங்களினாலும், வஸ்த்திராபரணங்களினாலுந், திருப்தியடையாமற்போனவர்களில்லை, சகலமானபேர்களுந் திருப்தியடைந்தார்கள் - இப்படிக்கெல்லாம் தேவரீருடைய கிருபாகடாக்ஷத்தி

னால் ஒரு விக்கினமுமில்லாமல் நிர்விக்கினமாய் நடந்த யாகத்தை இப்போது இலேசாக எளிதமாய்ச்சொல்லியதனால் அது கீரிப்பிள்ளைதானோ, அல்லது ஏதாகிலும் ஒரு முன்னிலையினால் மாயாவடிவமாய், வந்த கீரிப்பிள்ளையோ இதுகளையெல்லாம் விவரமாய் என்னுடைய சந்தேகந்தீரும்படி சொல்லுமையா வென்றுகேட்க, அதுகேட்டு, ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியுந் தர்ம்மநந்தனைப்பார்த்து, புன்சிரிப்பாகச்சிரித்து, சற்றே தம்முடைய ஞானதிருஷ்ட்டியினால் யோசித்து - ஐயா, தர்ம்மநந்தனா, இப்போது இந்த மகாசபையில் அச்சமில்லாமல்வந்து நீர்செய்தயாகத்தை அற்பமாகச்சொல்லிப்போன கீரிப்பிள்ளையை ஆரென்று கேட்டீராகில், அதைச்சொல்லுகிறேன் அஃதெப்படியென்றால், பூர்வகாலத்தில் ஜெமதக்கினியென்பவர் முன்வகித்திருந்த கோபத்தைவிட்டு சாந்தகுணத்தை வகித்துக்கொண்டிருந்தகாலத்தில் ஒருநாள் அவருடைய தகப்பனாருக்குத் திவசம்வந்தது - அன்றையதினம்ஒரு பசுவினுடைய பாலைப்பாத்திரத்தில் கறந்துகொண்டுவந்து ஓரிடத்திற் பத்திரப்படுத்தி வைத்திருக்கும்போது, அதுதெரிந்து கோபதேவனும் அவருடைய பொறுமையைச் சோதிக்கவேண்டுமென்றெண்ணி ஒருமனிதனைப்போலவந்து அந்தப்பாலைக் குப்புறப்பூமியிற் கவிழ்த்துவிட்டான் - அதுகண்டு அந்த ஜெமதக்கினியென்பவர் கோபித்துக்கொள்ளாமல் சாந்தமாயிருந்துவிட்டார்.

அதுதெரிந்து அவருடையபிதுர்தேவதைகள் கோபங்கொண்டுநீ வியர்த்தமான சிரார்த்தம்பண்ணபடியினால் நீ கீரிப்பிள்ளையாகக் கடவாயென்றுசாபமிட்டார்கள் - அதுகண்டு அந்தஜெமதக்கினியும் பயந்து அந்தப் பிதிர்தேவதைகளுக்கு நமஸ்க்காரம்பண்ணி ஐயா, பிதிர்க்களே இந்தச்சாபம் எந்தகாலத்தில் விமோசன மாகுமென்றுகேட்க, அதுகேட்டு அவர்களும் அவனைப்பார்த்து பூலோகத்தில் எவர்களாகிலும் பண்ணின மகாதானத்தைக்கண்டு அற்பதானமென்றுசொல்லிநிந்திப்பாயானால் அந்நாளில் இந்தச்சாபம்விமோசனமாகி உன்னுடைய கீரிப்பிள்ளைரூபம் போமென்று சொல்லிப்போனார்கள் - ஆகையினால் அந்தக்கீரிப்பிள்ளையானது இந்தமகாசபையில்பயப்படாமல்வந்துபொரிமாதானம் பண்ணின பிராமணனுடையதர்ம்மத்திற்கு இந்தயாகஞ்சரியல்லவென்று நிந்தனைசெய்து தன்னுடைய சாபத்தை விமோசனம்பண்ணிக்கொண்டுபோய்விட்டதென்றுசொல்லியருளினார்-அதுகேட்டுதர்ம்மபுத்திரருஞ் சந்தேகந்தீர்ந்து மகாசந்தோஷத்தையடைந்தார்- மற்றுமுண்டானபேர்களுஞ் சம்சயந்தீர்ந்து ஆனந்தமாயிருந்தார்கள்.

கேட்டீரோஜெனமேஜெயபூபாலகா-இப்படி தர்ம்மபுத்திரரானவர் மகாசம்பிரமத்துடனே அஸ்வமேதயாகத்தைச் செய்துமுடித்து சகலமானபேர்களுக்குந் திருப்த்தியாகும்படி அபரிமிதமான தட்சிணைகள் போஜனகிர்த்தியங்கள் முதலான சர்வஉபசாரங்களுஞ்செய்துமுடிந்தபின்பு அந்தத்தர்ம்மநந்தனரானவர் துரௌபதாதேவியுடனும் தம்பிமார்க

ளுடனுடம் பந்துஜனங்களுடனும்எழுந்துநின்றுமகாபயபக்தியுடனே பகதலப்பிரிய முனீந்திரர் - வியாசர் - மார்க்கண்டேயர் - நாரதர் - வசிஷ்டர் முதலாக யாகத்திற்குவந்த ரிஷியீஸ்வரர்களுக் கெல்லாஞ் சாஷ்டாங்கமாக நமஸ்க்காரஞ்செய்தார் அதுகண்டு அவர்களெல்லாருஞ் சந்தோஷமடைந்து ஒருமுகமாய்நின்றுவேதமந்திரங்களைச்சொல்லி இந்த தர்ம்மபுத்திரர் எப்போதுஞ்சகலசவுக்கியராய்தேவப்பிராமணவிசுவாசராய்-மந்திரி பிரதானிகளுடனும் புத்திர பவுத்திரகளத்திராதி சிநேகிதர்களுடனும் அபிவிர்த்தியுண்டாகி சுகசீவியாய் வாழ்ந்திருக்கக் கடவரென்று ஆசீர்வாதஞ்செய்து கிருஷ்ணபகவானுடைய ஆசீர்வாதத்தைப் பெற்றுக்கொண்டு தர்ம்மபுத்திரர்முதலானராஜாக்களிடத்திலும் செலவு பெற்றுக்கொண்டு அந்தமுனீஸ்வரர்களெல்லாரும் தங்கள் தங்களுடைய ஆசிரமத்திற்குப்போனார்கள். பகதலப்பிரியமுனீந்திரரும் அந்தப்படியே அவர்களிடத்திலெல்லாஞ் செலவுவாங்கிக்கொண்டு திருப்பாற்கடலின்மத்தியமாகிய சுவேததீபத்திற்குப்போய்விட்டார் - அப்பால் இவிடத்தில் கிராமப்பிரதிஷ்டை செய்யும்படி நினைத்து சந்திரகாசன்- வீரவர்ம்மன்- மயூரத்துவசன்- தாமனாத்துவசன்- அம்சத்துவசன்- நீலத்துவசன்- எவ்வர்ணசுவன்- அனுசாளுவன்-மேகவர்ணன் முதலான மகாராஜாக்களும்- தம்பிமார்களும்- திருதராஷ்டிரனும்- விதுரசஞ்சயர்களும்-சர்வாலங்கிருதராய்ப்புறப்பட்டு-ரதாரூடர்களாய் நடக்கவும்-குந்திதேவி-தேவகிதேவி- துரௌபதை- சுபத்திரை-ருக்குமணி-சத்தியபாமைமுதலான ஸ்திரீஜனங்களெல்லாரும்நவரத்தினமயமானரதங்களிலேறிக்கொண்டுநடக்கவும்- பப்பிரவாகன்- விஷ்வகேது-மேகவர்ணன்-சயிந்தவனுடைய குமாரனான விருதசந்திரன்- பிரத்தியுமனன்- அனிருத்திரன் முதலான குமாரவர்க்கங்களெல்லாங் குதிரைகளின்பேரி லேறிக்கொண்டு நடக்கவும், அதிற்சிறிது யாதவதுரைகளெல்லாம் மத்தகஜங்களின் பேரிலேறிக்கொண்டுநடக்கவும்- மற்றுமுண்டான தண்டநாயகர்கள் - சேனாதிபதிகள் - பிரதானிகள் - மந்திரி - சாமந்திரிகள் - தளவாய்கள் -அக்குரோணிநாயகர்கள் இவர்களெல்லாம் வண்டிகளிலும், தண்டிகைகளிலும், ஏறிக்கொண்டு நடக்கவும் - காலாள்களெல்லாம் பட்டாக்கத்திகள் - ஈட்டிகள் வல்லயங்கள்முதலான ஆயுதங்களைக் கையினிடமாகப் பிடித்துக்கொண்டு அணிவகுத்தாற்போல் வரிசைவரிசையாய் நடக்கவும்- இப்படிப்பட்டசகலசம்பிரமத்துடனே தர்ம்மபுத்திரமகாராஜாவானவர் கிருஷ்ணமூர்த்தியுடனும் பலராமருடனும்ரதாரூடராய்ப் புறப்பட்டு நால்வகைச்சேனைகளும் புடைசூழ்ந்துவரத்தக்கதாகத் தண்டுவிட்டு நடக்கும்போது- வெண்கலப்பேரிகைகள்- ஜெயபேரிகைகள் - டமாக்கள்- தப்பட்டைகள்- கிடுகு- எக்காளை - நாககரம்- புள்ளாங்குழல் - பூரி- தவளச்சங்குகள்- மணித்தாளம்- மல்லரி முதலான பூதினெட்டுவித வாத்தியங்களும் தாம்தாமென்று முழங்கவும் ரம்பை - யூர்வசி முதலானதேவஸ்திரிகளைப்பார்க்கிலும் அதிகரூபலா வண்ணியமுள்ள அநேகமாயிரம்

நாடகசாலைப் பெண்கள் கும்பல்கும்பலாய்வந்து தர்ம்மபுத்திர மகாரா
ஜாவுக்கு முன்பாகநின்று மகாஅபிநயத்துடனே பரதநாட்டியம் பண்
ணிக்கொண்டுவரவும்-காந்தர்வஸ்திரீகளிலும் அதிகசாமர்த்தியராகியஸ்தி
ரீஜனங்கள் அந்த தர்ம்மபுத்திரருக்கு முன்னேவந்துநின்று - தம்புரு-
யாழ்-கின்னரி-வீணை-ராவணாஸ்த்தம்-முதலான கருவிகளைமீட்டிக்கொண்
டு யாவருக்குஞ் சந்தோஷமுண்டாகும்படிவாணசுரங்களைப்பாடிக்கொ
ண்டுவரவும் - பாட்டகர்களெல்லாருங்கும்பல்கும்பலாய்வந்து தர்ம்ம நந்
தனைப்பார்த்து ஓய் அஸ்த்தினாபுரீஸ்வரா- குந்திதனயா- அகண்டித
வீரபராக்கிரமா- ஆ, தர்ம்மபுத்திராவென்று புகழ்ந்துகொண்டாடவும்,
திருச்சின்னங்களின்ஓசையானது பூர்வத்தில் தர்ம்மந்தப்பாமல் பன்னி
ரண்டுவருஷம்வனவாசமும் ஒருவருஷம் அக்கியாதவாசமுஞ்செய்துமு
டித்துபிற்பாடுதர்ம்மமேஜெயமென்று பதினெட்டுநாள் பாரதயுத்தஞ்
செய்து-பீஷ்மர்-துரோணர்-கிருபர்-அஸ்வத்தாமா-கர்ணன்-சல்லியன்-ஜ
யிந்தவன்-பகதத்தன்-அலம்பன் - துர்ச்சாதனன் - விகர்னன் முதலான
மேட்டானமேட்டிகளாகிய சுத்தவீரர்களையெல்லாம் ரணக்களத்திற்
கொன்றுவீரலட்சுமியையடைந்துகீர்த்திபெற்றகிரீட்டியாகிய அர்ச்சுன
ராசனுடையதமையனாகியவீராதிவீரர்வருகிறாரென்றும், அஷ்டதிசைக
ளிலுமுள்ள ராசாக்களையெல்லாஞ் செயித்துபிதாவினுடைய வார்த்தை
யைக்கடவாமல் ராசசூயயாகம்பண்ணிமுடித்துப்பிதாவுக்குப் புண்ணி
யலோகங்கொடுத்தபுண்ணியபுருஷர்வருகிறாரென்றும், துன்மார்க்கரா
னகலிபுருஷவம்சனாகிய துரியோதனன்செய்த இம்சைகளையெல்லாஞ்
சகித்துக்கொண்டிருந்துகடைசியில் அந்தமகாபாவியாகிய துரியோதன
னானவன் எத்தனைகபடவஞ்சனைசெய்தபோதிலும் அதுகளையெல்லாந்நி
விர்த்திபண்ணிதம்பியாகியவீமசேனனுடையகையினால்அவனைக்கொல்
லுவித்தபாராக்கிரமபுருஷர்வருகிறாரென்றும்,வீராதிவீரனான அர்ச்சுன
ராசனையனுப்பிக்காலகேயநிவாதகவசாளென்கிறஅன்பதுகோடி ராக்ஷத
வீரர்களையெல்லாங்கொல்லுவித்துதேவேந்திராதிதேவர்களுடையபயந்
தீர்த்து நிர்ப்பயமாக்கிரக்ஷித்தமகானுபாவர்வருகிறாரென்றும், சகலசீவ
கோடிகளுக்கும் மாதாபிதாக்களைப்போலிருந்துஒருநாளாகிலும்துக்கப்
படவொட்டாமல் காப்பாற்றுகின்ற பரமதயாளர்வருகிறாரென்றும்,பெ
ரியோர்களிடத்தில் பயபக்திவிசுவாசமுள்ளவராகியும் ராசநீதிவழுவா
தவராகியுமிருந்து ராச்சியபரிபாலனம்பண்ணப்பட்ட தேவபோக து
ரந்தரீகர் வருகிறாரென்றும், கிருஷ்ணபகவானுடைய சகாயத்தினால்அஸ்
வமேதக்குதிரையைவிட்டு அந்தக்குதிரையின்பிறகே மகா பராக்கிரம
சாலியான அர்ச்சுனராசனையனுப்பி, அங்க-வங்க-கலிங்க-காளிங்க- காஸ்
மீர-காம்போஜ-மிலேச்ச-மலையாள-பாஞ்சால-மச்ச-பாண்டிய-சோழ-க
ர்னாடக-முதலான-ஐம்பத்தாறு தேசங்கள்தோறும் அஸ்வமேதக் குதி
ரையைநடத்துவித்து அங்கங்கே எதிர்த்துவந்த சந்திரசாசன்- வீரவர்ம்
மன்முதலான மகாராசாக்களையெல்லாஞ் செயிப்பித்து அவர்கள்கையி

னால் அபரிமிதமான காணிக்கைகப்பங்களைப் பெற்றுக்கொண்டு அவர்
களையெல்லாந் தம்முடையவசம்பண்ணிக்கொண்டு மகாவைபவத்துட
னேபாதூலப்பிரியமுனீந்திரர்-வியாசர்-வசிஷ்டர்முதலான மகாரிஷிகள்
முன்னிலையில் அஸ்வமேதயாகஞ்செய்துமுடித்து பிர்ம்ம - க்ஷத்திரிய-
வைசிய-சூத்திரர்களாகிய நான்குவருணத்தார்களுக்கும் ஆசையடங்கத்
தக்கதாகத் தக்ஷணைகள்கொடுத்து அன்னதானம்-சொர்ன்னதானம்-பூதா
னம்-கோதானம்-கன்னிகாதானம்-வஸ்திரதானமுதலான ஷோடச மகா
தானங்கள்பண்ணி இகத்திலும் பரத்திலுங் கீர்த்திப் பிரதிஷ்டையைப்
பெற்று தர்ம்மசொரூபனாகி அஸ்த்தினாபுரத்தைப்பரிபாலனம் பண்ணு
கின்றதர்ம்மபுத்திரமகாராசாவானவர் வருகிறாரென்றும், அஷ்டதிசைக
ளுஞ்செவிடுபடும்படிமுழங்கவும், வெற்றிசங்குகளும் ஜெயஜெய மெ
ன்றுமுழங்கவும், பொற்பிரம்புக்காரர்கள்சேனைகளுக்குமுன்னே நின்று
மகாதர்ம்மக்கியானராகிய தர்ம்மசொரூபர் - பவனிவருகிறார் விலகிநில்
லுங்கோளென்று (சந்தடிவிலக்கிக்கொண்டு வரவும்) இரண்டு பக்கத்தி
லும் அனந்தமாயிரம்பேர்கள் வரிசைவரிசையாய் நின்றுக்கொண்டு கர்
ப்பூரதீவட்டிகள்பிடித்துக்கொண்டுவரவும், ஆகாசத்திலிருக்கின்ற தே
வேந்திராதிதேவர்கள் மகாசந்தோஷத்துடனே பாரிசாத புஷ்பங்களைச்
சலசலவென்றுவருஷிக்கவும், குளிர்ந்தகாற்றுவீசவும் இப்படிப்பட்ட
வைபவத்துடனே தர்ம்மநந்தனர் கிராமப்பிரதிஷ்டையாக பவனிவரும்
போது சேனைவெள்ளங்கள்நடக்கின்ற அதிர்ச்சியினால் பூமியதிர்ந்து க
யிலாசபதியாகிய பரமசிவனானவர் இமோர்ப்பர்வதத்தில்உலகமாதாவா
கியஉமையவளைத்திருக்கலியாணஞ்செய்துக்கொண்டகாலத்தில் அகத்தி
யமுனிவரும் அந்தத்திருக்கலியாணத்திற்குப்பொதியமலையைவிட்டெ
ழுந்தருளிவந்தபோது உத்தரதிசையானது தாழ்ந்து தக்ஷணதிசையான
து எப்படிஉயர்ந்துநின்றதோ அப்படிபோலநான்குதிக்கிலுமுள்ள ராச
கூட்டங்களெல்லாம் ஒருமுகமாய்த்திரண்டு நடக்கின்றபடியினால் அப்
போது அஸ்த்தினாபுரமானது சற்றேதாழ்ந்துநின்றது. அப்படிதாழ்ந்து
நின்றதுஎப்படியிருந்ததென்றால், முன்னால்அர்ச்சுனனானவன் நாரதமு
னிவருடைய வாக்கியத்தைக்கடவாமல் தீர்த்தயாத்திரைபண்ணிவருகை
யில் துவாரகாபுரிக்குவந்து ரூபலாவண்ணியசுபத்திரையைக்கண்டு கப
டசந்நியாசிவேஷமாயிருந்து ஒருவரையும்அறியாமல் சுபத்திரையைத்
திருடிக்கொண்டுவந்து அஸ்த்தினாபுரஞ்சேர்ந்தபிறகு கிருஷ்ணதேவரா
னுமதியினால் கலியாணம்பண்ணிக்கொண்டான்-அதையெல்லாம் பலரா
மர்கேள்விப்பட்டு மகாகோபங்கொண்டு அந்ததுன்மார்க்கனாகிய அர்ச்
சுனன் என்னையறியாமல் கபடசந்நியாசிவேஷம்போட்டுக்கொண்டுவந்
து என் தங்கையைத்திருடிக்கொண்டுபோனானல்லவா அவனைநான் கொ
ல்லாமல் விடுகிறதில்லையென்று மகா ஆக்ருஷத்துடனேவந்து தன்னு
டையஆயுதமாகியகலப்பையினால் இந்தஅஸ்த்தினாபுரத்தைப் பேர்த்து
ச்சமுத்திரத்தில் தள்ளுகிறேனென்றுசொல்லித் தம்முடைய கலப்பை

யினுண்ணியை அஸ்த்தினபுரத்துக்கோட்டைவாசலி னின்றினமாத்திரத்தி
லே, அந்தக்கோட்டையினுடையசிகரமானதுஒருபுறந்தலைகீழாகத்தாழ்ந்
தது - அதிலே கிருஷ்ணபகவானுங் கேள்விப்பட்டுவந்து சமாதானஞ்
சொல்லி பலராமருடைய கோபத்தைத்தணித்தார் - அதின்பிறகு அ
வருங்கோபந்தணிந்து சாந்தமாய்க் கலப்பையையெடுத்துக்கொண்டு து
வாரகைக்குப்போனார்-அந்தஅஸ்த்தினபுரம் எப்போதும்போல சமமா
ய்நின்றது-அப்படியே இப்போதுஞ்சேனைகளாகியகலப்பையினால்தாழ்
ந்தது-இந்தவிதமாய்தர்ம்மநந்தனர் சர்வாடம்பரத்துடனே கிராம பி
ரதிஷ்டைபண்ணி மறுபடியும் நல்லசுபமுகூர்த்தத்தில்திரும்பி அஸ்த்தி
னபுரத்திற்குப் பிரவேசித்து அரண்மனைக்குவந்து சேர்ந்துரதத்தைவி
ட்டிழிந்து சகல ஆடம்பரங்களையும் நிறுத்தி அவர்களையனுப்பி வி
துரசஞ்சயர்களினால் சந்திரகாசன் முதலாகியசகலமான ராசாக்களுக்கு
ம்வெவ்வேறே விடுதிகளமர்த்திவைத்து தாம்தம்பிமார்களுடனும் ஸ்ரீகி
ருஷ்ணபகவானுடனும் அரண்மனைக்குள்ளேபோனார். பிற்பாடு தர்ம்ம
நந்தனரும் மறுநாள் உதயத்திற்குமுன் எழுந்திருந்து காலோசிதகாரிய
மான நித்தியகர்ம்மானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு சர்வாலங்
கிர்த பூஜிதராய்ப்புறப்பட்டு தம்பிமார்கள்-குமாரவர்க்கங்கள்-மந்திரி சா
மந்தர் பிரதானிகள் பரிவாரங்கள் புடைசூழ்ந்துவரத்தக்கதாகக் கொலு
மண்டபத்திற்குவந்துசேர்ந்து(ரத்திநசிம்மாசனத்தின் பேரிலுட்கார்ந்து
கொலுவாயிருந்தார் அப்போது ஸ்ரீகிருஷ்ணபகவானும் தம்முடைய நி
த்தியகருமங்களைமுடித்துக்கொண்டுசர்வாலங்காரத்துடனே புறப்பட்டு
பலராமர்-சாத்தகி முதலான யாதவவீரர்களுடனே கொலுமண்டபத்
திற்குவந்துசேர்ந்து தர்ம்மபுத்திரனைக்கண்டு சாஷ்டாங்க நமஸ்க்காரஞ்
செய்துஅவர்போடுவித்த(ரத்திந)சிம்மாசனத்தின்பேரி லுட்கார்ந்திருந்
தார் மற்றுமுண்டான சந்திரகாசன் முதலான மகாராசாக்களெல்லாரும்
அவரவர்களுடையமந்திரிபிரதானிகளுடனேவந்து தர்ம்மநந்தனர்-பலரா
மர்-கிருஷ்ணதேவர்-இவர்களுக்கு நமஸ்க்காரம்பண்ணி பிற்பாடு தர்ம்ம
ராஜாவையுங் கிருஷ்ணமூர்த்தியையுஞ் சூழ்ந்து உட்கார்ந்தார்கள். அப்
போதுசந்திரகாசன்முதலான மகாராசாக்களெல்லாரும் கிருஷ்ணபகவா
னையும் தர்ம்மபுத்திரனையும் பார்த்து ஐயாலோகநாயகா தர்ம்மபுத்திரா
நாங்களெல்லாரும் உங்களுடைய அனுக்கிரகத்தினால் யாகதரிசனைபண்
ணிஅதனால் நாங்கள்அநேகஞ்சென்மங்களில் அறிந்தும் அறியாமலும்
பண்ணினபாவங்களையெல்லாம்போக்கடித்துக்கொண்டு புண்ணியபுரு
ஷர்களாய்கிருதார்த்தர்களாகிறோம் எங்களுடையவமிசத்தாரெல்லாரும்
புண்ணியலோகத்தையடைந்தார்கள்- அதற்குச் சமுசயமில்லை. நாங்க
ளிவிடத்திற்குவந்துஒருவருஷகாலமாச்சுதே இதுவரையில் எங்களுடை
யதேசமெல்லாம் எப்படியிருக்கின்றதோ ஆதலால் நாங்கள்எங்களுடை
யதேசத்திற்குப் போய்வருகிறோம் எங்களுக்குச் சந்தோஷகரமாய் செ
லவுகொடுத்தனுப்புங்களென்று சொன்னார்கள், அதுகேட்டு கிருஷ்ண

தேவரும்மெய்தானென்று தர்ம்மநந்தனரைப்பார்த்து ஐயாராசேந்திரா
இவர்களெல்லாரும் தங்கள்தேசங்களுக்குப் போகவேண்டுமென்று கே
ட்கிறபடியால் அவர்களுக்குச் செலவுகொடுத்துஅனுப்பிவையுமென்று
சொல்ல,அதுகேட்டு தர்ம்மநந்தனரும் அப்படியேநல்லதென்று சம்ம
தித்துவெகுசந்தோஷத்துடனே கிருஷ்ணபகவானுடைய அனுமதியின்
பேரில்விதுராஞ்சயர்களால் நவரத்நகிரீடங்கள்முதலானபூஷணவகை
களும்சால்வைகள் முதலானதிவ்வியவஸ்த்திரங்களும்வெகுவாயழைப்பி
த்து அர்ச்சுனராசனுடையகையினால் சந்திரகாசன்முதலானராசாக்களுக்
கெல்லாம்வெகுமதிபண்ணுவித்து அவர்களுடைய மந்திரிபிரதானிகள்
முதலானசகலசேனைகளுக்கும் போதும்போதுமென்று சொல்லத்தக்க
தாகநல்லவஸ்த்திராபரணங்களைவெகுமானம்பண்ணுவித்து, அதுவுமல்
லாமல் ஒவ்வொருராசாக்களுக்குமூன்றுவெள்ளையானைகளும் பஞ்சகல்யா
ணங்களுமுள்ளஐந்துஉத்தமாஸ்வங்களும், ஒருகநக தண்டிகையும், ஒரு
ஜோடுவச்சிராங்கியும்,இந்தப்பிரகாரம்அந்தமஹாராஜாக்களுக்கெல்லாம்
வெகுமானம்பண்ணி அவர்களுடைய பட்டதேவிகளாகிய ராஜஸ்திரீக
ளெல்லாருக்கும்- மாணிக்கத்தாழ்வடங்கள்-நவரத்தினச்சரடுகள்- நவரத்
தினச்சேலைகள்- முத்துரவிக்கைகள்-பச்சைக்கற்பாவாடைகள்-இதுகளெ
ல்லாம் வெகுமானம்பண்ணி அதுவுமல்லாமல் தண்டிகைகள்- வண்டில்
கள்-மூடுபல்லக்குகள் முதலான வாகனாதிகளுங்கொடுத்து தர்ம்மபுத்தி
ரரும் மகாசந்தோஷத்துடனே சகலமானவர்களுக்கும்பிரியவசனமாய்
உபசாரணைகள்சொல்லி அவர்களைச்சந்தோஷப்படுத்திவைத்து அவர்களை
ப்பார்த்து ஓய்மஹாராசாக்களே நீங்களெல்லாரும் மகாபுண்ணியவான்
கள் மகாவீரபராக்கிரமசாலிகள் அப்படிப்பட்ட உங்களையெல்லாம் இ
ந்த கிருஷ்ணபகவானுடைய மகிமையினால் நாங்கள்கண்டோம் நீங்கள்
எங்கள்பேரில் கிருபைவைத்துப்போய் வாருங்கோளென்றுசொல்லிச்
செலவுகொடுத்தனுப்பினர்.

அவர்களும் வெகுசந்தோஷத்தையடைந்து தங்கள் தங்கள் மந்தி
ரிபிரதானிகளுடனே கூடிக்கொண்டு தர்ம்மநந்தனருக்கும் கிருஷ்ணப
கவானுக்கும்-பலபத்திராமருக்கும் நமஸ்க்காரம்பண்ணிவீமார்ச்சுனர்
முதலானபேர்களுக்கும்வந்தனைபண்ணி குந்திதேவி-தேவகிதேவி- இவ
ர்களிருவருக்கும்நமஸ்க்காரஞ்செய்து இவர்களெல்லாருஞ்சுகசீவியாய்ப்
போய்வாருங்கோளென்று செலவுகொடுத்தனுப்ப,அந்தப்படியே சந்
திரகாசன்முதலான மகாராசாக்களெல்லாரும் அவரவர்களுடைய வாக
னங்கள்பேரிலேறிக்கொண்டு தங்கள்தங்கள் சேனைகளுடனே அஸ்த்தினா
புரத்தைவிட்டுப் புறப்பட்டு நடந்தார்கள்-குமுத்துவதி-பிரபாவதி-சண்
பகாவதிமுதலான ராஜஸ்திரீகளெல்லாரும் குந்திதேவி - தேவகிதேவி
முதலானவர்களெல்லாம் வந்தனைவழிபாடுகள்செய்து அவர்களிடத்திற்
செலவுவாங்கிக்கொண்டு கனகதண்டிகைகள்முதலான வாகனங்களே

ரிலேறிக்கொண்டு தங்கள் தங்களுடைய புருஷர்களுக்குப்பின்னாக நடந்
தார்கள். இப்படி சகலதேசத்துராசாக்களும், வெண்சலப்பேரிகை, ஜெ
யபேரிகைநாகசுரமுதலான பதினெட்டுவகை மேளவாத்தியங்களும் தா
ம்தாமென்று முழங்கத்தக்கதாக அஸ்திநாபுரத்தைவிட்டுப் புறப்ப
ட்டுநடந்துவெவ்வேறு தண்டுகளாய்ப்பிரிந்து அவரவர்களுடைய பட்ட
ணங்களிற்போய்ச்சேர்ந்தார்கள். இப்பால், அஸ்திநாபுரத்தில் தர்ம்மபுத்
திரமகாராஜாவானவர் தமது தங்கையாகிய துர்ச்சேலைக்கும் அவள்குமா
ரனாகிய விருதசந்திரனுக்கும் ஆடையாபரணங்கள் ஆனைகள், குதிரைக
ள், முதலானவஸ்துக்களெல்லாம்வெகுமானமாகக்கொடுத்து அவர்களை
ப்பார்த்து நீங்கள் இனிமேல் சுகமாய் உங்களுடைய சிந்துதேசத்திற்கு
ப்போய் ராச்சியபரிபாலனம் பண்ணிக்கொண்டிருந்து இவிடத்திற்கு
ம் சுபாசுபங்களுக்கு நீங்கள் வரப்போகஇருங்களென்றுசெலவுகொடுத்
தனுப்பிவிட்டார். அவர்களும் கிருஷ்ணபகவான் தர்ம்மநந்தனர்முதலா
னவர்களிடத்திற் செலவுபெற்றுக்கொண்டு தங்களுடைய சிந்துதேசத்தி
ற்குப்போய்ச்சேர்ந்து சுகமாயிருந்தார்கள். அப்போது பப்பிரவாகனும்
சித்திராங்கதையும் உலுவசியும் அஸ்திநாபுரத்திற்றானே அர்ச்சுனராஜ
னிடத்திலிருந்து சுகசீவியாய் வாழ்ந்துக்கொண்டிருந்தார்கள். இந்தப்
பிரகாரம் ஐம்பத்தாறுதேசத்து ராஜாக்களும் அவரவர்களுடைய தேசத்
திற்குப் போய்விட்டபின்பு கிருஷ்ணபகவானும் - சாத்தகி - பலராமர்-
முதலான யாதவவீரர்களுடனே-பின்னையும் ஒருமாதவரைக்கும் அஸ்தி
நாபுரத்தில் தர்மபுத்திரரிடத்தில்தானே சகலவேடிக்கைகளுடனேயி
ருந்து பிறகு ஒருநாளந்தபகவானானவர் தர்ம்மநந்தனரைப்பார்த்து ஓய்
தர்ம்மநந்தனா நாங்களெல்லாரும் இவிடத்திற்குவந்து நெடுநாளாச்சுதே
அவிடத்தில் துவாரகாபுரியில் வசுதேவர்மாத்திரம் ஒண்டியாயிருக்கிறா
ரே பட்டணம் எப்படியிருக்கின்றதோ தெரியாது, நான்இங்கேதானே
யிருந்துவிட்டால் அவிடத்துகாரியங்களெப்படிநடக்கும் அங்கும்இங்
குமா யிருக்கவேண்டியது. ஆகையினால் இன்றையத்தினம் எங்களுக்கு
துவாரகாபுரிக்குப் போகும்படி செலவுகொடுத்தனுப்பிவையுமென்று
கேட்க, அதுகேட்டு தர்மநந்தனரும் கிருஷ்ணமூர்த்தியைப் பார்த்து
ஐயா, லோகநாயகா, தேவரீர் இன்னஞ் சிலநாள் இவிடத்திலிருக்கலாகா
தோ ஆனாலும் இன்றையத்தினமாத்திரம் இருங்கோளென்றுசொல்ல
அதுகேட்டு ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியும் தர்ம்மநந்தனரைப்பார்த்து ஓய்தர்
ம்மசுதா, நாம் இங்கேயிராமல் எங்கேபோகிறோம் பத்துநாள் பொறு
த்து மறுபடியும்வருகிறோம் இன்றையத்தினம் நல்லநாளா யிருக்கின்ற
படியால் எங்களுக்குச் சந்தோஷகரமாய்ச் செலவுகொடுத் தனுப்புமெ
ன்றுபிரியவசனமாகச்சொல்ல, அதுகேட்டு தர்ம்மநந்தனரும் அப்படி
யேநல்லதென்று சம்மதித்து கிருஷ்ணபகவான் - பலபத்திரராமர் முத
லானவர்களுக்கெல்லாம் போஜன கிர்த்தியங்களைச் சம்பிரமமாய்நடப்பி
த்து தமது தம்பியாகிய அர்ச்சுனனுடையகையினால்அவர்களையெல்லாம்

[illegible]னங்களிடத்திலும் நாங்க-
மென்று பிரியவசனமாகச்சொல்லி செலவுபெறலுக-
தனர் முதலான சகலமானபேர்களும் கிருஷ்ணமூர்த்தி முதலானவர்க
ளுக்கு வழிவிடும்படி பின்னே தொடர்ந்து நடக்க, கிருஷ்ணதேவரும்
பலபத்திராமர்- சாத்தகி - கிருதவர்ம்மன் முதலான யாதவவீரர்களுட
னேமகாசந்தோஷமாய் ரதத்திலேறிக்கொண்டு நடந்தார்கள் - அப்போ
து தேவகிதேவி - ருக்மணிதேவி- சத்தியபாமை முதலான ஸ்திரீஜனங்க
ளெல்லாரும்- குந்திதேவி- காந்தாரி - துரௌபதாதேவி - சுபத்திராதே
வி முதலான ஸ்திரீஜனங்களிடத்தில் செலவுவாங்கிக்கொண்டு கனகதண்
டிகையிலும், முத்துப்பல்லக்கிலும், ஏறிக்கொண்டு அந்த கிருஷ்ணபக
வான் முதலான யாதவவீரர்களுக்குப் பின்னாகநடந்தார்கள் - இப்படி
கிருஷ்ணபகவானும் - பலராம சம்மதராய் யாதவவீரர்களுடனேகூட
அஸ்த்தினாபுரத்தைவிட்டுப் புறப்பட்டு மகாசம்பிரமத்துடனே தர்ம்ம
புத்திரர் முதலானவர்களும் பின்னேநடந்துவர ஒரு குரோசனையாகிய
இரண்டுநாழிகைவழிதூரம்நடந்து அப்பால் ஒருவர்க்கொருவர் வந்தனை
நமஸ்காரங்களை ஆதரித்துக்கொண்டு இந்தமட்டும் நில்லுங்கள் நில்
லுங்கள் நீங்கள் வரவேண்டாம், நாங்கள் போய்வருகிறோமென்று தர்ம்
மநந்தனர் முதலானவர்களிடத்திற் செலவுபெற்றுக்கொண்டு நடந்து
துவாரகாபுரிக்குப்போய்ச்சேர்ந்து அவிடத்தில் கிருஷ்ணதேவரும்பல
பத்திராமரும்வேடிக்கையாய் தர்ம்மநந்தனர்செய்தயாகவிநோதங்களை
ஒருவர்க்கொருவர் பேசிக்கொண்டு சுகசீவியாயிருந்தார்கள் - அப்பால்
அவிடத்தில் தர்ம்மபுத்திரரானவர் தம்பிமார்கள், பிள்ளைகள், பேரமார்,
மந்திரிபிரதானிகள் சாமந்திரிகள், முதலான சகலசேனைகளுடனும்போ
ய் கிருஷ்ணபகவான் முதலானவர்களைப் பிரயாணப்படுத்தி அனுப்பிவி
ட்டு மறுபடியும் அஸ்த்தினாபுரத்திற்குவந்து கொலுமண்டபத்தில்ரத்ந
சிம்மாசனத்தின்பேரில் உட்கார்ந்துதம்பிமார்கள் முதலான சகலசேனை
களும்புடைசூழ்ந்திருக்கத்தக்கதாகக் கொலுவிலிருந்து தர்ம்மமேஜெய
மென்று சதாகாலமுந்தர்ம்மத்தையே சிந்தித்துக்கொண்டு தம்முடைய
பட்டணத்தில் மாதமும்மாரிபொழிந்து பயிர்பச்சைகள் நன்றாய் விளை
ந்துபலதானியங்களும் அபிவிர்த்தியாய்ப் பட்டணத்திலுண்டான சகல

ரிலேறிக்கொண்டு தங்கள் தங்களுடைய புருஷர்களுக்குப்பின்னாக நடந்தார்கள். இப்படி சகலதேசத்துராசாக்களும், வெண்சலப்பேரிகை, ஜெயபேரிகைநாகசுரமுதலான பதினெட்டுவகை மேளவாத்தியங்களும் தாம்தாமென்று முழங்கத்தக்கதாக அஸ்த்தினாபுரத்தைவிட்டுப் புறப்பட்டுநடந்துவெவ்வேறுதண்டுகளாய்ப்பிரிந்து அவரவர்களுடைய பட்டணங்களிற்போய்ச்சேர்ந்தார்கள். இப்பால், அஸ்த்தினாபுரத்தில் தர்ம்மபுத்திரமகாராஜாவானவர் தமது தங்கையாகிய துர்ச்சேலைக்கும் அவள்குமாரனாகிய விருதசந்திரனுக்கும் ஆடையாபரணங்கள் ஆனைகள், குதிரைகள்முதலானவஸ்த்துக்களெல்லாம்வெகுமானமாகக்கொடுத்து அவர்களைப்பார்த்து நீங்கள் இனிமேல் சுகு [illegible] ருதரம் [illegible] ரு [illegible] சாரமான இந்த அஸ்வமேதபர்வமாகிய திவ்வியசரித்திரத்தில் ஒருசுலோகமாகிலும் - ஒருசொல்லாகிலும் - ஒரு அக்ஷரமாகிலும் பயபக்த்திவிசுவாசத்துடனிருந்துஎழுதினாலும்-படித்தாலும் - ஒருவர்படிக்கக்கேட்டாலும், அவர்கள் முற்பிறப்பிற் செய்துள்ள மஹா பாதகங்களெல்லாம் நீங்கிப் பரிசுத்தர்களாய்க் காசியில் கங்காநதியில்லட்சம் பிராமணர்களுக்கு அன்னதானம்பண்ணினபலனையும், கோடி. பிராமணர்களுக்குப் பூமிதானம்பண்ணின பலனையும்பெற்று-ஸ்ரீமந் மஹாலக்ஷ்மி நாயகராகிய ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய பாதாரவிந்தங்களுக்கிசைந்த அந்தரங்க பக்த்தியுடையவர்களாய் இகத்திலசகலஐசுவரிய சந்தோஷ சவுக்கியங்களும்- புத்திர மித்திர களத்திராதிகளும்- தன கனக வஸ்த்துவாகனாதிகளும்-ஆயிராரோக்கியங்களும் உண்டாயிருந்து, பரத்திலும் தேவதாசம்போக சவுக்கியங்களை அனுபவித்துத் தீர்ந்து-முடிவில் சாலோக - சாமீப - சாரூப மென்கிற மூன்று பதவிகளுக்கு மேலான நாலாம்பதவியாகிய- சாயுச்சியபதவியைப் பெறுவார்கள். இதற்குச்சந்தேகமில்லை - கேட்டீரோ ஜெனமேஜெய ம[illegible]ன்று ஜெயமுனீந்திரர் சொல்லியருளினார் - அந்ததிவ்விய சரித்திரத்தை நாமும் உங்களுக்குக் கிருபையினாற் சொன்னோமென்று சூதபுராணிகர் சௌனகாதி மஹாரிஷிக்குச் சொல்லியருளினார்-என்றவாறு.

―――

அஸ்வமேதபர்வம்

முற்றிற்று.